# பூர்ணசந்திரோதயம்

*முதல் பாகம் தொடர்ச்சி .....*

அதைக் கேட்ட பூர்ணசந்திரோதயம் அவரது அபாரமான ஸ்தோத்திர மொழிகளைக் கேட்டு விலக்க இயலாத ஆனந்தபரசவம் அடைந்தவளாய், அவரை நோக்கி மந்த ஹாஸம் செய்து, "ஸ்திரீகளை ஸ்தோத்திரம் செய்வதில் தாங்கள் நிரம்பவும் பாண்டித்தியம் அடைந்தவர்கள் என்பது இப்போதே தெரிகிறது. அந்த விஷயத்தில் முதல் தாம்பூலம் பெற அருகமுள்ளவர்கள் தாங்கள்தான் என்பதும் நன்றாக விளங்குகிறது. எந்த விஷயத்திலும் பழக்கந்தான் பிரதானம். ஒரே வித்தையில் பழகுகிறவர்களுக்கு அதில் பாண்டித்தியம் உண்டாவது நிச்சயம். தாங்கள் என்னிடம் செய்தது போல இதற்கு முன் பல ஸ்திரீகளிடத்திலும் இதே மாதிரி முகஸ்துதியாகப் பேசிப் பேசி இவ்வளவு முதன்மை அடைந்திருக்கிறீர்கள். சிற்றின்பம் பேரின்பம் ஆகிய இரண்டையும் உண்டாக்கிக் கொடுக்க உபயோகப்படும் தெய்வம் என்று என்னை இப்போது புகழ்ந்ததுபோல இதற்கு முன்னும் எத்தனையோ பெண் தெய்வங்களைத் தாங்கள் புகழ்ந்திருப்பீர்கள்; இனிமேலும் யாராவது புதியவளாக அகப்பட்டால், அவளையும் இப்படியேதான் புகழப் போகிறீர்கள்; இந்த ஊர் மகாராஜாவின் அத்தை மகள் என்று வேஷம் போட்டுக் கொண்டு என்னிடம் வந்து தாங்கள் இந்நேரம் நடித்ததுபோல இன்னம் எத்தனை இடங்களில் செய்திருப்பீர்களோ! ஆனால் என் மனசில் முக்கியமான ஒரு சந்தேகம் உதிக்கிறது; தாங்கள் இந்த ஊர் மகாராஜாவின் அத்தை மகளென்று நடித்தது எப்படிப் பொய் வேஷமாக மாறியதோ, அதுபோல, அப்போது சொன்ன வார்த்தைகளும் வெறும் வார்த்தைகளாக அந்த வேஷத்தோடு மறைந்து போய்

விடுமோ என்ற ஒரு சந்தேகந்தான் என் மனசில் எழுந்து வதைக்கிறது'' என்றாள்.

அதைக்கேட்ட இளவரசர் அசட்டு நகையாக நகைத்து, ''கண்ணே! அப்படியெல்லாம் என்னைப் பற்றித் தவறான அபிப்பிராயம் கொள்ளாதே; நான் சுயரூபத்தோடு இங்கே வந்தால், நீ என்னை உள்ளே சேர்க்கமாட்டாய் என்று நினைத்து நான் இப்படி என்னை மறைத்துக்கொண்டு வந்தேனேயன்றி வேறல்ல. நான் சொன்ன வார்த்தைகள் எல்லாம் மனப்பூர்வமாகச் சொன்ன வார்த்தைகளே யொழிய வேறல்ல. நான் செய்த வாக்குறுதியை நான் ஓர் இம்மியளவும் மீறி நடக்கவே மாட்டேன். அந்த விஷயத்தில் உனக்கு எப்படிப்பட்ட உறுதி வேண்டுமானாலும் நான் மறுபடியும் செய்து கொடுக்கத் தடையில்லை. நீ சொல்வதுபோல, நான் இதுவரையில் எத்தனையோ ஸ்திரீகளை முகஸ்துதி செய்திருக்கிறேன் என்பது உண்மைதான். ஆனால், அதில் ஒரு விஷயம் இருக்கிறது. சில ஸ்திரீகள் வெளிப்பார்வைக்கு மகா அபூர்வமான அழகு வாய்ந்து கந்தருவ ஸ்திரீகள் போல இருந்தார்கள். அவர்களைக் கண்டவுடனே என் மனம் சலித்தது உண்மைதான்; நான் அவர்களை ஸ்தோத்திரம் செய்து, அவர்களுடைய சிநேகத்தைச் சம்பாதித்துக் கொண்டதும் உண்மைதான். ஆனால், ஸ்திரீகள் புருஷருடைய நீடித்த காதலையும், வேரூன்றிய பிரேமையையும் சம்பாதித்துக் கொள்ள வேண்டுமானால் அவர்களிடம் உடம்பின் அழகு ஒன்று மாத்திரம் இருப்பது போதாது. பொன்மலர் நாற்றமுடைத்து என்பது போல, வெளி அழகோடு, அவர்களிடம் உத்தம லட்சணங்களும், குணத்தழகும், நடத்தை அழகும், நயமாக வார்த்தை சொல்லும் திறமையும் புத்திசாலித்தனமும் நிறைந்திருக்க வேண்டும். அற்பத்தனம், பொறாமை, துர்க்குணம், பிடிவாதம், கோபம், மூர்க்கம் முதலிய துர்க்குணங்கள் இருக்கவே கூடாது. அப்படிப்பட்ட ஸ்திரீகள்

தான் கலியாண குணங்கள் நிறைந்தவர்கள் ஆவார்கள். ஸ்திரீகளுடைய வெளியழகின் கவர்ச்சி பழகப் பழகக் குறைந்து போகும். புருஷர் முதலில் வெளி அழகினால் கவரப்படுகிறார் கள். ஆனாலும், அவருடைய பிரேமை நீடித்து நிற்பதற்கு ஸ்திரீகளிடம் மற்ற சகலமான கலியாண குணங்களும் இருப்பது அத்தியாவசியம். முதலில் அழகின் கவர்ச்சியினால் ஏற்பட்ட பிரேமையை, மற்ற உத்தம லக்ஷணங்களின் கவர்ச்சிதான் வளர்த்து நிலை நிறுத்திக்கொண்டு போக வேண்டும். அப்படி இல்லாமல், வெறும் அழகு மாத்திரம் இருந்து, அறிவும் குணங்களும் சூன்யமாக இருந்தால், அப்படிப்பட்ட ஸ்திரீகளும், உயிரற்ற சித்திரப் பதுமைகளும் ஒன்றுதான். அவர்களிடம் சில நாட்கள் பழகும் முன்னர் வெறுப்பும் பற்றின்மையும் ஏற்பட்டுவிடும். அதுபோலவே தான், நான் இதுவரையில் தேடிப்பிடித்த ஸ்திரீகள் எல்லாம் இருந்தார்கள். ஆகையால், எனக்கு அவர்களிடத்தில் நீடித்த பிரேமையும் வேரூன்றிய காதலும் ஏற்படவில்லை. உன்னிடத்தில் உடம்பின் அழகோடு, புத்தியின் அழகும், குணத்தின் விசேஷமும் பூர்த்தியாக நிறைந்திருக்கின்றன என்பதை நான் சந்தேகமறத் தெரிந்த கொண்டிருக்கிறேன். ஆகையால், நான் துணிந்து இப்பேர்ப்பட்ட பெரிய பிரஸ்தாபங்களை யெல்லாம் செய்தேன். உன்னை நம்பி நான் என்னுடைய உடல்,பொருள் , ஆவியாகிய சகலத்தையும் உன்னிடம் ஒப்புக் கொடுக்கலாம் என்ற ஓர் எண்ணம் உன்னைப் பார்க்கும் பொழுதே என் மனசில் தானாக உண்டாகிறது. இதில் எவ்விதக் கெடுதலும் ஏற்படாது என்ற ஒரு நிச்சயமும் என் மனசில் உண்டாகியிருக்கிறது. ஆகையால், என்னுடைய வாக்குறுதி பொய்க்கும் என்றாவது, அல்லது, மற்றவர்களை நான் புறக்கணித்ததுபோல சொற்ப காலத்தில் உன்னை யும் புறக்கணித்துவிட்டு இனி வேறொருத்தியை நாடுவேன் என் றாவது நீ கொஞ்சமும் சந்தேகப்படவே வேண்டாம்'' என்று நிரம்பவும் உருக்கமாகக் கூறியவண்ணம் மெதுவாகத்

தமது ஆசனத்தை விட்டு எழுந்து, பூர்ணசந்திரோதயம் நின்ற இடத்திற்குப்போய், மிகுந்த ஆவலோடு அவளைப் பிடித்து இழுத்து மார்போடு அணைத்து ஆலிங்கனம் செய்து முத்தமிட்டு சரஸ லீலைகள் புரியத் தொடங்க, தனது கோமளகரமான அற்புத மோகன வடிவத்தைச் சிறிது நேரம் வரையில் அவரது வசத்தில் விட்டு, செயலற்றுத் தத்தளித்து நாணத்தினாலும், வெட்கத்தினாலும் குன்றிக் குறுகி நின்ற பூர்ணசந்திரோதயம், திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டு சடேரென்று தன்னை அவரது பிடியிலிருந்து விடுவித்துக்கொண்டு விலகி, தனது உடம்பில் விஷமம் செய்ய நீண்ட அவரது கரங்களைத் தனது இரண்டு கரங்களாலும் இறுகப் பிடித்துக்கொண்டு தனது வசீகரமான பல்வரிசைகளைக்காட்டி இனிமையாகக் கொஞ்சிக் கொஞ்சி, ‘‘போதும், போதும் நிறுத்துங்கள். அப்புறம் ஆகட்டும். அவசரப் படவேண்டாம். பக்கத்தில் என்னுடைய வேலைக் காரிகள் இருக்கிறார்கள். நீங்கள் யாரோ பெண்பிள்ளை யென்று அவர்கள் நினைத்துக்கொண்டிருப்பதால், அவர்கள் எந்த நிமிஷத்திலும் இங்கே வருவார்கள். நீங்களும் நானும் பட்டப்பகலில் இப்படித்தனியாக இருந்து இப்படிப்பட்ட தகாத காரியம் செய்து கொண்டிருப்பதைக் கண்டால், அவர்கள் என்னைப் பற்றியும் தங்களைப்பற்றியும் இழிவாகப் பேசி, அவதூறான வார்த்தைகளை ஊர் முழுதும் விதைத்து விடுவார்கள். ஆகையால், இந்த மாளிகையில் நாம் எதையும் செய்யவே கூடாது. அங்கியால் மறைத்துக்கொண்டு வந்தது உண்மையில் தாங்கள் என்பதுகூட இவர்களுக்குத் தெரியக் கூடாது. ஆகையால், தாங்கள் என்மேல் தயை பாலித்து மறுபடியும் அங்கியால் தங்களை மறைத்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு நான் ஆயிரங்கோடி நமஸ்காரம் செய்கிறேன். இப்போது தாங்கள் என் மானத்தைக் காப்பாற்ற வேண்டும். நான் இனி எப்போதும் தங்களுடைய அடிமை என்பதைத் தாங்கள் நிச்சயமாக நம்பலாம். தங்களுடைய மனம்போல நான்

இனி எப்போதும் நடந்து கொள்ளுகிறேன். ஆனால், இப்போது மாத்திரம் தாங்கள் தங்களுடைய ஆவலை அடக்கிக் கொள்ள வேண்டுகிறேன். என்னுடைய வேலைக்காரிகள் வந்து விடப் போகிறார்களே என்று என்னுடைய உடம்பு நடுங்கு கிறது. போதும் போதும் நிறுத்துங்கள். அப்புறம் ஆகட்டும்'' என்ற கெஞ்சிக் கூத்தாடினாள்.

அதைக்கேட்ட இளவரசர் மட்டுக்கடங்கா வேதனையும் மன எழுச்சியும் அடைந்து, மிக மிக உருக்கமாகவும் வாஞ்சை யாகவும் பேசத் தொடங்கி, ''ஆ! பூர்ணசந்திரோதயம்! என்னை நீ இப்படியும் கொல்லுவாயா! இத்தனை நாளாக உன்னை நினைத்து நினைத்து என்னுடைய உயிரில் முக்கால் பாகமும் போய்விட்டது. இப்போது உன்னுடைய அருள் நோக்கம் எனக்கு ஏற்பட்டும், என் மனக்குறை தீரவில்லையே! உன்னுடைய உட்கருத்து இன்னதுதான் என்பதைச் சொல்லி விடு. நீ எனக்கு உயிர்ப்பிச்சை கொடுக்கப் போகிறாயா? அல்லது, நான் இப்படியே நரகவேதனைப்பட்டு மாண்டு போக விட்டுவிடப் போகிறாயா? என் கண்ணே! என் முத்தே! எங்கே? நிஜத்தைச் சொல்லிவிடு'' என்று கூறியவண்ணம் ஏங்கித் தூரத்தில் நின்றார்.

உடனே பூர்ணசந்திரோதயம் அவருக்கு உற்சாகமும் மகிழ்ச்சியும் உண்டாகும்படி வசீகரமாகப்பேசத் தொடங்கி, ''நாம் இருவரும் ஒன்றுகூடி நீடித்த காலம் சந்தோஷமாக வாழ வேண்டும். அதற்கு நாம் எந்தக் காரியத்தையும் நல்ல சுபகாலத்தில் தொடங்க வேண்டும்.இன்றைய தினம் நாள் நன்றாக இல்லை. நாளைய தினம் வெள்ளிக்கிழமை நல்ல சுபதினம். ஆகையால், நாளையதினம் ராத்திரி சரியாக ஒன்பது மணிக்கு இங்கே ஒரு பெட்டிவண்டி அனுப்பி வையுங்கள். அதில் ஏறிக்கொண்டு நான் நேராகத் தங்களுடைய அந்தப்புரத்துக்கு வந்து சேருகிறேன். என்னுடைய வண்டியில் நான் வந்தால், நான் இன்ன இடத்துக்குப் போகிறேன்

என்பதை என்னுடைய வேலைக்காரர்கள் தெரிந்து கொள்வார்கள். ஆகையால், தாங்கள் ஒரு வண்டியை அந்தக் காலம் தவறாமல் அனுப்பி வையுங்கள். நான் அங்கே வந்து மற்ற சகலமான விஷயங்களையும் தங்களுடைய மனம்போல நிறைவேற்றி வைக்கிறேன். அதுவரையில் எப்படியாவது மகாராஜா பொறுத்து இந்த அடிமையின் மானத்தைக் காப்பாற்ற வேண்டும்'' என்று கிள்ளைபோல மழலையாகக் கொஞ்சி மொழிந்தாள்.

அதைக்கேட்ட இளவரசரது உற்சாகமும், குதூகலமும் அணை போடப்பட்டதுபோலச் சடக்கென்று மாறிப்போனது. ஆனாலும், அவள்மீது கொண்ட காமவேட்கையும், தாக வெப்பமும் அடங்காமல் மும்முரமாகவே இருந்தன. இருந்தாலும், அவளது விருப்பத்திற்கும் ஏற்பாட்டிற்கும் தாம் இணங்குவது அவசியமாகவும் தோன்றியது. ஆகையால், இளவரசர் அவள் சொன்னதை ஒப்புக்கொண்டு, மறுநாள் அவசியம் வரவேண்டுமென்று அவளிடம் வாக்குறுதி பெற்றுக்கொண்டு கடைசி முறையாக அவளை இன்னொருதரம் ஆசையோடு ஆலிங்கனம் செய்து விடைபெற்றுக்கொண்டு, தனது அங்கியை எடுத்து மறுபடியும் அணிந்தவராய் ஸ்திரீ நடப்பதுபோலத் தளர் நடை நடந்து ஜெகன்மோகன விலாசத்தி லிருந்து வெளிப்பட்டு, ராஜபாட்டையில் நிறுத்தப்பட்டிருந்த தமது பெட்டி வண்டிக்குள் போய் உட்கார்ந்து கொள்ள, தாதியர் கதவை மூடிக்கொண்டு பின் பக்கத்துப் பலகையில் உட்கார்ந்து கொண்டனர்.

உடனே வண்டி புறப்பட்டு அரண்மனையை நோக்கிச் செல்ல ஆரம்பித்தது. ஜெகன்மோகன விலாசத்தை விட்டு நெடுந்தூரம் போக, அப்போது இளவரசரது மனதில் தாம் மருங்காபுரி ஜெமீந்தாரோடு செய்துகொண்ட ஒப்பந்தத்தைப்பற்றிய நினைவு உண்டாயிற்று. அன்றையதினம் இளவரசர் பூர்ண சந்திரோதயத்தின் ஜாகைக்கு வந்து அவளை நெருங்கிப்

பார்க்கும் வரையில், அவரது மனம் அந்த ஒப்பந்த விஷயத்தில் ஒரே உறுதியாக இருந்தது. பூர்ணசந்திரோதயத்தை தாம் வென்று அவளை மருங்காபுரி ஜெமீந்தாருக்கும் கொடுத்துவிட வேண்டும் என்றும், அதற்கு கைம்மாறாக அவர் பார்சீ ஜாதி ஸ்திரீயை வென்று தமக்குக் கொடுத்துவிடுவார் என்றும் எண்ணிக்கொண்டே போனார். ஆனால், அவர் போய்ப் பூர்ணசந்திரோதயத்தின் வசீகர வடிவத்தைக் கண்ட தக்ஷணத்தில் அவரது மனதில் இருந்த பார்சீ ஜாதிப் பெண்ணின் வடிவம் சூரியன் முன் இருளென மறைந்து போய்விட்டது. அந்த இரண்டு பெண்மணிகளுள் மற்றவளைக் காட்டிலும், பூர்ணசந்திரோதயமே எல்லா அம்சங்களிலும் பதினாயிர மடங்கு சிறந்தவளாகவும், தமது மனதிற்கு உகந்தவளாகவும், தமக்கு நீடித்த ஆசை நாயகியாக இருப்பதற்குத் தகுந்தவளாக வும் காணப்பட்டாள். அவள் எப்போதும் தம்மோடுகூட இருந்தால், அவள் தமக்குப் பலவகையில் இன்பங்கொடுத்து சதா காலமும் தமது மனம் களிப்படைந்து இருக்கும்படி செய்யும் அபார வல்லமையும் அறிவு முதிர்ச்சியும் வாய்ந்தவள் என்பது இளவரசருக்கு நிச்சயமாகத் தெரிந்தது. அவள் தமது விஷயத்தில் சுலபமாக வழிக்கு வந்தாலும், அவளது பிரியத்தை எல்லாம் அவள் மருங்காபுரிக் கிழவரின் மேல் திருப்பச் செய்வது எவருக்கும் அசாத்தியமான காரியம் என்று இளவரசர் நினைத்ததன்றி, தாம் அவளிடத்தில் அப்படிப்பட்ட பிரஸ்தாபம் செய்வது ஆண்மைத்தனம் ஆகாதென்றும், அவள்மீது தாம்கொண்ட மோக வேட்கையை அடக்குவதே முதலில் துர்லபமான காரியம் என்றும் நினைத்தார். பூர்ணசந்திரோதயத்திற்கும் தமக்கும் நடக்கும் சந்திப்பின் விவரங்களை யெல்லாம் அப்படியே வெளியிடுவதாகத் தாம் மருங்காபுரி ஜெமீந்தாருக்கு வாக்குக் கொடுத்திருந்ததும் அவருக்கு நினைவுண்டாயிற்று. ஆகையால், தாம் என்ன செய்வது, அவரிடம் என்ன சொல்வது என்ற கேள்விகள் உண்டாயின. பூர்ணசந்திரோதயத்தை அருகில் பார்த்து, அவளது

அருமை பெருமைகளையெல்லாம் கண்கூடாகக் கண்டு அவளது சம்மதியைப் பெற்ற நிலைமையில் அவளை இனி இழப்பதைவிட, அவர் தமது ராஜபதவியையே இழக்கவும் சம்மதிக்கக் கூடியவராக இருந்தார். சல்லாயப் பட்டு அணிந்த பார்சீஸ்திரீயைச் சித்திரவதை செய்து கத்தியால் அணு அணுவாக அழித்தால்தான், அவரிடம் இருக்க இணங்குவதாகப் பூர்ணசந்திரோதயம் சொல்லுவாளாகில், அந்த மகா கொடிய காரியத்தையும், அவர் உடனே நிறைவேற்றிவிட்டுப் பூர்ணசந்திரோதயத்தின் பிரியத்தைச் சம்பாதித்துக் கொள்ளக் கூடியவராக இருந்தார். ஆகவே, பார்சீ ஜாதி மடந்தையி னிடத்தில் அவர் வைத்திருந்த எண்ணமெல்லாம் அடியோடு மாறிவிட்டது. இந்த உலகத்திலுள்ள சகலமான பார்சீஜாதி வடிவழகியர்களை யெல்லாம் விட பூர்ணசந்திரோதயம் ஒருத்தியே அழகிலும், மற்ற எல்லா மேம்பாடுகளிலும் நிகரற்ற நக்ஷத்திரச் சுடர்போன்றவள் என்ற உறுதியும், தாம் மற்ற எதை இழந்தாலும் அவளை மாத்திரம் இழக்காமல் அடைந்தே தீர வேண்டும் என்ற தீர்மானமும் இளவரசரது மனதில் உண்டாயின. ஆகையால், தாம் தமக்கும் மருங்காபுரி ஜெமீந்தாருக்கும் ஏற்பட்டிருந்த ஒப்பந்தத்தை நிவர்த்தி செய்து கொள்ளவேண்டுவதே முடிபென அவர் தீர்மானித்துக் கொண்டார். ஆனால், அந்த விஷயத்தைக் கிழவரிடம் எப்படி வெளியிடுவது; அவரைத் தமது கருத்திற்கு இணங்கும்படி எப்படிச்செய்வது? இனி பூர்ணசந்திரோதயம் தம்மோடு இருக்கப் போகிறாளென்பதை, கிழவரிடத்தில் மறைத்து வைப்பதும் அநுசிதமான காரியம். நெடுநாளாகத் தமது அந்தரங்க நண்பராக இருந்து தமது ரகசியங்களை யெல்லாம் அறிந்திருப்பவரான அந்தக் கிழவரது மன வருத்தத்தை உண்டாக்கிக் கொள்வதும் நல்லதல்ல என்று பலவாறு எண்ணமிட்ட இளவரசர், தாம் உடனே மருங்காபுரி ஜெமீந்தாரது வீட்டிற்குப்போய் அவரைக் கண்டு நயமாகப்பேசி அவரது மனம் வருந்தாதபடி தங்களது ஒப்பந்தத்தை நிவர்த்தி

செய்துகொண்டு விடவேண்டுமென்ற தீர்மானம் செய்து கொண்டவராய், இளரவரசர் பெட்டிவண்டியை நேராக வடக்கு ராஜவீதிக்கு விடச் செய்தார். தம்மை மறைத்திருந்த பனாரீஸ் பட்டு அங்கியை விலக்கி வண்டிக்குள் போட்டுவிட்டு, மருங்காபுரி ஜெமீந்தாரது மாளிகையின் வாசலில் போய் இறங்கி உள்ளே சென்று, உப்பரிகையில் வெல்வெட்டு மாடத்திலிருந்து தமது வருகையை ஆவலோடு எதிர்பார்த் திருந்த கிழஜெமீந்தாரிடம் போய்ச் சேர்ந்தார்.

## 14 - வது அதிகாரம்

## ரதிகேளி விலாசம் - எலிப்பொறி

மிகுந்த ஆவலும் சஞ்சலமுமடைந்து உட்கார்ந்திருந்த மருங்காபுரி ஜெமீந்தார் இளவரசரை அன்பாக வரவேற்று உபசரித்து ஓர் உன்னத ஆசனத்தில் உட்காரச்செய்ய, இளவரசர் அன்பும்,மகிழ்ச்சியும் புன்னகையும் ஜ்வலித்த முகத்தினராய்க் கிழவரை நோக்கி, ''ஜெமீந்தார் ஐயா! உங்கள் வீட்டுவாசலில் நான் வண்டியை விட்டு இறங்கியபோது என் மனசில் சடேரென்று ஓர் எண்ணம் உண்டாயிற்று. அதை நான் முதலில் உங்களிடம் சொல்லி விடுகிறேன். ஏனென்றால், நாம் மற்ற விஷயங்களை முதலில் பேச எடுத்துக்கொண்டால் இது மறந்து போகும். ஆகையால், என் மனசில் தோன்றிய நினைவை முதலில் சொல்லிவிடுகிறேன்'' என்று இனிமை யாகப் பேசினார். அதைக்கேட்ட கிழவர், ''உங்களுடைய பிரியப்படியே ஆகட்டும். அதையே சொல்லுங்கள்'' என்றார்.

இளவரசர், ''வேறொன்றுமில்லை. மைசூர் முதலிய மற்ற ராஜ்யங்களில் மகாராஜாக்களுக்கு அந்தரங்க நண்பர்களாக இருந்து பலவகையில் உதவிகள் செய்துவரும் ஜெமீந்தார்

களுக்கு, ராஜா, மகாராஜா என்ற கௌரவப் பட்டங்கள் கொடுத்து கண்ணியப்படுத்துகிறார்கள். நம்முடைய ராஜ்யத்தில் மாத்திரம் அந்த வழக்கம் இல்லை. அது சம்பந்தமாக எனக்கு ஒரு நினைவு உண்டாயிற்று. இந்த ராஜ்யத்திலுள்ள ஜெமீந்தார்களுள் நீங்கள் வயசிலும், செல்வத்திலும், செல்வாக்கிலும் மேலான வர்கள்; என்னிடத்தில் நீங்கள் பரம விசவாசம் உள்ளவர்கள்; நீங்களும் நானும் பழகிவரும் இத்தனை வருஷ காலமாக எனக்கு நீங்கள் ஆயிரக்கணக்கான உதவிகள் செய்திருக்கிறீர்கள்; எல்லா விஷயங்களையும் கருதி என்னுடைய நன்றியறிதலைக் காட்டுவதற்கு நான் ஏதாவது பெரிய மரியாதையாக ஒன்று உங்களுக்குச் செய்ய வேண்டுமென்று நிரம்ப காலமாக நினைத்து வந்தேன். பண விஷயத்தில் நான் உங்களுக்குச் செய்யத்தக்கது ஒன்றுமில்லை. உங்களிடம் ஏராளமான செல்வம் இருப்பதால் அதைப்பற்றி உங்களுக்கு அக்கறை இல்லை. ஆகையால், உங்களுக்கு மகாராஜா என்ற கௌரவப் பட்டம் கொடுக்க வேண்டும் என்ற ஓர் எண்ணம் கால்நாழிகைக்கு முன்புதான் திடீரென்று என் மனசில் உண்டாயிற்று. ஆனால் அந்த விஷயத்தில் உங்களுக்குப் பிரியம் இருக்குமோ என்னவோ?'' என்று தேன் ஒழுகுவது போல நயமாக மொழிந்தார்.

அதைக்கேட்ட கிழவர், மட்டுக்கடங்கா ஆனந்தங்கொண்டு தமது ஆசனத்திலிருந்து துள்ளிக்குதித்து நன்றியறிதலும் உருக்கமும் நிறைந்த வதனத்தினராய் இளவரசரது கரத்தை அன்பாகப் பிடித்து, ''ஆகா! மகாராஜா! என் விஷயத்தில் தங்களுக்கு இருக்கும் அபிமானத்துக்கும் அன்புக்கும் நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன். இந்த உலகத்தில் பணத்தால் அடையக்கூடிய சகலமான இன்பங்களையும் பெருமைகளையும் நான் அனுபவித்தாகி விட்டது. இருந்தாலும் என் மனசில் இந்த ஒரே குறைதான் இருந்து வந்தது. நான் இறப்பதற்குள், ஒரு நாளாவது மகாராஜா என்ற பட்டப்பெயரை

வகிக்க வேண்டுமென்ற ஆசை எனக்கு நெடுநாளாக உண்டு. அதை நான் தங்களிடத்தில் எப்படி வெளியிடுவதென்று அஞ்சித் தயங்கிக் கொண்டிருந்தேன். நான் சொல்லாமலேயே அந்த விஷயம் தங்களுடைய மனசில் எப்படியோ புலப்பட்டிருக்கிறது. கும்பிடப்போன தெய்வம் குறுக்கிடுவதுபோல அதைப்பற்றித் தாங்களே பிரஸ்தாபித்து விட்டீர்கள். அந்த விஷயத்தில் மாத்திரம் தாங்கள் என்னைக் கௌரவப் படுத்துவீர்களானால், அந்தப் பரம உபகாரத்தை நான் என்றைக்கும் மறக்கமாட்டேன். தாங்கள் எந்த விஷயத்தில் என்னிடத்தில் எப்படிப்பட்ட உதவியை நாடினாலும் நான் அதைச் செய்யத் தடையில்லை'' என்று மிகவும் உருக்கமாகக் கூறி இறைஞ்சினார்.

அதைக்கேட்ட இளவரசர், ''ஓகோ! அப்படியா! இந்த விஷயத்தைப்பற்றி இதுவரையில் என்னிடத்தில் ஒரு வார்த்தை சொல்லியிருந்தால், இந்நேரம் காரியம் நிறைவேறி இருக்குமே! ஆனால், அந்த மந்திரி ஒரு நச்சு மனிதன். என்னுடைய தகப்பனார் ஏதாவது உத்தரவு செய்தால், அவன் அதை மதித்து உடனே நிறைவேற்றுகிறான். நான் ஏதாவது சொல்லப் போனால், அதற்கு ஆயிரம் ஆட்சேபனைகள் சொல்ல ஆரம்பிப்பான். அவனுக்குச்சரியான மறுமொழி சொல்வது மகா கடினமான காரியம். உங்களுக்கு மகாராஜா என்ற பட்டம் கொடுக்க வேண்டுமென்று நான் அந்த மந்திரியிடம் சொன்னால், அவன் முக்கியமாக ஓர் ஆட்சேபனை சொல்லுவான். நம்முடைய ராஜ்யத்தில் உங்களுக்குச் சமமான செல்வமும் செல்வாக்கும் கண்ணியமும் உள்ள பெரிய ஜெமீந்தார்கள் இன்னம் பலர் இருக்கிறார்கள். அவர்களும் இந்த ராஜாங்கத்துக்கு எத்தனையோ உதவிகள் பலவகையில் செய்து வருகிறார்கள். உங்களுக்கு மாத்திரம் இந்தப் பெருமையை உண்டாக்கிக் கொடுத்தால், அவர்கள் தங்களை இழிவுப் படுத்தியதாக நினைத்து மனவருத்தமும் பொறாமையும்

கொள்வார்கள்; பழையமாதிரி அவர்கள் சமயங்களில் அவ்வளவு பிரியமாக உதவி செய்யமாட்டார்கள் என்று அந்த மந்திரி சொல்ல வருவான். வாக்குவாதத்தில் அவனை வெல்ல யாராலும் முடியாது. இருந்தாலும் பரவாயில்லை. நான் எப்படியாவது பிரயாசைப்பட்டு நாளைக்குள் இந்தப் பட்டத்தை உங்களுக்குக் கொடுத்ததாகச் சொன்னது பிறப்பிக்கும்படி ஏற்பாடு செய்கிறேன். நான் உங்களுக்கு இவ்வளவு பெரிய காரியம் செய்கிறேனே; அதற்காக நீங்கள் எனக்கு என்ன தரப் போகிறீர்கள்?'' என்று புன்னகையாகவும் மகிழ்ச்சியாகவும் வினவினார்.

அதைக்கேட்ட மருங்காபுரி கிழவர் மிகுந்த குதூகலமும் ஆனந்தமும் அடைந்தவராய், ''சரி; மகாராஜா இந்தக் காரியத்தை மாத்திரம் முடித்துக்கொடுத்தால், மகாராஜா எப்படிப்பட்ட உதவியைக் கேட்டாலும் நான் உடனே செய்து விட்டு மறுவேலை பார்க்கிறேன். என்னுடைய உயிரை வேண்டு மானாலும் கொடுத்துவிடுகிறேன். தங்களுக்கு என்ன உதவி தேவை என்பதைச் சொல்லுங்கள். இந்த க்ஷணத்தில் நிறைவேற்றுகிறேன்'' என்றார்.

இளவரசர் சந்தோஷமாகப் புன்னகை செய்து, ''சரி; இவ்வளவு தூரம் சொன்னீர்களே, அதுவே போதுமானது. எனக்கு நீங்கள் செய்யவேண்டிய உதவி ஒன்று இருக்கிறது. அதை நான் பிற்பாடு கேட்டுக்கொள்ளுகிறேன். அதைவிட்டு நாம் இப்போது முக்கியமான விஷயத்தைப் பேசுவோம். நான் பூர்ணசந்திரோதயத்தினிடம் போன விஷயத்தைப்பற்றி எல்லாச் சங்கதிகளையும் தெரிந்துகொள்ள நீங்கள் நிரம்பவும் ஆவலோடு இருப்பீர்கள். அதை முதலில் சொல்லிவிடுகிறேன்'' என்றார்.

மருங்காபுரி ஜெமீந்தார், ''ஆம் ஆம். இன்றையதினம் உங்களை ஜெகன்மோகன விலாசத்துக்கு அனுப்பிய பிறகு என் மனம் வேறே எதிலேயும் செல்லவில்லை. தாங்கள் எப்போது திரும்பி வரப் போகிறீர்கள் என்று வழிபார்த்து ஜன்னலண்டை

யிலேயே நின்று கொண்டிருந்தேன். என்ன நடந்தது? அங்கே போயிருந்தீர்களா? அவள் என்ன சொன்னாள்? ஏதாவது வழிக்கு வந்தாளா?'' என்றார்.

இளவரசர், ''நான் போய்விட்டு நேராக அங்கே இருந்துதான் இவ்விடத்துக்கு வருகிறேன். அவளோடு ஒரு மணிநேரம் பேசிக் கொண்டிருந்தேன். உண்மையிலேயே பூர்ணசந்திரோ தயம் அபாரமான அழகுடையவளாகத்தான் இருக்கிறாள். அவளைப்பற்றி எல்லோரும் இவ்வளவு ஸ்தோத்திரமாகச் சொன்னதெல்லாம் பொய்யல்ல. அவளுடைய கட்டழகு எப்படிப்பட்டதென்பது நேரில் பார்த்தால்தான் உள்ளபடி தெரியுமேயன்றி, அதை வார்த்தைகளால் வர்ணித்துச் சொல்ல எவராலும் முடியாது. ஆகையால், இவர்கள் சொன்னதெல்லாம் அவளுடைய அழகைக் குறைத்துச் சொன்னதாக வைத்துக் கொள்ள வேண்டும்'' என்றார்.

ஜெமீந்தார்:- (ஒருவித சஞ்சலம் அடைந்தவராய்) சரி; பூரண சந்திரோதயம் மகாராஜாவிடத்தில் ஏதோ மோகனாஸ்திரப் பிரயோகம் செய்துவிட்டாள் போலிருக்கிறது.

இளவரசர்:- ஆம்; உண்மைதான்.அவளுடைய மோகனாஸ் திரங்கள் சாதாரணமானவை அல்ல. அவளைப் படைத்த ஈசுவரன் கூட அவளைக் கண்டால் கலங்கிப் போவான் என்று நீங்கள் நிச்சயமாக எண்ணிக் கொள்ளலாம். அவளும் நானும் வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தோம். அவளுடைய மனதை என்னுடைய விருப்பப்படி திருப்ப நான் பட்டபாடு இவ்வளவு அவ்வளவல்ல. ஆகா! அவளுடைய வாக்கு சாமர்த்தியமும், புத்திக் கூர்மையும், யுக்தியும் என்னவென்று சொல்லுவேன்! வேறே எப்பேர்ப்பட்ட மனிதர் அவளிடம் போய்ப் பேசினாலும், அவமானப் பட்டுத்தான் திரும்ப வேண்டும். இப்பேர்ப்பட்ட அதிமேதாவிகளான பெண் பிள்ளைகள் தாமாகக் கனிந்து ஒரு புருஷரிடத்தில் அவர்கள் பிரேமையில் காதலும் கொண்டால் மாத்திரம் சுகம்

உண்டாகுமே தவிர, இவர்களை வலுக்கட்டாயமாக நம்முடைய வசத்தில் திருப்புவதும், இவர்களிடம் இன்பம் அடைய நினைப்பதும் பலியாத காரியந்தான்.

*ஜெமீந்தார்:- (திகைப்பும் கலக்கமும் அடைந்து) ஓகோ! அப்படியா! ஆனால், அவள் என்னதான் சொன்னாள்?*

*இளவரசர்:- (புன்சிரிப்போடு) அவள் எதைத்தான் சொன்னாலும், நான் அவளை அவ்வளவு சுலபத்தில் விட்டுவரக் கூடியவனா! அவள் எவ்வளவோ தந்திரமாகப் பேசினாள். நான் அதற்குமேல் குள்ளநரி வேஷம்போட்டு கடைசியில் அவள் என்னுடைய கருத்துக்கு இணங்கும்படி செய்துவிட்டே வந்தேன். அவள் எனக்கு ஆசை நாயகியாயிருக்க ஒப்புக் கொண்டுவிட்டாள்.*

*ஜெமீந்தார்: (ஆனந்தப் பெருக்கினால் துள்ளிக்குதித்து தேன் குடித்த நரிபோலப் பல்லைக்காட்டி) பேஷ்! பலே! வழிக்கு வந்தாளா! சரி! என்பாடு யோகந்தான்.சரி; அதற்கு மேல் என்ன நடந்தது? மேலே நடக்கவேண்டிய காரியங்களுக்கு அவளிடத்தில் ஏதாவது ஏற்பாடு செய்து நாள் குறித்துவிட்டு வந்திருக்கிறீர்களா?*

*இளவரசர்:- ஓ! ஏற்பாடு செய்திருக்கிறேன். நாளைய தினம் ராத்திரி சரியாக ஒன்பது மணிக்கு ஒரு பெட்டிவண்டி அவளுடைய ஜாகையின் வாசலில் போய் நிற்க வேண்டும். அதற்கு முன்னாகவே, அவள் தன்னுடைய போஜனம் முதலியவைகளை முடித்துக்கொண்டு தயாராக இருப்பாள்; சரியாக ஒன்பது மணிக்குப் புறப்பட்டு அந்தப் பெட்டி வண்டியில் ஏறிக்கொண்டு வந்து சேருவாள்.*

*ஜெமீந்தார்:- (மிகுந்த ஆவலோடும் ஆசையோடும்) பேஷ்! நல்ல ஏற்பாடு! அந்த வண்டியை நேராக இந்த இடத்துக்கு ஓட்டிக் கொண்டு வந்துவிடும்படி வண்டிக்காரனுக்கு உத்தரவு செய்திருக்கிறீர்களோ? அப்படித்தான் செய்யவேண்டும்.*

இல்லாவிட்டால், நம்முடைய ஒப்பந்தம் எப்படி நிறைவேறும்?

இளவரசர்: (இனிமையாகப் புன்னகை செய்து நயமாகப் பேசத் தொடங்கி) வாஸ்தவந்தான். அப்படித்தான் செய்ய வேண்டுமென்று நீங்கள் பிரியப்பட்டால், அப்படியே செய்துவிடலாம். அதைப்பற்றிச் சந்தேகமே வேண்டாம். அந்த விஷயம் இருக்கட்டும். உங்களுக்கு மகாராஜா என்ற பட்டம் ஏற்படுத்திக் கொடுப்பதற்குப் பதிலாக நீங்கள் எனக்கு ஒரு பதிலுதவி செய்வதாக வாக்குக் கொடுத்தீர்களே; அதை நான் சுத்தமாக மறந்து விட்டேன். அதைத் தருவீர்களோ, மாட்டீர்களோ?

ஜெமீந்தார்: அதைப்பற்றித் தாங்கள் ஏன் இவ்வளவு தூரம் சந்தேகப்படுகிறீர்கள்? அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? தங்களுக்கு வேண்டிய உதவி எதுவாக இருந்தாலும் உடனே கேளுங்கள்; செய்கிறேன். பூர்ணசந்திரோதயத்தைப் பற்றிய முடிவைச் சொல்லுங்கள். என் மனம் கட்டுக்கு அடங்காமல் துடிக்கிறது. அந்த ரதிதேவியை மாத்திரம் தாங்கள் எப்படியும் எனக்குக் கொடுத்தே தீரவேண்டும்.

இளவரசர்:- நான் உங்களிடத்தில் கேட்கும் பதிலுதவி இந்தப் பூர்ணசந்திரோதயத்தைப் பற்றியதே யன்றி வேறல்ல.

ஜெமீந்தார்:- (திடுக்கிட்டு முற்றிலும் வியப்பும் கலக்கமும் முகமாறுதலும் அடைந்து) என்ன! தாங்கள் சொல்வது எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! நம்முடைய ஒப்பந்தத்தை நிறைவேற்றத் தங்களுக்கு இஷ்டமில்லையா?

இளவரசர்:- (நயமாகவும் உருக்கமாகவும் பேசத் தொடங்கி) ஜெமீந்தார் ஐயா! என்னுடைய குணம் உங்களுக்கு நன்றாகத் தெரிந்திருந்தும், நீங்கள் என்னிடத்தில் இப்பேர்ப்பட்ட கேள்வி கேட்பது சரியல்ல. நான் இதுவரையில் நடந்து கொண்டதி லிருந்து நான் அப்படி வாக்குறுதியை மீறி அயோக்கியத்தனமாக நடக்கக் கூடியவன் என்பது கொஞ்சமாவது தெரிகிறதா?

எனக்கும் அவளுக்கும் நடந்த சம்பாஷணையின் வரலாறு களையெல்லாம் அப்படியே உங்களிடம் தெரிவித்து விட்டேன். அவள் எனக்கு ஆசை நாயகியாய் இருக்க இணங்கிவிட்ட தாகவும், நாளைய தினம் ராத்திரி ஒன்பது மணிக்கு அவளை அழைத்துப்போக ஏற்பாடாகி இருப்பதையும் உள்ளபடி வெளியிட்டு விட்டேன்.ஆனால், நீங்கள் ஆசைப்படுகிறபடி அவளுக்குத் தெரியாமல், அவளை நாம் இங்கே கொண்டு வருவதாக வைத்துக்கொள்வோம். நீங்கள் அவளை இங்கே கொண்டுவந்து தனியாக வைத்துக் கொண்டு அவளுடைய மனைத் திருப்பவேண்டும். அவள் சாதாரணமான பெண்பிள்ளை அல்ல. நீங்கள் எப்படிப்பட்ட தந்திரம் செய்தாலும், எப்படிப்பட்ட நன்னய மொழிகளை உபயோகித்து அவளை நீங்கள் வசப்படுத்த யத்தனித்தாலும் அவள் ஒருநாளும் உங்களுக்கு இணங்கிவர மாட்டாள். அவள் உங்களைவிட ஆயிரம் மடங்கு அதிக கபடமாக நடந்து உங்களை ஏமாற்றி விடுவாள். பலவந்தமாக அவளை நீங்கள் அடக்கி உங்கள் வசப்படுத்துவது என்பது கொஞ்சமும் பலிக்காத விஷயம். அவள் ஒரு ஆட்டுக்குட்டிபோல இருந்து, நீங்கள் ஒரு மதயானையின் பலத்தோடு இருந்தால்கூட, அப்படிப்பட்ட காரியத்தில் நீங்கள் துணிந்து இறங்கமாட்டீர்கள் என்பது நிச்சயம். ஆகையால், உங்களுடைய முயற்சிகள் எல்லாம் வீண் முயற்சிகளாகவே முடியும். கடைசியில் உங்களுடைய மனம் அநாவசியமாகப் புண்பட்டு வருந்த நேரும். அதுதான் மிச்சப்படும். அதை உத்தேசித்து நீங்கள் ஒருவிதமாக நடந்து கொண்டால், அது நல்லதாக முடியும் என்று நினைக்கிறேன்; நான் உங்களுக்கு மகாராஜா வென்ற பட்டம் சம்பாதித்துக் கொடுக்கப் போவதான அந்தப்பெரிய காரியத்துக்கு நீங்கள் எனக்கு எந்த உதவி வேண்டுமானாலும் செய்வதாகச் சொல்லி இருக்கிறீர்கள். அந்த விஷயத்தைக் கருதியும் பூர்ணசந்திரோதயம் உங்களுக்கு இணங்கி வரமாட்டாள் என்பதைக் கருதியும் நீங்கள் நம்முடைய ஒப்பந்தத்தை ரத்து செய்து விடுங்கள்.

அதுவே போதுமானது. நீங்கள் எனக்கு அதைத்தவிர வேறே எந்த உதவியும் செய்ய வேண்டாம்'' என்றார்.

அந்த வார்த்தைகளைக்கேட்ட மருங்காபுரி ஜெமீந்தாரது முகம் சடக்கென்று மாறுபட்டது. மிகுந்த துக்கமும் வெட்கமும் ஏமாற்றமும் அவரது மனதில் குடிகொண்டன. தாம் அவருக்கு என்ன மறுமொழி சொல்வது என்பதை அறியாதவராய்ச் சிறிது நேரம் சிந்தனை செய்தார். அதுவரையில் பூர்ணசந்திரோதயத்தின் சுந்தர வடிவத்தைத் தமது இருதய கமலத்தில் வைத்து அவளிடத்தில் தமது மோகவிடாயையும் ஆவலையும் பெருக்கிவந்து கட்டுக்கடங்கா நிலைமையில் இருந்தவர் ஆதலால், மருங்காபுரி ஜெமீந்தார், அப்படிப்பட்ட அரிய மோகனாங்கியை அவ்வளவு எளிதில் தாம் எப்படி விலக்கி விடுவது என்ற தளர்வும் ஏக்கமும் ஏமாற்றமும் ஒரு புறத்தில் வதைக்க, அதனால் மகாராஜா என்ற எவருக்கும் கிடைக்காத பட்டம் போய் விடுமே என்ற அச்சமும், தாம் எப்பாடு பட்டாலும், பூர்ணசந்திரோதயம் தமது வசத்திற்கு வராமல் தம்மிடம் பிடிவாதமாக நடந்து கொள்வாளே என்ற கவலையும் எழுந்து இன்னொரு புறத்தில் வதைத்தன. அதற்குத் தாம் எவ்வித மறுமொழியும் கொடாமல் சும்மா இருப்பது தவறு என்று நினைத்த கிழவர், ''சரி; அப்படியானால், பார்சீ ஜாதிப் பெண்ணின் விஷயத்தில் தாங்கள் கொண்டிருந்த கருத்தை எல்லாம் இனி விலக்கிவிடப் போகிறீர்களா?'' என்றார்.

அதைக்கேட்ட இளவரசர், ''நான் இவளொருத்தியோடு நின்று விடுகிறேன். இனி நான் பார்சீஜாதிப் பெண்ணை மனசால் நினைப்பதுகூட இல்லையென்று உங்களுக்கு உறுதி செய்து கொடுக்கிறேன். அவள் யாரென்பதையும் எங்கே இருப்பவள் என்பதையும் நீங்களும் போலீஸ் இன்ஸ்பெக்டரும் சேர்ந்து கண்டுபிடித்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். அவளை உங்களுடைய பிரியப்படி நடத்திக் கொள்ளுங்கள். அவளும் சாதாரணமான அழகுடையவளல்ல. பூர்ணசந்திரோதயத்தை

அநேகமாக அவள் ஒத்தவளாகவே இருக்கிறாள்'' என்றார். உடனே மருங்காபுரி ஜெமீந்தார், ''தங்களுடைய பிரியப்படியே நடந்துகொள்ளுகிறேன். தாங்கள் நாளைய தினம் எனக்கு அனுப்புவதாகச் சொன்ன மகாராஜாவென்ற பட்டத்தின் சன்னதை அனுப்ப மறந்துபோக வேண்டாம். பூர்ணசந்திரோத யத்தின் விஷயமாக ஏற்பட்ட நஷ்டத்துக்கு இந்த ஒரு லாபமாவது இருக்கட்டும்'' என்றார்.

இளவரசர், ''ஓ! அவசியம் இருக்கவேண்டும். மறந்து போகாமல் நான் நாளையதினம் மந்திரியோடு பேசி அதை அனுப்பிவைக்கிறேன். ஆனால், நீங்கள் அந்தப் பார்சீஜாதிப் பெண்ணை அடைந்தபிறகு நமக்கு முக்கியமாகத் தெரிய வேண்டிய சங்கதிகளை அவளிடம் கேட்டறிந்து எனக்குத் தெரிவியுங்கள். அன்றைய தினம் மகாபூடகமாக அவர்கள் நம்மைக் கொண்டுபோய் ஏதோ கடிதத்தில் என்னுடைய கையெழுத்தை வாங்கிக் கொண்டாள். அதன் உண்மை என்ன என்பதைத் தந்திரமாகக் கேட்டறிந்து எனக்குத் தெரிவியுங்கள்'' என்று நயமாகக் கூறினார்.

மருங்காபுரி ஜெமீந்தார், ''ஓ! அவசியம் தெரிவிக்கிறேன். இந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டர் நிரம்பவும் சாமர்த்தியசாலி. நேற்றைய தினம் அவர் பிச்சைக்காரனைப்போல வேஷம் போட்டுக்கொண்டு ரஸ்தாவில் உட்கார்ந்திருந்த விஷயம் ஏற்கெனவே தங்களுக்குத் தெரியும். அன்றையதினம் நம்மை அவர்கள் எவ்வளவு ரகசியமாகக் கொண்டுபோய் வேலையை முடித்துக்கொண்டார்களோ, அதுபோலவே, நேற்றையதினம் அவர்கள் அந்த தினசரி டைரியைக் கொண்டுவந்து சேர்த்திருக்கிறார்கள். இருந்தாலும், அந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டர் இந்த விஷயத்தில் பற்பல தந்திரங்களைச் செய்து நிரம்பவும் பாடுபட்டு நாளைய சாயுங்காலத்துக்குள் அவளுடைய விவரங்களையெல்லாம் கண்டுபிடித்து விடுவதாக வாக்குறுதி செய்துவிட்டுப் போயிருக்கிறார். அவர் இந்த

விஷயத்தில் அவசியம் வெற்றி அடைவார் என்று நான் நிச்சயமாக நம்பி இருக்கிறேன்'' என்றார்.

இளவரசர், ''சரி; சந்தோஷம். எப்படியாவது பிரயத்தனம் செய்து அவளைக்கொண்டுவந்து உங்களுடைய வசப்படுத்தி வைத்துக் கொள்ளுங்கள். அதிருக்கட்டும். நாளைய தினம் உங்களுடைய முறையல்லவா! நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? பூர்ணசந்திரோதயத்தின் ஜாகைக்குப் போவீர்களா?'' என்றார்.

மருங்காபுரி ஜெமீந்தார் மிகவும் ஏமாறிப்போன தோற்றத்தோடு விசனமாக, ''நான் போவதில் என்ன உபயோகம்? அவள் இனிமேல் என்னை மதிக்கப் போகிறாளா? அவளுக்கு மூலஸ்தான தெய்வத்தின் தயவு ஏற்பட்டுப்போன பிறகு மற்றச் சுற்றுக் கோவிலிலுள்ள சில்லறைத் தெய்வங்கள் எல்லாம் ஒரு பொருட்டா? நான் அவளிடம் போய் அவமானப் படுவதைவிட போகாமல் இருந்து விடுவதே உசிதம் என நினைக்கிறேன்'' என்று சலிப்பாகக் கூறினார்.

அதைக்கேட்ட இளவரசர் சந்தோஷமாகப் புன்னகை செய்து, ''அதுதான் உத்தமமான கர்ரியம். இனிமேல் மற்றவர் அங்கே போவது வீண் பிரயாசையாகத்தான் முடியும். சரி, எனக்கு நேரமாகிறது. நான் போய் மந்திரியை வரவழைத்து, உங்களுடைய சங்கதியைச் சொல்லி, அந்தக் காரியத்தை முடிக்க வேண்டும். இன்னும் நான் அநேக கடிதங்களுக்கும், உத்தரவுகளுக்கும் கையெழுத்துச் செய்ய வேண்டும். நான் போய்விட்டு வருகிறேன்'' என்று கூறி, செலவு பெற்றுக் கொண்டு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுத் தமது அரண் மனைக்குப் போய்ச் சேர்ந்துவிட்டார்.

★ ★ ★

இனி நாம் இவர்களை விடுத்து, பூர்ணசந்திரோதயத்தைப் பற்றிப் பேசுவோம். அந்தப் பைங்கிளி இளவரசரை வெளியில்

அனுப்பிய பிறகு சோர்ந்து களைப்படைந்து ஓய்ந்து தனது கட்டிலில் ஏறிப்படுத்து, "அப்பாடா" என்று நல்லமூச்சாக விடத் தொடங்கினாள். அன்றையதினம் காலையிலிருந்து வதை பட்டுக் கொண்டிருந்த அவளது மாந்தளிர் மேனியும், புண்பட்டுக் கொண்டிருந்த அவளது மனமும் அப்போதே ஒருவித அமைதி அடைந்தன. அப்படியே அவள் சிறிது நேரம் சயனித்திருந்து களைத்துத் தெளிந்தவளாய் எழுந்தாள். மறுநாளைய இரவில் ஒன்பதுமணிக்குத் தான் புறப்பட்டு அந்த ஊர் இளவரசரது அந்தப்புரத்திற்குப் போக வேண்டுமென்ற நினைவில் உண்டான மனவெழுச்சி அப்போதே எழுந்து அபாரமாகப் பொங்கியது. அதன் பெருக்கையும் மும்முரத்தையும் தாங்கமாட்டாமல் அவளது மனம் நிரம்பவும் சஞ்சலம் அடையத் தொடங்கியது. அவளது உடம்பு மிகுந்த துடிதுடிப்பை அடைந்து தவித்துக்கொண்டிருந்தது. அந்தத் தோகை மடமயிலாளுக்கு அந்த இரவில் பசி, தாகம், தூக்கம் முதலிய எவ்வித தேகபாதையும் தோன்றாது இருக்க, அவளது வயிறு, மனம் முதலியவைகள் ஆனந்தமாக நிறைந்திருந்தன. அவ்வாறு அவள் அன்றைய இரவைப் போக்கினாள். மறுநாளைய பகல் முழுதும் அவள் அதே மாதிரியாக இன்பமோ துன்பமோ என்று அறிய இயலாத மகா சஞ்சலமான நிலைமையில் இருந்ததன்றி, தான் அன்றைய தினம் இரவில் இன்னின்ன ஆடையாபரணங்களை அணிந்து தன்னை எப்படி அலங்கரித்துக்கொள்வது என்பதைப் பற்றித் திட்டம் போட்டு, அப்போது முதலிருந்தே தன்னைப் பலவிதமாக அலங்கரித்து நிலைக்கண்ணாடியில் பார்த்துப் பார்த்து, கூட்டிக் குறைத்துக் கலைத்து அழித்துப் புதுக்கிப் பலவகையான திருத்தங்கள் மாறுபாடுகள் முதலியவைகளைச்செய்து கடைசியாக, இன்னவிதமாகத்தான் தன்னை அலங்கரித்துக் கொள்வது என்பதைப் பற்றி அவள் ஒரு முடிவிற்கு வர அன்றைய தினம் மாலைவரையில் பிடித்தது. அதற்குமேல், அவள் தண்ணீருக்குப்பதிலாகப் பன்னீரைப் பெரிய தொட்டியில்

நிரம்ப அத்தர்களைச் சொரிந்து, அதற்குள் இறங்கி நெடு நேரமிருந்து நீராடித் தனது உடம்பின் மணம் நெடுந்தூரம் கமழும்படி செய்து கொண்டாள்; சிரத்திலிருந்த அற்புத வனப்பு வாய்ந்த அளகபாரத்திற்கும் அதி ரமணீயமான கூந்தல் தைலம் தடவித் தாழம்பூ மடல்களோடு சேர்த்து அழகாகப் பின்னித் தொங்க விட்டதன்றி, பின்னலின் உச்சியிலிருந்து நுனிவரையில் ரோஜா மலர்களையும் வைர ஜடை பில்லைகளையும் மாறி வைத்துப் பொருத்தி, அதன் நுனியில் நல்முத்து, நற்பவளம் முதலிய நவரத்ன மணிகளால் ஆன குஞ்சங்களைத் தொங்க விட்டாள். புருவ விற்களில் ஜவ்வாதணிந்து நெற்றியில் கஸ்தூரி திலகம் அணிந்தாள்; இயற்கையிலேயே உலகை எல்லாம் மயக்கும் விஷமம் வாய்ந்த தனது கண்களிரண்டிற்கும் மைதீட்டி அவற்றின் அழகைப் பதினாயிரமடங்கு பெருக்கிக் கொண்டாள்; ஜரிகைப் புட்டாக்கள் நிறைந்த ஊதாநிறப் பனாரீஸ் பட்டாடையை அணிந்து இடையில் வைரங்கள் ஜாஜ்வல்லியமாக நிறைந்திருந்த தங்க ஒட்டியாணம் அணிந்து கொண்டாள். விலைமதிக்க அரியதும் கண்ணைக் கவரும் படியான மெருகு வாய்ந்ததும் ஜரிகை வேலைப்பாடுகள் நிறைந்ததுமான வெல்வெட்டு ரவிக்கை யணிந்து அதன்மேல் நவரத்னம் சகிதமான வங்கிகள் அணிந்து கொண்டாள்; உச்சி முதல் உள்ளங்கால் வரையில் எங்கு பார்த்தாலும் வைர ஆபரணங்களே நிறைந்து நக்ஷத்திரங்கள் கொலுவீற்றி ருந்ததுபோல ஒளிக்கற்றையைக் கொள்ளை கொள்ளையாக அள்ளி வீசிக் கொண்டிருந்தன. பச்சை வெல்வெட்டில் ரோஜாப் புஷ்பங்கள் தைக்கப்பட்ட சிலிப்பர்களைக் காலில் அணிந்து கொண்டாள். ஜாதி மல்லிகை, ரோஜா ஆகிய இரண்டும் சேர்த்துக்கட்டப்பட்ட புஷ்பம் அவளது சிரத்தில் வீற்றிருந்தது. அவ்வாறு சம்பூரணமாகவும் சுத்தமாகவும் அலங்கரித்துக் கொண்ட பூர்ணசந்திரோதயம் நல்ல முதல்தரமான வாசனைத் திரவியங்கள் கலந்த தாம்பூலம் அணிந்தமையால், அவளது அதரங்கள் மாதுளை மலர்போலச் சிவந்து தோன்றின. அவள்

திரும்பவும் அத்தர் அம்பர் முதலிய உயர்தரப் பரிமள கந்தங்களைத் தனது ஆடைகளிலும் புஷ்பங்களிலும் பெய்து கொண்டதன்றி, தனது உடம்பிலும் திமிர்ந்து கொண்டவளாய், நிலைக் கண்ணாடியண்டை சென்று, அதற்கு எதிரில் நின்று பார்க்க, அந்தக் கோமளாங்கி தனது கண்களை நம்பாமல் பிரமித்து ஸ்தம்பித்து மோகித்து நின்றாள். தனது தோற்றம் ஒரே ஜெகஜ்ஜோதியாகவும், மகா வசீகரமாகவும் எப்படிப்பட்டவரது மனதையும் ஒரு நொடியில் மயக்கி உன்மத்தம் உண்டாக்கத் தக்கதாகவும் இருந்ததைக் கண்டு தான் பூர்ணசந்திரோதயம் தானோ என்று தனக்குத்தானே பன்முறை சந்தேகித்தவளாய், தனது முடிமுதல் அடிவரையிலுள்ள ஒவ்வோர் அங்கத்தின் நிகரற்ற எழிலையும் பார்த்துப் பார்த்துக் குதூகலமும் பேருவகையும் கொண்டவளாய், மண்ணுலகத்து மண்டலேசுவரி போலவும் விண்ணுலகத்து இந்திராணி போலவும் அழகுத் திரளாகவும், இன்பப் பிழம்பாகவும், ஜோதி மயமாகவும், கவர்ச்சிக் களஞ்சியமாகவும் தோன்றி நிரம்பவும் திருப்தி அடைந்தவளாய், சிறிது நின்றபின், முதல்நாள் இளவரசர் தம்மை மூடிக்கொண்டு வந்த பனாரீஸ் அங்கியொன்றை அவள் முன்னாகவே தயாரித்து வைத்திருந்தாள் ஆதலால், அதை எடுத்துத் தனது தலையில் மாட்டி முகம் உடம்பு முதலிய எல்லா அங்கங்களையும் மறைத்துக் கொண்டாள். முகத்தில் அமைக்கப்பட்டிருந்த இரண்டு துளைகளின் வழியாக அவளது கயல்விழிகள் மகா வசீகரமாக ஜ்வலித்தன. பாதங்களில் இருந்த வெல்வெட்டு ஜோடுகளும், தந்தத்தில் கடைந்தெடுக்கப் பட்டவைபோல இருந்த மாசுமறுவற்ற மகா சுத்தமான அவளது பாதங்களில் சொற்ப பாகமுமே அங்கிக்குக் கீழே தெரிந்தன. அவளது உடம்பில் இருந்த மலர்களின் மணமும், பரிமளகந்தங்களின் கமழ்வும் ஒன்றுகூடி, அவளது அங்கிக்கு வெளியில் வந்து நெடுந்தூரம்பரவி காந்தம் இரும்பைத் தேடிக் கவர்வது போல நெடுந்தூரத்தில் இருந்தோரது நாசிகளை எல்லாம் வசீகரித்து ஈர்த்தன.

அவ்வாறு நவரத்னாலங்கார பூஷிதையாய், அப்போதே மலர்ந்து நறுமணம் சொரியும் தெய்வலோகத்து மலர்போலவும் தனது பெயருக்குத் தகுந்தபடி பூர்ணசந்திரன் உதயமானது போலவும் புறப்பட்ட அந்தப் பெண்ணரசி கலாபமயில் போன்ற சாயலோடு அன்னமென நடந்து சரியாக ஒன்பதுமணிக்கு வெளிப்பட்டு, ஜெகன்மோகன விலாசத்தின் வாசலிற்கு வர, அவ்விடத்தில் ஓர் அழகான உன்னதப் பெட்டிவண்டி நின்றுகொண்டிருக்க அதன் பக்கத்தில் இரண்டு காசாரிகள் நின்று குனிந்து கும்பிடுபோட்டு அவளை வணங்கி வண்டியின் கதவைத்திறந்துவிட அந்தப் பேடன்னம், மௌனமாக நடந்து போய் வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டாள். உடனே காசாரிகள் வண்டியின் கதவை மூடிவிட்டு வண்டியின் பின்புறத்தில் உட்கார்ந்து கொள்ள சாரதி வண்டியை ஓட்டத் தொடங்கினான். வண்டி விரைவாக ஓடத் தலைப்பட்டது.

வண்டிக்குள் உட்கார்ந்திருந்த மின்னற்கொடியான பூர்ணசந்திரோதயத்தின் நிலைமை இன்பமோ துன்பமோ என்று பகுத்தறியக்கூடாத மகா சலனமான நிலைமையாக இருந்தது. அவளது மனம் பொங்கிப் பொங்கி அளவுகடந்து கொந்தளித்துக்கொண்டிருந்தது. அவளது அழகிய மேனி பசத்துப் பூரித்து நடுநடுங்கிக் கட்டிலடங்காமல் தத்தளித்துக் கொண்டிருந்தது. அப்படிப்பட்ட மகா பரிதாபகரமான நிலைமையில் சென்றுகொண்டிருந்த அந்த ரதிதேவி கதவின் இடுக்குகளின் வழியாகத் தனது பார்வையை வெளியில் செலுத்தி, வண்டி எந்த வழியாகப் போகிறது என்பதையும், இரண்டு பக்கங்களில் இருந்த மாடமாளிகை கூட கோபுரங் களையும் வேடிக்கையாகக் கவனித்துக்கொண்டே சென்றாள்.

அரை நாழிகையில் வண்டி அதன் முடிபு ஸ்தானத்தில் போய் நின்றது. மறுபடியும் காசாரிகள் இறங்கிவந்து, கதவைத் திறந்து விட்டு, இறங்கவேண்டிய இடம் வந்துவிட்டதென்று கூறி மரியாதையாக ஒரு பக்கத்தில் விலகி நிற்க, உடனே

பூர்ணசந்திரோதயம் கீழே இறங்கினாள். அவ்விடத்தில் ஆயத்தமாக நின்றுகொண்டிருந்த இரண்டு தாதிகள் பூர்ணசந்திரோதயத்திற்கு எதிரில் வந்து நிரம்பவும் மரியாதையாக வணங்கி அவளை வரவேற்று, இளவரசர் முதல் உப்பரிகையில் இருப்பதாகவும், அவளை அங்கே அழைத்துக் கொண்டு வரும்படி சொன்னதாகவும் கூறி, அவளை அழைத்துக் கொண்டு உள்ளே சென்றனர். அது ஒரு விஸ்தாரமான பெருத்த மாளிகையாகக் காணப்பட்டது. அதன்முன் பக்கத்தில் ஓர் அழகிய சிறிய பூஞ்சோலை இருந்தது. அந்தப் பூஞ்சோலையின் இடையில் அற்புதமாக அமைக்கப்பட்டிருந்த புல் நிறைந்த பாதையின் வழியாக அந்தத் தாதிகள் பூர்ணசந்திரோயத்தை நடத்திச்சென்று எதிரில் இருந்த படிக்கட்டுகளின் மேல் அவளை அழைத்துக் கொண்டு முதல் உப்பரிகையை அடைந்தனர். வண்டி வந்துநின்ற ராஜபாட்டையிலும், அந்த மாளிகையின் முன் பக்கத்தில் இருந்த பூஞ்சோலையிலும் விளக்குகள் பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தன. ஆதலால், பூர்ணசந்திரோதயம் வண்டியிலி ருந்து கீழே இறங்கி முதல் நாற்புறங்களிலும் திரும்பித் திரும்பிப் பார்த்து அது எந்த இடமென்பதை உற்றுக் கவனித்துக்கொண்டே உள்ளே சென்றாள். அதுபோல அவள் உப்பரிகைப் படிகளின் மேல் ஏறிச்சென்ற காலத்திலும், அடிக்கடி அப்புறம் இப்புறம் திரும்பி ஆராய்ச்சி செய்து கொண்டே நடந்தாள். தாதிகளும் பூர்ணசந்திரோதயமும் படிக்கட்டின் உச்சியை அடைந்து அவ்விடத்திலிருந்த தாழ்வாரத்தை அடைந்தனர். அந்தத் தாழ்வாரம் வலது பக்கத்திலும் இடது பக்கத்திலும் நெடுந்தூரம் சென்றது. அதன் முன்னால் இருந்த கைப்பிடிச் சுவரின் மீது அழகான பூத்தொட்டிகள் வரிசையாக வைக்கப்பட்டிருந்ததன்றி, ஆங்காங்கு சம்பங்கி, ஜாதிமல்லிகை, மனோரஞ்சிதம் முதலியவற்றின் கொடிகள் உன்னதமாக ஏற்றிவிடப் பட்டிருந்தன. அந்தத் தாழ்வாரத்தில் ஆங்காங்கு ஜன்னல்களும், வாசற்கதவுகளும் இருந்தது பூர்ணசந்திரோதயத்திற்குத்

தெரிந்தது. ஆனால், அந்தத் தாதிகள் அவளை அப்புறம் இப்புறம் அழைத்துப்போகாமல் படிக்கட்டிற்கு நேர் எதிரில் மூடி வைக்கப்பட்டிருந்த ஒரு கதவைத் திறந்து, "அம்மணீ! இந்த ஹாலுக்குள் இளவரசர் இருக்கிறார். உள்ளே நுழைந்து வலதுபக்கம் திரும்பிப்போங்கள்" என்று அடக்க ஒடுக்கமாகவும் மரியாதையாகவும் கூறி, இரண்டு பக்கங்களிலும் விலகி நிற்க, பூர்ணசந்திரோதயம் அந்த வாசலின் வழியாக உள்ளே நுழைந்து வலது பக்கம் திரும்பி இரண்டோரடி எடுத்து வைத்தாள். வெளியில் நின்ற தாதிகள் அந்தக் கதவை மறுபடியும் முன்போல மூடிக்கொண்டனர். உட்புறத்தில் விடப்பட்ட பூர்ண சந்திரோதயம் தனது உடம்பை மூடிக்கொண்டிருந்த பனாரிஸ் அங்கியை விலக்கி, எதிரில் காணப்பட்ட ஒரு நாற்காலியின் மீது வைத்து விட்டு வலது பக்கத்தில் நோக்கி இளவரசர் எங்கே இருக்கிறார் என்று பார்த்தாள். அவளது கண்பார்வை எட்டிய தூரம் வரையில் இளவரசர் இருந்ததாகவே தெரியவில்லை. அவள் ஒருவித வியப்பும் திகைப்பும் அடைந்து நாற்புறங்களிலும் நோக்கினாள். அது நிரம்பவும் விசாலமானதும் மகா அலங்கார மானதுமான ஒரு ஹாலாக இருந்தது. எங்கு பார்த்தாலும் ஏராளமான மணிவிளக்குகள் சரம்சரமாகத் தொங்கிக் கொண்டி ருந்தன. ஆனால், அந்த ஹால் தான் அதற்குமுன் பார்த்தறியாத எத்தனையோ அலங்காரமான ஹால்களைப்போல் இல்லாமல், ஏதோ ஒரு புதுமையான ஹாலாகவும், அது மனிதலோகத்தைச் சேராமல், தெய்வலோகத்தைச் சேர்ந்த அதி விநோதமான கொலு மண்டபம் போலவும் காணப்பட்டது. அந்த அழகிய பேடன்னம் கரைகடந்த பிரமிப்படைந்து, அந்த ஹாலின் அமைப்பில் என்ன விதமான புதுமை இருக்கிறது என்று கவனித்து ஆராய்ச்சி செய்யத் தொடங்கினாள். அந்த மாடத்தின் சுவர்கள், நாற்காலிகள், மேஜைகள், கட்டில்கள், மெத்தைகள், தரை முதலிய சகலமான இடங்களும், ஒரே கல்வெட்டு மயமாக நிறைந்திருந்தன. வெல்வெட்டுகள் பச்சை, சிவப்பு, ஊதா,

மஞ்சள், கறுப்பு,நீலம் முதலிய பலவகைப்பட்ட நிறங்களுடையனவாகவும் ஜரிகை வேலைப்பாடுகளும், ஜரிகைப் பூக்களும், புட்டாக்களும் நிரம்பியவையாகவும் இருந்தன. ஆதலால், அவைகள் ஒன்றுகூடி அவ்விடத்தில் இருந்த மணிவிளக்குகளின் பிரகாசத்தில் வானவில்லின் நிறங்களைக் காட்டி ஜெகஜ்ஜோதியாகவும் மனமோகன அற்புத சிருஷ்டியாகவும் காணப்பட்டன. பூர்ணசந்திரோதயம் பிரமித்து மதிமயங்கி ஆச்சரிய வசத்தளாய், அங்குமிங்கும் சென்று, இளவரசர் எங்கே இருக்கிறார் என்று உற்று நோக்கியதோடு அந்த ஹாலின் புதுமையான அமைப்பையும் கூர்ந்து நோக்கினாள். அவள் கீழே நடந்தாலும், சுவர்களில் சாய்ந்தாலும், நாற்காலியில் உட்கார்ந்தாலும், எல்லா இடங்களும் அவளை இனிமையாக வழுக்கிவிட்டு அவளைப் பரமானந்த சுகத்தில் ஆழ்த்தின. அந்த அமைப்போடு, எங்கு பார்த்தாலும், வாசனைப் புஷ்பங்கள் மலர்ந்து குலுங்கி நின்ற பூத்தொட்டிகளும், நிலைக் கண்ணாடிகளும், ஸோபாக்களும், தந்தத்தினால் ஆன சாய்வான நாற்காலிகள் முதலிய விநோதப் பொருட்களும் நிறைந்து அது தேவேந்திரனது வஸந்த மண்டபமோ வென ஐயமுறச்செய்து பஞ்சேந்திரியங்களும் மயங்கிப் போதையில் ஆழ்ந்து போம்படி செய்தன. அப்படிப்பட்ட வைபவங்களைக்கண்ட பூர்ண சந்திரோதயம் நிலை கலங்கி ஆனந்தபரவசம் அடைந்தவளாய், ஓரிடம் விடாமல் அந்த ஹால் முழுதையும் பார்த்தவண்ணம் இளவரசர் எங்கே இருக்கிறார் என்று உற்று நோக்கிக் கொண்டே சென்றாள். ஆனால், அந்த ஹாலில் எந்த இடத்திலும் இளவரசராவது, வேறே மனிதராவது தாதிகளாவது காணப்படாமல் அது நிர்மானுஷ்யமாக இருந்தது. அதைக்கண்ட பூர்ணசந்திரோதயத்தின் மனம் அளவற்ற சஞ்சலம் அடைந்து பலவகையில் சிந்தனை செய்யத் தொடங்கியது. அவ்விடத்தில் தனது வருகையை எதிர்பார்த்திருந்த இளவரசர் ஒருகால் ஏதேனும் அவசர காரியமாக எங்கேயாகிலும் போயிருந்து

மறுபடியும் திரும்பி வருவாரோ என்றும், அல்லது, தனது மனதைச் சோதிப்பதற்காக அவர் ஒருகால் அவ்விடத்திலேயே எங்கேயாகிலும் மறைந்து கொண்டிருப்பாரோ என்றும் பலவாறு எண்ணமிட்டவளாய், அந்த அன்னநடைப் பூங்கோதை அந்த ஹால் முழுதும் சென்று பூத்தொட்டிகள் முதலியவற்றின் மறைவுகளையும் நாற்காலிகள் ஸோபாக்கள் முதலியவற்றின் அடிவெளிகளையும் கவனித்துப் பார்த்தாள். எந்த இடத்திலும் இளவரசராவது வேறே ஒருவராவது காணப்படவில்லை. அவள் மிகுந்த ஆச்சரியமடைந்தவளாய், தான் அவ்விடத்தில் சிறிது நேரம் காத்திருந்தால், எப்படியும் அதன் ரகசியம் வெளியாகிவிடும் என்றும், எவராகிலும் மனிதர் வந்தே தீருவர் என்றும் உறுதிப்படுத்திக்கொண்டு சமீபத்தில் இருந்த ஒரு ஸோபாவின் மீதமர்ந்து, நாற்புறங்களிலும் நிறைந்து அவளது பஞ்சேந்திரியங்களையும் மயக்கி வசீகரித்த புதுமைகளில் தனது திருஷ்டியையும் கவனத்தையும் செலுத்தியவளாக உட்கார்ந்திருந்தாள். அவ்வாறு கால் நாழிகை, அரைநாழிகை, ஒருநாழிகை நேரமும் கழிந்தது. அவ்விடத்தில் மனிதரே வரவில்லை. அவளது மனம் கரை கடந்த சஞ்சலம் அடைந்தது. தேகம் துடிதுடிக்க வாரம்பித்தது. அவளுக்கு இளவரசரின் மீது மிகுந்த கோபம் உண்டாயிற்று. தன்னிடத்தில் வந்து எவ்வளவோ பணிவாகவும், நயமாகவும் உருக்கமாகவும் பலபல பேசி வாய்ப்பந்தல் போட்டு, தன்னை அபாரமான செல்வத்திலும் உன்னத பதவியிலும் வைத்துத் தன்னைவிட்டு ஒரு நொடியும் பிரியாதிருப்பதாக வாக்களித்துத் தன்னை அங்கே வரச்செய்த இளவரசர், தன்னை அவ்வாறு காக்கவைத்து வேதனைக்கு ஆளாக்கி அவமானப்படுத்தும்படி ஆனதா என்ற ஒருவித மனக்கொதிப்பும் உண்டாயிற்று. தான் அதற்கு மேலும், அவ்விடத்தில் இருப்பதா, அல்லது அவ்விடத்தை விட்டு வெளிப்பட்டுத் தனது ஜாகைக்குப் போவதா என்று அவள் யோசிக்கலானாள். எல்லாவற்றிற்கும் தான் எழுந்து வாசற் கதவண்டை போய், அதைத் திறந்துகொண்டு வெளியில்

பார்த்தால், தன்னை உப்பரிகைக்கு அழைத்து வந்த இரண்டு தாதிகள் இருக்கலாம் என்றும், அவர்களிடம் கேட்டு உண்மையைத் தெரிந்து கொள்ளலாம் என்றும் தீர்மானித்துக் கொண்ட அந்த அழகிய ரமணி ஸோபாவை விட்டு எழுந்து வாசற் கதவண்டை போய்அதைத் திறக்க கதவு வெளிப் பக்கத்தில் தாளிடப்பட்டுப் போயிருந்தது. அவள் கதவை இரண்டொருதரம் இடித்துத் தாதிகளைக் கூப்பிட்டுப் பார்த்தாள். எவ்வித மறுமொழியும் கிடைக்கவில்லை. அந்த மடந்தையின் மனதில் மிகுந்த கோபமும், சஞ்சலமும் பலவகைப்பட்ட எண்ணங்களும் உண்டாயின. அவள் உடனே அந்த இடத்தை விட்டுச் சுவரோரமாக நடந்து போய் வழி நெடுக இருந்த ஜன்னல்கள், வாசற்படிகள் முதலியவைகளின் அருகில் போய்ப் பார்க்க, எல்லாக் கதவுகளும் மூடி வெளியில் தாளிடப்பட்டிருந்தன. பூர்ணசந்திரோதயம் கரை கடந்த வியப்பும் கலக்கமும் கொண்டவளாய், இளவரசர் தன்னை அவ்வாறு அவமானப்படுத்த வேண்டிய காரணம் என்ன என்று எண்ணியெண்ணிப் பார்க்கிறாள். அவர் ஏதாவது கருத்தை மனதில் வைத்துக்கொண்டு அவ்விடத்தில் தன்னைச் சிறைப்படுத்தி இருக்கிறாரோ என்ற சந்தேகமும் உண்டாயிற்று. வாசலில் வந்திருந்து தன்னை உப்பரிகைக்கு அழைத்து வந்த தாதிகள், இளவரசர் மேன்மாடத்தில் இருப்பதாகவும், தன்னை அவ்விடத்திற்கு அழைத்துவரச் சொன்னதாகவும் கூறியது நினைவிற்கு வந்தது. அவர்களும் ஒருவேளை பொய் சொல்லித் தன்னை அழைத்துக்கொண்டு வந்திருக்கலாம் என்ற யூகமும் தோன்றியது. எப்படியிருந்தாலும் இளவரசர் தன்னை அவ்வாறு வஞ்சித்து அவமானப்படுத்த மனங்கொள்ள மாட்டார் என்ற உறுதியும் உண்டாகிக் கொண்டிருந்தது. அவ்வாறு அவள் பலவாறு நினைத்துக் கவலைகொண்டு கோபத்தோடு அந்த ஹால் முழுதையும் ஆராய்ச்சி செய்துமுடித்துவிட்டு மனத் தளர்ச்சியடைந்து தான் அதற்குமேல் என்ன செய்வதென்பதை உணரமாட்டாமல் தத்தளித்து நின்ற சமயத்தில் அவள் கீழே

இருந்து, படிக்கட்டுகளின் வழியாக ஏறி மேலே வந்து அந்த ஹாலிற்குள் நுழைந்த வாசற்படிக் கதவிற்கு நேர் எதிரிலிருந்த ஒரு கண்ணாடி கதவு திறந்து வைக்கப்பட்டிருந்தது அவளது திருஷ்டியில் பட்டது. அதற்குமுன் அவள் எல்லாக் கதவுகளையும் ஆராய்ந்த காலத்தில், அந்தக் கண்ணாடிக் கதவையும் அவள் தள்ளிப் பார்த்ததாக அவளுக்கு நினைவுண்டாயிற்று. அப்படி இருக்க, அந்தக் கதவு இப்போது திறந்து வைக்கப்பட்டிருந்ததைக் காண, அவளது வியப்பு முன்னிலும் நூறுமடங்கு அதிகரித்தது. யாரோ மனிதர்கள் அந்த ஹாலைச் சுற்றிலும் மறைந்திருந்து தன்னைக் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற ஒரு யூகம் உண்டாயிற்று. அவர்கள் தனக்கெதிரில் நேரில் வந்து தங்களது கருத்தை வெளியிடாமல், அவ்வாறு ரகசியமாகக் கதவைத்திறந்து ஊமை ஜாடை காட்ட வேண்டிய காரணம் என்ன என்று யோசனை செய்தாள். அவர்கள் கண்ணாடிக் கதவைத் திறந்து வைத்ததிலிருந்து, தன்னை அவர்கள் அந்தக் கதவின் வழியாக அப்புறம் இருந்த இடத்திற்கு அழைக்கிறார்கள் என்று யூகித்துக்கொண்ட பூர்ணசந்திரோதயம், தான் அங்கே போய், அதன்முடிவு இன்னது என்பதை அறிந்துகொள்வதே உசிதமான காரியம் என்று தீர்மானித்துக் கொண்டவளாய்க் கண்ணாடிக் கதவு இருந்த இடத்திற்குச்சென்று அவ்விடத்தில் சென்ற நடையின் வழியாக அப்பால் சென்றாள். அவ்விடத்தில் வேறொரு ஹால் தென்பட்டது. அது முதலிலிருந்த ஹாலிலும் சிறிதளவு சிறியதாக இருந்ததானாலும், அதைக் காட்டிலும் பதினாயிரம் மடங்கு அதிக அற்புதமாகவும், புதுமையாகவும், அழகாகவும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதன் கண்கொள்ளா வனப்பைக் கண்ட பூர்ணசந்திரோதயம் பிரமித்து நிலைகலங்கி அப்படியே நின்றுவிட்டாள். அதன் சுவர்களெல்லாம் கண்ணாடியினாலேயே அமைக்கப்பட்டிருந்தமையால், அது ஒரு பளிங்கு மண்டபம் என அவள் யூகித்துக்கொண்டாள். அவள்போய் நின்றவுடனே அவளது வடிவம் பல இடங்களில்

பிரதிபிம்பித்து நின்றமையால், எங்கு பார்த்தாலும், எண்ணிறந்த பூர்ணசந்திரோ தயமே காணப்பட்டாள். அந்த ஹாலின் சுவர் ஓரமாக தேர் சிங்காரம்போல அறுபத்துநான்கு சப்பிரமஞ்சங்கள் காணப் பட்டன. ஒன்று நல் முத்துக்களினால் ஆன ஹாரங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. அதுபோல, மற்றவைகள் முறையே பவழங்கள், வைரங்கள், பச்சைகள், கெம்புகள், தந்தம், ரோஜாப்பூக்கள், வெட்டிவேர், தாமரைப் புஷ்பங்கள் முதலிய வைகளின் ஹாரங்களால் வெவ்வேறு வகையில் அலங்கரிக்கப் பட்டிருந்தன. ஒவ்வொரு கட்டிலிற்குப் பக்கத்திலும் பலவகைப் பட்ட படங்கள் மாட்டப்பட்டிருந்தன. அந்தப் படங்கள் எல்லாம் ஸ்திரீ புருஷர் பலவகைப்பட்ட சிற்றின்ப லீலைகள் புரியும் சமயங்களைக் காட்டிய உருவங்களையே கொண்டவை யாக இருந்தன. அந்தக் கட்டில்களும், ஆங்காங்கு இருந்த படங்களும் கண்ணாடிச் சுவர்களில் பிரதிபிம்பித்து ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரமாகக் காணப்பட்டு பூர்ணசந்தி ரோயத்தின் மனதை மயக்கி, மதியைக் கலக்கி, அவளது புலன்களெல்லாம் கரைகடந்த பிரமிப்படைந்து ஸ்தம்பமாக நிற்கும்படி செய்தன. எது உண்மையான வடிவம், எது பிரதிபிம்பம் என்பதை அறியமாட்டாமல், அந்த மடமான் திகைத்துத் தடுமாறினாள். ஆனால், அந்த ஹாலிலும் மனிதர் எவரும் இருந்ததாகக் காணப்படவில்லை. அதற்குமேல் தான் எங்கேயும் போவது சரியல்லவென்று நினைத்த பூர்ணசந்தி ரோதயம், தான் அவ்விடத்திலேயே உட்கார்ந்திருந்தால், யாராவது மனிதர் எப்படியும் அவ்விடத்திற்கு வந்துதான் ஆகவேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டாள். அந்த மனமோகன சிங்கார ஹாலில் நடுவில் போடப்பட்டிருந்ததும் கருங்காலியில் நவரத்னம் இழைக்கப்பட்டதுமான வட்ட மேஜையைச் சுற்றிலும், ஸொகுஸான ஸோபாக்கள் தைக்கப்பட்ட சாய்மான நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. அந்த வட்ட வடிவ மேஜையின்மீது பூச்செண்டுகளும், மாதுரியமான கனிவர்க்கங்களும், மிட்டாய் தினுசுகளும்,

குழம்புப் பால், இளநீர், தாம்பூலாதி சாமான்கள் முதலிய சகலமான வஸ்துகளும் நிறைந்திருந்தன. எங்கு பார்த்தாலும் ஊதுவர்த்திகள் கொளுத்தி வைக்கப்பட்டிருந்தன. அந்த ஹால் முழுதும் வாசனை கமகம வென்று கமழ்ந்து மனதைப் பரவசப் படுத்திக்கொண்டிருந்தது.

அந்த வட்ட மேஜையைச் சுற்றிலும் போடப்பட்டிருந்த ஸோபா தைக்கப்பட்ட சாய்மான நாற்காலி ஒன்றில், பூர்ண சந்திரோதயம் போய் உட்கார்ந்து கொண்டாள்.

உட்கார்ந்த உடனே கலீரென்று ஓர் ஓசை உண்டாயிற்று. அந்த நாற்காலியில் ரகசியமாக அமைக்கப்பட்டிருந்த இரண்டு வளையங்கள் சடேரென்று நீண்டு வந்து அவளது இடுப்பைச் சுற்றிலும் ஒட்டியாணம் போடப்பட்டதுபோல அவளை அந்த நாற்காலியோடு சேர்த்து இறுகக் கட்டிவிட்டது. அதுபோல இரண்டு கைகளையும், இரண்டு கால்களையும், வேறு இரண்டு வளையங்கள் பிடித்துக் கட்டிவிட்டன. அவள் வீறிட்டுக் கத்திக்கொண்டு எழுந்திருக்க முயன்றாள். அவளால் அப்படி இப்படி நகரவும் கூடாமல் போய்விட்டது.

அடுத்த நிமிஷத்தில் ஒரு கண்ணாடிக் கதவு திறந்து கொண்டது. மருங்காபுரி ஜெமீந்தார் புன்னகை பூத்த முகத்தோடு அங்கே வந்து, ''பூர்ணசந்திரோதயம்! நீயாகவே மனம் கனிந்து என்னுடைய ஆலிங்கனத்துக்கு வரமாட்டாய். அதற்காக உன்னை இப்படிக் கட்டிவைத்து நான் உன்னை ஆலிங்கனம் செய்து உன்னை வசப்படுத்தப் போகிறேன். உன்னுடைய சாகஸம் எல்லாம் என்னிடம் பலியாது. நீ எவ்வளவுதான் ஓங்கிக் கூச்சலிட்டாலும், அது இந்த இடத்துக்கு வெளியில் கேட்கப் போகிறதில்லை. நீ இன்று என் வலையிலிருந்து தப்பவே முடியாது'' என்று கூறியவண்ணம் முடுக்காக நடந்து அவளண்டை நெருங்கி வந்தார்.

## 15-வது அதிகாரம்

# மாரனோ, ராஜகுமாரனோ!

கபட சன்னியாசியினது மடத்தில் அகப்பட்டுக்கொண்ட இளைய நங்கையான ஷண்முகவடிவின் கதி எப்படி முடிந்தது என்பதைக் கவனிப்போம். அந்த மடத்தினது இரண்டாவது கட்டின் பின்புறத்திலிருந்த ஜன்னலண்டை நின்று, வெளித் திண்ணையிலிருந்து சன்னியாசியும், குடியர்களும் சம்பாஷித்த விவரங்களையும், அவர்கள் கடைசியாகச் செய்து கொண்ட தீர்மானத்தையும் உணர்ந்து கொண்ட அந்த இளந்தோகையின் நிலைமை வாக்கினால் விவரிக்கவும் மனதினால் யூகிக்கவும் அசாத்தியமான பரம சங்கடமான நிலைமையாக இருந்தது. அதுவரையில் தான்,மகா புண்ணியமூர்த்தி என்று மதித்து, முழுதும் நம்பிக்கை வைத்துத் தொடர்ந்து வந்த மனிதனான சந்நியாசி மகாகாமதுரனான பரம துஷ்ட மனிதன் என்பதையும், அவன் மற்ற முரடர்களினது உதவியால் தன்னைப் பலாத்காரம் செய்து தனது கற்பை அழிக்கப் போகிறான் என்ப்தையும் உணர, அவள் திடீரென்று புலி, கரடி, சிங்கம், யானை முதலிய கொடிய விலங்குகளிடையில் அகப்பட்டுக் கொண்டவள் போலவும், ஆலகால விஷங்களைக் கொண்ட மகா பயங்கரமான நாகப் பாம்புகளால் வளைத்துக் கொள்ளப் பட்டவள்போலவும், பிரம்மாண்டமான அக்கினித் தணலுக்குள் நுழைந்துவிட்டவள் போலவும், திடீரென்று நரகத்திற்குள் புகுந்துவிட்டவள் போலவும் விவரிக்கவொண்ணாவகையில் தத்தளித்துக் கலங்கி, தான் கண்டதும் கேட்டதும் பொய்யோ மெய்யோ என்று பிரமித்தவளாய், தான் அன்று எப்படியும் தனது கற்பை இழக்க நேருமாதலால், அதற்குள் தனது உயிரையே விட்டு விடுவது தக்க காரியமென்று நினைத்தாள்.

அந்தக் கபட சன்னியாசி இன்னம் சில நிமிஷ நேரத்தில் வாசல் பக்கத்தில் வந்து கதவை இடிக்கப் போகிறான்; மற்ற முரடர்கள் ஓட்டின் மேல் ஏறி முன் கட்டிற்கு வந்து விடுவார்கள். அதற்குள் தான் என்னசெய்கிறது, அல்லது, எப்படி வெளியில் போகிறது என்று அவள் யோசிக்கலானாள். அவளது கையிலிருந்த விளக்கு காற்றின் வேகத்தினால் அணைந்து போய்விட்டது என்பது முன்னரே சொல்லப்பட்ட விஷயம். ஆகவே, அந்த இடம் முழுதும் அந்தகாரமான இருள் சூழ்ந்து போயிருந்தது. ஆகையால், மனிதர் அல்லது வேறே வஸ்து இருந்ததே தெரியாதிருந்தது. அந்த இடத்தில் தான் எப்படித் தனது உயிரை மாய்த்துக் கொள்வது, எந்த வஸ்துவின் உதவியால் உயிர் துறப்பது என்ற யோசனை தோன்றியது. அந்த இருளில் அவளுக்கு எவ்விதமான யுக்தியும் தோன்றவில்லை. அவள் அவ்விடத்தில் நின்ற ஒவ்வோர் இமைப்பொழுதும் ஒவ்வொரு பெரிய கற்பகாலம் போலத் தோன்றி வதைத்தது. அவளது உடம்பு பூமியில் தரித்து நிற்காமல் ஆகாயத்தில் பறக்கிறது. புதிதாகக் கூண்டில் அடைக்கப்பட்ட பறவை போல அவளது உயிர் பம்பரமாகச் சுழல்கிறது. தான் முன் கட்டிற்குப் போவதைவிட இரண்டாவது கட்டின் கதவை மூடி உட்புறத்தில் தாளிட்டுக்கொண்டு இரண்டாவது கட்டிலேயே இருந்து விட்டால் முன் கட்டுக் கதவை சன்னியாசி இடிக்க, அவள் திறக்காமையில் இருந்து அவனது துணைவர்கள் ஓட்டின் மேலிருந்து இரண்டாங்கட்டில் குதித்துக் கதவைத் திறந்து விடுவதன்றித் தன்னையும் ஒரு நொடியில் பிடித்துக்கொள்வது நிச்சயம் என்ற எண்ணமும் உண்டாயிற்று. ஆகையால், அப்படிச் செய்வதும் உபயோகமற்ற முயற்சியாகத் தோன்றியது. இரண்டாங் கட்டிலிருந்த முற்றத்தின் வழியாக ஓட்டின் மேல் ஏறிப் பின்புறத்தில் குதித்துவிடுவது சுலபமான யோசனையாகத் தோன்றியது. ஆனால் முற்றத்தில் இருந்து கூரை ஓர் ஆள் உயரத்திற்கும் அதிகமிருந்தது. ஆகையால், அவள் ஏறுவதற்கு ஏணி, மூங்கில், அல்லது அடியில்

போட்டுக்கொண்டு நிற்க உயரமான வஸ்து முதலிய எதுவும் அந்த இடத்தில் காணப்படவில்லை. எப்படியாவது தான் பிரயாசைப்பட்டு, அந்தக் கட்டு முழுதும் இருளில் தடவிப் பார்த்து ஏதேனும் சாமானைக் கண்டுபிடித்து அதை எடுத்து வந்து முற்றத்தில் வைத்து அதன் உதவியால் கூரையில் ஏறிப்போக முடிந்தாலும், முன்கட்டில் கூரையின் மேல் உட்கார்ந்திருக்கும் முரடர்கள் தன்னைக் கண்டுபிடித்துக் கொள்வது நிச்சயம் என்ற நினைவு தோன்றியது. ஆகையால், அவ்வாறு முயற்சிப்பதும் பலியாத காரியமாகத் தோன்றியது. இரண்டாவது கட்டின் பின்புறக் கதவு உட்புறத்தில் பூட்டப்பட்டிருந்தது என்பதை அவள் முன்னரே உணர்ந்து கொண்டாள். ஆதலால், அந்தக் கதவைத் திறந்து கொண்டு போவதும் கூடாத காரியமாக இருந்தது. ஆகவே, தான் முன் கட்டிற்குள்போய், வாசல் கதவின் வழியாகத் தப்பிப் போவதைத் தவிர வேறுவிதமாகத் தப்ப வழியில்லை என்பது தெளிவு பட்டது. முன்கட்டிலும் விளக்கு இல்லாது இருந்தமையால், அவ்விடத்திலும் இருள் சூழ்ந்திருந்தது. தான் போய் அவ்விடத்தில் இருந்துகொண்டு சன்னியாசிக்குக் கதவைத் திறந்துவிட்டு விளக்குக் காற்றினால் அணைந்து போய் விட்டது என்று அவனிடம் சொன்னால், அவன் விளக்கைக் கொளுத்தப் போவான். ஆதலால், அந்தச் சமயத்தில் தான் மெதுவாகக் கதவைத் திறந்துகொண்டு வெளியில் போய்விடலாம் என்ற ஓர் எண்ணம் அவளது மனதில் தோன்றியது. ஆனாலும், அவர்கள் வேறோர் ஆளை வெளியில் வைத்து சன்னியாசி உள்ளே நுழைந்த உடனே கதவை வெளிப்புறத்தில் தாளிட்டுவிட முடிவு செய்திருந்தது அவளுக்கு நினைவு உண்டானது. ஆகையால், சன்னியாசி கதவை மூடிக்கொண்டு உள்ளே நுழைந்தபிறகு, தான் கதவைத் திறந்து கொண்டு போவதும் பலியாத காரியமாகத் தோன்றியது. ஆகையால், தான் எந்த வகையாலும் தப்பிப்போவது சாத்தியமற்ற காரியமாகத் தோன்றவே அவளது நெஞ்சம் பிரமாதமாகக் கலங்கியது.

சன்னியாசியும், அவனது துணைவர்களான முரட்டு மனிதர் களும் கொல்லைப்பக்கத்துத் திண்ணையிலிருந்து கீழே இறங்கி ஓர் அடி நடப்பதற்குள் மேலே விவரிக்கப்பட்ட எண்ணங்களும், யோசனையும் ஷண்முகவடிவின் மனதில் மின்னல் போலத் தோன்றி மறைந்தன. தான் தப்பிப் போவதற்கான மார்க்கங்களை எல்லாம் அவள் ஆராய்ச்சி செய்து, அவைகளுள் எதுவும் பலிதமாகக் கூடியதல்ல என்பதைக் கண்டுபிடிக்க ஒரு நொடி நேரங்கூடப் பிடிக்கவில்லை. கடைசி முடிவாக அவளது மனதில் ஒரு யுக்தி தோன்றியது. அந்த யுக்திப்படி நடந்து தான் தப்பிப்போவது மகா துர்பலமான காரியமாக இருந்தது. அப்படித் தப்ப முயற்சிப்பதைத் தவிர, வேறே வழியிருந்த தாகவும் தோன்றவில்லை. பின்புறத் திண்ணையிலிருந்து புறப்பட்டு சன்னியாசி முன்பக்க வாசலுக்கு வருவதற்கு முன், தான் ஒரே ஓட்டமாக ஓடி, முன் பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு வெளியில் ஓடிப் போய்விட வேண்டும் என்ற ஓர் எண்ணமும் உண்டாயிற்று. அப்படிச் செய்வதிலும் சில இடையூறுகள் தோன்றக்கூடியதாக இருந்தன. சன்னியாசி ஒரு நாழிகை நேரத்திற்கு முன் தன்னை முதற்கட்டில் விட்டுப் பிரிந்து வெளியில் போன காலத்தில், முன் பக்கத்துக் கதவை வெளிப்புறத்தில் தாளிட்டுக்கொண்டு போயிருப்பானோ என்ற அச்சமும் ஒருபுறத்தில் வதைத்தது. அவன் அப்படிச் செய்யாதிருந்தாலும் தான் தப்பித்து மடத்திற்கு வெளியில் போய்க் கொஞ்ச தூரம் நடப்பதற்குள் சன்னியாசியும், அவனோடு வரும் முரட்டாளும் வந்து தன்னைப் பிடித்துக் கொள்வார்கள் என்ற திகிலும் உண்டாயிற்று. ஆனாலும், மடத்திற்குள் அடைபட்டுத் தவிப்பதைக் காட்டிலும், வெளியிற் போய், ஓடியோ, கூச்சலிட்டோ, அவர்களைத் திமிறியோ முயன்றுபார்ப்பது உசிதமாகத் தோன்றியது. தெய்வச் செயலாக யாராவது ஜனங்கள் தனக்கு உதவி செய்ய வரக்கூடும் என்ற எண்ணமும் தோன்றியது. ஆகையால், அந்த இளந்தோகை ஒரே நொடியில் தனது மனத்தைத் திடப்படுத்திக் கொண்டவளாய்த்

தனது ஆடைகளை வரிந்து கட்டிக்கொண்டு, விரல்களைக் கீழே ஊன்றி ஓட்டமாக அந்த இடத்தை விட்டு முன் கட்டை நோக்கி ஓடினாள். எங்கும் இருள்மயமாக நிறைந்திருந்ததாலும், அந்தக் கட்டிடம் அவளுக்குப் புதியதாகையாலும் அவள் தட்டுத் தடுமாறி இடறி விழுந்து இரண்டொரு நிமிஷ நேரத்திற்குள் முன் கட்டை அடைந்து, முன்புற வாசலண்டை போய் நின்று உட்புறத் தாழ்ப்பாளை மெதுவாக விலக்கிவிட்டுக் கதவைத் திறந்தாள். கதவு வரவில்லை; அது வெளிப்பக்கத்திலும் தாளிடப்பட்டிருக்கிறது என்பது ஒரே நொடியில் நிச்சயமாயிற்று. உடனே அவளது உற்சாகமும் நம்பிக்கையும் சடக்கென்று மாறிப் போயின, நாடி தளர்ந்து போய்விட்டது. அதற்கு மேல் தான் தப்ப வகையில்லை ஆகையால், அன்று தனக்கு மானபங்கம் ஏற்படுவது நிச்சயம் என்ற திகில் உண்டாகிவிட்டது. அதற்கு மேல் தான் என்ன செய்வது என்பதை அறியமாட்டாமல் கலங்கிக் குழம்பி பெருங்கிலி கொண்டு ஸ்தம்பித்துக் கதவண்டையில் நின்று விட்டாள். அவ்வாறு இரண்டொரு நிமிஷநேரம் கழிந்தது. தான் அந்தக் கதவை மறுபடியும் உட்புறத்தில் தாளிட்டுக்கொண்டு சன்னியாசியை உள்ளே வரவிடாமல் வெளியிலேயே நிறுத்தி வைக்கலாமா என்ற நினைவு உண்டானதானாலும் தான் அப்படிச் செய்தால் கூரை மேல் ஏறிவரும் முரடர்கள் உடனே உள்ளே குதித்துத் தன்னையும் பிடித்துக்கொண்டு, கதவையும் திறந்து விடுவார்கள் என்ற நினைவு உண்டாயிற்று. ஆகையால், தான் கதவைத்திறந்து விடுவதுதான் சந்தேகத்திற்கு இட மில்லாத காரிய மென்ற எண்ணம் தோன்றியது. ஆகையால், அந்தப் பேதை மடவன்னம் கதவின் தாளை மறுபடியும் மாட்டாமல், கலக்கமும், திகிலுமே வடிவெடுத்ததுபோல அப்படியே நின்று கொண்டிருந்தாள். அடுத்த நிமிஷத்தில் கபட சன்னியாசி உள்ளே வந்துவிடுவானே என்றும், தான் எப்படித் தப்பிப் போகிறது என்றும் நினைத்துக் கதிகலங்கிக் கையைப் பிசைந்துகொண்டு சித்திரவதைப்பட்டவளாய் இருக்க, இன்னொரு

நிமிஷ நேரம் கழிந்தது. வெளிப்பக்கத்தில் ஓசையின்றி வந்த சன்னியாசி வெளித் தாழ்ப்பாளை மெதுவாக விலக்கிய ஓசை மிகவும் சொற்பமாகக் கேட்டது. உடனே சாமியார் கதவை மெதுவாகத் தட்டியவண்ணம், ''அம்மா! ஷண்முகவடிவு! தாழ்ப்பாளைத் திற!'' என்று அன்பாகவும் மரியாதையாகவும் அழைக்க, அந்த ஓசையைக்கேட்ட பெண்மணியின் உடம்பு கிடுகிடென்று ஆடியது. அவளது உயிரில் முக்கால் பாகமும் போய்விட்டது. நடைப்பிணம் போலக் காணப்பட்ட அந்தப் பெண்மணி உடனே சடக்கென்று கதவை இழுத்து அதை முழுதும் நன்றாகத் திறந்து வைத்தாள். உட்புறம் முழுதும் இருள் நிறைந்திருந்ததையும், கதவின் உட்புறத் தாழ்ப்பாள் விலக்கப் பட்டே இருந்ததையும், ஷண்முகவடிவு கதவண்டையில் வந்து ஆயத்தமாக நின்றதையும் கண்டு மிகுந்த பிரமிப்பும் கலக்கமும் அடைந்தார்; அந்தப் பெண்பாவை தாங்கள் பேசிய விவரங்களை எல்லாம் அறிந்துகொண்டு வெளியில் போக எத்தனித்திருப்பாளோ என்ற எண்ணம் கொண்டார். ஆனாலும், அந்த இருளில் அவள் இரண்டாங்கட்டின் கடைசிவரையில் போய், வெளிப்பக்கத்தில் பேசப்பட்டதைக் கேட்டிருக்க சாத்தியப்பட்டிருக்காது என்ற நினைவைக் கொண்டவராய் உள்ளே நுழைந்து கதவை மூட முயன்றவராய், ''அம்மா! குழந்தாய்! கதவை நன்றாகத் திறந்து வைக்காதே. இருளில் யாராவது திருடர் உள்ளே நுழைந்தாலும் நுழைந்து விடுவார்கள். என்னைப் பற்றி நான் கொஞ்சமும் பயப்பட வில்லை; உன்னைப்பற்றித்தான் நான் நிரம்பவும் கவலைப்படு கிறேன். நான் போகும்போது விளக்கைக் கொளுத்தி வைத்து விட்டுப் போனேனே. அது எப்படி அணைந்து போயிற்று? நீ நிற்கிறாயே. அதற்கு அநுசரணையாக நான் திரும்பி வருவதற்கும் கொஞ்சம் தாமசமாகி விட்டதே. ஐயோ பாவம்! உனக்கு என்னென்ன இடைஞ்சல்கள் உண்டாகின்றன பார்த்தாயா?'' என்று கூறிய வண்ணம் கதவை மூட முயன்றார்.

அப்போதும் கதவைப் பிடித்த பிடியை விடாமல் நின்றுகொண்டிருந்த ஷண்முகவடிவு உடனே சடக்கென்று மறுமொழி சொல்லத் தொடங்கி, ''சுவாமிகளே! தாங்கள் புறப்பட்டுப் போன பிறகு கொஞ்சநேரத்திற்கெல்லாம் திடீரென்று காற்று வீசி, விளக்கை அணைத்துவிட்டது. இருளில் இருப்பதைப்பற்றி நான் பயப்படவில்லை. ஆனால் தாங்கள் இவ்வளவு நேரமாகத் திரும்பி வரவில்லையே என்ற கவலையே என் மனசில் எழுந்து வதைத்துக்கொண்டிருந்தது. என்னைக் காப்பாற்ற வேண்டுமென்னும் காருண்ய குணத்தோடு வெளியில் போன தங்களுக்கு வழியில் ஏதாவது துன்பம் நேரிட்டிருக்குமோ என்ற கவலையும் உண்டாகி என்னைச் சஞ்சலப் படுத்தினது. ஆகையால், நான் கதவைத் திறந்து கொண்டாகிலும் வெளியில் வந்து தங்களைத் தேடிப்பார்க்க லாம் என்று நினைத்துக்கொண்டு இப்போதுதான் நான் கதவண்டை வந்து தாழ்ப்பாளைத் திறந்தேன். அதே சமயத்தில் தாங்களும் வந்தீர்கள். நல்ல வேளையாகத் தாங்கள் சௌக்கியமாகத் திரும்பி வந்தீர்களே. அதுவே போதுமானது; பெரிய பண்ணைப் பிள்ளையவர்கள் வந்திருக்கிறார்களா? அவர்கள் என்னை என்னுடைய ஜாகைக்கு இப்போதே அழைத்துக்கொண்டு போய் விடப்போகிறார்களா? அல்லது, நான் இன்னம் கொஞ்ச நேரம் உள்ளே இருக்க வேண்டுமா?'' என்று பணிவாகவும், ரகசியம் ஒன்றையும் அறிந்து கொள்ளாதவள் போலவும் தந்திரமாக மொழிந்தாள்.

அவளது வார்த்தையைக் கேட்ட கபட சன்னியாசியின் மனதிலிருந்த சொற்ப சந்தேகமும் விலகியது. அவரது ரகசியத்தை அவள் கொஞ்சமும் அறிந்துகொள்ளாமல், இன்னமும் தன்னிடத்தில் முழு நம்பிக்கை வைத்திருக்கிறாள் என்ற நிச்சயம் உண்டாயிற்று. முதலில் கதவை மூடிக்கொண்டு தான் அவளை உள்ளே அழைத்துப் போக வேண்டும் என்ற எண்ணம் கொண்ட கபடசாமியார் மிகவும் உருக்கமாகப் பேசத்

தொடங்கி, "குழந்தாய்! உன்னுடைய மனசு தங்கமான மனசு! ஒரே இருளாக இருக்கும் இந்த நிர்மானுஷ்யமான இடத்தில் நீ பயப்பட்டு உன்னைப்பற்றிக் கவலைப்படுவதைவிட்டு என்னைப் பற்றிக் கவலைப்பட்டு, என்னைக் காப்பாற்ற எண்ணி வெளியில் வர எத்தனித்தாய் என்பதைக் கேட்க, எனக்கு நிரம்பவும் ஆனந்தமாக இருக்கிறது. நீ நினைக்கிறபடி எனக்கு உண்மையிலேயே வழியில் ஓர் அபாயம் நேரிட்டது. நான் கடைசியாகத் தப்பித்துக் கொண்டு ஓடி வந்தேன். நாம் இந்தக் கதவைத் திறந்து வைத்திருந்தால் அடுத்த நிமிஷத்தில் அந்த முரடர்கள் உள்ளே புகுந்து நமக்கு ஏதேனும் தொந்தரவு செய்வார்கள். நாம் முதலில் கதவை மூடிக்கொண்டு உள்ளே போய் விளக்கேற்றுவோம். நான் போய்வந்த வரலாற்றை எல்லாம், நான் உடனே சொல்லுகிறேன்" என்று கூறியவண்ணம் கதவைச் சாத்த முயல, அப்போதும், கதவை விட்டு நகராமல் நின்று கொண்டிருந்த ஷண்முகவடிவு மிகுந்த லஜ்ஜையும், பீதியையும் தோற்றுவித்தவளாய் அவரை நோக்கி, "சுவாமிகள் சொன்னதுபோலவே செய்வோம். அதற்குள் நான் கொஞ்சம் ஒரு நிமிஷ நேரம் வெளியில் போய்விட்டு வந்துவிடுகிறேன். நெடுநேரமாக என்னுடைய உடம்பில் ஒருவித உபாதை இருந்து அதிகரித்துக் கொண்டுவருகிறது. நான் பொறுத்துப்பொறுத்துப் பார்த்தேன். இனி பொறுக்க முடியாது போலிருக்கிறது. இங்கே பக்கத்தில் குளமிருக்கிறது என்று சுவாமிகள் சொன்னீர்களே. அது எந்தப் பக்கத்தில் இருக்கிறது என்பதைச் சொன்னால், நான் போய்விட்டு, ஒரே நிமிஷத்தில் திரும்பி வந்து விடுகிறேன். உடனே கதவை மூடித் தாளிட்டுக்கொள்ளலாம்; பிறகு தாங்கள் எல்லா விவரங்களையும் சொல்லலாம். நான் குளத்தண்டை போய்விட்டு வருவதற்குள் தாங்கள் விளக்கைப் பொருத்தி வைப்பதற்கும் அவகாசம் ஏற்படும்" என்று நயமாகவும் சந்தேகத்திற்கு இடமின்றியும் கூறினாள். அதைக்கேட்ட கபட சன்னியாசி அதற்கு என்ன மறுமொழி கூறுவது என்பதை உணராமல் இரண்டொரு நிமிஷ நேரம் தத்தளித்தவராய்,

''குழந்தாய்! இந்த அபாய சமயத்தில்தானா நீ இப்படி வெளியில் போகும்படியான தொந்தரவு ஏற்படவேண்டும். அடாடா! என்ன செய்கிறது! இன்று சாயுங்காலம் உன்னை வழிமறித்து உன் பொருள்களைப் பிடுங்கிக்கொண்ட அந்த முரட்டாள்கள் இதோ பக்கத்தில்தான் வந்து கூடி இருக்கிறார்கள். நான் பெரிய பண்ணைப் பிள்ளையின் வீட்டை நோக்கி நடந்தபோது, அவர்கள் என்னை மடக்கிக் கொண்டார்கள். நான் பெரிய பண்ணைப் பிள்ளையிடத்தில் போய் அவர்களின் மேல் கோள் சொன்னால் என்னை மண்வெட்டியால் ஒரே வெட்டாக வெட்டிப் புதைத்து விடுவதாகச் சொல்லி பயமுறுத்தியதன்றி என்னைப்பிடித்து வைத்துக் கொண்டு இவ்வளவு நேரம் உபத்திரவித்தார்கள். நான் கெஞ்சிக் கூத்தாடி அவர்களிடம் கேட்டுக்கொண்டு திரும்பிவர இந்நேரம் ஆயிற்று. இன்று ராத்திரி முழுதும் உன்னை இவ்விடத்திலேயே வைத்திருந்து, பொழுது விடிந்த உடனே உன்னை உன்னுடைய ஜாகையில் கொண்டுபோய் விட்டுவிடும்படி அவர்கள் கண்டித்துச் சொல்லி என்னை அனுப்பியதன்றி, நான் பெரிய பண்ணைப் பிள்ளையினிடத்தில் இந்த விஷயத்தையே வெளியிடக் கூடாது என்று அவர்கள் என்னிடம் உறுதியாகச் சொல்லி பயமுறுத்தி என்னை அனுப்பினார்கள். நான் இங்கே வந்து கொஞ்ச நேரம் பொறுத்திருந்து, அவர்கள் எல்லோரும் போனவுடனே இருளில் ரகசியமாகப் புறப்பட்டுப் போய்ப் பெரிய பண்ணைப் பிள்ளையிடம் இந்தச் சங்கதியைத் தெரிவிக்க எண்ணி இங்கே வந்தேன். நான் சொன்னபடி செய்கிறேனா என்பதைப் பார்ப்பதற்காக அவர்கள் இன்னமும் பக்கத்திலே தான் இருப்பார்கள். நீ இப்போது குளத்தங்கரைக்குப் போனால், நான் உன்னை ரகசியமாகப் பெரிய பண்ணைப் பிள்ளையின் வீட்டுக்கு அனுப்பி இருக்கிறதாக நினைத்து, உன்னைப் பிடித்து மறுபடியும் உபத்திரவிப்பார்கள். ஆகையால், நீ இப்போது வெளியில் போவது உசிதமாகத் தோன்றவில்லை'' என்றார்.

அதைக் கேட்ட பெண்ணரசி மிகுந்த நாணமும், கலக்கமும் கொண்டவளாய்ப் பேசத் தொடங்கி, ''நான் எப்படியும் குளத்தங்கரைக்குப் போய்விட்டுத்தான் வரவேண்டும். அந்த முரடர்கள் என்னிடம் வந்து உன்னை உபத்திரவித்தால், நான் பெரிய பண்ணைப் பிள்ளையின் வீட்டுக்குப் போகவில்லையென்றும், குளத்தங்கரைக்குப் போய்விட்டுத் திரும்பி மடத்துக்குள் வந்து விடுவதாகவும் சொல்லி அவர்களிடம் நான் கேட்டுக்கொள்கிறேன். என்ன செய்கிறது! அவசரமாக நான் போகவேண்டி இருக்கிறது. குளம் வடக்குப் பக்கத்தில் இருக்கிறதா? தெற்குப் பக்கத்தில் இருக்கிறதா? அதை மாத்திரம் சொல்லுங்கள். நான் மறைவாகப் போய்விட்டு, இதோ ஒரு நொடியில் திரும்பி வந்துவிடுகிறேன்'' என்று நயமாக இறைஞ்சிக் கூறியவண்ணம் காலை மெதுவாக எடுத்து நிலைப்படிக்கு வெளியில் வைத்தாள். அவளது உடம்பு மிகவும் தத்தளித்தது ஆகையால், அவள் உண்மையிலேயே ஏதோ தேக பாதையால் துன்பப்படுகிறாள் என்று நம்பிக்கை சாமியாரினது மனதில் உண்டாயிற்று. அதற்கு மேலும் ஆட்சேபித்து அவளைத் தடுப்பது சரியல்ல என்று நினைத்த போலிச்சாமியார், ''அப்படியானால், நான் உன்னைத் தடுப்பது ஒழுங்கல்ல. இதோ இந்த மடத்திற்கு வடக்குப் பக்கத்தில் குளம் இருக்கிறது. எங்கும் ஒரே இருளாக இருப்பதால் நீ அதிக தூரம் விலகிப் போக வேண்டும் என்பதில்லை. சமீபத்திலேயே விலகி விட்டு சீக்கிரமாகத் திரும்பி வந்துவிடு. நானும் வாசலில் வந்து ஜாக்கிரதையாக நின்றுகொண்டிருக்கிறேன்'' என்று மிகவும் உருக்கமாகக் கூறியவண்ணம், குளமிருந்த திக்கைக் காட்ட, அதுகாறும் நெருப்பின்மேல் நிற்பவள் போலப் பதைபதைப்பாக நின்று கொண்டிருந்த ஷண்முகவடிவு நிலைப்படியைக் கடந்து வெளியில் போய் குறட்டை விட்டு வாசல் தரையில் இறங்கி வடக்குப் பக்கமாகத் திரும்ப, அதுவரையில், திண்ணையின் கீழே மறைந்துகொண்டிருந்த ஓர் ஆள் குனிந்தபடியே ஓட்டமாக ஓடி அப்பால் போய் மறைந்துகொண்டதை ஷண்முகவடிவு

கண்டாள். சாமியார் உள்ளே வந்தவுடனே வாசற்கதவை வெளியில் தாளிட்டுவிட்டு ராஜபாட்டையில் காவல் காத்திருக்கும் பொருட்டு அனுப்பப்பட்ட ஆளே அப்படி மறைந்தவன் என்பதை ஷண்முகவடிவு யூகித்துக் கொண்டாள். அவளது உடம்பு கிடுகிடென்று ஆடியது. முடிமுதல் அடிவரையில் உரோமம் சிலிர்த்து நின்றது. வியர்வை குபீரென்று கிளம்பியது. அவளது மனதில் பெருத்த திகிலும் கவலையும் எழுந்து குடிகொண்டன. பக்கத்திலுள்ள குளத்தங் கரைக்குத் தான் மெதுவாகப் போய் ஏதாவது மறைவான ஓரிடத்தில் ஒதுங்கி அங்கே இருந்து இருளின் உதவியால் தப்பித்து அப்பால் போய் அவர்கள் காணமுடியாதபடி தப்பித்துக் கொள்ள வேண்டும் என்று உறுதி செய்து கொண்டவளாய் அந்தப் பெண்ணரசி வடக்குத் திக்கை நோக்கி மெதுவாக நடக்கலானாள். தன்னைக் கண்டு மறைந்த ஆளும் கபட சன்னியாசியும் கூறையின் மேலிருந்த ஆள்களும், ஒருகால் தனக்குப் பின்னால் தொடர்ந்து வந்து தூரத்தில் இருந்தபடி தன்னைக் கவனித்துக் கொண்டிருப்பார்களோ என்ற திகில் அவளது மனதில் எழுந்து வதைத்தது. ஆனாலும், தான் தப்புவதற்கு அது ஒன்றே கடைசியான உபாயமாக அவள் மதித்தாள். ஆகையால், மிகவும் துணிந்து அந்த வகையாக முயற்சி செய்யலானாள். அந்தப் பாதை திருவாரூரிலிருந்து தெற்குப் பக்கமாக திருத்தருப்பூண்டிக்குப் போகும் பெரிய பாதை. அந்த மடம் அந்தப் பாதையின் மேற்குப் பக்கத்தில் கிழக்கு முகமாகக் கட்டப்பட்டிருந்தது. அந்தக் கட்டிடத்திற்கு வடக்கில் தாமரைக் குளம் ஒன்று அமைந்திருந்தது; அந்த இடத்தில் பாட்டையின் இரண்டு பக்கங்களிலும் அரையாள் ஆழமிருந்த வாய்க்கால்கள் போய்க் கொண்டிருந்தன. அந்த வாய்க்கால்களுக்கும் பாட்டைக்கும் நடுவில் தாழை, பிரம்பு, வெண்காட்டாமணக்கு முதலியவற்றின் புதர்களும், பூவரச மரங்களும் வளர்ந்து வேலிபோல அடர்ந்திருந்தன. குளத்தங் கரைக்குப் போன ஷண்முகவடிவு நாற்புறங்களிலும் திரும்பிப்

பார்த்தாள். மடம் இருந்த பக்கத்திலிருந்து மனிதர் தொடர்ந்து வருகிறார்களோ என்று அவள் முதலில் பார்த்துத் திருப்தி செய்து கொண்டாள். அவ்விடத்திலிருந்து எவரும் வந்ததாகத் தோன்றவில்லை. மற்ற திக்குகளில் தான் போய் மறைந்து கொள்வதற்கு வசதியான இடம் எங்கே இருக்கிறதென்று மறுபடியும் வெகு சீக்கிரத்தில் ஆராய்ந்து பார்த்தாள். குளமிருந்த பக்கத்தில் கரை நெடுந்தூரம் வரையில் போனபின்னரே வாய்க்கால் ஆரம்பித்தது. ஆகையால் அந்த வழியில் போவது உசிதமாகத் தோன்றவில்லை. ஆகவே, அவளது திருஷ்டி எதிர்ப்பக்கத்தில் இருந்த வாய்க்காலின் பக்கமாகத் திரும்பியது. சுமார் 10 கெஜ தூரத்தில் ஓர் ஒற்றையடிப் பாதை வாய்க்காலிற்குள் இறங்கி அப்பால் எவ்விடத்திற்கோ போனதாகத் தோன்றியது. உடனே ஷண்முகவடிவு மடத்தின் பக்கம் திரும்பித் திரும்பிப் பார்த்தபடி விசையாக நடந்து அந்த ஒற்றையடிப் பாதையின் வழியாக வாய்க்காலிற்குள் இறங்கினாள். அந்த வாய்க்கால் மிகவும் குறுகியதாகவும், சப்பாத்துப்புதர், சேறு முதலியவை நிறைந்ததாகவும் இருந்தது ஆகையால், அவள் வாய்க்காலின் உள்வாயின் வழியாக வலது பக்கத்திலோ, இடது பக்கத்திலோ போகாமல், அந்த ஒற்றையடிப் பாதையிலேயே நடந்து வாய்க்காலைக் கடந்து அப்பால் சென்றாள். அந்த இடம் சாகுபடி செய்யப்படாத மந்தை வெளியாகத் தோன்றியது. அன்றி, எங்கும் இலுப்பை மரங்களும், சப்பாத்துப் புதர்களும், தாழை, பிரம்பு முதலிய வற்றின் குத்துக்களும் நிரம்பப் பெற்றதாய்க் காணப்பட்டது. அதன் நடுவில் போன ஒற்றையடிப் பாதையின் வழியாகவே தான் நடந்து சென்றால், சிறிது நேரமாவதற்குள், அந்தக் கபட சன்னியாசியும் ஆட்களும் தான் திரும்பி வராததைப் பற்றி சந்தேகித்து, தன்னைத் தேடிக்கொண்டு ஒற்றையடிப் பாதையின் வழியாகத் தொடர்ந்து ஓடிவந்து தன்னைப் பிடித்து மறுபடியும் பலவந்தமாக அழைத்துக்கொண்டு போய்விடுவார்கள் என்ற அச்சம் தோன்றியது. ஆகையால், அந்த மெல்லியலாள்

ஒற்றையடிப் பாதையை விட்டு விலகிக் குறுக்காக விழுந்து தலைகால் தெரியாமல் ஒரே ஓட்டமாக ஓடத் தொடங்கினாள். அந்த மனிதர்கள் ஒருவேளை வந்துவிடுவார்களோ என்ற திகிலினால் அவளது முகம் அடிக்கடி பின்பக்கம் திரும்பியது. ஆகையால், அந்தச் சமயத்தில் அவளது கால்கள் மேடு பள்ளங்களில் இடறியது. ஆகையால், அவள் முட்களிலும் கல்களிலும், புதர்களிலும் விழுந்து ஓடுகிறாள். பலவிடங்களில் அவளது ஆடையும் உடம்பும் கிழிபட்டுப் போயின. உடம்பு முழுதும் வியர்வை வெள்ளமாக ஓடுகிறது. பல இடங்களி லிருந்து இரத்தம் கசிந்தோடுகிறது. உடம்பு முழுதும் நெருப்பி னால் சுடப்பட்டது போலப் பற்றி எரிகிறது. அந்த இளந்தோகை தனது மானத்தையும் பிராணனையும் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற ஆவலும் ஆவேசமும் கொண்டவளாய் இருளில் காடுமேடுகளில் எல்லாம் புகுந்து திக்குத்திசை அறியாமல் கடுகி ஓடுகிறாள். தான் ஒற்றையடிப் பாதையைவிட்டுக் குறுக்காக வெகுதூரம் வந்துவிட்டதாக அவள் எண்ணிக் கொண்டாள். ஆனாலும், அந்த ஒற்றையடிப் பாதை சிறிது தூரம் வரையில் நேராகப் போய், அதற்கு அப்பால் அவள் போன பக்கமாகத் திரும்பிப் பாம்பின் வளைவுபோல வளைந்துவளைந்து சென்றது. ஆகையால், அவள் போன வழியில் எல்லாம் அந்த ஒற்றையடிப்பாதை குறுக்கிட்டுக் கொண்டிருந்தது. அதைக் கண்ட ஷண்முகவடிவு அந்தப் பாதையும் முதலில் தான் வந்ததும் வெவ்வேறு பாதைகள் என்று நினைத்துக்கொண்டவளாய் மேன்மேலும் போய்க் கொண்டே இருக்க, கால் நாழிகை நேரம் கழிந்தது. தான் அநேகமாகத் தப்பித்துக் கொண்டதாக எண்ணி மிகுந்த உற்சாகமும், நம்பிக்கையும், மகிழ்ச்சியும் கொண்டவளாய் நடந்தவள் சிறிது தூரத்தில் மனிதர் பேசிய குரலோசையையும், விரைவாக நடந்து வந்த காலடி ஓசையையும் கேட்டுத் திடுக்கிட்டு மான்போல மருண்டு நாற்புறங்களிலும் திரும்பித் திரும்பிப் பார்த்துப் பம்பரம் போலச் சுழன்று தத்தளித்து நின்று

எந்த இடத்தில் ஓசை உண்டானது என்பதை உற்றுக் கவனிக்க, அடுத்த நிமிஷத்தில் நாலைந்து முரட்டு மனிதர்கள், ''அதோ இருக்கிறாள்: பிடித்துக் கொள்ளுங்கள். விடாதீர்கள்'' என்று கூறிய வண்ணம் பல திக்குகளிலும் இருந்த புதர்களின் இடைவெளிகள் வழியாகத் தபதபவென்று தோன்றி ஓட்டமாக ஓடி வந்தனர். உடனே சடக்கென்று திரும்பிப் பார்த்து அந்த மனிதர்கள் தன்னைப் பிடிக்க வந்ததைக் கண்டுகொண்ட நமது பேடன்னம் திக்பிரமையும் திகிலும் கொண்டு, எங்கும் போகக் கால் எழாதவளாய், பிரமித்து அப்படியே நின்றுவிட்டாள். அதற்குமுன் அவளது மனதில் பொங்கியெழுந்து பெருகிக் கொண்டிருந்த உற்சாகமும், மகிழ்ச்சியும் ஒரே நொடியில் பறந்து போயின. கட்டில் அடங்காக் குலை நடுக்கமும் சொல்லில் அடங்காப் பெரும் பீதியும் எழுந்து அவளை வதைக்கலாயின. அவளது உயிரில் பெரும்பாகமும் போய்விட்டதென்று சொல்வது மிகைப்படுத்திக் கூறியதாகாது. மடத்தின் கூரைமேல் ஒளிந்திருந்த முரடர்களும் கபட சன்னியாசியும், தான் தப்பி ஓடிவிட்டதை உணர்ந்து துரத்திக்கொண்டு வந்துவிட்டார்கள் என்ற உண்மை உடனே சந்தேகமற விளங்கிவிட்டது. ஈவிரக்கமற்ற அந்த முரடர்கள் தன்னைப் பிடித்து எப்படியும் தூக்கிக்கொண்டு போய்விடுவார்களென்ற பெருங்கிலி உண்டாகிவிடவே அந்த இளந்தோகை கூச்சலிடவும் மாட்டாத வளாய், அச்சமே வடிவெடுத்து வந்தவள்போல வெடவெடத்து நிற்க, அடுத்த நிமிஷத்தில் அந்த முரடர்கள் ஐவரும் நெருங்கி வந்து அவளை வளைத்துக் கொண்டனர். தங்களுடைய வஸ்திரங்களை எடுத்து முறுக்கி, அவளது கால்களையும் கைகளையும் சேர்த்துக் கட்டத் தொடங்கினர். அந்த அக்கிரமச் செய்கையைக் கண்ட பேதை மெல்லியலாள் ஷண்முகவடிவு, ''ஐயோ! ஐயோ! அக்கிரமம் செய்கிறார்களே! இதைக் கேட்க யாருமில்லையா?'' என்று பிரமாதமாகக் கூச்சலிட்டுக் கதற, அதைக் கண்ட முரடர்கள், ஒரு துணியைக் கிழித்துப் பந்தாகச் சுருட்டி அவளது வாயில் வைத்து அடைத்து விட்டுக் குறவர்கள்

பன்றியைக் கட்டித் தூக்குவது போல அவளைத் தூக்கித் தோள்களின்மீது வைத்துக் கொண்டு ஒற்றையடிப்பாதையின் வழியாகத் திரும்பி மறுபடியும் மடத்தை நோக்கிச் செல்லலாயினர். அந்த முரடர்களது உடம்பு தனது சரீரத்தில் படுவதை சிறிதும் சகியாத அந்தப் பெண்மணி மட்டுக்கடங்கா அருவருப்பும், பயிர்ப்பும் கொண்டவளாய், தனது கைகளையும் கால்களையும் உதைத்துத் தத்தளித்துத் தன்னை விடுவித்துக் கொள்ள முயல்கிறாள். வாயில் துணிப்பந்து திணிக்கப்பட்டி ருந்ததனால் அவளுக்கு மூச்சு ஒழுங்காக வராமல் திணறல் உண்டாயிற்று. வாய் கழுத்து முதலிய இடங்களில் எல்லாம் மரணவேதனையைக் கொடுத்துக் கொண்டிருந்தன. ஆகையால், அவள் கட்டப்பட்டிருந்த தனது கைகளை வாய்க்கருகில் கொண்டு போய்த் துணிப்பந்தை விலக்கிக் கொள்ள எத்தனிக்கிறாள். அந்த முரடர்கள் சிறிதும் தயையின்றி அவளது கைகளையும் கால்களையும் உடம்பையும் இரும்புப் பிடியாக இறுகப் பிடித்து நகரமாட்டாமல் அமுத்திக் கொண்ட வண்ணம், ஓட்டமாக ஒற்றையடிப் பாதையின் வழியாக ஓடுகிறார்கள். வரிசையாக இருந்த ஐந்து மனிதர்களின் தோள்களின் மீது மேல்முகமாக அந்த மடந்தை கிடந்தாள். ஆகையால், அவளது கைகால்களெல்லாம் கீழ்ப்பக்கம் விசையாகத் திரும்பித் திமிறக் கூடாமல் இருந்தன. அந்த மகா பயங்கரமான நிலைமையில் இருந்து வீண் பாடுபட்ட அந்தப் பெண்பாவையின் உணர்வு அநேகமாய்த் தவறிப் போய்விட்டது என்றே சொல்ல வேண்டும். அவ்வாறு தத்தளித்துத் துவண்டு கிடந்த ஷண்முக வடிவைத் தாங்கிய முரட்டு மனிதர்கள் விரைவாக ஓடி ஒற்றையடிப் பாதையின் முடிவை அடைந்து வாய்க்காலிற்குள் புகுந்து ராஜபாட்டையின் மீது ஏறினர். அந்தச் சமயத்தில் திருவாரூர்ப் பக்கத்திலிருந்து இரட்டை மாடுகள் கட்டப்பட்ட ஒரு சவாரி வண்டி விரைவாக ஓடிவந்த ஓசை கேட்டது. எருதுகளின் கழுத்துகளில் கட்டப்பட்டிருந்த சலங்கைகள் ஜல்ஜல்லென்று பிரமாதமாக ஒலித்ததிலிருந்து அந்த வண்டி

மிகவும் வேகமாக ஓடி வந்தது என்பது தெரிந்தது. அவ்வாறு வண்டி தாங்கள் இருந்த இடத்தை நோக்கி வருவதைக் கண்ட அந்த முரட்டு மனிதர்கள், தாங்கள் மடத்திற்குப் போய்ச் சேருவதற்குள் அந்த வண்டி வந்துவிடும் ஆதலால், அப்போது ஷண்முகவடிவைத் தூக்கிக் கொண்டுபோவது தவறு என்று நினைத்து சடக்கென்று ராஜபாட்டையை விட்டுத் திரும்பி வாய்க்காலுக்குள் இறங்கி அப்பால் போய் நின்றனர். அதற்குள் அந்த இரட்டை மாட்டுவண்டி அவர்கள் இருந்த இடத்திற்கு வந்து மேலும் போய் அவ்விடத்தில் இருந்த தாமரைக் குளத்தண்டையில் நின்றது. வண்டியில் ஒரே ஒரு மனிதரே இருந்ததாகத் தெரிந்தது. அவர் வண்டியை விட்டுக் கீழே இறங்கி, எருதுகளை மூக்கணையிலிருந்து அவிழ்த்து அவைகளைக் குளத்திற்குள் கொண்டுபோய்த் தண்ணீர் குடிக்கச் செய்து கொணர்ந்து மறுபடியும் வண்டியில் பூட்டி வண்டியை மேலும் ஓட்டிக்கொண்டு போக ஆயத்தமானார். மாடுகள் தண்ணீர் குடிக்க சுமார் ஐந்து நிமிஷநேரம் கழிந்தது. அதற்குள் அவ்விடத்தில் தெய்வீகமாக ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

ஷண்முகவடிவைத் தோளின்மீது வைத்தபடி வாய்க்காலிற்கு அப்பால் மறைந்து நின்ற முரடர்களுள் ஒருவன் மெதுவாகப் பதுங்கிப் பதுங்கி ராஜபாட்டைக்கு வந்து வண்டி போய்விட்டதா என்று பார்த்துவிட்டு மறுபடியும் திரும்பிப்போய், வண்டிக்காரன் வண்டியை அவிழ்த்துப் போட்டுவிட்டு எருதுகளுக்குத் தண்ணீர் காட்டிக்கொண்டிருக்கிறான் என்ற செய்தியை மற்ற முரடர்களிடம் தெரிவிக்க, வண்டிக்காரன் மறுபடியும் வண்டியைப் பூட்டிக் கொண்டு போக எவ்வளவு நேரம் பிடிக்குமோ என்று சந்தேகித்தவர்களாய்த் தங்களது தோள் மீதிருந்த பெண்சுமையை இன்னொரு தோளுக்கு மாற்றினர். அப்போது அந்தப் பெண்மணியின் உடம்பும் முகமும் குப்புறத் திரும்பி மறுபடியும் நிமிர்ந்தது. ஆகையால், அவளது வாயிலிருந்த துணிப்பந்து தற்செயலாக நழுவித் தரையில் வீழ்ந்துவிட்டது. ராஜபாட்டையில் ஏதோ ஒரு வண்டி

நிற்பதைக் கருதி அவர்கள் அவ்விடத்தில் ஒளிந்து கொண்டிருக்கி றார்கள் என்பதை ஒருவாறு உணர்ந்து கொண்டிருந்த ஷண்முக வடிவு அதுவே நல்ல சமயமென்று நினைத்துத் தான் எவ்வளவு பலமாக ஒங்கிக் கூச்சலிடக் கூடுமோ அவ்வளவு அதிக உரமாகக் கூச்சலிட்டு, ''ஐயோ! ஐயோ! வழியோடு போன பெண்பிள்ளை யான என்னை இந்த முரடர்கள் பிடித்து அக்கிரமம் செய்கிறார்களே! வண்டியில் யார் ஐயா இருக்கிறது? ஓடி வாருங்கள். இந்த வாய்க்காலுக்குப் பக்கத்தில் என்னை வைத்துக்கொண்டு நிற்கிறார்கள். இந்த மடத்துச் சாமியார் என்னைக் கற்பழிக்க எத்தனிக்கிறார். பெரிய பண்ணைப் பிள்ளையை உடனே அழைத்துக்கொண்டு மடத்துக்கு வந்து சேருங்கள்; இல்லாவிட்டால் இன்னம் கொஞ்ச நேரத்தில் இந்தப் பாவிகள் என்னைக் கொன்று விடப் போகிறார்கள்'' என்று இரண்டு மூன்று தரம் திருப்பித் திருப்பிக் கூச்சலிட, அதைக் கேட்ட முரடர்கள் திடுக்கிட்டு அச்சங்கொண்டனர். சிலர் அவளது வாயைப் பிடித்து அழுத்தி மூடி நெருக்கினர். ஒருவன் கீழே கிடந்த துணிப்பந்தை எடுத்து மறுபடியும் அவளது வாயில் அடைக்கிறான். அவளை அவ்விடத்திலிருந்து மடத்திற்குக் கொண்டு போகிறதா அல்லது வேறே எவ்விடத்திற்குக் கொண்டு போகிறது என்பதை அறியாமல் அவர்கள் தத்தளிக்கிறார்கள், ஆனால் வண்டியில் அதிக ஆள்கள் இல்லை என்று அவர்கள் அந்த இருளில் தெரிந்து கொண்டார்கள். ஆகையால், தாங்கள் உடனே ஓடிப்போக வேண்டும் என்ற பயமின்றி, மிகுந்த கவலையோடு கலங்கி நின்று கொண்டிருந்தனர். அதற்குள் அந்த வண்டியில் மாடுகளைப் பூட்டி புறப்பட்டுப் போக ஆயத்தமாக இருந்த அந்த வண்டிக்காரர், மிகவும் சமீபத்தில் வாய்க்காலுக்கு அப்புறத்தில் திடீரென்று கேட்ட மகா இனிமையான பெண் குரலைக் கேட்டு திடுக்கிட்டு அவள் என்ன சொல்கிறாள் என்பதைக் கவனிக்க, நமது ஷண்முகவடிவு கூச்சலிட்டுக் கூறிய வார்த்தைகளெல்லாம் அந்த மனிதரது செவியில் கணீர்

கணீரென்று தெளிவாக வந்து தாக்கின. உடனே அந்த மனிதரது திரேகம் பதறியது. மனம் பொங்கி எழுந்தது. அவரது உள்ளத்தில் மட்டுக்கடங்கா வீராவேசமும், கொதிப்பும் பொங்கி எழுந்தன. அவர் ஒருவரே தனியாக வந்திருந்தார். ஆனாலும், அந்தப் பெண்ணைப் பலவந்தம் செய்யும் மனிதர் எத்தனை பேர்கள் என்பதை அறியாதவராக இருந்தும் அவர் எதையும் கவனியாமல் தமது வஸ்திரங்களை வரிந்து கட்டிக்கொண்டு அந்த வண்டிக்குள் இருந்த ஒரு பெருத்த பாணாத்தடியை எடுத்துக் கையில் பிடித்துக் கொண்டவராய், அந்த வாய்க்காலுக்குள் ஒற்றையடிப்பாதை இறங்கிச் சென்ற இடத்தை நோக்கி ஓட்டமாக ஓடினார். அப்படி ஓடியவர் ஒரு தந்திரம் செய்துவிட்டு ஓடினார். தம்மோடுகூட வண்டிக்காரன் ஒருவனும் வந்திருப்பது போலப் பாசாங்கு செய்து ஓங்கிய குரலில், ''அடேய் சொக்கா! நீ ஓட்டமாகப் பெரிய பண்ணைப் பிள்ளையிடம் ஓடி ஐம்பது ஆள்களோடு அவரை அழைத்துக் கொண்டு க்ஷண நேரத்தில் ஓடிவா!'' என்று உத்தரவு செய்து அனுப்புகிறவர் போலப் பாசாங்கு செய்தார். உடனே அவரே தமது குரலை வேறுவிதமாக மாற்றிப் பணிவாகவும் மரியாதையாகவும் மறுமொழி சொல்லத் தொடங்கி, ''அப்படியே செய்கிறேன் எஜமானே! இதோ ஒரு நொடியில் போய் அழைத்து வருகிறேன்'' என்று கூறினார். அவர் இரண்டு விதமாகப் பேசியது இரண்டு வெவ்வேறு மனிதர்களினது குரல்கள் போலவே இருந்தமையால் பக்கத்தில் மறைந்து அதைக் கேட்டிருந்த முரட்டாள்கள் உண்மையிலேயே வண்டியில் இரண்டாள்கள் வந்திருப்பதாகவும், அவர்களுள் ஒருவன் பெரிய பண்ணைப்பிள்ளையை அழைத்து வரப் போயிருப்பதாகவும் எண்ணிக் கொண்டனர். தாங்கள் அப்போது என்ன செய்கிறது என்பது அவர்களுக்குத் தோன்ற வில்லை. கபட சன்னியாசி மடத்தின் வாசலில் நின்றபடி எல்லா விஷயங்களையும் கவனித்துக் கொண்டிருந்தார். ஆதலால், ஷண்முகவடிவு கூச்சலிட்டதையும், அவள்

தன்னுடைய ரகசியக் கருத்தை அறிந்துகொண்டு தானும் சம்பந்தப்பட்டிருப்பதாக வெளியிட்டதையும், அதைக்கேட்டு வண்டியிலிருந்த மனிதர் இறங்கிக் கையும் தடியுமாக ஓடியதையும், அவர் ஓடியபோது வண்டிக்காரனுக்கு உத்தரவு செய்ததையும் கேட்ட போலிச்சாமியார் கிலிகொண்டு நடுநடுங்கி ஒரே ஓட்டமாக ஓடி மடத்திற்குள் புகுந்து கதவை உட்புறத்தில் தாளிட்டுக் கொண்டார். வாய்க்காலின் மறைவில் ஷண்முகவடிவோடு நின்று கொண்டிருந்த மனிதர்கள் வண்டியிலிருந்த மனிதர் பாணாத்தடியை எடுத்துக்கொண்டு தங்களை நோக்கி வீராவேசத்தோடு ஓடிவந்ததைக் கண்டு அந்தப் பெண்மணியைத் தூக்கியபடி விரைவாக நடந்து பக்கத்தில் இருந்த புதரின் மறைவில் பதுங்கி வெகு தூரம் அப்பால் போய்விட நினைத்தவராய் ஒளியத் தொடங்கினர். வண்டியிலிருந்து இறங்கித் தலைகால் தெரியாமல் ஓடிவந்த மனிதர் தமது உயிரை ஒரு திரணமாக மதித்துத் தலைகால் தெரியாமல் ஒற்றையடிப் பாதையில் நுழைந்து ஓடியவண்ணம், "விடாதே, விடாதே, பிடி, பிடி; திருட்டுப் பயல்களை அடி, உதை அவர்களையெல்லாம் உயிரோடு பூமியில் புதைத்துவிடு. அக்கிரமக்கார நாய்களின் மண்டையை உடை" என்று பலமாக ஆர்ப்பரித்து ஆடம்பரம் செய்துகொண்டு ஓடி, அவர்கள் பதுங்கியதைக் கண்டு விரைவாகப் பின் தொடர்ந்து சென்று இரண்டொரு நிமிஷ நேரத்தில், அவர்களண்டை நெருங்கி விட்டார். அந்த முரட்டாள்கள் ஐவரும் கைகளில் எவ்வித ஆயுதமும் இல்லாமல் நிராயுதபாணிகளாக இருந்தனர். ஆனாலும், அவர்கள் பனை மரங்களைப் போன்ற திடகாத்திரமான முரட்டு உடம்புகளை உடையவர்களாக இருந்தமையால், அவர்கள் பாணாத்தடியோடு வந்த மனிதரைக் கண்டு சிறிதும் அஞ்சாமல், துணிவாக எதிர்க்க ஆரம்பித்தனர். ஷண்முகவடிவை ஒரு பக்கமாகத் தரையில் வைத்து விட்டு ஐவரும் ஒருமுகமாகத் திரும்பி பாணாத்தடி வைத்திருந்த மனிதரைச்சுற்றி வளைத்துக் கொண்டனர். அவரது கையிலிருந்த

தடியைத் தாங்கள் மெதுவாகப் பிடுங்கிக்கொண்டு, அவரை அடித்து நையப் புடைத்துக்கொன்று போட்டுவிட்டு ராஜ பாட்டைக்குப் போய் அவ்விடத்தில் நின்ற வண்டிக்குள் ஷண்முகவடிவை வைத்து வண்டியை விசையாக ஓட்டிக் கொண்டு திருவாரூர் பக்கம் போய்விட்டால் பெரிய பண்ணைப்பிள்ளை ஆள்களோடு வந்தால் அவர்கள் தங்களைக் காண மாட்டார்கள் என்ற நினைவோடு அவர்கள் துணிந்து பாணாத்தடி வைத்திருந்த மனிதர்மீது பாய அவர் வயதில் நிரம்பவும் பாலியராகவும் மகா வசீகரமான சுந்தர புருஷராகவும் காணப்பட்டார். ஆனாலும், அதற்கிணங்க, அவர் சிங்கக் குட்டியின் பலம் வாய்ந்தவராய் இருந்தமையால், அவர் அவர்களுக்குக் கொஞ்சமும் இடங்கொடுக்காமல் பின்னால் நகர்ந்து நகர்ந்து, முன்னுக்குப் பாய்ந்து பம்பரம் சுழலுவது போலத் தமது சரீரத்தைத் தந்திரமாக உபயோகப்படுத்தித் தமது கையிலிருந்த பாணாத்தடியால் அந்த முரடர்களினது கால்களிலும், கைகளிலும், விலாவிலும், மண்டையிலும் படேர் படேர் என அடித்து இரத்தம் பெருகச் செய்து அவர்கள் ஐயோ அப்பாவென்று வீரிட்டுத் துள்ளிக் குதித்துச் சிதறி அங்கும் இங்கும் போகும்படி கலக்க ஆரம்பித்தார். எதற்கும் அஞ்சாத மகா முரட்டு மனிதர்களான தங்கள் ஐவரையும், எதிர்பாராத வகையில் வளைத்துக் கொண்டு மூர்த்தண்ணிய மாகப் புடைத்துத் தங்களை நொறுக்கும் அந்த யௌவனச் சிறுவனது அபூர்வ சக்தியையும் அபார சௌரியத்தையும் கண்டு திக்பிரமை கொண்டு கலகலத்துப் போய் அந்த வீராதிவீரன் யாராக இருப்பானென்று நினைத்து வியப்பே வடிவாக இருந்து அவனைப் பிடிக்கும் வீண் முயற்சி செய்த அந்த ஐந்து மனிதர்களில் மூவர் தங்களது மண்டைகளில் பட்ட அடிகளினால் பொறிகலங்கிப் போனவர்களாய் மூர்ச்சித்து வேரற்ற மரங்கள் போலக் கீழே வீழ்ந்து விட்டனர். மற்ற இருவரும் பிரமாதமாக பயந்து அந்த இடத்தை விட்டு ஓட்டமாக ஓடிப்போய் விட்டனர். பாணாத்தடியோடு அவர்களுடன் சண்டை செய்த அந்த மனிதர்

உடனே ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து ஷண்முகவடிவு கட்டப்பட்டுக் கிடந்த இடத்திற்குப் போய் அவளது கட்டுகளை அவிழ்க்க எத்தனித்தார். கால்களிலும் கைகளிலும் இருந்த கட்டுகள் மிகவும் இறுகலாக இருந்தமையால், அவைகளை விலக்குவதற்காகத் தாம் எத்தனித்திருந்தால், அதற்குள் அந்த முரட்டு மனிதர்கள் பாணாத்தடிகளோடும் புதிய ஆள்களோடும் திரும்பி வருவார்கள். ஆதனால், தாம் மறுபடி அவர்களோடு யுத்தம் செய்ய நேர்ந்தாலும் நேரலாம் என்றும், அவர்கள் தம்மை வென்று விடும் பட்சத்தில், தாம் அந்த மடந்தையைக் காப்பாற்ற இயலாமல் போய்விடுமோ என்றும் நினைத்தவராய், அந்த யௌவனப் புருஷர், அவளது கட்டுகளையெல்லாம் பின்னால் சாவகாசமாக அவிழ்த்துவிட்டுக் கொள்ளலாமென்று தீர்மானித்துக் கொண்டவராய் அவளது வாயிலிருந்த துணிப்பந்தை மாத்திரம் விரைவாக எடுத்து வெளியில் போட்டு விட்டு, மிகுந்த உற்சாகமும் ஆவேசமும் கொண்டவராய்த் தமது கைகளைக் கொடுத்து ஒரு சிறிய குழந்தையைத் தூக்குவதுபோல அந்தப் பெண்மணியைத் தூக்கி மார்பின்மீதும் தோளின்மீதும் சார்த்திக்கொண்டு தடதடவென்று ஓட்டமாக ஓடி ஒற்றையடிப் பாதையை அடைந்து வாய்க்காலைக் கடந்து ராஜபாட்டையின் மீதேறி வண்டி இருந்த இடத்தை நோக்கி ஓடினார். அந்த முரட்டு மனிதர்கள் மறுபடி திரும்பி வந்து விடுவார்களானால், அதன்பிறகு அந்த அழகிய நங்கையைத் தாம் காப்பாற்ற முடியாமல் போய்விடுமோ என்ற திகிலே அவருக்கு இரண்டு இறகுகள் முளைத்துப் பறக்கச் செய்தனவோ என்னும்படி, அவரது உடம்பு காற்றாகப் பறந்தது என்று சொல்வதே பொருத்தமுடையதாகும். அவ்வளவு அதிக கனமுள்ள ஒரு யௌவன ஸ்திரீ தம்மீது இருந்ததையே பொருட்படுத்தாமல் அடியோடு மெய்மறந்து வீராவேசம் கொண்டு ஓட்டமாக ஓடி இன்பகரமான அந்தப் பெண்சுமையை வண்டிக்குள் நன்றாக உள்ளே தள்ளி வைத்துவிட்டு ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து மூக்கணையில் ஏறி உட்கார்ந்து

கொண்டவராய், ''பெண்ணே! உன்னுடைய ஜாகை எங்கே இருக்கிறது? சொன்னால், நான் உடனே உன்னை அங்கே கொண்டுபோய் விடுகிறேன்'' என்று மிகவும் அன்பாகவும் மரியாதையாகவும் வினவ, முக்கால் பாகமும் ஸ்மரணை தப்பிக் கிடந்த இளநங்கை, ''எங்களுடைய பங்களா திருவாரூரிலிருந்து நாகைப்பட்டணத்துக்குப் போகும் பாதையின் மேல் சுமார் ஒன்றரை மயில் தூரத்தில் இருக்கிறது'' என்றாள். அதற்கு மேல் பேசமாட்டாமல் அவளுக்கு நெஞ்சடைத்துப் போய் விட்டது. அன்று பிற்பகலிலிருந்து நெடுந்தூரம் நடந்து பல வகையில் அல்லல்பட்டு, தனது கற்பையும் உயிரையும் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமே என்ற பெருந் திகிலினால் உலப்பப்பட்டுக் காடுமேடுகளிலும் கல்முள்களிலும் வீழ்ந்து ஓடியும் கடைசியில் தான் அந்த முரடர்களின் வசப்பட்டு முற்றிலும் நம்பிக்கை இழந்து தளர்ந்து சோர்ந்து உயிரழிந்து கிடந்த தருணத்தில் ஈசுவரனே மனித உருவெடுத்துத் தோன்றியதுபோல சரியான சமயத்தில் ஒரே மனிதர் வந்து, அத்தனை முரடர்களையும் வென்று தன்னைக் காப்பாற்றியதைக் காண, அவளது மனம் தாங்க இயலாத அபாரமான மகிழ்ச்சியும் மனவெழுச்சியும் நன்றியறிதலும் கொண்டு ஆனந்தபரவசம் அடைந்தது. பெருத்த அபாயத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறோம் என்ற பெருந்திகில் உண்டாகி அதுகாறும் அவளது மனதில் அளவிறந்த ஊக்கத்தையும் துணிவையும் பரபரப்பையும் உண்டாக்கிக் கொண்டிருந்தது. ஆனால், நல்ல சமயத்தில் அந்தப் பேருபகாரி தோன்றி தன்னைத் தப்புவித்துக் காப்பாற்றியதைக் காண, அவளது மனதின் பெரும்பீதி குறையவே களைப்பும் சோர்வும் மேலாடின. அவள் மயங்கி உணர்வற்று அப்படியே வீழ்ந்து விட்டாள். தாம் கேட்ட கேள்விக்கு மாத்திரம் மறுமொழி கூறிவிட்டு அவள் மயங்கி வீழ்ந்துவிட்டாள் என்பதைக் கண்டு கொண்ட அந்த மனிதர் அதற்குமேலும் அவ்விடத்திலிருந்து அவளோடு பேசிக்கொண்டிருப்பது உசிதமானது அல்ல என்று நினைத்து வண்டியைத் திருப்பிக் காளைகளை

அடித்துத் திருவாரூர்ப் பக்கமாக ஓட்டத் தொடங்கினார். அந்தக் காளை மாடுகள் குள்ளமாகவும், குண்டாகவும், பால் நிறமும் வழுவழுப்புமுள்ள தோற்றமுடையவையாகவும், ஆக்கிரோஷம், சுறுசுறுப்பு முதலியவை நிறைந்த யௌவனப் பருவத்து மயிலைக் காளைகளாகவும் இருந்தன. அவைகள் அதுவரையில் அடியையே பெற்று அறியாதவைகள். ஆகையால், அப்போது புதிதாகக் கிடைத்த அடிகளைப் பெறவே, அவைகள் அடக்க இயலாத வீராவேசமும் சீற்றமும், மனக் கொதிப்பும் கொண்டவையாய் நாற்கால் பாய்ச்சலில் பாய்ந்து வாயு வேக மனோவேகமாக ஓடத் தலைப்பட்டன. அவைகளினது கால்கள் பூமியில் படுவதே தெரியாது இருந்தமையால் அவைகள் ஆகாயத்தில் பறந்து செல்கின்றனவோ என்று வழிப்போக்கர் சந்தேகிக்கத் தக்கவையாய் இருந்தன. அந்த வண்டியிலிருந்த மனிதர் அடிக்கடி பின்புறம் திரும்பி மனிதர் வருகிறார்களோ என்று பார்த்துக் கொண்டும், ஷண்முகவடிவின் உடம்பு பின்பக்கத்தில் நழுவிப் போகாமல் ஒரு கையால் அவளது கைகளைப் பிடித்துக் கொண்டும், முன்புறத்தில்காளைகள்சரியான வழியில் ஓடுகின்றனவா என்று பார்த்துக் கொண்டும் அளவிறந்த ஊக்கமும் உற்சாகமும் தோற்றுவித்தவராய், எருதுகளை முடுக்கிச் செல்ல, கால் நாழிகை நேரத்தில் வண்டி திருவாரூர் போய்ச் சேர்ந்தது. அந்த ஊர் பெரிய பட்டணமாத லாலும், ஜனங்கள் அப்போதும் நடமாடிக் கொண்டிருந்தனர். ஆகையாலும், அவ்விடத்தில் அந்தப் பெண்மணிக்கு எவ்விதப் பொல்லாங்கும் நேராது என்று நினைத்த அந்த உபகாரி அவ்விடத்தில் காணப்பட்ட ஒரு வீட்டின் வாசலில் வண்டியை நிறுத்தி, இறங்கிப் பின்புறம் வந்து நின்று, ஷண்முகவடிவின் கைகால்களில் இருந்த கட்டுகளையெல்லாம் விலக்கியபின், பக்கத்தில் இருந்த வீட்டிற்குள் போய், ஒரு பாத்திரத்தில் நல்ல ஜலம் வாங்கிக் கொணர்ந்து அவளது வாயில் விடுவித்துப் பருகுவிக்க, அவள் சிறுகச் சிறுகத் தெளிவடைந்து விழித்துக் கொண்டாள்.

அதைக்கண்ட அந்த மனிதர் நிரம்பவும் மகிழ்ச்சியும் இன்பமும் அடைந்தவராய்ப் பாத்திரத்தை அதன் சொந்தக்காரரிடம் சேர்த்துவிட்டு வந்து முன்னால் உட்கார்ந்து வண்டியை மறுபடியும் ஓட்ட ஆரம்பித்தார். அந்த முரட்டாள்கள் குறுக்கு வழியாக நடந்து, தாம் போகும் நாகைப்பட்டணம் ரஸ்தாவுக்கு வந்து வண்டியை மறுத்துத் தம்மை மேற்கொண்டு அந்த யௌவனப் பெண்ணை மறுபடியும் அபகரித்துக் கொண்டு போய்விடலாம் என்ற ஓர் அச்சமும் கவலையும் அவரது மனதில் இருந்தன. ஆகையால், அவரது சஞ்சலம் அப்போதும் தீராமலிருந்தது. அன்றையதினம் இரவு முழுவதும் திருவாரூரிலேயே தமக்குப் பழக்கமான ஓரிடத்தில் அவளை வைத்து மறுநாள் காலையில் அவளது பங்களாவில் கொண்டு போய்ப் பத்திரமாகச் சேர்க்கலாமா என்ற யோசனை தோன்றியது. ஆனாலும், அவளைச் சேர்ந்த மனிதர்கள் கரைகடந்த துயரமும் சஞ்சலமும் அடைந்து துன்பக் கடலில் மூழ்கித் தத்தளித்திருப்பார்கள் என்ற எண்ணம் தோன்றியது. ஆகையால், எப்பாடுபட்டாயினும் அப்போதே அந்த மடந்தையைக் கொண்டுபோய் அவளது பங்களாவில் சேர்த்துவிட வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டவராய் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு நாகைப்பட்டணம் ரஸ்தாவில் வண்டியை விரைவாக ஓட்டிக்கொண்டு செல்லலானார். தமக்கு உதவியாக சில ஆட்களையும் அழைத்துக் கொண்டு போகலாமென்ற எண்ணம் தோன்றியது. ஆனாலும், அவ்வாறு ஆட்களைச் சேகரம் செய்துகொண்டு புறப்படுவதற்குள் நிரம்பவும் காலஹரணம் ஆகுமென எண்ணி உடனே தனியாகப் போய்விடுவதே உசிதமானது என நினைத்து முன்போலக் காளைகளை நன்றாக முடுக்கி ஓட்டலானார். மிகுந்த பராக்கிரமமும் பலமும் நிறைந்த அந்த எருதுகள் அம்புகள் பாய்வதுபோலக் காண்போரினது கண் பொறி தெறிக்க மகா வேகமாக ஓடிக் கால்நாழிகை நேரத்தில் ஷண்முகவடிவின் பங்களாவை அடைந்தன. அவள் சுருக்கமாகச்

சொன்ன குறிப்பை வைத்துக்கொண்டு அந்த பங்களாதான் அவளுடைய ஜாகையாக இருக்க வேண்டும் என்று நிச்சயித்துக் கொண்ட அந்தப் பேருபகாரி, தமது வண்டியை பங்களாவின் வாசலில் நிறுத்திப் பின்புறம் திரும்பி, "அம்மா! இதுதானா உன்னுடைய ஜாகை? பாரம்மா!" என்று அன்பொழுகக் கூற, அப்போதே தனது மயக்கத்திலிருந்து நன்றாகத் தெளிவடைந்து கண்களைத் திறந்து பார்த்த நமது பெண்ணரசி சொப்பனத்தில் இருப்பவள் போல அப்போதும் தனது கண்களை நம்பாதவளாய்ச் சிறிது நேரம் அங்கும் இங்கும் மருட்சியாகத் திரும்பிப் பார்த்து அதுவே தனது பங்களா என்று நிச்சயப்படுத்திக் கொண்டவளாய், "ஆம், இதுதான் எங்களுடைய ஜாகை" என்று நிரம்பவும் பணிவாகவும் அழகாகவும் மறுமொழி கூறியவண்ணம் மெதுவாகப் பின்புறம் நகர்ந்து வண்டியை விட்டுக் கீழே இறங்கினாள். அந்தப் பங்களாவின் முன்புறத்திலிருந்த இரும்புக் கம்பிகளால் ஆன கதவுகள் உட்புறத்தில் பூட்டப்பட்டு இருந்தன. ஆகையால், ஷண்முகவடிவு கதவண்டை வந்துநின்று, "முத்தம்மா! முத்தம்மா!" என்று மிருதுவானதனது இனிய மெல்லிய குரலால் இரண்டொரு தரம் தனது வேலைக்காரியை அழைக்கத் தொடங்கினாள். அந்தத் தோட்டத்திற்குள் அவர்கள் வசித்த கட்டிடம் சிறிது தூரத்திற்கு அப்பால் இருந்ததாலும், அப்போது இரவு சுமார் 9½ மணி நேரமாகி விட்டது ஆகையாலும், அந்த வேலைக்காரி ஷண்முகவடிவின் வருகையை மிகுந்த ஆவலோடு எதிர்பார்த்து சஞ்சலக்கடலில் ஆழ்ந்தவளாய்க் காத்துக் காத்துக் கடைசியில் நித்திரையில் ஆழ்ந்து விட்டாள். ஆனாலும், அந்த இளந்தோகை குயில் போன்ற தனது மிருதுவான குரலால் அவளை அழைத்தது உட்புறத்தில் கேட்கவில்லை. அதை உணர்ந்துகொண்ட அந்த யௌவனப் புருஷர் கதவண்டை போய் நின்று, "முத்தம்மா! முத்தம்மா!" என்று பன்முறை உரக்கக் கூவி அழைத்துப் பார்த்தார். அப்போதும் முத்தம்மாள் வரவில்லை.

அவ்விடத்தைவிட்டுப் போனவளான தான் அப்போதும் வரவில்லையே என்று நினைத்துக் கலவரம் அடைந்து, அந்த வேலைக்காரி ஒருகால் அத்தையைத் தனியாக விடுத்துவிட்டு, தன்னைத் தேடிக் கொண்டு திருவாரூருக்குப் போயிருப்பாளோ என்ற சந்தேகம் ஷண்முகவடிவின் மனதில் தோன்றியது. அந்தக் கதவிலிருந்து பூட்டை வெளிப்புறத்தில் இருந்தபடியே பூட்டினாலும் பூட்டலாம். ஆகையால், அவள் உள்ளே இருக்கிறாளோ இல்லையோ என்பதை நிச்சயிக்க மாட்டாத வளாய் அந்தப் பெண்மணி சிறிது நேரம் தயங்கி நின்றபின் தனது சந்தேகத்தை இரண்டொரு வார்த்தையில் அந்த மனிதரிடம் வெளியிட, அதைக் கேட்ட அந்தப் பேருபகாரி விரைவாக அந்த இரும்புக் கம்பிக் கதவின்மேல் ஏறி உட்புறத்தில் இறங்கி, அவ்விடத்திலிருந்து கட்டிடத்திற்குப் போனபாதை வழியாக உள்ளே போய்க்கட்டிடத்தை அடைந்து அதன்கதவை பலமாகத் தட்டி நாலைந்துமுறை முத்தம்மாளைக் கூப்பிட, தூக்கத்தில் ஆழ்ந்து அலுத்திருந்த அந்த வேலைக்காரி திடுக்கிட்டு எழுந்து ஓடிவந்து கதவைத் திறந்து பார்க்க, வெளியில் நின்று கொண்டிருந்த அந்த யௌவனப் புருஷர், ரஸ்தாவில், அந்த வீட்டைச் சேர்ந்த பெண் வந்திருப்பதாகக் கூறி, உடனே திறவு கோலை எடுத்துக்கொண்டு வரும்படி துரிதப்படுத்த, எதிர்பாராத பரம சந்தோஷமான அந்தச் செய்தியைக்கேட்ட வேலைக்காரி குதூகலமும் பூரிப்பும் அடைந்தவளாய், "ஆ! ஷண்முக வடிவம்மாள் திரும்பி வந்துவிட்டார்களா! என்னவோ அந்தத் திருவாரூர்த் தியாகராஜப் பெருமானுடைய கிருபையாலேதான் அந்த அம்மாள் சௌக்கியமாகத் திரும்பி வந்தார்கள்.ஆகா! அந்தக் குழந்தை இவ்வளவு நேரமாக வரவில்லையே என்று என் மனம் பதறிப் போய்விட்டது. நான் சாயுங்காலத்திலிருந்து இதுவரையில் ரஸ்தாவுக்குப் போய்ப் போய்ப் பார்த்துவிட்டுத் திரும்பியது சுமார் ஆயிரம் தடவை இருக்கும். திருவாரூருக்குப் போய்ப் பார்க்க வேண்டுமென்று என் உடம்பு துடித்தது.

ஆனாலும், வியாதியாகப் படுத்திருக்கும் இந்த அம்மாளைத் தனியாக விட்டுப் போகக்கூடவில்லை. என்ன செய்கிறது? உண்மை என்னது என்பதை அறிய மாட்டாமல் சித்திரவதைப் பட்டு அயர்ந்து உட்கார்ந்திருந்தவள் அப்படியே தூங்கிப் போய்விட்டேன் போலிருக்கிறது. நல்லவேளையாக அந்த அம்மாள் வந்து சேர்ந்தார்களே. எல்லாம் தியாகராஜப் பெருமானுடைய கிருபை!'' என்று மிக மிக உருக்கமாகப் பேசிய வண்ணம் வெளிக்கதவின் திறவுகோலை கையில் எடுத்துக் கொண்டு அந்தப் புருஷரைத் தொடர்ந்து கட்டிடத்தை விட்டு வெளிப்பட்டு விரைவாக நடந்து இரும்புக் கம்பிக் கதவண்டை போய்ச் சேர்ந்தாள். அவளைக் கண்ட ஷண்முக வடிவு தாயைப் பிரிந்து கண்ட கன்று போல மிகுந்த ஆவலோடும் வாஞ்சையோடும் ஓலமிட்டு அலறி, ''முத்தம்மா! இன்றைய தினம் நான் எப்படிப்பட்ட அபாயத்தில் அகப்பட்டுக் கொண்டேன் தெரியுமா! அடாடா! இன்றைய தினம் நான் பிழைத்து வந்ததைப் புனர் ஜென்மம் என்றுதான் சொல்ல வேண்டும். எல்லாம் அந்தத் தியாகராஜப் பெருமானுடைய அருளாலும் இதோ இருக்கும் இந்தப் புண்ணிய புருஷருடைய சௌகரியத்தினாலும் தயாள குணத்தினாலுமே நான் உயிர் பெற்று வந்து சேர்ந்தேன். இவர்கள் நல்ல சமயத்தில் வந்திராவிட்டால் இந்நேரம் என்னுடைய உயிரே போயிருக்கும். நான் உன்னையாவது அத்தையையாவது, அக்காளையாவது மறுபடியும் பார்க்கவே அதிர்ஷ்டமில்லாமல் போயிருக்கும்'' என்று அளவில் அடங்கா நன்றியறிதலின் பெருக்கினால் மலர்ந்த முகத்தோடும், உருகி நைந்திளகிய மனத்தோடும் கூற, அதற்குள் முத்தம்மாள் கதவைத் திறந்துவிட ஷண்முகவடிவு மிகுந்த ஆவலோடும் நாணிக்குனிந்த சிரமத்தோடும் உள்ளே புகுந்து கட்டிடத்தை நோக்கி நடக்கலானாள். அந்த அபாயத்திலிருந்து தன்னைக் காப்பாற்றிய மனிதர் வேலைக்காரி யோடு உள்ளே வருவாரென்றும், வந்தவுடன் அவளைக் கொண்டு அவரது வரலாற்றை விசாரித்து அறிந்துகொண்டு

தனது நன்றியறிதலையும் மனமார்ந்த வந்தனத்தையும் தெரிவித்து அவரை உபசரித்து அனுப்ப வேண்டும் என்றும் நினைத்தவளாய், அந்தப் பேதை மடவன்னம் கட்டிடத்தை நோக்கி நடக்கப் போனாள். இரும்புக் கதவண்டை நின்று கொண்டிருந்த முத்தம்மாள் அந்த உபகாரியை நோக்கி, ''ஐயா! இரண்டு கதவுகளையும் நன்றாகத் திறந்து வைக்கிறேன். வண்டியை உள்ளே ஓட்டிக்கொண்டு வாருங்கள். உங்களைப் பார்த்தால் நிரம்பவும் களைத்துப் போயிருப்பதாகத் தெரிகிறது. ஏதாவது தாகத்துக்குச் சாப்பிட்டுவிட்டுக் கொஞ்ச நேரமிருந்து களைப்பாறி விட்டுப் போகலாம்'' என்று மிகவும் பணிவாகவும் அன்பாகவும் உருக்கமாகவும் கூறி வருந்தி அழைக்க, அந்த வார்த்தைகளைக் கேட்ட அந்த உபகாரி, அவளை நோக்கி மிகவும் அன்பான குரலில் பேசத் தொடங்கி, ''நான் இப்போது உள்ளே வந்திருந்து ஒரு நிமிஷ நேரம் கூடக் காலஹரணம் செய்ய எனக்கு அவகாசமில்லை. நான் ஓர் அவசர காரியமாகப் பொன்னிரை என்ற ஊருக்குப் போய்க் கொண்டிருந்தேன். கொஞ்ச தூரத்தில் ஒரு மடமும் தாமரைக்குளமும் இருக்கின்றன. அந்த இடத்தில் நான் வண்டியை நிறுத்தி காளைகளுக்குத் தண்ணீர் காட்டிக்கொண்டிருந்த சமயத்தில், பக்கத்தில் இருந்த காட்டுக்குள் யாரோ சில முரடர்கள் இந்தப் பெண்ணைக் கட்டி எங்கேயோ தூக்கிக்கொண்டு போக முயல, அப்போது இந்தப் பெண் கூச்சலிட்டதைக் கேட்டு நான் போய், அந்த முரடர்களை எல்லாம் அடித்துப் போட்டுவிட்டு இந்தப் பெண்ணை வண்டியில் வைத்து இங்கே கொண்டு வந்தேன். இந்தப் பெண் நிரம்பவும் களைத்துப் போயிருப்பதோடு, பிரமாதமாகப் பயந்தும் இருக்கும். ஆகையால், நீ உடனே போய் அதன் களைப் பையும் பயத்தையும் தெளிவித்து ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள். அவகாசப்பட்டால், நான் மறுபடியும் வந்து அந்தப் பெண் அந்த முரடர்களுடைய வசத்தில் அகப்பட்டுக் கொண்ட வரலாறுகளைக் கேட்டறிந்து கொள்ளுகிறேன். எனக்கு நிற்க

நேரமில்லை. இந்தச் சங்கதியை இந்த அம்மாளிடம் தெரிவி'' என்று அன்பாக வற்புறுத்திக் கூறியவராய் விரைவாகப் பாய்ந்து வண்டியின் மேல் ஏறி உட்கார்ந்துகொண்டு எருதுகளை ஊக்க, அவைகள் அந்த வழியிலேயே திரும்பித் திருவாரூரை நோக்கி ஓடலாயின. தான் சொல்லும் மறுமொழியைக்கூடக் கேளாமல் அவ்வளவு அவசரமாய்ப் போகிற அந்தப் புருஷரைத் தான் தடுத்து நிற்கச் செய்வது தவறு என்று நினைத்த முத்தம்மாள், உடனே கதவை மூடி மறுபடியும் பூட்டிக்கொண்டு ஓட்டமாக நடந்து கட்டிடத்திற்குள் போய்ச் சேர்ந்தாள். அவளுக்கு முன்னால் உட்புறத்தில் சென்ற ஷண்முகவடிவின் மனதில் தனது அத்தை சௌக்கியமாக இருக்கிறாளா என்பதைப் பார்க்க வேண்டும் என்ற நினைவே முதன்முதலாக எழுந்து தூண்டியது. ஆகையால், அவள் தனது அத்தை படுத்திருந்த அறைக்குள் போய்ப் பார்க்க, அந்த அம்மாள் எவ்விதமான சலனமும் இன்றி அயர்ந்து நித்திரை செய்துகொண்டிருந்ததைக் கண்டாள். அப்போதே அவளது மனத்தின் பெருஞ் சுமையாகிய கவலையும் அச்சமும் நீங்கின. அவ்விடத்தில் தான் அதிகமாக நிற்காமல் வெளிப்பட்டுத் தன்னைக் காப்பாற்றிய பேருபகாரியான அந்த உத்தம புருஷருக்கு உபசார வார்த்தைகள்கூறி, அவருக்குத் தக்கபடி தன்னால் இயன்ற மரியாதைகள் செய்து அனுப்ப வேண்டும் என்ற எண்ணங் கொண்டவளாய் நமது பெண்ணரசி தனது அத்தையின் அறைக்கு வெளியில் வந்த முத்தம்மாளைக் கண்டு, ''அந்த ஐயாவைக் கூடத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் விசிப் பலகையில் உட்காரச் செய்! தாகத்துக்குக் கொடுத்து சரியானபடி உபசாரம் செய்'' என்று கூற, அதைக் கேட்ட முத்தம்மாள், ''இல்லை அம்மா! அந்த ஐயா உள்ளேயே வரவில்லை. ஏதோ அவசர ஜோலியாக அவர்கள் பொன்னிரைக்குப் போனார்களாம். வழியில் நீங்கள் அபாயத்தில் அகப்பட்டுக் கொண்டிருந்ததைக் கண்டு உங்களை இங்கே அழைத்துக்கொண்டு வந்து விட்டார்களாம். மறுபடியும் அவசரமாக அந்த ஊருக்கே போக

வேண்டுமாம். நான் உபசரித்து உள்ளே வந்து தாகத்திற்குச் சாப்பிட்டுப் போகும்படி அவர்களை அழைத்தேன். அவர்கள் இன்னொரு சமயத்தில் வந்து நீங்கள் அந்த முரடர்களிடத்தில் அகப்பட்டுக்கொண்ட வரலாற்றைக் கேட்டுக்கொள்வதாகச் சொல்லிவிட்டு உடனே வண்டியை ஓட்டிக்கொண்டு போய் விட்டார்கள். நான் கதவைப் பூட்டிக் கொண்டுவந்துவிட்டேன்'' என்றாள்.

அந்த விவரத்தைக் கேட்ட ஏந்தெழில் மடந்தையான ஷண்முகவடிவினது முகம் வாட்டமடைந்தது. அதிருப்தியும் விசனமும் முகத்தில் தாண்டவமாடின. ''அடாடா! என்ன என்னுடைய மூடத்தனம்! இவ்வளவு தூரம் நமக்கு உதவி செய்த மனிதர் உள்ளேயும் வருவார் என்றல்லவா நினைத்து நான் முன்னே வந்து விட்டேன். அவர் உடனே போகவேண்டும் என்றதைக் கேட்டவுடனே அந்த விஷயத்தை என்னிடம் தெரிவித்துவிட்டு வருவதாகச் சொல்லி, அவரை ஒரு நிமிஷ நேரம் நிற்கச் செய்துவிட்டு என்னிடம் ஓடிவரக் கூடாதா? அப்படி வந்திருந்தால் நானே நேரில் போய்த் தக்கபடி மரியாதை செய்து அந்த ஐயாவை அழைத்து வந்திருப்பேனே! நீ கதவைத் திறந்தவுடன் நானும் அங்கே நின்று அவரையும் அழைத்து வராமல் முதலில் உள்ளே வந்ததை அவர் தவறாக நினைத்துக் கொண்டிருப்பாரோ? என்னுடைய மானத்தையும், உயிரையும் காப்பாற்றிய உயிர் தெய்வமாகிய அந்த மகா உத்தம புருஷரை, என் வேலை முடிந்தவுடன், நான் அசட்டை செய்ததாக நினைத்துக்கொண்டு அதிருப்தி அடைந்து, உள்ளே வர மனமற்று உடனே போய்விட்டாரோ, என்னவோ தெரியவில்லையே! ஆகா! என்ன காரியம் செய்து விட்டோம்! நானும் முட்டாள்தனம் செய்து விட்டேன். நீயும் அஜாக்கிரதையாக இருந்து ஏமாறிப் போனாய். நம்மை ஒரு பொருட்டாக மதித்து, நம்முடைய உபசார வார்த்தைகளை ஏற்றுக்கொள்ள அவர் இனிமேல் எங்கே வரப்போகிறார்! அவர் இனி இங்கே வருவார் என்று சொல்வதற்கு ஏதுவில்லை.

அப்படித்தான் அவரை அனுப்பி விட்டு வந்தாயே, அந்த ஐயா யார் என்பதையும், அவர் இருக்கும் இடத்தையுமாவது கேட்டு அறிந்து கொண்டு வந்தாயா?'' என்று சகிக்க வொண்ணாத துயரத்தோடும் கலக்கத்தோடும் ஷண்முகவடிவு கூறினாள்.

அதைக்கேட்ட முத்தம்மாளினது முகமும் வாட்டம் அடைந்தது. அந்த விஷயத்தில் தானும் தவறு செய்துவிட்டதாக உணர்ந்து அவளும் சஞ்சலத்திற்கு ஆளானாள். அவளது மனதும் கண்களும் கலங்கின. அவள் நிரம்பவும் விசனமான குரலோடு பணிவாகப் பேசத் தொடங்கி, ''இல்லையம்மா! நானும் ஏமாறிப் போய்விட்டேன். அவருடைய பெயர் விலாசம் முதலிய விவரங்கள் உங்களுக்குத் தெரிந்திருக்கலாம் என்று நினைத்து அல்லவா நான் ஏமாறிப் போய்விட்டேன், இல்லாவிட்டால் அந்த விவரத்தையாவது கேட்டுக் கொண்டு வந்திருப்பேனே! அவருடைய உடம்பு பதைத்த பதைப்பி லிருந்து அவர் நிரம்பவும் அவசரமாக எங்கேயோ போக வேண்டியவராகத்தான் காணப்பட்டார். நானோ, அல்லது, நீங்களோ எவ்வளவுதான் வற்புறுத்தி உபசரித்து இறைஞ்சி வேண்டிக்கொண்டிருந்தாலும் அவர் இந்தச் சந்தர்ப்பத்தில் உள்ளே வந்திருக்கவே மாட்டார். எப்படியிருந்தாலும், அவர் மறுபடியும் இவ்விடத்துக்கு வருவார் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். அதைப்பற்றி நீங்கள் கவலையே கொள்ள வேண்டாம். அவரைப் பார்த்தால் மகா தயாளகுணம் உள்ளவராகக் காணப்படுகிறார்! நம்மைப் பற்றி அவர் தவறாகவும் நினைக்க மாட்டார்; நம்மை இவ்வளவோடு அசட்டையாக மறந்துவிடவும் மாட்டார்; எப்படியும் வந்தே தீருவார். அது இருக்கட்டும்; நீங்கள் பாங்கியில் பணம் வாங்கப் போனவர்கள் திருத்தருப்பூண்டிப் பாதையில் முரடர்களுடைய கையில் அகப்பட்டுக் கொள்ள வேண்டிய முகாந்திரம் என்ன?'' என்றாள்.

அதைக்கேட்ட ஷண்முகவடிவு தான் அன்றைய தினம்

பகலில் திருவாரூர் பாங்கிக்குப் போனதுமுதல் தான்அப்போது வீட்டிற்குத் திரும்பி வந்தது வரையில் தனக்கு நேர்ந்த மகா பயங்கரமான அபாயங்களின் விவரத்தையெல்லாம் தனது வேலைக்காரியினிடத்தில் சுருக்கமாக எடுத்துக்கூற, அந்த பயங்கரமான வரலாற்றைக் கேட்டுக்கொண்டு வரும்போதே, முத்தம்மாளினது மனதில் பெருத்த திகிலும் சஞ்சலமும் உண்டாயின. அவளது உடம்பு அடிக்கடி திடுக்கு திடுக்கென்று நடுங்கியது; உரோமம் சிலிர்த்தது. அன்றையதினம் ஷண்முக வடிவு தனது கற்பையும் உயிரையும் காப்பாற்றிக் கொண்டது தெய்வ சகாயத்தினாலேயே அன்றி வேறு அல்ல என்ற உறுதி தோன்றியது. கபட சன்னியாசியும், மற்ற முரடர்களும் தாங்கள் ஆண் துணையின்றித் தனியாக இருப்பதை அறிவார்கள். ஆதலால், அவர்கள் மறுபடியும் சரியான பக்க பலத்தோடு பங்களாவிற்கு வந்து ஏதேனும் துன்பம் இழைக்கப் போகிறார்களே என்ற பெரும்பீதியும் கவலையும் எழுந்து வதைக்கத் தொடங்கின. அவள் உடனே ஷண்முகவடிவைப் பார்த்து ''அடடா! இந்த விவரமெல்லாம் எனக்கு அந்த ரஸ்தாவிலேயே தெரியாமல் போய்விட்டதே! தெரிந்திருந்தால், உங்களைக் காப்பாற்றி அழைத்துக் கொண்டுவந்த அந்த மனிதரிடம் நம்முடைய வரலாறுகளையெல்லாம் சொல்லி யிருக்கலாமே. நாம் ஆண்துணையின்றித் தனியாக இருப்பதால், அந்தப் பண்டாரமும், மற்றவர்களும் வந்து உபத்திரவிப்பார் களோ என்று நாம் கவலைப்படுவதாக அவரிடம் தெரிவித்தால், அவர் அதற்குத் தகுந்தபடி ஏதாவது சரியான ஏற்பாடு செய்வார். அவரே நேரில் இங்கே இருந்து நம்மைப் பாதுகாக்க முடியாவிட்டாலும், வேறே ஆள்கள் யாரையாவது அமர்த்தியாவது வைத்துவிட்டுப் போவார். இப்போது அவருக்கும் நம்முடைய நிலைமை இன்னது என்பதே தெரியாது. நமக்கும் அவர் யார் என்பது முதலிய எந்த விவரமும் தெரியாமல் போய்விட்டது. இந்த அகாலத்தில் நாம் பக்கத்திலுள்ள வீடுகளுக்குப் போய்த் துணைக்கு மனிதரை

அழைத்துக்கொண்டு வருவதும் துர்லபமான காரியமாக இருக்கிறது'' என்று மிகுந்த கவலையோடும் சஞ்சலத்தோடும் கூறினாள்.

அவளது சொற்களைக் கேட்ட இளநங்கை, ''இன்று சாயுங்காலத்துக்குப் பிறகு எனக்கு நேர்ந்த மகா பயங்கரமான அபாய நிலைமைகளிலிருந்து நான் எப்படித் தப்பி வீடு வந்து சேரப்போகிறேன் என்று நான் பட்டுக்கொண்டிருந்த கவலையும் வேதனையும் அளவில் அடங்குமா! அப்படிப்பட்ட நம்பிக்கை யுற்ற ஆபத்து சமயத்தில் தோன்றாத் துணைவனாக இருந்து என்னைக் காப்பாற்றி இங்கே கொண்டு வந்து சேர்த்த சர்வேசுவரன் இனிமேல் மாத்திரம் நம்மைக் கைவிட்டுவிடப் போகிறானா? ஒருநாளும் கைவிடமாட்டான். இருந்தாலும், நான் இந்தப் பேருபகாரியின் விஷயத்தில் பெருத்த அபராதி யாகிவிட்டேன். ரஸ்தாவிலிருந்து நான் உள்ளே வரும்போது அவரை உபசரித்து உள்ளே அழைக்கவில்லை என்றும், நான் என்னுடைய நன்றி விசுவாசத்தைத் தக்கபடி வெளியிடவில்லை என்றும் நினைத்து என்மேல் ஆயாசப்பட்டு அவர் போய்விட்டார் என்பதும் தெரியவில்லை. அல்லது உண்மை யிலேயே அவசர வேலையின் நிமித்தம் போனார் என்பதும் தெரியவில்லை. எவ்வளவுதான் அவசரமான வேலையிருந் தாலும், எனக்காக இவ்வளவு தூரம் பாடுபட்டு இவ்வளவு பொழுதை விரயம் செய்த அந்த மனிதர் இன்னம் அரைக்கால் நாழிகை நேரம் இருந்து நம்முடைய வரலாற்றை அறிந்து கொண்டு போவது ஒரு பொருட்டா! ஆகையால், அவர் என்னுடைய நடத்தையைப்பற்றி ஆயாசமடைந்தே போயிருக்க வேண்டும் என்று என் மனம் ஒருவாறு சந்தேகப்படுகிறது. மொத்தத்தில், நான் கொஞ்சம் ஏமாறிப் போனேன்; அதன் பலனை நாம் இப்போது அனுபவிக்கிறோம்'' என்று மிகுந்த துயரத்தோடும் சஞ்சலத்தோடும் கூறினாள். அதன்பிறகு வேலைக்காரியினது வற்புறுத்தலைத் தடுக்க மாட்டாமல்,

ஷண்முகவடிவு ஸ்நானம்செய்து ஏதோ சொற்பமாக ஆகாரம் செய்து கொண்டவளாய்த் தனது சயனத்தில் படுத்தாள். அவளது நினைவு முழுதும் அன்றையதினம் நேர்ந்த சம்பவங்களிலேயே சென்று லயித்திருந்தது; தன்னைக் காப்பாற்றித் தனக்கு உயிர்கொடுத்த புண்ணியவானிடத்தில் தான் மரியாதைக் குறைவாக நடந்து நன்மைக்குக் கைம்மாறாக அவரது மனம் புண்படும்படி தான் புன்மையாக நடந்துகொண்டதைப் பற்றிய பெரும், விசனமும் அவளது மனதைப் புண்படுத்திக் கொண்டிருந்தது, அதோடு, அந்த இரவில் தங்களுக்கு மறுபடி எவ்விதத் துன்பமும் நேராமல் இருக்க வேண்டுமே என்ற கவலையும் அச்சமும் அவளது உடம்பை திடுக்கு திடுக்கென்று நடுக்கித்தூக்கிப்போட்டது. அப்படிப்பட்ட நிலைமையிலிருந்து சஞ்சலமுற்றிருந்த நமது பெண்பாவையான ஷண்முகவடிவு, அன்றையதினம் பகலிலிருந்து அநுபவித்த தேகப்பிரயாசையினாலும், மனோ வியாகுலத்தினாலும் நிரம்பவும் அலுத்துத் தளர்வடைந்திருந்தாள். ஆகையால், அவள் வெகு சீக்கிரத்தில் துயிலில் ஆழ்ந்துவிட்டாள். வேலைக்காரியான முத்தம்மாள் அந்த இரவு முழுதும் இமைகளை ஒரு நிமிஷ நேரமும் மூடாமல் கரைகடந்த சஞ்சலமும் கலவரமும் அடைந்தவளாய்ப் படுத்திருந்து அதிகாலையில் எழுந்து தனது வழக்கப்படி ரஸ்தாவுக்குப் போய் இரும்புக்கம்பிக் கதவைத் திறந்து வைக்க எத்தனித்தபோது அதற்குப்பக்கத்தில் ரஸ்தாவில் கையும் தடியுமாக நின்று கொண்டிருந்த நாலைந்து முரட்டாள்களைக் கண்டு கலங்கி நடுநடுங்கினவளாய்க் கதவைத் திறக்காமல் திரும்பி உள்ளே ஓடி வந்து வீட்டின் கதவுகளை எல்லாம் உட்புறத்தில் தாளிட்டுக் கொண்டு பெருத்த திகில் கொண்டவளாய் ஷண்முக வடிவை எழுப்ப, அவள் திடுக்கிட்டு எழுந்து என்ன விசேஷம் என்று வினவ, வேலைக்காரி தான் கண்ட விஷயத்தை மெதுவாக வெளியிட்டாள். அதைக் கேட்ட ஷண்முகவடிவு என்ன செய்வதென்பதை அறியாமல், தனது கைகளைப் பிசைந்து கொள்ளுகிறாள். அவளது அழகிய

மேனி, காற்றில் அசையும் மாந்தளிர்போலக் கிடுகிடென்று நடுங்குகிறது; எந்த நிமிஷத்தில் அந்த முரடர்கள் உள்ளே நுழைந்து தன்னை மறுபடியும் பலாத்காரம் செய்து தூக்கிக்கொண்டு போவார்களோ என்ற பெரும்பீதி கொண்டவளாய், நெருப்புத் தணலின் மேல் நிற்பவள் போலத் தவிக்கலானாள். அந்த இரவு கழிகிற வரையில் அவர்கள் இருவரும் நரகவேதனை அனுபவித்தவர்களாய் விவரிக்க வொண்ணாத பெருங்கவலையும், கிலியும் கொண்டு, பேச்சு மூச்சற்று அச்சமே வடிவாக உட்கார்ந்திருந்தனர். வெளியில் ஏதாவது அற்ப ஓசை உண்டானதானாலும், அந்த முரடர்கள் உள்ளே வந்துவிட்டார்கள் என்று நிச்சயித்து நடுநடுங்கி வேர்த்து விருவிருத்துக் கையைப் பிசைந்து கொண்டு உட்கார்ந்திருந்தனர். கடைசியில் பொழுதும் விடிந்தது; சூரியன் உதயமாகி நெடுந்தூரம் உயர்ந்துவிட்டான். கதவுகள் மூடப்பட்டிருந்தாலும், பகலின் வெளிச்சம் உட்புறத்தில் எல்லாம் பளிச்சென்று வீசியது. ஆகையால், அவர்களது சஞ்சலமும் அச்சமும் ஒருவாறு குறைந்தன. பங்களாவிற்கு வெளியில் நான்கு பக்கங்களிலும் ஜனங்கள் பேசிக்கொண்டு நடமாடியதும் தெரியவே, தாங்களும் கதவைத் திறந்துகொண்டு வெளியில் போகலாம் என்ற துணிவும் உற்சாகமும் உண்டாயின. ஆகவே, முத்தம்மாள் சந்தடி செய்யாமல் ஒரு ஜன்னலின் கதவைத் திறந்துகொண்டு மெதுவாக வெளியில் பார்க்க, பங்களாவின் முன்புறத்தில் மனிதரே காணப்படவில்லை. முன்னிலும் அதிக தைரியம் அடைந்த முத்தம்மாள் உடனே கதவுகளையெல்லாம் திறந்துவைத்து விட்டு ரஸ்தா வரையில் போய்ப் பார்த்து, இரும்புக் கம்பிக் கதவுகளையும் திறந்து வைத்துவிட்டு, தோட்டம் முழுதும் சுற்றிப்பார்த்து, உட்புறத்தில் ஏதேனும் காலடிச்சுவடுகள் இருக்கின்றனவா என்பதை ஆராய்ந்து பார்த்தாள். பங்களாவின் உட்புறத்தில் அன்னிய மனிதரின் காலடிச்சுவடே காணப்படவில்லை. உடனே அவள் செய்தியை ஷண்முகவடிவினிடம் போய்த் தெரிவித்தாள்.

விடியற்காலையில் ரஸ்தாவில் நின்றுகொண்டிருந்த முரட்டு மனிதர்கள் உள்ளே நுழைந்து தங்களுக்கு எவ்விதத் துன்பம் இழைக்காமல் போயிருப்பதைக் காண, அவர்கள் என்ன கருத்தோடு வந்திருப்பார்கள் என்ற சந்தேகம் எழுந்தது. உண்மையில் ஆள்கள் வராமல் இருக்க, முத்தம்மாள் தனது மனப் பிராந்தியினால், ஆள்கள் வந்திருக்கிறார்கள் என்று தவறாக நினைத்துக் கொண்டிருப்பாளோ என்றும், அல்லது அப்படி வந்தவர்கள் யாராவது வழிப்போக்கர்களாக இருப்பார்களோ என்றும் ஷண்முகவடிவு பலவாறு யூகங்கள் செய்துசெய்து பார்த்தாள். தனது அக்காளினால் அனுப்பப்பட்ட பணம் முழுதும் போய்விட்டதே என்ற எண்ணம் அந்த யௌவன மின்னாளின் மனதில் அப்போதைக்கு அப்போது தோன்றியது. ஆனாலும், விலை மதிப்பற்ற நிதிக் குவியலைக் காட்டிலும் அரிதான தனது தேக பரிசுத்தத்திற்கு எவ்விதக் களங்கமும் நேராமல் போனதே ஒரு கோடி பெறுமென்று ஆறுதல் தோன்றி அவளை உற்சாகப் படுத்திக் கொண்டிருந்தது. அவளும் முத்தம்மாளும் மனக்குழப்பம் அடைந்து சித்தப் பிரமை கொண்டவர்கள் போல மாறி முற்றிலும் சோர்ந்து தளர்ந்து தங்களது கடமைகளையும் வீட்டு அலுவல்களையும் ஒருவாறு கவனித்தவர்களாய், இராத்திரிக்காலமே வராமல் எப்போதும் பகலாகவே இருந்துவிடக் கூடாதா என்று கோரியவர்களாய், அன்றையதினம் இரவு வந்து விடுமே என்றும், மறுபடியும் ஒருவேளை அந்த முரடர்கள் வந்து விடுவார்களே என்றும் கவலை கொண்டு திகிலடைந்து நிரம்பவும் வருந்திப் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தனர்.

பிற்பகல் மூன்று மணி சமயமாயிற்று; ஷண்முகவடிவு தஞ்சையிலுள்ள தனது அக்காளுக்கு ஒரு கடிதம் எழுதினாள். அவளால் அனுப்பப்பட்ட கடிதமும் உண்டியலும் வந்தது, உண்டியலை மாற்றும் பொருட்டு தான் திருவாரூருக்குப் போனது, அவ்விடத்தில் தனக்கு அபாயங்கள் நேர்ந்தது,

முடிவில் ஒரு வழிப்போக்கரால் தான் காப்பாற்றப்பட்டது முதலிய விவரங்களை எல்லாம் அவள் அந்தக் கடிதத்தில் எழுதி, அதைக் கொண்டுபோய்த் திருவாரூர்த் தபால் சாலையில் போட்டுவிட்டு உடனே வந்து விடும்படியாகவும், அப்படி வரும்போது இரண்டொரு ஆண் பிள்ளைகளுக்கு ஏதாவது பணம் கொடுப்பதாகப் பேசி அவர்களை இராத்திரி காலத்தில் காவலாக இருக்க அழைத்து வரும்படி சொல்லி அனுப்பினாள். அன்று அஸ்தமன வேளை ஆவதற்கு முன் தான் திரும்பி வந்து விடுவதாக உறுதி கூறிவிட்டு வேலைக்காரி பங்களாவை விட்டு வெளிப்பட்டுத் திருவாரூரை நோக்கிப் போய்விட்டாள்.

ஷண்முகவடிவு அடிக்கடி தனது அத்தையின் தேக சௌகரியங்களைக் கவனித்தவளாய் நிரம்பவும் கவலையும் சலனமும் அடைந்து ஓரிடத்தில் இருக்கை கொள்ளாமல் அங்குமிங்கும் போய் வந்து கொண்டிருந்தாள். பகற்பொழுதில் முன் பக்கத்து இரும்புக் கம்பிக் கதவுகள் மூடித் தாளிடாமல் விடப்பட்டிருப்பது வழக்கம். அதுபோலவே, கதவுகள் அன்றையதினம் மூடி வைக்கப்பட்டிருந்தன. பேதை மடவன்னமான ஷண்முகவடிவு அரைநாழிகைக்கு ஒருதரம் இரும்புக் கதவண்டை போய் முத்தம்மாள் வருகிறாளா என்று பார்ப்பதும், உடனே திரும்பிக் கலாபமயில் போலக் கண்கொள்ளா எழில் வடிவம் தாங்கி மிருதுவாக நடந்து உட்புறம் போய்த் தனது அத்தையைக் கவனிப்பதும், பிறகு கூடத்திலிருந்த விசிப்பலகையின் மேல் சிறிது நேரம் உட்கார்ந்து கொள்ளுவதுமாக இருந்தாள். முந்திய நாளிரவில் எதிர்பார்க்காதபடி தோன்றித் தனக்கு உயிர் கொடுத்த மகா புண்ணியவானான அந்த உத்தமகுண சீலர் தன்மீது ஆயாசமடைந்து தன்னிடம் சொல்லிக் கொள்ளாமல் போய் விட்டதை நினைத்து நினைத்து அடிக்கடி கலங்கி விசனித்தவளாய் இருக்க, அவள் இருந்த கட்டிடத்தின் முன்புறத்

தாழ்வாரத்தில் ஜோடுகள் போட்டுக்கொண்டு சடக்சடக்கென்று யாரோ மனிதர் நடந்து வந்த ஓசை கேட்டது. என்றைக்கும் இல்லாமல் அன்றையதினம் அம்மாதிரி ஓசை செய்து நடந்து வந்த மனிதர் யாராயிருப்பார் என்ற சிந்தனையும் வியப்பும் உண்டாய் அவளது மனதைக் கவர்ந்து கொண்டன. அவள் கரைகடந்த கலக்கமும் கட்டுக்கடங்காத சஞ்சலமும் கொண்டவளாய் விசிப்பலகையிலிருந்து சடக்கென்று எழுந்து வாசற்படியை நோக்கி வந்து, உட்புறத்தில் நின்றபடி தனது சிரத்தை நீட்டி வெளியில் பார்த்தாள். பார்க்கவே, அவளது கண்கள் மழுங்கிப் போயின. மனம் பிரமிப்பை அடைந்து கலங்கின. அவள் பிரமாதமான வியப்பும் திக்பிரமையும் அடைந்தவளாய், தான் என்ன செய்வது என்பதை அறியாமல் குழப்பமடைந்து ஸ்தம்பித்து சித்திரப் பதுமை போல வெட்கித் தலைகுனிந்தபடி நின்றுவிட்டாள். தாழ்வாரத்தின் வழியாக நடந்து அவள் இருந்த வாசற்படியை நோக்கி வந்த மனிதர் சுமார் இருபத்திரண்டு வயது அடைந்த ஒரு யௌவனப் புருஷர். அவர் பத்தரைமாற்றுப் பைம்பொன்னைப் பழித்த சிவந்த பளபளப்பான மேனியையும், மாரனோ, ராஜகுமாரனோ என்று காண்போர் ஐயுறத்தக்க மகா அற்புதமான கட்டழகையும், முகவசீகரத்தையும் பெற்றவனாய், ஒரு பெருத்த தனிகரது செல்வக்குமாரன் போலக் காணப்பட்டான். அவனது செவிகளில் இருந்த வைரக்கடுக்கன்களும், உடம்பிலிருந்த பட்டாடைகளும் ஜரிகை வஸ்திரங்களும் வெல்வெட்டு ஜோடுகளும், இயற்கையிலேயே அழகு வழிந்த அவனது சுந்தரமேனியின் தேஜஸை ஆயிரமடங்கு சிறப்பித்து ஜாஜ்வல்யமாகத் தோன்றும்படிச் செய்தன. கருத்தடர்ந்து சுருட்டை விழுந்திருந்த அவனது சிகையை அவன் முடிந்து விட்டிருந்தது ஒரு தேங்காய் அளவு பருத்திருந்தது, அவனது பின்னழகைக் கண்கொள்ளா அழகாகச் செய்தது; புருவ விற்களின் செறிவும் விசாலமாகப் பரந்த தெளிவான கண்களின் ஜ்வலிப்பும், மூக்கின் சொகுசும், பற்களின் கவர்ச்சியும்,

கன்னங்களின் குழிவுகளும் ஒன்றுகூடி அவனைக் காண்போர் ஆண்பாலரேனும் பெண்பாலரேனும் ஒரே பார்வையில் அவனுக்கு அடிமையாகும்படி செய்யத்தக்கனவாக இருந்தன. அதோடு, இளமையும், பலமும் கம்பீரமும் நிறைந்த அவனது அழகிய உடம்பு அச்சில் கடைந்தெடுக்கப்பட்டது போல வெகு சுத்தமாக அமைந்திருந்தமையால், அவனது அங்கங்களில் எந்தப் பாகத்திலும் ஓர் அணுவை எடுத்து வேறுவிதமாக அமைத்தாலும், அந்த மேனியின் அழகும் கவர்ச்சியும் குறைந்துபோகக் கூடியதாக இருந்தனவே யன்றி, அதிகரிக்கத் தக்கனவாக இல்லை. அப்படிப்பட்ட மகா அருமையான சிங்காரபுருஷரை நமது ஷண்முகவடிவு எப்போதுமே கண்டதில்லை. ஆகையால், அவர் யாராக இருக்கலாம் என்று அவள் எவ்வளவோ தூரம் ஆழ்ந்து யோசித்துப் பார்த்த தெல்லாம் வீணாயிற்று. காலை நேரத்தில் இளஞ்சூரியனைக் கண்ட கண்கள் எவ்விடத்தில் திரும்பிப் பார்த்தாலும் கோடானுகோடி சூரிய பிம்பங்களே தோன்றுவது போல, மகா தேஜோமயமாகத் தோன்றிய அந்த யெளவன மன்மதனை ஒருதரம் பார்த்துவிட்டு அந்த இன்ப வல்லி கீழே குனிந்துகொண்டாள். ஆனாலும், அவனது குளிர்ந்த இனிய வடிவம் அவளது அகக்கண்ணிலும் உணர்விலும் நிறைந்து நீங்காமலேயே நின்று கொண்டிருந்தது. தன்னை அறியாமல் அவளது மனதில் ஒருவித வாத்சல்யமும் பிரேமையும் நெகிழ்வும் உருக்கமும் தோன்ற ஆரம்பித்தன. அவரது அற்புத மேனியை இன்னொரு தரம் தான் பார்க்கவேண்டும் என்ற ஒருவித தாகம் அவளது மனதில் உண்டானது. ஆனாலும், அன்னியபுருஷரான அவரைத் தான் ஏறிட்டுப் பார்ப்பது தவறு என்ற எண்ணமும் கட்டிலடங்கா நாணமும் எழுந்து அவளது முகத்தைக் கீழே கவிழ்த்தபடி வைத்திருந்தன. அப்படி வந்த மன்மத புருஷனைத் தான் எவ்வாறு உபசரிப்பது என்பதை அறியாதவளாய்த் தத்தளித்து அந்தப் பெண்மணி நிற்க அந்த யெளவனப் புருஷனும் அவளோடு

என்னவிதமாகப் பேசுவது என்பதை அறியாமல் குழப்பம் அடைந்து பேசாமல் சிறிது தூரத்தில் நின்றுவிட்டான். ஒருவரோடு ஒருவர் பேச அறியாமல் வெட்கி அவர்கள் இருவரும் ஐந்து நிமிஷ நேரம் வரையில் சித்திரப் பதுமைகள் போல மௌனமாக நின்றனர்.

அதற்குமேலும் தான் அப்படி நிற்பது சரியல்லவென்று நினைத்த அந்த அழகன் கீழே குனிந்தபடி அவளிடம் அன்பாகப் பேசத் தொடங்கி, "இந்த பங்களாவில் ஒரு வேலைக்காரி இருந்தாளே, அவள் எங்கே இருக்கிறாள்? இப்போது இங்கே இல்லையோ?" என்று இனிமையான குரலாக வினவினான். அதைக் கேட்ட பெண்மணி அவருக்கு எப்படி மறுமொழி சொல்வது என்று நினைத்து மிகுந்த லஜ்ஜையடைந்த வளாய்ச் சிறிதுநேரம் தத்தளித்தாள். ஆனாலும், அந்தக் குடும்பத்தில் வேறே மனிதர் இல்லாதிருப்பது பற்றிதான் அவரோடு பேசியே தீரவேண்டுமென்ற அவசியத்தை உணர்ந்தவளாய், கீழே குனிந்தபடி கனியோ, பாகோ, தேனோ, அமிர்தமோ என உவமிக்கத் தக்க இனிமையான குரலில் மிருதுவாகப் பேசத் தொடங்கி, "வேலைக்காரி திருவாரூருக்குப் போயிருக்கிறாள்; இன்னம் கொஞ்ச நேரத்தில் வந்துவிடுவாள். தாங்கள் அவளைப் பார்க்க வேண்டுமானால், இப்படி வந்து விசிப்பலகையில் உட்கார்ந்து கொள்ளுங்கள். அவள் சீக்கிரமாக வந்துவிடுவாள். அல்லது, தங்களுக்கு இருக்க அவகாச மில்லாவிட்டால் தாங்கள் யார் என்பதையும் அவளிடத்தில் ஆக வேண்டிய காரியம் இன்னது என்பதையும் என்னிடம் தெரிவிக்கலாமானால் தெரிவியுங்கள்; அவள் வந்தவுடனே நான் அவளிடம் சங்கதியைச் சொல்லுகிறேன்"என்று கூறினாள். அவ்வாறு அந்த ஏந்தெழில் மடந்தை சொற்ப வார்த்தைகள் பேசி முடிப்பதற்குள் நாண மேலீட்டால் அவளது அங்கங்கள் தத்தளித்துத் தடுமாறி மிகவும் குன்றிப் போயின. அவளது அழகிய முகம் பலவித மாறுபாடுகளை அடைந்தன.

அவ்வாறு அந்த வடிவழகி பேசி முடித்ததைக் கேட்ட அந்த சுந்தரபுருஷன் முகம் சந்தோஷத்தினால் மலர்ந்தது. புன்னகை அரும்பி இனிமையை அள்ளி வீசியது. அவன் கீழே குனிந்தபடி குதூகலமாகப் பேசத் தொடங்கி, ''ஓகோ! அப்படியா! வேலைக்காரி திருவாரூருக்கா போயிருக்கிறாள். இருக்கட்டும்; நான் மறுபடியும் வந்து அவளைப் பார்க்கிறேன். நான் யார் என்ற அடையாளம் உனக்குத் தெரியவில்லை போலிருக்கிறது. நிஜந்தான்; உனக்குத் தெரிய நியாயமில்லை. நீ என்னை கடைசி வரையில் ஏறெடுத்தே பார்க்கவில்லை அல்லவா! அதுவும் தவிர, இருளும் அதிகமாக இருந்தது. அந்தத் துஷ்டர்களிடம் அகப்பட்டுக் கொண்டோமே என்றும், அவர்கள் என்னவிதமான கெடுதல் செய்வார்களோ என்றும் திகில் கொண்டு கலங்கியிருந்த காலத்தில் நீ என்னை நன்றாகப் பார்க்கவேண்டிய பிரமேயமே இல்லை'' என்றான்.

அவனது சொற்களைக் கேட்டவுடனே ஷண்முகவடிவினது நெஞ்சம் திடுக்கிட்டது. உடம்பு முழுவதும் உரோமம் சிலிர்க்க ஆனந்தம் பரவியது. இன்னது என்று விவரிக்க இயலாத ஒருவித சஞ்சலமும், இன்ப ஊற்றும் அவளது மனத்தில் பெருக்கெடுத்தன. முதல் நாளிரவில் வண்டியில் வந்து முரடர்களோடு சண்டை செய்து தன்னை மீட்டுக் கொண்டுவந்து தனது பங்களாவில் விட்டுப்போன மனிதரை அவள் கடைசிவரையில் ஏறெடுத்துப் பார்க்கவில்லை. ஆகையாலும், அவள் கடைக்கண்ணால் இருளில் அவரை சொற்பமே பார்த்தாள். ஆகையாலும், அந்த மனிதர் மத்திய பருவத்துப் புருஷரென்று அவள் மறுநாட் பகல் முழுதும் நினைத்துக் கொண்டிருந்தாள். ஆகையால், சுமார் இருபத்திரண்டு வயதேயுள்ள யுவராஜன் போன்ற பாலியப் பருவத்து மன்மத புருஷன் தனக்கு எதிரில் வந்தபோது, அவனுக்கும் முதல் நாள் இரவில் தன்னைக் காப்பாற்றிய மனிதருக்கும் எவ்விதச் சம்பந்தமும் இருக்கும் என்பது அவளுக்குச் சிறிதும் தோன்றவில்லை. ஆனால், அந்த

யௌவனப் புருஷர் இப்போது கடைசியாகப் பேசிய வார்த்தைகளிலிருந்து அவரே தன்னை முதல் நாள் காப்பாற்றிய மகா பராக்கிரமசாலியான நற்குண புருஷரென்பது நிச்சயமாயிற்று. இருவர்களது குரல்களும் ஒன்றாயிருப்பதாக அப்போதே அவள் உணர்ந்தாள். அவனது அபூர்வமான தேக அமைப்பையும், வசீகரத் தன்மையையும் உத்தம லக்ஷணங் களையும் காணக்காண, அப்படிப்பட்ட அதிபாலியரான புருஷர் அத்தனை முரட்டு மனிதர்களோடு வீராவேசத்தோடு சண்டை செய்து அவர்களைச் சிதற அடித்தாரென்ற விஷயம் சிறிதும் நம்பத்தகாததாகவும், மகா ஆச்சரியகரமான சங்கதியாகவும் இருந்தது. கட்டுக்கடங்கா நாணமும், வெட்கமும், இன்பமும், துன்பமும், வியப்பும், பிரமிப்பும் எழுந்து அவளை வளைத்துக் கொண்டன. அவர் அவ்வளவு யௌவனப் பருவத்தினராக இருப்பதனாலேதான் முதல்நாள் இரவில் தன்னுடைய பங்களாவிற்குள் வரவெட்கி வாசலிலிருந்தபடியே போயிருப்பாரோ என்ற எண்ணம் உண்டாயிற்று. அப்படிப்பட்ட மனமோகன சுந்தர புருஷரோடு தான் மாத்திரம் தனியாக இருந்து பேசியது அவளது மனதிலும் தேகத்திலும் தடுக்க இயலாத தடுமாற்றத்தையும் சஞ்சலத்தையும் உண்டாக்கியது. அந்தச் சந்தர்ப்பத்தில் தனது வேலைக்காரி இல்லாமல் போய்விட்டாளே என்ற ஏக்கமும் தோன்றியது. இருந்தாலும், தான் முதல் நாள் மௌனமாக உள்ளே வந்து ஏமாறிப்போனதுபோல அன்றைய தினமும் நாணமுற்று அவரோடு பேசாதிருந்தால், அந்தத் தயாளகுண வள்ளல் மனமுடைந்து தன்னை இனி பார்க்கவே கூடாது என்ற உறுதி செய்து கொண்டு திரும்பிப் போய்விடுவார் என்று பயந்தவளாய் நாணத்தோடும், மிகுந்த மரியாதையோடும், அடக்க ஒடுக்கத்தோடும் மறைவாக இருந்து தனது முகத்தில் சிறிதளவு வெளியில் நீட்டியபடி பேசத் தொடங்கி, ''என் விஷயத்தில் நேற்றிரவு எவ்வளவோ பாடுபட்டுத் தங்களுடைய உயிரையே ஒரு திரணமாக மதித்து மகா சௌகரியமான

பெருத்த காரியத்தைச் செய்து என்னுடைய மானத்தையும் உயிரையும் காப்பாற்றி என்னைக் கொண்டு வந்து பத்திரமாக என்னுடைய ஜாகையில் சேர்த்த மகா சிறந்த பேருபகாரியான தங்கள் விஷயத்தில் நான் பெருத்த அபராதி யாகிவிட்டேன், ரஸ்தா வரையில் வந்த தங்களை உபசரித்து உள்ளே அழைத்துக்கொண்டு வர நான் கடமைப்பட்டவள். அவ்வளவு தூரம் என் விஷயத்தில் உரிமை பாராட்டி, என் விஷயத்தில் எத்தனையோ பேருதவிகளைச் செய்த தாங்கள், அதே விதமான உரிமை பாராட்டி உள்ளே வருவீர்கள் என்று நினைத்துக் கொண்டு உள்ளே வந்துவிட்டேன். அப்படி நான் அவசரமாக உள்ளே வந்ததற்கு இன்னொரு முக்கியமான காரணம் இருக்கிறது. நோயாளியாகப் படுத்திருக்கும் என்னுடைய அத்தையை நான் நேற்றுப் பகலில் விட்டுப் பிரிந்து போனேன். அதன்பிறகு எனக்கு நேர்ந்த அபாயத்தில் நான் மறுபடியும் உயிரோடு திரும்பி வந்து என்னுடைய அத்தையைப் பார்க்கப் போகிறேனோ என்ற ஆவலினால் நெடுநேரமாக வதைக்கப்பட்டிருந்தவள். ஆகையால், நான் வண்டியை விட்டுக் கீழே இறங்கியவுடனே, அத்தையைப் பார்க்க வேண்டுமென்ற அவாவினால் தூண்டப்பட்டவளாய் விசையாக உள்ளே போனேன். தாங்கள் உள்ளே வரத் தயங்கினாலும், என்னுடைய வேலைக்காரி தங்களை உபசரித்து அழைத்துக் கொண்டு வருவாள் என்ற ஒரு நம்பிக்கையும் இருந்தது. ஆகையால், நான் வந்துவிட்டேன். இவைகள் எல்லாம் நான் வந்ததற்குக் காரணமாக இருந்தாலும், நான் என்னுடைய கடமையில் தவறிவிட்டேன் என்பதை மறுக்கமுடியாது. என்னுடைய அறியாமையைத் தாங்கள் மன்னித்துக்கொள்ள வேண்டும். நான் அவ்வளவு தூரம் தங்கள் விஷயத்தில் முறை தவறி நடந்திருந்தும், தாங்கள் அதை இலட்சியம் செய்யாது மறுபடியும் இங்கே வந்ததைப் பற்றி நான் நிரம்பவும் சந்தோஷம் அடைகிறேன். என்னுடைய வேலைக்காரி இன்னம் கொஞ்சநேரத்தில் வந்துவிடுவாள்.

தாங்கள் நிற்கக்கூடாது. தயை செய்து உள்ளே கூடத்துக்கு வந்து விசிப் பலகையில் மேல் உட்கார்ந்து கொள்ளுங்கள். தங்களைத் தக்கபடி உபசரிக்க இந்தக் குடும்பத்தில் இப்போது பெரியவர்கள் யாருமில்லை. என்னுடைய அக்காள் தஞ்சைக்குப் போயிருக்கிறாள். எங்களுக்குத் தாய் தகப்பன்மார் இல்லை. எங்கள் இருவரையும் காப்பாற்றி வந்த அத்தை பக்ஷவாத நோயிற்பட்டு வாயடைத்து அசைவற்றுக் கிடக்கி றார்கள். ஆகையால், நான் சிறு வயதுள்ளவளாக இருந்தும், இந்தக் குடும்பத்தின் சகலமான காரியங்களையும் பொறுப்பை யும் நானே ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது. எப்படிப்பட்ட மனிதர்கள் வந்தாலும் நான்தான் அவர்களை உபசரித்து வரவேற்று அவர்களுடன் பேசி அனுப்ப வேண்டியிருக்கிறது. என்ன செய்கிறது. அநாதையாக இருப்போர் அறியாத பெண்ணாக இருந்தாலும், சிறு குழந்தையாக இருந்தாலும் அவர்களுடைய காரியத்தை அவர்கள்தானே செய்துகொள்ள வேண்டும்'' என்றாள்.

அவளது கனிவான மொழிகளைக் கேட்ட அந்த மன்மத புருஷன், அவளது விஷயத்தில் மிகுந்த இரக்கமும் அநுதாபமும் இளக்கமும் கொண்டவனாய்த் தனது கால்ஜோட்டைத் தாழ்வாரத்தில் கழற்றி வைத்துவிட்டு கூடத்திற்கு வந்து அங்கே கிடந்த விசிப் பலகையின் மீது உட்கார்ந்து கொண்டான். அவன் உள்ளே வருவதைக் கண்ட இளநங்கை பக்கத்தில் இருந்த ஓர் அறைக்குள்போய் மறைந்தும் தென்பட்டும் நிலைப் படியின் பக்கத்தில் நின்றாள்.

அப்படி உட்கார்ந்துகொண்ட அந்த யௌவனப் புருஷன் அந்த அணங்கு பக்கத்து அறையில் நிற்கிறாள் என்பதை அறிந்து கொண்டவனாய் மிகுந்த வாத்சல்யத்தோடு பரிவாகப் பேசத் தொடங்கி, ''அம்மா! நீ சொன்ன வரலாற்றைக் கேட்க, என் மனசு தவிக்கிறது. பரம துஷ்டர்கள் நிறைந்த இந்த இடத்தில் ஆண் துணையின்றி நீங்கள் இருப்பதாகச் சொல்வதைக் கேட்க எனக்கு

நிரம்பவும் விசனமாக இருக்கிறது. நேற்றைய தினம் ராத்திரி உள்ளே வரும்படி நீ என்னை அழைக்கவில்லையென்று நினைத்து உன்மேல் ஆயாசப்பட்டு நான் அப்படியே போய்விட்டதாக நீ நினைத்துக் கவலைப்படுகிறாய் போல் இருக்கிறது. அப்படி நினைப்பது சரியல்ல. நேற்றையதினம் ராத்திரி நான் பொன்னிரைக்கு நிரம்பவும் அவசரமான ஒரு காரியத்தை உத்தேசித்துப் போனேன். என்னுடைய பள்ளிக்கூடத்து சிநேகிதன் ஒருவன் அந்த ஊரில் காயலாவாகப் படுத்திருந்தான். நேற்று சாயுங்காலம் அவனுடைய தேகஸ்திதி முற்றிலும் அபாயமானதாக இருக்கிறது என்றும், உடனே புறப்பட்டு வந்தால் அன்றி கடைசியான முகமுழிப்புக்கூடக் கிடைக்காது என்றும் எனக்குச் செய்தி கிடைத்தது. அது கிடைத்தவுடனே நான் திருவாரூரிலிருந்து புறப்பட்டு வந்தேன். வந்த வழியில் உனக்கு ஏற்பட்ட அபாயத்தைக் கண்டு உடனே உன்னை விடுவித்து உன்னுடைய ஜாகையில் கொண்டுவந்து சேர்த்துவிட்டு நான் மறுபடியும் காளைகளை முடுக்கி வண்டியை வேகமாக ஓட்டிக்கொண்டு அவ்விடம் போக நேர்ந்தது. நேற்று நான் பொன்னிரைக்குப் போன ஆத்திரத்தில், என்னுடைய சொந்த மனிதரின் உயிர் போவதாக இருந்தாலும் அதைக்கூட மதித்து அதன் பொருட்டு ஒரு நிமிஷமும் தாமதியாமல் நான் பொன்னிரைக்குப் போய் என்னுடைய பிராண சிநேகிதனுடைய முகத்தில் கடைசியாக விழித்து அவனுடன் ஒரு வார்த்தையாவது பேசியிருப்பேன். ஆனால், நீ இருந்த அபாயமான நிலைமையை உணர்ந்தபிறகு, உன்னைக் காப்பாற்றாமல் போக எனக்கு மனம் வரவில்லை. ஆகையால், உன்னை இங்கே கொண்டு வந்து சேர்த்தேன். நான் உள்ளே வந்தால் நீயும் உன்னுடைய மனிதர்களும் நான் செய்த உதவிக்காக எனக்கு உபசார வார்த்தைகள் சொல்வீர்கள் என்பதும், நான் கொஞ்சநேரமாவது இங்கே இருக்க நேரும் என்பதும் எனக்குத் தெரியும். அப்படிக் காலஹரணம் செய்தபின் அதற்கு மேல் புறப்பட்டுப் பொன்னிரைக்குப்

போவதற்குள் என்னுடைய சிநேகிதனுடைய கதி எப்படி ஆகுமோ என்ற யோசனை தோன்றியது. சாவகாசமாக மறுபடியும் இன்றைய தினம் உங்களிடம் வந்து உங்களுடைய வரலாறுகளைத் தெரிந்து கொள்ளலாமென்று நினைத்தே நான் உடனே புறப்பட்டுப் போய்விட்டேன். அப்படிப் போனதற்கு இன்னொரு காரணமும் உண்டு. இவ்வளவு பெரிய பங்களாவில் இருக்கும் நீ ஆண் துணையோடும், தக்க ஆள் மாகாணங்க ளோடும் இருப்பாய்; ஆகையால், உன்னுடைய மனிதர்கள் உன்னை அதற்குமேல் பாதுகாத்துக் கொள்வார்களென்று நினைத்தே நான் போனேன். நீ இப்படித் தனியாக இருக்கிறாய் என்பதைப் பற்றி நான் கொஞ்சமும் சந்தேகிக்கக்கூட இல்லை. இருந்தாலும், என் மனசில் ஒரு சந்தேகம் மாத்திரம் இருந்தது. அவ்வளவு தூரம் துணிந்து அக்கிரமம் செய்த அந்த மனிதர்கள் ஒருவேளை தக்க ஆள் பலத்தோடு மறுபடியும் நேற்று ராத்திரி இந்த பங்களாவுக்குள் வந்து ஏதேனும் கலகம் செய்வார்களோ என்று நான் கொஞ்சம் கவலை கொண்டுதான் இருந்தேன். அதற்காக நான் என்ன செய்தேன் தெரியுமா? இந்த பங்களாவுக்குப் பக்கத்தில் ஒரு பள்ளத் தெரு இருக்கிறது. நான் வண்டியை ஓட்டிக்கொண்டு நேராக அங்கே போய், பத்து ஆள்களை அமர்த்தி நேற்று ராத்திரி முழுதும் அவர்கள் கையும் தடியுமாக இந்த பங்களாவைச் சுற்றிலும் காவல் காத்திருக்க வேண்டும் என்று சொல்லி அமர்த்தி அவர்களை அனுப்பி விட்டுப் போனேன். பொழுது விடிகிறவரையில் அவர்கள் இங்கே இருந்து காத்துக் கொண்டிருப்பார்கள் என்பது நிச்சயம்'' என்றான்.

அந்த வார்த்தைகளைக் கேட்ட அந்த அழகிய மடமங்கை கரை கடந்த மன எழுச்சியும், நன்றியறிதலின் பெருக்கும் அடைந்தவளாய், ''அடாடா! தங்களுடைய ஆப்தமித்திரர் மகா அபாயமான நிலைமையில் இருக்கும்போது அதைக் கூடக் கவனியாமல் எங்களைப் பாதுகாப்பதற்கு தாங்கள்

ஆள்களையும் அமர்த்தி வைத்துவிட்டுப் போயிருக்கிறீர்கள். அவைகளையெல்லாம் அறிந்துகொள்ளும் திறமையற்றவளாய் நான் தங்களைப்பற்றித் தவறாக நினைத்துக் கொண்டது என்னுடைய மதியீனமே ஒழிய வேறல்ல. நான் தங்களை உபசரித்து உள்ளே அழைக்காதது ஒரு பெரிய குற்றம்; அதோடு நிற்காமல் தாங்கள் என்பேரிற் ஆயாசப்பட்டுக் கொண்டு போயிருப்பீர்கள் என்று நினைத்தது, தங்களுடைய பெருந்தன்மையை நான் உள்ளபடி அறியாமல் அதைக் களங்கப் படுத்திய குற்றமாகி விட்டது. எப்போதும் ஆண்பிள்ளைகளின் புத்தி கண்ணியமானதுதான், மூடப் பெண்பிள்ளைகளின் புத்தி அற்ப புத்திதான். விடியற்காலம் எழுந்து வெளியில் வந்த என்னுடைய வேலைக்காரி ரஸ்தாவில் கையும் தடியுமாக ஆள்கள் நின்றதைக் கண்டு, அவர்கள் நமக்கு அநுகூலமாக வந்தவர்கள் என்பதை அறிந்துகொள்ள மாட்டாமல் அவர்கள் அந்த வேஷக்காரச் சாமியாருடைய ஆள்களாக இருப்பரோ என்று பயந்து ஓடிவந்து என்னிடம் அந்த சங்கதியைத் தெரிவித்தாள். நானும் அப்படியே நினைத்து விட்டேன். நாங்கள் இரண்டு பேரும் பொழுது விடிந்து நெடுநேரம் வரையில் வெளியில் வராமல் உள்ளேயே ஒளிந்து கொண்டிருந்தோம்'' என்றாள். அதைக் கேட்ட யௌவனப் புருஷன் பதைத்துப்போய், ''அடாடா! அப்படியா சங்கதி! அந்த விஷயத்தில் நான் ஒரு காரியம் செய்யாமல் போய்விட்டேன். அந்த ஆள்களை நான் அனுப்பியபோது, அவர்களை நீங்கள் கண்டால், தாங்கள் இன்னார் என்பதை உங்களிடம் சொல்லும்படி நான் அவர்களுக்கு எச்சரித்து வைத்திருக்கலாம். பொன்னிரைக்குப் போகும் அவசரத்தில் எனக்கு இப்படிப்பட்ட யோசனை ஒன்றும் தோன்றவில்லை. மனப்பூர்வமாக நான் உங்களுக்கு உபகாரம் செய்ய எண்ணி ஆள்களை அனுப்பியிருந்தும், அது அபகாரமாக முடிந்துவிட்டது போல் இருக்கிறது'' என்று அநுதாபத்தோடு பேசினான்.

அதைக் கேட்ட பெண்மணி, "அது எப்படி அபகாரமாகும்? கபட சன்னியாசியின் ஆள்கள் வராமல் தங்களுடைய ஆள்கள் காவல் காத்திருந்தது உண்மையான விஷயம். அது உபகாரமே அன்றி அபகாரமல்ல. எங்களுடைய மனசில் நாங்கள் தவறாக நினைத்திருந்தது எங்களுடைய குற்றமேயன்றி, அவர்களுடைய குற்றம் அல்ல. எங்களுடைய மனம் கொஞ்ச நேரம் துன்பமடைந்தது என்ற விஷயம் உண்மையானாலும், அதனால் எங்களுக்கு உண்மையில் ஒருவிதப் பொல்லாங்கும் நேரப் போவதில்லை அல்லவா! அது போகட்டும். தாங்கள் அதன் பிறகு பொன்னிரைக்குப் போயிருந்தீர்களா? தங்களுடைய சிநேகிதருடைய தேக ஸ்திதி எப்படி இருக்கிறது?" என்று கவலையோடு வினவ, அதைக்கேட்ட அந்த யௌவனப் புருஷரது முகம் முற்றிலும் வாட்டமடைந்து, மிகுந்த விசனங் கொண்டதாகக் காணப்பட்டது. அவர் கனைத்துக்கொண்டு பேசத் தொடங்கி, தயங்கித் தயங்கி நிறுத்தி மறுபடியும் பேச ஆரம்பித்து, "என்னுடைய சிநேகிதன் எங்கே இருக்கிறான்! அவனுடைய உடம்பு இந்நேரம் நெருப்புக்கு இரையாகி இருக்கும். நான் உன்னை இங்கே கொண்டுவந்து விட்டுப்போக இரவு சரியாகப் பன்னிரண்டு மணி ஆயிற்று. அவன் பத்து மணிக்கே இறந்துபோய்விட்டான், 'கலியாண சுந்தரம் வந்தானா கலியாணசுந்தரம் வந்தானா' என்று கேட்டுக் கொண்டே இருந்து, நான் வருவேன் வருவேன் என்று கடைசி வரையில் ஆவலாக எதிர்பார்த்துக் கொண்டிருந்த படியே அவன் இறந்துபோய் விட்டானாம். நான் உன் விஷயத்தில் செய்த புண்ணியச் செய்கையின் பலனாக, அவன் இன்னமும் கொஞ்சநேரம் பிழைத்திருக்கமாட்டானா என்றும், நான் எப்படியும் அவனோடு பேசலாம் என்றும் நினைத்துக் கொண்டு போனேன். ஆனால் என்னுடைய எண்ணம் பலிக்காமல் போய்விட்டது. இன்று காலை பத்து மணிக்கெல்லாம் அவனை வாரிக்கொண்டு போய்க் கொளுத்தி விட்டார்கள். அந்த ஊரில் இருக்க எனக்குச் சகிக்கவில்லை.

நேற்றிரவு உன்னை விட்டு திடீரென்று நான் புறப்பட்டுப் போன நினைவு உண்டாயிற்று. அதுவும் தவிர, உன் விஷயத்தில் அக்கிரமம் செய்தவர்கள் யார் என்பதை அறிந்து அவர்களைத் தக்கபடி சிக்ஷித்து அவர்கள் இனி உன்னைப்பற்றிக் கனவிலும் நினையாதபடி செய்யவேண்டும் என்ற எண்ணமும் உண்டாயிற்று. இறந்துபோனவனுக்கு நான் இனி எவ்வித உதவியும் செய்யமுடியாது. ஆகையால், உயிரோடு இருக்கும் மனிதருக்காவது நம்மால் இயன்ற உதவியைச் செய்யலாம் என்று நினைத்து உடனே புறப்பட்டு ஓட்டமாக ஓடிவந்தேன்'' என்று கரைகடந்த துயரத்தோடு உருக்கமாகக் கூறினான்.

அந்த மகா துக்ககரமான வரலாற்றைக் கேட்ட நமது யௌவனப் பெண்ணரசி, மிகுந்த கலக்கமும் துயரமும் சஞ்சலமும் அடைந்தவளாய்ப் பேசத் தொடங்கி, ''அடடா! என்ன கஷ்டம்! என்ன கஷ்டம்! தாங்கள் சொன்ன வரலாற்றைக் கேட்க, என் மனம் தவிக்கிறது. மகா பாவியான எனக்குத் தாங்கள் உதவி செய்யப் போக, தங்கள் அருமை நண்பருக்குத் தங்களுடைய முகவிழிப்புக்கூடக் கிடைக்காமல் போனதுதான் முதல் பலன் போலிருக்கிறது! நான் தங்களை நிரம்பவும் துன்பத்துக்கு ஆளாக்கியதன்றி, தங்கள் விஷயத்தில் இரண்டு விதத்தில் அபராதியானேன். அதோடு மாத்திரம் நிற்காமல், இப்போது தங்களுடைய நண்பரின் ஆத்துமாவும் என்னைத் தூற்றிச் சபித்துக் கொண்டிருக்கும்படியான பாவ மூட்டையை யும் தேடிக் கொண்டேன்; நான் என்ன செய்வேன்? எனக்குத் தெரியாமலேயே இப்படிப்பட்ட துன்பங்களும், துயரங்களும், பாவங்களும் எனக்கு வந்து நேருகின்றன. நான் முன் ஜென்மத்தில் என்னவிதமான கொடிய பாதகம் செய்தேனோ தெரியவில்லை'' என்று மட்டுக்கடங்கா மனோவேதனை அடைந்தவளாய் மொழிந்தாள்.

அதைக் கேட்ட கலியாணசுந்தரம் என்ற அந்த யௌவன வடிவழகன், ''அம்மா! நீ இவ்வளவு தூரம் மனங்கலங்கி சங்கடப்

படுவாய் என்பதை நினையாமல், நான் உண்மையை அப்படியே உன்னிடம் வெளியிட்டது தவறு என நினைக்கிறேன். நானும் அவனும் எவ்வளவு காலம் வரையில்தான் ஒருவரையொருவர் பார்க்கலாம் என்ற விதி ஏற்பட்டிருக்கிறதோ, அவ்வளவு வரையில்தான் அது கிடைக்கும். அதற்கு மிஞ்சி அதிகமாக நாங்கள் அடைய விரும்பினால், அது பலிதமாகாது அல்லவா! அதைத் தடுப்பதற்கு நீ காரணபூதமாக இல்லாவிட்டாலும், இன்னம் வேறே யாராவது இருந்தே தீருவார்கள். அகாரணமாக வேறு ஒருவரால் இந்தத் தடை ஏற்படாமல் இப்படிப்பட்ட மகா பயங்கரமான அபாயத்தில் இருந்த உன்னைக் காப்பாற்றும் படியான பரோபகாரமான காரியத்தைச் செய்ததால் அந்த இடையூறு ஏற்பட்டது என்பது எவ்வளவு சிரேஷ்டமான காரியம். இதனால் எனக்குக் கிடைக்கும் புண்ணியத்தையும், நான் என்னுடைய நண்பனைப் பார்க்கக்கூடாமல் போனதனால் இழந்த மனத்திருப்தியையும் ஒத்திட்டுப் பார்த்தால், உனக்கு உதவி செய்ததால் எனக்குக் கிடைக்கும் புண்ணியமே அபாரமானதாக இருக்கும். அதோடு, என்னுடைய நண்பனுடைய ஆத்மா நான் உனக்குச் செய்த உதவி எப்படிப் பட்டது என்பதை அறியுமாகில், அந்த விஷயத்தில் அளவற்ற ஆனந்தம் அடைந்து என்னைப் புகழுமன்றி உன்னைச் சபிக்கவே நியாயமில்லை. என்னுடைய நண்பன் ஈற் குணங்களுக்கும் ஜீவகாருண்யத்துக்கும் இருப்பிடமானவன். அவனுடைய ஆத்மா ஒருநாளும் தவறாக எண்ணாதென்பதை நீ உறுதியாக நம்பலாம்'' என்றான்.

அதன்பிறகு சிறிது நேரம் அவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் உபசார வார்த்தைகள் கூறிப் புகழ்ந்தபின் தங்கள் தங்களது விருத்தாந்தங்களை வெளியிடலாயினர். ஷண்முகவடிவு தனது குடும்ப வரலாறுகளையெல்லாம் ஆதியோடந்தமாக எடுத்துக் கூறினாள். நெடுங்காலமாகத் தன்னையும் தனது அக்காளையும் தங்களது அத்தை மிகவும்

பட்சமாகவும் வாஞ்சையாகவும் காப்பாற்றி வந்தது, திடீரென்று அத்தைக்குப் பக்ஷவாத நோய் உண்டாகி வாயடைத்துப் போனது, தாங்கள் பணமில்லாமல் துன்புற்றது, திருவாரூர் பாங்கிக்குப் போய் சில விஷயங்களைத் தெரிந்து கொண்டது, தனது அக்காளான கமலம் தஞ்சைக்குப் போனது, சில நாட்கள் கழித்து அவள் உண்டியலும் கடிதமும் அனுப்பியது, உண்டியலை மாற்றும் பொருட்டு தான் திருவாரூருக்குப் போனது, பாங்கியில் சாமியாரைக் கண்டது, அவர் கபடமாகத் தொடர்ந்து வந்தது, தான் அவரை அனுப்பிவிட்டு பங்களாவை நோக்கி வந்து கொண்டிருக்கையில் கள்கடைக்கு அருகில் முரடர்கள் வந்து தன்னை வளைத்துக் கொண்டது, சாமியார் வந்து தன்னைத் தப்பவைத்து அவரது மடத்துக்கு அழைத்துக்கொண்டு போனது, அவ்விடத்தில் அவர் தன்னை வைத்துவிட்டு பெரிய பண்ணைப் பிள்ளையை அழைத்து வருவதாகச் சொல்லிவிட்டுப் போனது, அதன்பிறகு அவர் வராததைக் கண்டு தான் பின்கட்டிற்குப் போனது, கொல்லைப் பக்கத்துத் திண்ணையில் சாமியாரும் முரடர்களும் இருந்து பேசிக்கொண்ட விவரங்களைக் கேட்டுத் தவித்தது, பிறகு முன் பக்கத்திற்கு வந்து குளத்திற்குப் போக வேண்டும் என்ற முகாந்திரத்தைக் கூறி தான் வெளியில் வந்து வாய்க்காலைக் கடந்து ஓடியது, பிறகு அந்த முரட்டு மனிதர்கள் வந்து மறுபடியும் தன்னைக் கட்டித் தூக்கிக் கொண்டு மடத்துக்குப் போனது, அப்போது தெய்வச்செயலாக இரட்டை மாட்டு வண்டி வந்தது, பிறகு தான் கூச்சலிட்டது முதலிய சகலமான விருத்தாந்தங்களையும் விஸ்தாரமாக எடுத்துக் கூறினாள்.

அவைகளைக் கேட்ட கலியாணசுந்திரம் என்ற அந்த வடிவழகன் அவள் விஷயத்திலும், அவளது அக்காள், அத்தை முதலியோரது விஷயத்திலும் அளவற்ற இரக்கமும், அநுதாபமும், தயாளமும் நிறைந்தவனாய் மனம் நைந்து உருகினது அன்றி, கபட சன்னியாசியின் மீது அடங்காக்

கோபமும் குரோதமும் பாராட்டி, தான் அன்றைய தினமே தனது உறவினரான பெரிய பண்ணைப் பிள்ளையிடம் போய் அந்த விவரங்களை எல்லாம் சொல்லி அந்த போலிச் சாமியாருக்குத் தக்கபடி சிட்சை நடத்திவைப்பதாகவும், அவனாலும் அவனது ஆள்களாலும் அவளுக்கு இனி எவ்விதப் பொல்லாங்கும் நேராது என்றும் உறுதி கூறியதன்றி, அன்றைய இரவிலும் முதல் நாளிரவில் செய்ததுபோல தான் சில ஆட்களை நியமித்து பங்களாவின் வெளியில் காவல் காத்திருக்கும்படி செய்துவிட்டுப் போவதாகவும், கமலம் திரும்பி வருகிறவரையில் அவளுக்கு எவ்வித இடரும் நேராமல் தான் பார்த்துக் கொள்வதாகவும் கூறி, அவளிடம் செலவு பெற்றுக்கொண்டு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு வெளியில் போய்விட்டான்.

மறுநாளைய பகல் மூன்று மணிக்கு அந்த சுந்தரரூபன் மறுபடியும் அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தான். அப்போது ஷண்முகவடிவோடு வேலைக்காரியும் இருந்தாள். ஆகையால், அவன் முதல் நாளைப் போல் லஜ்ஜைப்படாமல் தாராளமாக அந்த வேலைக்காரியுடன் சகலமான விஷயங்களையும் பேசினான். ஷண்முகவடிவின் இடத்திலிருந்து முரட்டு மனிதர்கள் அபகரித்துக்கொண்ட பணம், ஆடைகள், சாமான்கள் முதலியவற்றையும் அன்றையதினம் மீட்டுக் கொணர்ந்து அவன் அவர்களிடம் கொடுத்தது அன்றி, ஷண்முகவடிவிற்கு நேர்ந்த அபாயத்தை எல்லாம் தான் பெரியபண்ணைப் பிள்ளையிடம் தெரிவித்ததாகவும், அவர் உடனே பண்டாரத்தையும், முரட்டாள்களையும் தருவித்து மரத்தில் கட்டி அடித்து, அந்தச் சாமான்களையும் பணத்தையும் தருவித்துக் கொடுத்ததாகவும், அந்த அவமானத்தைப் பொறுக்க மாட்டாமல் கபட சந்நியாசி அந்த ஊரை விட்டு எவ் விடத்திற்கோ ஓடிப்போய் விட்டதாகவும் கூறினான். அந்த விவரங்களை எல்லாம் கேட்ட ஷண்முகவடிவும், முத்தம்

மாளும் அளவற்ற மகிழ்ச்சி அடைந்து அவனது நற்குணங் களைப் பற்றி நிரம்பவும் தங்களுக்குள் பாராட்டிப் புகழ்ந்தவர் களாய் இருந்தனர்.

அதன்பிறகு கலியாணசுந்தரம் ஒவ்வொரு நாளும் அந்த பங்களாவிற்கு வருவதும், அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த உறவினன் போல அவர்களோடு அன்னியோன்னியமாக இருப்பதும், அவர்களுக்குத் தேவையான சகலமான உதவிகளையும் செய்வதுமாக இருந்து வந்தான். ஆனால், அவன் அவர்களிடத்தில் பேசிக்கொண்டிருந்த போதாகிலும், அவர்களுக்கு ஏதேனும் உதவி செய்தபோதாகிலும், அவன் அவர்களது மனம் ஆயாசப்படும்படியான காரியங்களைச் செய்ததாவது கிடையாது. முதல்நாள் அவன் எவ்வளவு மரியாதையாகவும், நாணயமாகவும், அன்பாகவும் நடந்து கொண்டானோ, அதுபோலவே, அவன் ஒவ்வொரு நாளிலும் நடந்து கொண்டு, அவர்களது பிரியத்தையும் மதிப்பையும் கவர்ந்து கொண்டே வந்தான். அன்னியப் புருஷனான அவனோடு தாம் அதிகமாகப் பழகுகிறோமே என்ற சஞ்சலத்தை ஷண்முகவடிவு உணராது இருக்கும்படி அவன் அவ்வளவு நேர்த்தியாகவும், அதிகமாகக் கிட்ட நெருங்காமலும், தனது முழு அன்பையும் பட்சத்தையும் வார்த்தைகளில் காட்டாமல் செய்கைகளில் காட்டியும் அந்த யௌவனப் புருஷன் மிகவும் கம்பீரமாகவும் பெருந்தன்மையாகவும் நடந்து வந்தான்.

அவ்வாறு சில வாரங்கள் கழிந்தன. அதற்குள் ஷண்முகவடிவுக்கும், கமலத்துக்கும் கடிதப் போக்குவரத்துகள் நடந்து கொண்டே இருந்தன. இளய நங்கை கபட சாமியாரால் தனக்கு நேர்ந்த அபாயத்தின் விவரங்களையும், அந்த யௌவனப் புருஷர் நல்ல தருணத்தில் வந்து தன்னை மீட்டுவந்த விவரத்தையும் முதல் நாளே தனது அக்காளுக்கு எழுதிய விஷயம் முன்னரே குறிக்கப்பட்டிருக்கிறது. அதன்பிறகு கலியாணசுந்தரம் என்னும் யௌவனப் புருஷரது

உதவியால், தான் இழந்த பொருளை எல்லாம் திரும்பிப் பெற்றதையும், தன்னை வஞ்சித்து அழைத்துப் போன கபட சன்னியாசி அடிபட்டு ஓடிப்போனதையும், அதன்பிறகு அந்த யௌவனப் புருஷர் எவ்விதக் கைம்மாறும் கருதாமல் தங்களுக்குச் செய்துவரும் உதவிகளையும், அவரது குணாதிசயங்களைப் பற்றியும் ஷண்முகவடிவு என்னும் நற்குணவதி ஒளியாமல் தனது அக்காளுக்கு எழுதியனுப்பினாள்.

கமலம் எழுதிய கடிதங்களில் ஷண்முகவடிவிற்கு எச்சரிப்பாக பல புத்திமதிகளை அடிக்கடி எழுதி வந்தாள். அவள் எழுதிய கடிதங்கள் ஒன்றில் அடியில் வரும் குறிப்பு காணப்பட்டது:-

கலியாணசுந்தரம் என்பரைப் பற்றி நீ ஆதியிலிருந்து எழுதி வரும் விஷயங்களை எல்லாம் நான் நிரம்பவும் கவனமாகப் படித்து ஞாபகத்தில் வைத்துக் கொண்டு வந்திருக்கிறேன். நீ எழுதியுள்ள விவரங்களைப் படிக்க, நான் நேரில் அங்கே இருந்தால், எனக்கு விஷயங்கள் எவ்வளவு தெளிவாகத் தெரியுமோ அதற்குமேல் அதிகமாகத் தெரிகின்றன. அந்த யௌவனப் புருஷருடைய குடும்ப வரலாறுகள் என்ன என்பதை அவரிடம் கேட்டறிந்து கொள்ள நீங்கள் எத்தனிப்பது தகாத காரியம் என்று நீ நினைப்பது போல நானும் நினைக்கிறேன். அவருடைய குடும்ப வரலாறு எப்படி இருந்தாலும் அதைப்பற்றி நமக்குக் கவலை இல்லை. அவருடைய குணத்தழகையும் நடத்தை அழகையும் கேட்கக் கேட்க, அவர் உண்மையிலேயே தக்க பெரிய மனிதர்களுடைய வமிசத்தைச் சேர்ந்தவர் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல விளங்குகிறது. இப்பேர்ப்பட்ட நற்குணசீலர் நம்முடைய பங்களாவுக்கு வருவதனாலும், அவரிடம் நீங்கள் பற்பல உதவிகளை ஏற்றுக்கொள்வதனாலும், நமக்கு எவ்வித இழிவாவது, அவமானமாவது உண்டாகும் என்று நான் நினைக்கவில்லை. இருந்தாலும், உலகம் பொல்லாதது. நீ

கலியாணமாகாத சிறிய பெண். அவரும் கலியாணமாகாத யௌவனப் புருஷர். ஏகாங்கியாக நீ இருக்கும் பங்களாவுக்கு அவர் அடிக்கடி வந்து உங்களோடு அன்னியோன்னியமாகப் பழகுவதை உலகத்தார் அறிந்தால், உன்னைப்பற்றித் தவறான அபிப்பிராயம் கொள்வார்கள். ஆகையால், நீ அவரிடம் அதிகமாக நெருங்கிப் பழகாமல் மரியாதையாகவும், மட்டாகவும் தூரத்தில் இருந்தபடி, அவரால் ஆகவேண்டிய சகாயம் ஏதாவது இருந்தால் அதை முத்தம்மாளைக் கொண்டு நிறைவேற்றிக் கொள்வதே உசிதமானது. குடும்ப ஸ்திரீகள் நடந்து கொள்ள வேண்டிய உத்தம லக்ஷணங்களை எல்லாம் நீ நன்றாக உணர்ந்த நற்குணமணி. ஆதலால், உனக்கு நான் எழுதக் கூடியது அதிகமாக ஒன்றும் இல்லை. நீ எவ்விதக் கெடுதலும் செய்து கொள்வாய் என்று நான் பயப்படவில்லை. உலகத்தாருடைய நச்சு வாக்குக்கே நான் நிரம்பவும் பயப்படுகிறேன்.

- என்ற குறிப்பு ஒரு கடிதத்தில் காணப்பட்டது.

அதற்கு சொற்ப காலத்திற்குப் பிறகு கமலத்தினிடத்திலிருந்து ஷண்முகவடிவிற்கு வந்த இன்னொரு கடிதத்தில் அடியில் வரும் விஷயம் எழுதப்பட்டிருந்தது:-

இரண்டு தினங்களுக்கு முன்னால் நீ எனக்கு எழுதிய பிரியமான கடிதத்தில், கலியாணசுந்தரம் என்பவர் என்னுடைய மேல் விலாசத்தை எழுதிக் கொடுக்கும்படி சில தினங்களுக்கு முன் உன்னைக்கேட்டதாகவும், என்ன கருத்தோடு அவர் என்னுடைய மேல் விலாசத்தைக் கேட்டாரோ என்று நீ ஆச்சரியம் அடைந்திருப்பதாகவும் எனக்கு எழுதியிருக்கிறாய். உன்னால் எனக்கு அனுப்பப்பட்ட அந்தக் கடிதம் என்னிடம் என்றையதினம் வந்து சேர்ந்ததோ அன்றைய தினமே அந்த யௌவனப் புருஷரிடத்திலிருந்தும் எனக்கு ஒரு கடிதம் கிடைத்திருக்கிறது. அந்தக் கடிதத்தில் அவர் எழுதியுள்ள விஷயங்களைப் படிக்கப் படிக்க என் மனதில் உண்டாகும்

ஆனந்தத்தையும் சந்தோஷத்தையும் நான் எப்படி வெளியிடப் போகின்றேன். அன்றையதினம் கபட சன்னியாசியால் உனக்கு நேரிட்ட மகா பயங்கரமான அபாயத்திலிருந்து உன்னைக் காப்பாற்ற ஈசுவரன் இந்த மனிதரை ஏன் தேர்ந்தெடுத்தார் என்ற விஷயம் எனக்கு இப்போதுதான் நன்றாக விளங்குகிறது. உன் விஷயத்தில் சகலமான உரிமைக்கும் பொறுப்புக்கும் இந்த மனிதரே சொந்தமானவர் ஆகப்போகிறார் என்பதைக் கருதியே ஈசுவரன் அன்றையதினம் இவரைக் கொணர்ந்து விட்டார் என்பது விசிதமாகத் தெரிகிறது. நம்முடைய குடும்பத் தலைவியான அத்தை பேசமாட்டாமல் நோயாளியாக இருப்பதால், இந்த விஷயத்தைப் பற்றி தாம் அத்தையிடத்தில் பிரஸ்தாபிக்க வில்லையென்றும், நானே இப்போது இந்தக் குடும்பத்துக்கு தலைவியான மனிஷி. ஆகையால் இந்த விஷயத்தைப் பற்றி எனக்கு எழுதி இருப்பதாகவும் அவர் என்னை உயர்த்தி எழுதியிருக்கிறார். அவருடைய தாய் தகப்பன்மார் இறந்து போய் நெடுங்காலம் ஆயிற்றாம். திருவாரூரில் அவருக்கு ஒரு மாளிகையும் பூஸ்திதியும் இருக்கின்றனவாம். அவருடைய நெருங்கிய உறவினர்கள் மகா பிரபுக்களாகத் தஞ்சையிலிருக்கின்றனராம். ஆனால், தான் மாத்திரம் தனது சொத்துக்களைப் பார்த்துக் கொண்டு திருவாரூரில் ஏகாங்கியாக இருக்கிறாராம். இந்த இரண்டு மாச காலமாக அவர் நம்முடைய பங்களாவுக்கு வந்து உங்களோடு பழகிப் பார்த்ததில், உன்னுடைய குணாதிசயங்கள் எல்லாம் அவருக்கு நிரம்பவும் திருப்திகரமாக இருக்கின்றனவாம். நீ நிராதரவாகத் தனிமையில் இருப்பதைக் கருதியும், அவருக்கும் வேறே யாருமில்லாததைக் கருதியும், அவர் உன்னைக் கலியாணம் செய்துகொண்டு சகலமான விஷயங்களிலும் உரிமை பெற்றவராய் உன்னைப் பாதுகாக்க வேண்டும் என்று அவருடைய மனம் விரும்புவதால், அந்த விஷயத்தில் உன்னுடைய அபிப்பிராயத்தையும் கேட்டறிந்து கொண்டு தமக்கு முடிவான மறுமொழி எழுதி அனுப்பும்படி கேட்டுக்

கொண்டிருக்கிறார். அவர் எழுதியிருக்கும் மாதிரியிலிருந்தும், நீ அவரைப்பற்றிப் புகழ்ச்சியாகப் பல கடிதங்களில் எழுதி இருப்பதிலிருந்தும், உன்னை அவருக்குக் கட்டிக் கொடுத்து விடலாம் என்ற எண்ணம் என் மனசிலும் எழுகிறது. ஆனால், அவர் கருப்பாக இருப்பாரோ சிவப்பாக இருப்பாரோ என்பதுகூட எனக்குத் தெரியாது. நீ இந்த இரண்டு மாசகாலமாக அவரோடு பழகியிருக்கிறாய். அவருடைய அழகு, நற்குணம், யோக்கியதாபட்சம் முதலியவை உனக்குப் பிடித்து, உன் மனமும் அவரை விரும்புமானால், நீ அவரையே கலியாணம் செய்து கொள்வதைப்பற்றி எனக்கு இரட்டிப்பு சந்தோஷம். இன்றையதினம் நான் உனக்கு எழுதியதுபோல அவருக்கும் ஒரு கடிதம் எழுதி அனுப்பியிருக்கிறேன். அவர் பிரஸ்தாபித்துள்ள சங்கதியைப் பற்றி நான் நிரம்பவும் குதூகலமடைவதாகவும், அவருடைய யோக்கியதா பட்சத்தைப் பற்றியும் மேம்பாட்டைப் பற்றியும் நான் ஏற்கனவே கேள்வியுற்றிருப்பதால், இந்த ஏற்பாடு எனக்கு முற்றிலும் சம்மதமானதே என்றும், ஷண்முக வடிவுக்கு இந்த விஷயத்தில் பிரியமிருக்கும் பட்சத்தில், எனக்கு எவ்வித ஆட்சேபனையும் இல்லை என்றும் அவருக்கு நான் மறுமொழி எழுதியிருக்கிறேன். ஆகையால், உனக்கு இஷ்டமிருக்கும் பட்சத்தில், அதை முத்தம்மாள் மூலமாக அவருக்குத் தெரிவித்து அதிகக் காலதாமதம் இன்றி ஒரு முகூர்த்தநாள் பார்த்து நிச்சயப்படுத்திக் கொண்டு எனக்கு எழுதியனுப்பி வைக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். மூத்தவளாகிய நான் கலியாணம் செய்து கொள்ளாமல் இருக்கையில் இளையவளான நீ கலியாணம் செய்து கொண்டால், ஊரிலுள்ளவர்கள் அதைப்பற்றிப் புரளி செய்வார்கள் என்று நீ ஒருவேளை யோசிக்கலாம். ஆனால், நாம் அநாதைகளாக இருப்பதுபற்றி பொருள், இடம், காலம் முதலியவைகளையே நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். இந்த யௌவனப் புருஷருடைய நட்பும் உதவியும் துணையும் இப்போது நமக்கு இன்றியமையாதன வாக

இருப்பதாலும், எவ்வித உறவு முறைமையும் இல்லாத அன்னியரான அவரிடம் நாம் இப்போது இருப்பதுபோல எப்போதும் அன்னியோன்னியமாக இருப்பது ஏச்சுக்கு இடங்கொடுக்கும். ஆகையால், நீ முன்னால் உன்னுடைய கலியாணத்தை முடித்துக்கொள்வதே நமக்கு நிரம்பவும் க்ஷேமமான காரியமாகத் தோன்றுகிறது. ஆகையால், நான் கலியாணம் செய்துகொள்ளாமல் இருக்கிறேனே என்று நீ கொஞ்சமும் எண்ணவே வேண்டாம்.

அந்த விஷயம் நிற்க, இங்கே நான் இருக்கும் இடத்தில் நான் சந்துஷ்டியாகவும் சம்பிரமமாகவும் காலங்கழித்து வருகிறேன். நெடுங்காலமாகப் பணங்கொடுத்து நம்முடைய குடும்பத்தைக் காப்பாற்றி வந்த காருண்யவள்ளலான சோமசுந்தரம் பிள்ளை அவர்களும் அவர்களுடைய சம்சாரமும் என்னைவிட்டு ஒரு நிமிஷ நேரம் பிரிந்திருக்கச் சகியாதவர்களாக இருக்கிறார்கள். நான் ஏற்கெனவே எழுதியுள்ளபடி அவர்கள் என்னையே அபிமான புத்திரியாக ஏற்றுக்கொண்டு தங்களுடைய அபாரமான செல்வத்தையெல்லாம் எனக்கே கொடுத்து விடப் போவதாகச் சொல்லுகிறார்கள். அவர்களுடைய பொருளெல்லாம் நமக்கு வந்துவிடப் போகிறதே என்பதைக் கருதாவிட்டாலும் அவர்கள் நம்மைக் காப்பாற்றி இவ்வளவு தூரம் ஆளாக்கிய மாதா பிதாக்களாயிற்றே என்பதைக் கருதி நான் இப்போது அவர்களுடைய மனம்கோணாதபடி நடந்து கொள்ள வேண்டியவளாக இருக்கிறேன். என்னிடத்தில் அவர்கள் வைத்துள்ள அளவற்ற வாஞ்சையைப் பார்த்தால், உன்னுடைய கலியாணத்துக்குக்கூட என்னை அவர்கள் ஊருக்கு அனுப்ப மாட்டார்கள்போல இருக்கிறது. நான் வந்தாலும் வராவிட்டாலும், அது ஒரு முக்கியமான காரியமல்ல. நான் இங்கே வந்து இவர்களிடம் அகப்பட்டுக் கொண்டிருப்பதால், இனி நான் பழையபடி உங்களோடு வந்திருக்கவாவது உங்களுடைய சவரக்ஷணையைக் கவனிப்பதாவது முடியும்

என்பது நான் நினைக்க ஏதுவில்லாது இருப்பதால் இனி நம்முடைய குடும்பப் பொறுப்பை அடியோடு நீயே ஏற்றுக்கொள்வது அத்யாவசியமாக இருக்கிறது. ஆகையால், நீ உன்னுடைய கலியாணத்தைச் சீக்கிரம் நிறைவேற்றிக் கொள்வதோடு, அத்தையைக் கடைசி வரையில் சவரக்ஷிப்பது முதலிய சகலமான காரியங்களும் இனி உன்னைச் சேர்ந்த பொறுப்பாகவே நீ மதிக்க வேண்டும்.

இந்தக் கடிதம் கிடைத்தவுடனே நீ முத்தம்மாளோடு கலந்து யோசனை செய்து சகலமான விஷயங்களையும் உன் பிரியப்படி நடத்திக்கொள். கலியாணத்துக்கு முகூர்த்த நாள் குறித்து அந்தச் செய்தியை எனக்குத் தெரிவி. உனக்கு ஈசுவரன் சர்வாபீஷ்டமும் தீர்க்க சுமங்கலீயமும் அருளுவாராக.

-என்று கமலம் எழுதியிருந்த கடிதத்தைப் படிக்க ஷண்முக வடிவின் மனதில் சகிக்கவொண்ணாத மனவெழுச்சியும், இன்பவெள்ளமும் பொங்கிக் கரைபுரண்டோடின. எதிர்பாராத ஒரு பெருத்த மண்டலேசுவரனது பட்டத்து ராணியின் ஸ்தானமே தனக்குக் கிடைத்துவிட்டதுபோல எண்ணிக்கொண்ட அந்தப் பெண்ணரசி தன் மனதில் கொந்தளித்து எழுந்த தேவாமிர்த ஊற்றின் இனிமையைத் தாங்கமாட்டாமல் பேச்சு மூச்சற்று அப்படியே மயங்கிப் பக்கத்திலிருந்த கம்பத்தில் சாய்ந்து விட்டாள். முதன்முதலாக அந்தப் பேடன்னம் கலியாணசுந்தரம் என்று பெயர்கொண்ட அந்த மோகனாங்கனைப் பார்த்த காலத்திலிருந்து, இன்னதென்று விவரிக்க முடியாத ஒருவிதப் பற்றும் பிரேமையும் அவனது விஷயத்தில் உண்டாகி, நாளுக்கு நாள் வளர்ந்து வந்தன. தனக்கு மானபங்கமும், பிராண ஹானியும் நேராமல் காப்பாற்றியதன்றி அதன் பிறகும் எத்தனையோ வகைகளில் அவன் தனக்குக் கைம்மாறு கருதாத பேருதவி புரிந்து வந்ததைக் காணக் காண, அவன் விஷயத்தில் அவளது மனதில் அபாரமான பிரியமும், வாத்சல்யமும் சுரந்து கொண்டே வந்தன. அதோடு, அவனது உயர்வான

குணமும் ஒப்பற்ற பராக்கிரமும், நிகரற்ற அழகும், அவன் தன்னிடத்தில் வைத்துள்ள இணையற்ற வாஞ்சையும் பசுமரத்தாணிபோல அந்த இளந்தோகையினது மனதில் தாக்கி, அவளைப் பித்தமுறச் செய்து வந்தன. ஆனாலும், அவள் உத்தம ஜாதி ஸ்திரீயாகையால், தன் மனதின் சஞ்சலங்களையும் வேதனைகளையும் ஒருவாறு அடக்கிக் கொண்டவளாய் மகா ஏழையும் மனிதக் கட்டில்லாதவளும் ஆன தனக்கு அப்படிப்பட்ட உயர்வான மனிதருடைய சம்பந்தம் கிடைப்பது அசாத்தியமென்றும், தான் அதைப்பற்றி மனதால் நினைப்பதும் தவறு என்றும் எண்ணிக்கொண்டிருந்தாள். ஒவ்வொரு தினமும் அவளது மனதில் எழுந்து பெருகி முதிர்ந்து கொண்டு போன காதல்தீயை அவள் அதுகாறும் இன்னதென்று அறியாமல், அதை அடக்கும் பொருட்டு பற்பல முயற்சிகள் செய்து வந்தது எல்லாம் வீணாயின அன்றி அந்தக் காதலும் அபாரமாக விரிந்து தளிர்ந்து அடக்க இயலாததாக வதைத்துக் கொண்டிருந்தது. அந்த யௌவனப் புருஷனைக் காணும் போதெல்லாம் பூத உடம்போடு சுவர்க்கபோக அனுபவிக்கும் ஜீவன்முத்தன் போல ஆனந்த பரவசம் அடைந்தவளாய் மகா பரிதாபகரமான நிலைமையில் இருந்தாள். கலியாணசுந்தரம் என்ற மன்மத புருஷனுக்குத் தான் மனையாட்டியாகப் போவதைப் பற்றி அவள் அவ்வாறு ஆனந்த பரவசமுற்று உணர்வு கலங்கி மெய் மறந்து பைத்தியங் கொண்டவள்போல மாறி இருந்தாளானாலும், தனது ஆருயிர்ச் சகோதரியான கமலத்தை விட்டு தான் இனி எப்போதும் பிரிந்திருக்க நேருமோ என்ற கவலையும், அவள் கலியாணம் செய்துகொள்ளாது இருக்கையில் தான் மாத்திரம் முதலில் கலியாணம் செய்துகொள்ளுவதா என்ற விசனமும், தனது கலியாணத்திற்குள் அவள் ஒருவேளை வராமல் இருந்து விடுவாளோ என்ற அச்சமும் எழுந்து எழுந்து அவளது மனதில் நிறைந்திருந்த இன்ப சாகரத்தைக் கலக்கிக் கொண்டிருந்தன. வழக்கம்போல அன்றைய தினமும் அந்த மோகனாங்கன்

தன்னுடைய பங்களாவிற்குள் வருவானோ மாட்டானோ என்ற ஐயம் தோன்றியது. அவன் வந்தால், அதற்குமுன் தான் களங்கமற்ற மனத்தோடு, மறைவில் நின்றபடி, அவனது கனிமொழிகளைக் கேட்டு, அவனுக்கு மறுமொழி கூறி வந்ததுபோல, அன்றைய தினமும் செய்வதா என்ற கிலேசம் அப்போதே எழுந்து வதைக்கத் தொடங்கியது. அந்தக் கடிதம் வந்த காலத்தில் வேலைக்கார முத்தம்மாள் ஏதோ ஜோலியாக வெளியில் போயிருந்தவள் இரண்டொரு நாழிகை நேரத்தில் திரும்பி வந்து சேர்ந்தாள். அவள் வந்தவுடனே ஷண்முகவடிவு தனது அக்காளிடமிருந்து வந்திருந்த கடிதத்தை எடுத்துக் கொடுக்க, அவள் அதைப் படித்துப் பார்த்துவிட்டு ஆனந்தக்கூத்தாடி ஷண்முகவடிவு எப்படியாவது அந்த யௌவனப் புருஷரை மணந்து சந்துஷ்டியாக வாழ வேண்டும் என்று அவளை மனதார வாழ்த்தி ஆசீர்வதித்தாள். அந்தக் கலியாண ஏற்பாடு அவள் எதிர்பார்க்காத புதிய ஏற்பாடல்ல; கலியாணசுந்தரம் பங்களாவிற்கு வந்து அவர்களோடு பழக ஆரம்பித்த பிறகு சில தினங்களுக்குள் முத்தம்மாளது மனதில் அந்த எண்ணம் தானாகவே உதித்தது. ஷண்முகவடிவும் கலியாணசுந்தரமும் கலியாணம் செய்து கொண்டால், அது நிரம்பவும் பொருத்தமாக இருக்குமென்ற யோசனை அவளது மனதில் எழுந்து வருத்திக்கொண்டே இருந்தது. ஆனால், அவர்களுள் எவரும் அதைப்பற்றி பிரஸ்தாபம் செய்யாது இருக்கையில் தானாக அதைப் பற்றிப் பேசுவது ஒழுங்கல்ல என்று நினைத்து, அவள் அதுவரையில் தனது விருப்பத்தை வெளியிடாமல் இருந்து வந்தாள். கமலத்தின் கடிதத்தைப் படித்தவுடனே, தான் எதிர்பார்த்த விஷயம், நேரப்போவதைக் கண்டு, அவள் மட்டுக்கடங்கா மகிழ்ச்சியும் குதூகலமும் அடைந்தவளாய், அந்தக் கலியாணத்தையும் கலியாண சுந்தரத்தின் குணாதிசயங்களைப் பற்றியும் பலவாறாகப் புகழ்ந்து பேசத் தொடங்கினாள். ஷண்முகவடிவிற்கு அந்த யௌவனப்

புருஷர் மணமகனாகக் கிடைத்தால், அது நல்ல அதிர்ஷ்ட கரமான காரியமாக இருக்கும் என்று பல நாட்களாய் தான் எண்ணியிருந்ததாக அவளிடம் கூறினாள்; அதிசீக்கிரத்தில் ஒரு முகூர்த்தநாள் பார்த்து அன்றைய தினம் கலியாணத்தை முடித்து விடுவதே உசிதமானதென்று உரைத்தாள். ஆனால், எப்படியாவது பிரயாசைப்பட்டு கமலத்தையும் கலியாணத்திற்கு அழைத்துவர வேண்டும் என்றும், வேறு பலவகையாகவும் யோசனை கூறிக் கொண்டிருந்த சமயத்தில் கலியாணசுந்தரம் வந்து சேர்ந்தான்.

அவன் வந்த ஓசையைக் கேட்ட உடனே ஷண்முகவடிவின் இருதயம் திடுக்கு திடுக்கென்று அடித்துக்கொண்டது. இன்னது என்று விவரிக்க முடியாத ஒருவித பிரம்மாநந்தம் அவளது மனத்திலும் ஐம்புலன்களிலும் நிறைந்து சகிக்க இயலாதவிதமாக அவளை வருத்தின. வயிறு, இருதயம், மார்பு முதலிய ஸ்தானங்கள் எல்லாம் அந்த இன்ப வெள்ளத்தைத் தாங்காது படீரென வெடித்துப் போகுமோ என்று அஞ்சத் தகுந்த நிலைமையை அடைந்தன. அதற்கு முன், அவள் இருந்ததைவிட அன்றையதினம் நூறு மடங்கு அதிகமான நாணமும், கிலேசமும், சங்கடமும் அடைந்தவளாய் முன்னிலும் அதிக மறைவான இடத்தில் போய் ஒளிந்துகொண்டாள். ஆகாயத்திலுள்ள பூர்ணசந்திரனிடத்திலிருந்து அமிர்தமும், குளிர்ச்சியும், பிரகாசமும் கிரணங்களாகப் பரவி உலகம் முழுவதையும் நிரப்பி ஆனந்தபரவசம் அடையச் செய்வது போல, கலியாணசுந்தரம் என்ற யௌவனப் புருஷன் அவளது கண்ணில்படாமல் கூடத்தில் இருந்ததனாலும், அவனிடத்திலிருந்து எழுந்த மோகனாஸ்திரங்கள் அவளது மனதையும் ஐம்புலன்களையும் மயக்கி நெக்குநெக்கு உருகச் செய்து இன்பவாரிதியில் தோய்வித்தன. ஆகவே, அந்த இன்ப வல்லி அவனைப் பார்க்க லஜ்ஜைப்பட்டு அஞ்சினாள். ஆனாலும், அவனே உயர்நிலை என்றும், தனக்கு ஜீவாதாரமான

அமிர்த ஊற்றின் இருப்பிடம் என்றும் நினைத்தவளாய், தான் என்ன செய்வது, எதைப் பற்றிப் பேசுவது என்பதை அறியாமல் உருகி ஸ்தம்பித்துப் போய் நின்று கொண்டிருந்தாள்.

முத்தம்மாள் அதற்கு முந்திய நாட்களில் காட்டியதைவிட நூறு மடங்கு அதிகரித்த வாஞ்சையும், மரியாதையும், உபசாரமும் குதூகலமும், பணிவும் காட்டி, கலியாணசுந்தரத்தை வரவேற்று உட்காரச் செய்தாள்.

அதுவரையில் தான் எவ்விதக் கைம்மாறும் கருதாமல் கபட மற்ற சுத்தமான மனதோடு அந்த பங்களாவிற்குள் வந்து அவர்களது விஷயத்தில் பரிவாகவும் அன்பாகவும் நடந்து பற்பல உதவிகள் செய்து, கடைசியில் கலியாண விஷயமாகப் பிரஸ்தாபம் செய்து கமலத்திற்குக் கடிதம் எழுதியிருக்கும் விஷயம் அன்றைய தபால் மூலமாக அவர்களுக்கும் தெரிந்திருக்கும் ஆதலால் ஷண்முகவடிவும் முத்தம்மாளும் தன்னைப்பற்றி எவ்விதமான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார் களோ என்றும், கலியாணசுந்தரத்தைப் பற்றி என்னவிதமான மறுமொழி கூறப்போகிறார்களோ என்றும், மூத்தவளான கமலம் கலியாணம் செய்துகொள்ளாது இருக்கையில், இளையவளான தான் கலியாணம் செய்துகொள்வது தகாத செய்கை என்று ஒருவேளை ஷண்முகவடிவு மறுத்து விடுவாளோ என்றும், மகா விவேகியும் நற்குண மணியுமான அந்த அணங்கு ஒருகால் தன்னைக் காதலிக்க மாட்டாளோ என்றும், வேறு பலவகையாகவும் நினைத்து அளவற்ற கவலையும் அச்சமும் கொண்டவனாய் வந்த கலியாண சுந்தரம் வேலைக்காரியின் மாறுபட்ட நடத்தையும் மலர்ந்த முகத்தையும் கண்டான். கண்டவுடனே, அவனது ஐயங்களும் அச்சங்களும் ஒரே நொடியில் விலகின. கட்டிலடங்கா களிப்பும் குதூகலமும் மனதில் பொங்கி எழுந்து அவனது தேகத்தைப் பரவசப்படுத்தின. தான் என்ன பேசுவது என்பதை அறியாமல் அவன் தத்தளித்து இன்பமயமாக நைந்து இளகி உட்கார்ந்திருந்தான்.

வேலைக்காரியும் தான் எப்படி அவரிடம் பேசுவது என்பதை உணராதவளாய் லஜ்ஜையும் அச்சமும் கொண்டு சிறிது நேரம் தத்தளித்துத் தயங்கியபின் பணிவாக அவரை நோக்கி, ''எஜமானுக்கும் இன்றையதினம் தஞ்சையிலிருந்து ஒரு கடிதம் வந்திருக்கும் என்று நினைக்கிறேன்'' என்று புன்னகையாகவும் மகிழ்ச்சியாகவும் பேசினாள்.

அதைக்கேட்ட கலியாணசுந்தரத்தின் கிலேசம் சிறிதளவு நீங்கியது. அவனது அழகிய முகம், மகிழ்ச்சியாலும் புன்னகையாலும் மலர்ந்தது. நிரம்பவும் அன்பு ததும்பிய முகத்தோடு அவளைப் பார்த்து, ''நீ சொல்வதிலிருந்து உங்களுக்கும் இன்றைய தினம் ஒரு கடிதம் வந்திருப்பதாக அர்த்தமாகிறது. அப்படித்தானே? அதனால் தான் நீ இன்றைய தினம் வழக்கத்தைவிட அதிகமாக சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறாய் போலிருக்கிறது'' என்று நயமாக வினவ, அதைக் கேட்ட வேலைக்காரி, ''ஆம்; நிஜந்தான்; எங்களுக்கும் கடிதம் வந்திருக்கிறது. அதோடு கலியாணமும் வந்திருக்கிறது. அதைப் படிக்க, இப்போது எங்களுடைய மனசில் எல்லாம் பொறுக்கமுடியாத சந்தோஷம் உண்டாயிருக்கிறது'' என்று ஹாசியமாகப் பேசினாள்.

அதைக் கேட்ட கலியாணசுந்தரம், ''ஓகோ! அப்படியா சங்கதி! அப்படியானால் நீங்கள் எல்லோரும் சந்தோஷப்பட நியாயம் இருக்கிறது. அப்படியானால் கலியாணத்துக்கு நானும் வரட்டுமா? எனக்குக் கலியாணச் சாப்பாடு உண்டா?'' என்று வேடிக்கையாகப் பேசினான்.

வேலைக்காரி சந்தோஷமாகப் புன்னகை செய்து, ''இந்தக் கலியாணம் தாங்கள் இல்லாவிட்டால் நிறைவேறாது என்பது தங்களுடைய பெயரைப் பார்த்தாலே தெரியுமே! எந்தக் கலியாணத்தையும் அழகுப்படுத்தி சோபிக்கச் செய்கிறவர் மாப்பிள்ளை! தாங்கள் கலியாணசுந்தரமென்று பெயர் வைத்துக் கொண்டிருப்பதிலிருந்து இந்தக் கலியாணத்தில்

அக்கிராசனம் வகித்து தாங்களே நடத்திவைக்கப் போகிறீர்கள் என்று தங்களுடைய பெயரே விளம்பரப் படுத்துவது போல இருக்கிறதே. அப்படி இருக்க, அதைப் பற்றித் தாங்கள் சந்தேகப்படவே இடமில்லையே'' என்றாள்.

கலியாணசுந்தரம் கரைகடந்த மகிழ்ச்சி அடைந்து, ''ஓகோ! நீ நிரம்பவும் புத்திசாலியாக இருக்கிறாயே. நான் பிறந்தது முதல் கலியாணசுந்தரம் என்ற பெயரையே சுமந்து திரிகிறேன். எத்தனையோ லக்ஷம் தடவை என்னை மற்றவர் அந்தப் பெயரால் அழைத்து விட்டார்கள். அந்தப் பெயரில் இப்பேர்ப்பட்ட ஒரு புதிய அர்த்தம் அடங்கி இருக்கிறது என்பது இப்போது நீ சொல்லத்தான் எனக்குத் தெரிந்தது'' என்றான்.

வேலைக்காரி, ''அவரவர்களுடைய அருமை பெருமைகள் அவரவர்களுக்கே எப்படித் தெரியும். அது மற்றவர்களுக்குத் தான் தெரியும். அதுவும் தவிர, எங்களுடைய கலியாணத்தில் தாங்கள் சுந்தரமாக விளங்கப் போகிறீர்களோ, அவர்களுக்குத் தான் அந்த அர்த்தம் தென்படும்; மற்றவர்களுக்கு ஒருநாளும் தென்படாது. ஆகையால், எனக்கு இந்த அர்த்தம் தென்பட்டது ஓர் ஆச்சரியமாகுமா? ஒரு நாளும் ஆகாது'' என்றாள்.

கலியாணசுந்தரம்: ஓகோ! அப்படியா சங்கதி! நல்லதாயிற்று. நீ சொல்வதைப் பார்த்தால், இந்தக் கலியாணத்துக்கு உரியவர்கள், நீ குறிக்கும்படியான அந்த உன்னத பதவியை எனக்குக்கொடுக்கத் தீர்மானித்து விட்டதாக அர்த்தமாகிறது. அப்படித்தானா? அவ்வளவு அபாரமான அதிர்ஷ்டமும் அளவில் அடங்காத ஆனந்தமும் எனக்குக் கிடைக்கப் போகின்றனவா?

வேலைக்காரி: ஆகா! தடையென்ன? இவ்வளவு அபாரமான அதிர்ஷ்டமும், ஆனந்தமும் தங்களுக்குக் கிடைக்கப் போகின்றன என்று தாங்கள் சொல்வதைவிட

அவைகளைத் தாங்கள் பெண்ணுக்கு உண்டாக்கி வைக்கப் போகிறீர்கள் என்று சொல்வதே பொருத்தமானது. தேவாமிருதம் தானாகவே ஒருவருக்குக் கிடைக்குமானால் அதை அவர்கள் வேண்டாம் என்று சொல்லுவார்களா? ஒருநாளும் சொல்ல மாட்டார்கள். இந்த விஷயத்தில் தங்களுடைய மனம் எப்படி அபாரமான வேட்கை கொண்டதோ, அதுபோல, எங்கள் எஜமானியம்மாள் மனதிலும் வேட்கை இருந்து வருகிறது. ஆகையால், இதைப்பற்றித் தாங்கள் இனி எவ்விதக் கவலையும் கொள்ளத் தேவையில்லை. இந்த ஏற்பாடு முடிந்ததாகவே தாங்கள் பாவிக்கலாம். புரோகிதரைத் தருவித்து நல்ல முகூர்த்த நாள் ஒன்றை ஏற்பாடு செய்து தாங்கள் தெரிவித்தால், அதை நாங்கள் உடனே தஞ்சைக்கு எழுதித் தெரிவித்து, அவர்களையும் வருவிக்கிறோம். கலியாணத்துக்குத் தேவையான மற்ற ஏற்பாடுகள் எல்லாம் அதற்குள் சேகரமாகட்டும். குறித்த தேதியில் கலியாணத்தைத் தங்களுக்கு இஷ்டமான இடத்தில் நடத்தி விடலாம்- என்றாள்.

அதைக்கேட்ட கலியாணசுந்தரம் கட்டிலடங்கா இன்பமும் குதூகலமும் அடைந்தவனாய் வேலைக்காரியை நோக்கி மகிழ்ச்சியாகப் புன்னகை செய்து, ''சரி; இன்றைய தினம் தஞ்சையிலிருந்து கடிதம் வந்ததைப் பார்த்தவுடனே இந்தக் கலியாணம் எப்படியும் ஈசன் செயலால் நிறைவேறும் என்ற ஒரு நம்பிக்கை என் மனசில் தோன்றியது. நான் உடனே புரோகிதரை வரவழைத்துப் பொருத்தம், நாள் முதலியவைகளைப் பார்க்கச் செய்தேன். பொருத்தம் நிரம்பவும் நன்றாயிருப்பதாக அவர் உறுதி சொன்னதன்றி, இன்னம் 10 தினங்களில் ஒரு முகூர்த்த நாள் இருப்பதாகவும், அன்றைய தினம் இதை நிறைவேற்றி விடலாம் என்றும் தெரிவித்தார். அன்றைய தினம் கலியாணத்தை நடத்திவிடலாமா என்பதையும், எனக்குத் திருவாரூரிலுள்ள ஜாகையும் இதைப் போலப் பெரிதாக இருந்தாலும், நம் இருவருக்கும் ஜனங்கள் அதிகமாக

வரமாட்டார்கள் ஆகையால், பெரிய ஊரான அந்த இடத்தில் நடத்துவதைவிட இவ்விடத்திலேயே நடத்தி விடலாமா என்பதையும் உன்னுடைய சின்ன எஜமானியம்மாளிடம் கேட்டு எனக்குத் தெரிவி'' என்றான். அதைக் கேட்ட முத்தம்மாள் அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு உடனே அவ்விடத்தை விட்டு ஷண்முகவடிவு இருந்த அறைக்குள் நுழைய, அது காறும் அவர்கள் சம்பாஷித்திருந்த வார்த்தைகளை எல்லாம் ஒன்று விடாமல் கேட்டுக் கொண்டிருந்த ஷண்முகவடிவு இன்பமோ துன்பமோ என்று பகுத்தறிய இயலாத மகா புதுமையான மன நிலைமையோடு நாணிக்குனிந்தபடி பக்கத்தில் இருந்த ஏதோ சாமானை வைத்து விரல்களால் விஷமம் செய்து கொண்டிருந்தாள். அவளிடம் போய் கால்நாழிகை நேரம் கலந்து யோசனை செய்து கொண்டிருந்த பிறகு முத்தம்மாள் அவ்விடத்தைவிட்டு மறுபடியும் கூடத்திற்கு வந்து வணக்கமாகவும் மரியாதையாகவும் அவரை நோக்கி, ''எஜமானே! தாங்கள் சொன்ன விஷயங்களை எல்லாம் நான் எஜமானியம்மாளிடம் தெரிவித்தேன். இதுவரையில் எந்த விஷயத்திலும் தங்கள் இஷ்டம்போல நடந்து கொண்டதைப் போலும், இனிமேலும் தங்கள் சித்தப்படியே நடந்து கொள்ளக் காத்திருக்கிறோம் என்பதை எஜமானியம்மாள் தங்களிடம் மனுச் செய்து கொள்ளச் சொன்னார்கள். தாங்கள் குறித்த முகூர்த்த தினத்தில் இந்த பங்களாவிலேயே கலியாணத்தை நடத்துவது அவர்களுக்குச் சம்மதமானதே. ஆனால், தன்னு டைய மனசிலுள்ள முக்கியமான ஓர் ஆசையை மாத்திரம் அவர்கள் தங்களிடம் தெரிவிக்கச் சொன்னார்கள். என்ன வென்றால், இந்தக் குடும்பத்திற்குத் தலைமையான பெரிய அம்மாள்காயலாவாகப் படுத்திருக்கிறார்கள். இப்போது இந்தக் குடும்பத்துக்கு முக்கியமான எஜமானியம்மாள் தஞ்சையில் இருக்கிறார்கள். கலியாணப் பெண்ணுக்கும் பிள்ளைக்கும் அந்த அம்மாளைவிட நெருங்கி அருமையான பந்து வேறே

யாருமிருக்க மாட்டார்கள். அவர்கள் எழுதியிருக்கிற கடிதத்தில் தாம் கலியாணத்துக்கு வருவது சந்தேகம் என்று எழுதி யிருக்கிறார்கள். அவர்கள் இல்லாமல் இந்தக் கலியாணத்தை முடிப்பது சின்ன எஜமானியம்மாளுக்குச் சம்மதமாக இல்லை. ஆகையால், எப்படியும் முயற்சி செய்து, அன்றைய தினம் மூத்த எஜமானியம்மாள் இங்கே வரும்படி நாம் செய்ய வேண்டும். நாங்களும் நாளைய தினம் அவர்களுக்குக் கடிதம் எழுதி, வரும்படி வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறோம். தாங்களும் அவர்களுக்கு ஒரு கடிதம் அனுப்பி அவர்கள் வந்து சேரும்படியான வழியைத் தேட வேண்டும்; அது ஒன்றுதான் நாங்கள் செய்து கொள்ளும்படியான வேண்டுகோள். மற்ற சகலமான ஏற்பாடுகளையும் முஸ்தீபுகளையும் தங்களுடைய பிரியப்படியும் மனப்போக்கின்படியும் செய்து கொள்ளலாம்'' என்றாள்.

அதைக்கேட்ட கலியாணசுந்தரம் விவரிக்க இயலாதபடி பரம சந்தோஷம் அடைந்தவனாய், அவள் சொன்ன விஷயங்களை எல்லாம் ஒப்புக்கொண்டு, தான் உடனே போய் கமலத்திற்கு கடிதம் எழுதுவதாகச் சொல்லிவிட்டு, அவர்களிடம் செலவு பெற்றுக்கொண்டு அவ்விடத்தை விட்டுப் போய்விட்டான்.

பிறகு நான்கு நாட்கள் கழிந்தன. கமலத்தினிடத்திலிருந்து இன்னொரு கடிதம் வந்து சேர்ந்தது. அந்தக் கலியாணத்திற்கு ஷண்முகவடிவு இணங்கிவிட்டதைப் பற்றியும், அதற்கு முகூர்த்த நாள் குறிக்கப்பட்டுப் போனதையும் கேட்டுத் தான் அளவிறந்த சந்தோஷமும் பூரிப்பும் அடைவதாகவும், அவர்கள் இருவரும் கலியாணம் செய்துகொண்டு நீடூழிகாலம் அமோகமாக வாழவேண்டுமென்று தான் கடவுளைப் பிரார்த்திப்பதாகவும், சில அசந்தர்ப்பங்களைக் கருதி, தான் கலியாணத்திற்கு வர இயலாமல் இருப்பதாகவும், அதைப் பற்றி விசனிக்காமல் அந்த சுபகாரியத்தை நிறைவேற்றிவிட வேண்டும் என்றும், கமலம் ஷண்முகவடிவிற்கும், கலியாண

சுந்தரத்திற்கும் தனித்தனி கடிதங்களெழுதி அனுப்பியதன்றி, ஐந்நூறு ரூபாய்க்கு ஓர் உண்டியல், விலையுயர்ந்த சில ஆடையாபரணங்கள் முதலிய பொருட்களை எல்லாம் தனது தங்கைக்கு அனுப்பி வைத்தாள்.

அந்தக் கடிதத்தைப் படித்த இளநங்கை தனது அக்காள் கலியாணத்திற்கு வராததைப்பற்றி சகிக்க இயலாத விசனக் கடலில் ஆழ்ந்தவளாய்த் தனது அக்காளை எப்படியும் அழைத்து வந்துதான் அந்தக் கலியாணத்தை நிறைவேற்ற வேண்டும் என்ற வேலைக்காரியிடம் கூற, அவள் மூலமாக அந்தச் செய்தியை உணர்ந்த கலியாணசுந்தரம் தானே நேரில் தஞ்சைக்குப் போய்க் கமலத்தைக் கண்டு பேசி அழைத்துக் கொண்டு வருவதாகக் கூறி விடைபெற்றுக்கொண்டு தஞ்சைக்குப் போய்ச் சேர்ந்தான்.

## 16 - வது அதிகாரம்

## தன் வலை தனக்கேயாம்

மருங்காபுரி ஜெமீந்தாரினது மாளிகையின் உப்பரிகையில் ரதிகேளி விலாசத்தில் நாற்காலியின்மீது உட்கார்ந்திருந்த பூர்ண சந்திரோதயம், அதன் பல இடங்களிலிருந்து இரும்பு வளையங்கள் சடேரென்று வெளிப்பட்டுத் தனது கால்கள், கைகள், இடுப்பு முதலிய இடங்களை இறுகப் பிடித்து அழுத்திக் கொண்டதையும், அடுத்த நிமிஷத்தில் மருங்காபுரி ஜெமீந்தார் பக்கத்தில் இருந்த ஒரு கண்ணாடிக் கதவைத் திறந்து கொண்டு விரைவாக அவளுக்கு முன்வந்து அவளைப் பலவந்தமாகத் தமது வசப்படுத்திக் கொள்ளப் போவதாக பௌரஷ மொழி கூறியதையும் கண்டு திடுக்கிட்டு திக்பிரமையும் பெருவியப்பும் கொண்டவளாய், ஒரு விநாடி நேரம் கலங்கி அந்த மகா அபாயகரமான நிலைமையில் தான்

என்ன செய்வது என்பதை அறியாமல் நிரம்பவும் தத்தளித்தாள். அவள் அப்புறம் இப்புறம் சிறிதும் நகரமாட்டாமல் இரும்புப் பிடியாக அந்த வளையங்கள் அவளை நாற்காலியோடு நாற்காலியாகச் சேர்த்துப் பிடித்துக் கொண்டிருந்தது. ஆனாலும், அந்த வளையங்கள் பஞ்சினாலும் மிருதுவான வெல்வெட்டுத் துணியினாலும் அழகாக மூடப்பட்டிருந்தமையால் அவளது மேனியில் எவ்வித காயமாவது, வலியாவது உண்டாகாமல் இருந்தது. அவள் நுட்ப புத்தியும் சமயோசித தந்திர ஞானமும் எவரையும் எளிதில் வெல்லக்கூடிய வாக்கு வன்மையும் பூரணமாகப் பெற்றிருந்தவள். ஆதலால், அந்த நளினசுந்தரி தனது வெட்கத்தையும் அவமானத்தையும் தவிப்பையும் அதிகமாக வெளியில் காட்டிக்கொள்ளாமல் மறைத்துக் கொண்டாள்; எதிர்பாரா வகையில் தனக்கு நேர்ந்த அந்தத் துன்பத்தைப் பற்றித் தான் சிறிதும் வருந்தாதவள் போலவும், அதைச் சிறிதும் இலட்சியம் செய்யாதவள் போலவும், அவர் அவ்வாறு வஞ்சகம் புரிந்ததைப் பற்றி அவள் அவர் மீது சிறிதும் கோபம் பாராட்டாதவள் போலவும் தோன்றி, அப்போதே மலர்ந்த தாமரைப் புஷ்பம் போலத் தனது சுந்தரமுகத்தைப் புன்னகையால் மலர்த்தி மகா வசீகரமான பார்வையாக அந்தக் கிழவரை உற்றுநோக்கி தேனோ, பாகோ, தேவாமிருதமோ வென்னத்தக்க அதிக மாதுரியமான குரலால் நிரம்பவும் பணிவாகவும் நயமாகவும் பேசத் தொடங்கி, ''மகாப் பிரபுவே; தாங்கள் செய்த் இந்த மகாக் கொடுமையான காரியம் தருமமாகுமா? இந்த ஊரிலுள்ள மகாராஜாவுக்கு அடுத்த ஸ்தானத்திலுள்ள செல்வச் சீமானின்மேல் விருப்பம் கொண்டு, தன்னிடமுள்ள சகலமான இன்பத்தையும் சுகத்தையும் கொடுக்கும் எண்ணத்தோடு தானாகத் தேடிவந்த அபலையான ஒரு பேதைப்பெண்ணை இப்படிப்பட்ட தண்டனைக்கு ஆளாக்குவது தங்களுடைய கண்ணியத்துக்கும் நீதிக்கும் அடுத்ததாகுமா? வெள்ளிக்கிழமையாகிய இன்றையதினம் தங்களுடைய முறையல்லவா? என்னை வெல்லுவதற்காக

தாங்கள் பற்பல தந்திரங்கள் செய்து அநாவசியமான பிரயாசை எடுத்துக் கொள்ளக்கூடாது என்று நினைத்து நானே நேரில் தங்களுடைய சயன மாளிகைக்குள் வந்திருக்கிறேன். என்னைத் தாங்கள் இப்படி அவமானப்படுத்துவது முறையாகுமா? என்மேல் தங்களுக்கு இருக்கும் பிரியம் இவ்வளவுதானா? யௌவன ஸ்திரீகளை இப்படி வதைப்பது ஒருவிதமான சுகம் என்று தாங்கள் கொக்கோக சாஸ்திரத்தில் படித்தீர்களா? அல்லது, நான் தங்கள் விஷயத்தில் ஏதாவது தவறு செய்துவிட்டேனா? ஸ்திரீகளிடத்தில் தயையும், தளாயமும், இரக்கமும், உருக்கமும் காட்டுவதில் மகாப் பிரக்யாதி பெற்றவர்களான தாங்கள், என்னை இப்படி நரக வேதனைக்கு ஆளாக்குவது நம்பத்தகாத சங்கதியாக இருக்கிறதே! தங்களுடைய கைகளால் பிடித்து அணைக்கப்படத் தகுந்த என்னுடைய மிருதுவான அங்கங்கள் இந்த இரும்பு வளையங்களினால் நொறுக்கப்படுவதைக் காண தங்களுக்குச் சகிக்கிறதா? அல்லது, சந்தோஷமாக இருக்கிறதா?'' என்று கிள்ளைபோலக் கொஞ்சி மொழிந்தாள்.

அவளது எதிர்பாராத கனிமொழிகளைக் கேட்ட ஜெமீந்தார் ஆனந்த பரவசம் அடைந்து, மிகுந்த வியப்பும் பூரிப்பும் அடைந்தவளாய் அதற்குமேல் அவளிடம் நெருங்கி வராமல் சிறிது தூரத்திலேயே நின்றுவிட்டார்; அவளைப் பலவந்தமாக ஆலிங்கனம் செய்து கொள்ள வேண்டும் என்ற அவரது ஆவலும் ஆவேசமும் சடேரென்று தணிவடைந்தன. அவர் அவளை நோக்கி, மகிழ்ச்சியாகவும் அன்பாகவும் புன்னகை செய்தவராய், ''ஆகா! என்ன ஆச்சரியம்! நாங்கள் ஆறு பேரும் சேர்ந்து உன் விஷயத்தில் பந்தயம் வைத்திருக்கிறோம் என்பது உனக்கு எப்படியோ தெரிந்து போயிருக்கிறதே!'' என்றார்.

பூர்ணசந்திரோதயம் மகிழ்ச்சியோடு, ''ஆம்; எனக்கு எல்லாம் தெரியும். இந்தப் பந்தயம் வைத்திருப்பதும் தெரியும். அதோடு,

நான் இந்த வண்டியில் ஏறிக் கொஞ்சதூரம் வந்தவுடனே, அது தங்களுடைய மாளிகைக்குத்தான் வருகிறது என்பதையும், அந்த வண்டி தங்களுடையது என்பதையும் நான் உடனே தெரிந்து கொண்டேன்'' என்றாள்.

அந்த மடந்தை பலவிதத்தில் திமிறித் தம்மைப் பலவாறு தூற்றி இழிவான வசைமொழிகள் கூறி அவமானப் படுத்துவாள் என்று நினைத்து மிகுந்த கவலையும் அச்சமும் கொண்டிருந்த மருங்காபுரி ஜெமீந்தார், பணிவும் அன்பும் மிருதுவும் தோற்றுவித்த அவளது இனிய மறுமொழிகளைக் கேட்டு முன்னிலும் பன்மடங்கு அதிகரித்த வியப்பும் களிப்பும் அடைந்தவராய் சந்தோஷமாகவும் உருக்கமாகவும் அவளை நோக்கி, ''அப்படியா! இந்த ரகசியங்களையெல்லாம் உன்னிடத்தில் யார் வெளியிட்டது? நம்முடைய இளவரசர் வெளியிட்டாரா?'' என்றார்.

பூர்ணசந்திரோதயம் மிருதுவான இனிய குரலில், ''புதன் கிழமை சாயுங்காலம் வம்புலாஞ் சோலைக்கு நான் போயிருந்த போது, அங்கே வந்து என்னைத் தொந்தரவு செய்த சூரக்கோட்டைப் பாளையக்காரர் உங்களுடைய ரகசியங்களை எல்லாம் வெளியிட்டார்'' என்றாள்.

அப்போது விம்மி விம்மித் தணிந்த அவளது அழகிய மார்பகத்தை உற்று நோக்கிய பார்வையோடும் கட்டுக்கு அடங்கா மோகலாகிரியோடும் அவளிருந்த நாற்காலியண்டை ஜெமீந்தார் நெருங்கி வந்த வண்ணம், ''பெண்ணே! பூர்ணசந்திரோதயம்! நேற்றையதினம் இளவரசர் உன்னிடம் வந்திருந்த காலத்தில், நீ அவருடைய விருப்பத்துக்கு இணங்குவதாக ஒப்புக் கொண்டு விட்டாய் என்று நான் கேள்வியுற்றேனே! அது நிஜந்தானா?'' என்றார்.

அதைக்கேட்ட பூர்ணசந்திரோதயம் ஒருவாறு விசனமடைந்து உண்மையைப் பேசுகிறவள் போல நடித்து, ''ஆம்; அது உண்மை

தான். இன்றையதினம் ராத்திரி ஒன்பது மணிக்கு நான் பெட்டி வண்டியில் ஏறிக் கொஞ்சதூரம் வருகிற வரையில் அதே உறுதி யோடுதான் வந்தேன். ஆனால், இந்த வண்டி வடக்கு ராஜவீதிக்கு வந்த உடனேயே என் மனசில் பலமான சந்தேகம் உற்பத்தியாகி விட்டது. இந்த வண்டி இளவரசரால் அனுப்பப்பட்டது அல்ல என்றும், இது வேறு ஒருவரால் வஞ்சகமாக அனுப்பப்பட்டிருக்கிறது என்றும் நான் உடனே சந்தேகித்தேன். கடைசி வரையில் பொறுமையோடு இருந்து பார்க்க வேண்டும் என்ற நினைவோடு நான் பேசாமல் வந்து கொண்டிருந்தேன். கடைசியில் வண்டி தங்களுடைய மாளிகையின் வாசலில் வந்து நின்றதைக் கண்டேன். உடனே என் மனசுக்கு உண்மையெல்லாம் ஒரே நொடியில் பளிச்சென்று விளங்கிவிட்டது. நேற்று இரவு எனக்கும் இளவரசருக்கும் அந்தரங்கமாக நடந்த விஷயங்களை எல்லாம் அவர் தங்களிடத்தில் வெளியிட்டு விட்டதாகவும், நீங்கள் ஏற்படுத்தியுள்ள பந்தய ஏற்பாட்டின்படி இந்த வெள்ளிக்கிழமை தங்களுடைய முறையாகையால் தாங்கள் இப்படித் தந்திரம் செய்து அதைப் பயன்படுத்திக் கொள்ளுகிறீர்கள் என்றும் நான் உடனே நிச்சயப்படுத்திக்கொண்டு ஒருவிதத் தீர்மானமும் எனக்குள் செய்து கொண்டேன். இளவரசரிடத்தில் நான் வைத்த நம்பிக்கைக்குப் பதிலாக, அவர் அந்த ரகசியத்தை வெளியிட்டு நம்பிக்கைத் துரோகமாக நடந்து கொண்டதற்காக அவருக்குத் தக்க தண்டனை நடத்தி வைக்க நான் உறுதி செய்து கொண்டேன். அதாவது, உடனே தங்களுடைய மாளிகைக்குள் வந்து, தாங்கள் சொல்லும் ஏற்பாடுகளுக்கும் தங்களுடைய விருப்பத்துக்கும் இணங்கி நடக்கவேண்டும் என்பதே என்னுடைய முடிவான தீர்மானம்'' என்றாள்.

அதைக் கேட்ட மருங்காபுரி ஜெமீந்தார் தம்மை மறந்து ஆனந்தக் கூத்தாடி அளவில் அடங்கா வெறிகொண்டவராய், ''என் கண்ணாட்டீ! பூர்ணசந்திரா! ஆகா! இந்த விஷயமெல்லாம்

எனக்கு முன்னாகவே தெரிந்திருந்தால், உன்னுடைய மனம் இப்படி திடீரென்று எனக்கு அனுகூலமாக மாறப்போகிறது என்பதையும், இப்படிப்பட்ட நிகரற்ற பெரும் பாக்கியம் எனக்குச் சித்திக்க இருக்கிறது என்பதையும் நான் முன்னால் அறிந்துகொள்ள முடிந்திருந்தால், உன்னுடைய பொன்னடி அந்த வெல்வெட்டு மாடத்தில் பட்ட மாத்திரத்தில், நான் எப்படிப்பட்ட ஏற்பாடுகளோடு வந்து உன் காலில் வீழ்ந்து வணங்கி உனக்குப் பாத பூஜை செய்திருப்பேன்! இன்னமும் கூட, நீ சொன்னது எல்லாம் பொய்யோ மெய்யோ என்று என் மனம் சந்தேகப்படுகிறது'' என்று கூறினார்.

உடனே பூர்ணசந்திரோதயம் மிகுந்த சந்தோஷமும் அன்பும் பூரிப்பும் தோற்றுவித்தவளாய்ப் பணிவான குரலில், ''மகாப் பிரபுவே! நான் தலை போவதாக இருந்தாலும் பொய் சொல்லக் கூடியவளே அல்ல. ஆகையால், நான் விஷயங்களை உள்ளபடி எடுத்துச் சொல்லுகிறேன். தாங்கள் செவி சாய்த்து நன்றாகக் கேட்டு அருளுங்கள். புதன்கிழமை சாயுங்காலம் சூரக் கோட்டைப் பாளையக்காரர் என்னைச் சந்தித்து இந்தச் சதியா லோசனைப் பந்தயத்தைப்பற்றிய விவரங்களை யெல்லாம் சொன்னதைக் கேட்டபின், என் மனசில் ஒரு பெருத்த திகில் உண்டாகிவிட்டது. இப்படிப்பட்ட உன்னத ஸ்தானத்திலுள்ள சீமான்கள் எல்லாரும் என் விஷயத்தில் இப்படிக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கையில், நான் இனி தப்ப முடியாது என்றும், இந்த வலையில் நான் யாரிடத்திலாவது அகப்பட்டே தீர வேண்டும் என்றும், ஓர் எண்ணம் என் மனசில் உண்டாயிற்று. ஆகையால், இந்த அறுவருள், அந்தஸ்தில், யார் எல்லோருக்கும் மேலானவரோ அவரை அடைந்துவிட வேண்டும் என்று நான் எனக்குள்ளாகத் தீர்மானித்துக் கொண்டேன். ஆகையால், நான் இளவரசரைப் பொறுக்கி எடுத்தேன். ஆனால், அவர் எங்களுக்குள் ரகசியத்தில் நடந்த ஏற்பாடுகளையும், ஒன்பது மணிக்கு எனக்கு வண்டி அனுப்புவதாகச் செய்திருந்த முடிவை

யும் வெளியிட்டு நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டார். ஆனால், தாங்கள் இப்படி வஞ்சகமாக வண்டி அனுப்பி என்னை அழைத்துவரச் சொன்னதைப் பற்றி நான் தங்கள்மேல் குறை கூறுவது சரியல்ல. காதலர் காதலியை அடைவதற்கு எத்தனையோ தந்திரங்கள் செய்வார்கள். அது காதல் தருமத்துக்குச் சம்மதமானதே. அதோடு, இன்றைய தினம் தங்களுடைய முறையாகையால், தாங்கள் இளவரசரிடத்தில் மோசடியாக நடந்ததாகவும் சொல்ல இடமில்லை. ஆகையால், தங்களிடத்தில் எனக்கு வருத்தமாவது கோபமாவது உண்டாக வில்லை. இந்த அறுவரில் அந்தஸ்தில் இளவரசருக்கு அடுத்த படியானவர்கள் தாங்களே. ஆகையால், இளவரசரை விலக்கி விட்டுத் தங்களையே அடைந்துவிட வேண்டும் என்ற உறுதி செய்துகொண்டவளாய், நான் வண்டியை விட்டுக் கீழே இறங்கியவுடனே தடதடவென்று நானே உள்ளே நுழைந்து இங்கே வந்து விட்டேன். எனக்கு இங்கே வர வேண்டும் என்ற ஆசையில்லாது இருந்தால், நான் வண்டியை விட்டு இறங்கிப் போக முயன்றிருப்பேன். தங்களுடைய வேலைக் காரர்கள் என்னைப் பலவந்தமாக வண்டியில் வைத்து இவ்வளவு தூரம் கொண்டு வந்திருக்க முடியாது. நான் வண்டியில் இருந்தபடி கூச்சலிட்டிருந்தால், இந்த வடக்கு ராஜ வீதியிலுள்ள ஜனங்கள் எல்லாரும் ஒரே நொடியில் வந்து கூடி என்னை விடுவித்திருப்பார்கள். அப்படி இல்லாமற் போனாலும், நான் தப்பி ஓடிப்போக நினைத்திருந்தால், வண்டியை விட்டு இந்த மாளிகையின் வாசலில் இறங்கிய வுடனே ஓட்டம் பிடித்திருப்பேன் அல்லவா? அப்படி எல்லாம் செய்யாமல் சுலபமாக நான் வந்தது, நான் சொல்வதற்குப் பொருத்தமாக இருக்கவில்லையா?'' என்று மிகவும் வசீகரமான புன்னகையாக மொழிந்தாள்.

அவள் சொன்ன வரலாற்றைக் கேட்ட மருங்காபுரி ஜெமீந்தார் தாம் எதிர்பாராதபடி தமக்கு வந்து வாய்த்த அந்தப் பெரிய அதிர்ஷ்டத்தைக் கண்டு களிகொண்டு ஆனந்த பரவசம்

அடைந்தவராய்க் கரை கடந்த உருக்கமும் மயிர் சிலிர்ப்பும் நைவும் கொண்டவராய் அவளை நோக்கி, ''என் ஆருயிர்க் கண்ணாட்டி! பூர்ணசந்திரா! இளவரசர் உன் விஷயத்தில் தவறு செய்தது எனக்கு ஏற்படப் போகும் பெருத்த பாக்கியத்தின் வலுவினாலேயே நடந்திருக்க வேண்டும் என்று நான் நம்புகிறேன். நீ சொல்வது உண்மை என்பது நீ இங்கே வந்ததிலிருந்தே நிச்சயமாகத் தெரிகிறது. அதைப்பற்றி நான் கொஞ்சமும் சந்தேகமே கொள்ளவில்லை. நீ இனி எப்போதும் எனக்கே உரியவளாய் என்னிடத்திலேயே இருந்துவிட சம்மதந் தானா? அதை உன் வாயால் வெளியிட்டுச் சொன்னால் அன்றி நான் உண்மை என்று ஒரு நாளும் நம்ப மாட்டேன்'' என்றார். பூர்ணசந்திரோதயம் மிகுந்த நாணமும், இன்பமும் துன்பமும் கொண்டு தத்தளிப்பவள்போல நடித்து, ''இவ்வளவு தூரம் திறந்து நான் வெளிப்படையாகச் சொல்லுகிறேனே! இன்னமும் சந்தேகமா? என்னுடைய காதலை எல்லாம் நான் தங்களிடத்தில் திருப்பிவிட்டேன். இனி நான் தங்களை என்னுடைய உயிர் நிலைபோல மதிப்பேன் என்பதைத் தாங்கள் வேதவாக்கியமாக நம்பலாம். ஆனால், இன்னொரு சந்தேகம்! தாங்களோ மகா பெரிய செல்வந்தர். என்னைக் காட்டிலும் அழகில் சிறந்த எத்தனையோ பெண்களைத் தாங்கள் இதுவரையில் பார்த்தும் நேசித்தும் இருப்பீர்கள். இனியும் நேசிக்கப் போகிறீர்கள். அப்படியிருக்க தங்களுடைய பிரியமும் அன்பும் என்னிடத்தில் எப்போதும் நீடித்து நிற்கப் போகிறதா? தாங்கள் என்னுடைய ஆயிசுகால பரியந்தம் என்னைச் சந்தோஷமாக வும் செல்வத்திலும் வைத்திருப்பீர்களா? அதை மாத்திரம் தாங்கள் உறுதியாகச் சொல்ல வேண்டும். அவ்வளவுதான் நான் கோருவது'' என்று கிள்ளைபோல மாதுரியமாக மொழிந்தாள்.

அந்த சொல்லைக்கேட்ட மருங்காபுரி ஜெமீந்தார் கண்கொள்ளா எழில்வழிந்த அவளது அங்கத்தை ஏற இறங்கப் பார்த்து, நிகரற்ற அவளது சிற்றின்ப சாகரத்தில் தாம் வெகு சீக்கிரத்தில் ஆழ்ந்து சுகிக்கலாம் என்ற நினைவினால் பரவசம்

அடைந்தவராய், அவளது அற்புத தேஜசில் தமது முழு மனதையும் லயிக்கவிடுத்து மிகமிக நைந்து இளகிய கனிவான குரலாகப் பேசத் தொடங்கி, "என் விலையில்லா மாணிக்கமே! என் கட்டிக் கரும்பே! நான் இதுவரையில் எத்தனையோ ஸ்திரீகளிடத்தில் சிநேகம் செய்திருந்தாலும், அவர்கள் எல்லோரும் அழகிலும், புத்தி தீக்ஷண்யத்திலும், வாக்கு சாதுர்யத்திலும் உன்னுடைய காலில் ஒட்டிய தூசிக்கும் இணையாக மாட்டார்கள். எல்லா அம்சங்களிலும் இயற்கையிலேயே ஜனித்த ஒரு சக்கரவர்த்தினி போலவே நீ காணப்படுகிறாய். காமதேனுவும் கற்பகத்தருவும் எவர்க்கா கிலும் கிடைக்குமானால், அவர் அவைகளை எத்தனை கற்ப காலம் வைத்திருந்தாலும் அவைகளிடத்தில் வெறுப்பாவது தெவிட்டலாவது உண்டாகுமா? ஒருநாளும் உண்டாகாது. நான் உன்னை என்னுடைய ஆயிசு காலபரியந்தம் கைவிடுகிறது இல்லை. உன்னை அன்றி நான் இனி வேறே ஸ்திரீகளின் முகத்தையும் பார்க்கிறதில்லை. அது மாத்திரமல்ல. எனக்கு அபரிமிதமான செல்வம் இருக்கிறது. என்னுடைய ஜெமீன் கிராமங்களில் வருஷத்தில் ஒரு லக்ஷம் ரூபாய் வருமானமுள்ள நல்ல கிராமங்களாகப் பார்த்து உன்பேரில் சாசுவதமாக மாற்றி எழுதிக் கொடுத்துவிடுகிறேன். அதுவும் அன்றி, எனக்கு வரும் ஏராளமான மற்ற திரவியங்களுக்கு எல்லாம் நீயே உரியவளாக இருந்து உனக்குத் தேவையானபடி அவைகளைச் செலவு செய்து நீ சந்தோஷப்பட உனக்கு நான் பூரணமான அதிகாரமும் கொடுத்துவிடுகிறேன். இந்த உறுதி போதுமா? இனியும் நான் உன்னை நாற்காலியில் சிறை வைத்திருப்பது நியாயமாகாது. இதோ உன்னை நான் ஒரு நொடியில் விடுவிக்கிறேன். நாற்காலியிலிருந்து எழுந்தவுடனே நீ ஆசையோடு என்னைக் கட்டி அணைத்து முத்தமிட்டு, நாம் செய்துகொண்ட ஏற்பாடுகளை உறுதிப்படுத்த வேண்டும்" என்று கூறியவண்ணம், அவள் இருந்த நாற்காலிக்குப் பின்னால் பாய்ந்து அவ்விடத்தில் மறைந்திருந்த

ஒரு விசையில் விரலை வைக்க, அவளை இறுகப் பிடித்திருந்த வில்களும் வளையங்களும் ஒரே நிமிஷத்தில் விலகி நாற்காலியில் தைக்கப்பட்டிருந்த மெத்தைக்குள் புதைபட்டு மறைந்து போயின. அவ்வாறு விடுபட்ட பூர்ணசந்திரோதயம் சடேரென்று அவ்விடத்தை விட்டு எழுந்து செத்தேன் பிழைத்தேன் என்று ஒரு பக்கமாக விலகி நின்றாள்.

உடனே மருங்காபுரி ஜெமீந்தார் அவளிடம் நெருங்கி வந்து, ''கண்ணே! கண்மணியே! பூர்ணசந்திரோதயம்! உன் விஷயத்தில் நான் இவ்வளவு தூரம் கொடுமையாக நடந்து கொண்டதைப் பற்றி என் மனம் உருகித் தவிக்கிறது. உன்னுடைய மன நிலைமையையும் யோக்கியதையையும் உள்ளபடி அறிந்து கொள்ளாமல் நான் நடந்து கொண்டதை நீ மனசில் வைக்காமல், எல்லாவற்றையும் மறந்து என்னைக் காப்பாற்றி ரக்ஷிக்க வேண்டும்'' என்றுகூறிக் கெஞ்சி மன்றாடிய வண்ணம் அந்த மின்னாளிடம் நெருங்கி, அவளது இடையில் தமது இடக்கரத்தைக் கொடுத்து வளைத்து அவளைக் கட்டித் தழுவ முயன்றார்.

அவருக்கு இடங்கொடுப்பவள் போலப் பாசாங்கு செய்து சிறிதுநேரம் பொறுமையாக இருந்த பூர்ணசந்திரோதயம், ''மன்மதனும் ரதிதேவியும் இருந்து லீலைகள் செய்யத் தகுந்த இடம் போல இருக்கும் இந்த அற்புத மோகன மணி மண்டபத்தில் இப்படிப்பட்ட பயங்கரமான நாற்காலிகளைத் தாங்கள் வைத்தது கொஞ்சமும் தகாது'' என்று கூறியவண்ணம் தனது முழுபலத்தோடு அவரது இரண்டு கைகளையும் பிடித்து இழுத்து ஒரே விசையாகவும் பலமாகவும் அவரை அந்த நாற்காலியின்மேல் தள்ளிவிட அவர் தளர்ந்து போன வலுவற்ற மனிதர் ஆகையால், அவள் சற்று முன் அகப்பட்டுக் கொண்டிருந்த நாற்காலியில் போய் பொத்தென்று விழுந்தார். விழுந்தவுடனே, அந்த நாற்காலியில் மறைந்திருந்த வில்வைத்த ஆறு வளையல்களும் குபீர் என்று எழுந்து வந்து அவரது

இடுப்பையும் கைகளையும் கால்களையும் கெட்டியாகப் பிடித்து அழுத்திக்கொண்டன. உடனே கிழவர் திடுக்கிட்டுத் திக்பிரமை கொண்டு திகிலடைந்து பூர்ணசந்திரோதயத்தை நோக்கித் திருடனைப் போல விழிக்கிறார்; குரங்குபோலப் பல்லைப் பல்லைக் காட்டுகிறார். அவள் தம்மை வேடிக்கையாக அப்படித் தள்ளிவிட்டிருப்பாளோ, அல்லது, உண்மையிலேயே தம்மை தண்டிப்பதற்காக அப்படிச் செய்திருப்பாளோ என்று ஐயமுற்றுக் கலங்கிக் கெஞ்சி மன்றாடுகிறவர் போல இறைஞ்சிய பார்வையாக அவளது முகத்தை உற்று நோக்கி அவளது முகக் குறிப்பை ஆராய்கிறார். அவரை நாற்காலியில் தள்ளிவிட்ட பூர்ணசந்திரோதயம் உடனே அந்த இடத்தைவிட்டு சிறிது தூரம் விரைவாக நடந்து திரும்பி நின்றாள். அவளது முகத்தோற்றமும், பணிவான தன்மையும் உடனே சடக்கென்று மாறிப்போயின. அவள் மிகுந்த வீராவேசமும் கோபமும் கொண்டவளாய் தேகம் பதறித் துடிதுடிக்க நின்று அவரைக் கேவலம் ஒரு புழுவைக் காட்டிலும் இழிவாக மதிக்கிறவள் போல அருவருப்பான பார்வையாகப் பார்த்து, "அயோக்கியப் பதரே! பல்லும் போய் பவிஷூம் போய் சாகமாட்டாமல் கிடக்கும் நடைப்பிணத்துக்கு வைப்பாட்டி ஒரு கேடா! நீ கெட்ட கேட்டுக்குக் கண்ணாடி மண்டபம் ஒன்று; அறுபத்துநான்கு லீலைகள் செய்ய அறுபத்து நான்கு வித மஞ்சங்கள்! அதற்குத் தகுந்த படங்கள்! அடாடா! என்ன கேடுகாலம்! எப்படிப்பட்ட சூதான நாற்காலிகள்! இந்தக் கிழட்டு மன்மதரிடம் காதல் கொண்டு வராத ஸ்திரீகளை நாற்காலிகளில் சிறை வைத்து அவர்களை வசப்படுத்துகிறதாம்! எவ்வளவு நெஞ்சழுத்தம்! எவ்வளவு துர்ப்புத்தி! என்ன பைத்தியம்! என்ன மூட நினைவு! உன்னைப் பார்த்தால், சாகப்போகிற கிழக்குரங்கு மாதிரி இருக்கிறது. நீ செய்கிற அட்டூழியமோ அபாரமாக இருக்கிறதே! தூ! நீ ஒரு பெரிய மனிதனா! எனக்கு உண்டாகும் ஆத்திரத்தில் இப்போதே கூச்சலிட்டு கீழே இருக்கும் உன்னுடைய வேலைக்காரர்

களையும் வேலைக்காரிகளையும் ரஸ்தாவில் போகும் ஜனங்களையும் அழைத்து உன்னுடைய கோலத்தைப் பார்த்து சந்தோஷப்படும்படி செய்தாலும் செய்து விடுவேன். ஆனால், அப்படிப்பட்ட இழிவுக்கும் அவமானத்துக்கும் உன்னை ஆளாக்க என் மனம் இணங்கவில்லை. ஆகையால், உன்னை நான் இந்த நிலைமையிலேயே விட்டுப் போகிறேன். உன்னுடைய சாமர்த்தியத்தை உபயோகப்படுத்தி நீயே உன்னை விடுவித்துக்கொள். இன்னம் ஒரு விஷயம் சொல்லிவிட்டு நான் புறப்பட்டுப் போகிறேன். இந்த மாளிகைக்கு வந்த போது நான் என்னுடைய சம்மதியின் மேலேயே வந்தேன். ஆனாலும், உன்னுடைய பைத்தியக்கார எண்ணத்துக்கு உடன்பட வேண்டும் என்றாவது, உன்னுடைய அருவருக்கத்தக்க சொற்களைக் கேட்க வேண்டும் என்றாவது நான் இங்கே வரவில்லை. உன்னுடைய புத்திசாலித்தனத்தை நீ எப்படி உபயோகிக்கிறாய் என்பதையும் நீ எவ்வளவு இழிவாக நடந்து கொள்ளுகிறாய் என்பதையும் பார்த்துக் கை கொட்டிச் சிரித்துவிட்டுப் போக வேண்டும் என்ற எண்ணத்தோடுதான் நான் இங்கே வந்தது. நான் வந்த காரியம் பூர்த்தியாக நிறைவேறிவிட்டது. நீயும் தக்கபடி சிக்ஷிக்கப்பட்டுப் போனாய். இவ்வளவோடு இந்தப் பைத்தியத்தை விட்டுவிடு; பூர்ணசந்திரோதயத்தைப் பற்றி நீ இனி துன்மார்க்கமான எண்ணம் கொண்டு ஏதாவது அயோக்கியத்தனமான முயற்சி செய்தால், இதைவிடப் பதின்மடங்கு அதிகக் கேவலமான இழிவும் மானக்கேடும் வந்து சம்பவிக்கும் என்பது உன்னுடைய மனசில் உறுதியாக இருக்கட்டும். இவ்வளவு தான் நான் சொல்ல வேண்டியது. உத்தரவு வாங்கிக் கொள்ளுகிறேன்; மகாப் பிரபுவே!'' என்று மிகவும் அருவருப்பாகவும் அலட்சியமாகவும் கூறினாள்.

அவளது வார்த்தைகளெல்லாம் மகா கூர்மையான அத்தனை ஈட்டிகள் சொருகப்படுவதுபோல மருங்காபுரி ஜெமீந்தாரினது செவிகளைத் துளைத்து ஊடுருவிச் சென்றன. அவள் அவரை

அருவருப்பான பார்வையாகப் பார்த்து அவமரியாதையான ஒருமைப் பதங்களை உபயோகித்துக் கேவலமாக தூஷித்ததைக் கேட்கக் கேட்க, அவரது உடம்பு குன்றிக் குறுகிப் போயிற்று. கை கால்களெல்லாம் வெடவெடவென்று நடுங்குகின்றன. முகம் விகாரமடைந்து வெளுத்துப் போனது. அப்புறம் இப்புறம் அசையவிடாமல் அவரை அந்த நாற்காலி எப்படி இறுகப் பிடித்துக்கொண்டிருந்ததோ, அதுபோல, அவருக்கு ஏற்பட்ட அவமானம், அவரது தொண்டையை இறுகப் பிடித்துக் கொண்டிருந்தது. ஆகையால், அவர் எவ்வளவு முயன்றும் வார்த்தைகள் வெளிப்படாமல் தடைபட்டுத் தடுமாற்றம் அடைந்தன. நெஞ்சு காய்ந்தும் நாவறண்டும் போயின. சிறிது நேரத்திற்கு முன் நாற்காலியில் அகப்பட்டுத் தமது வலையில் முற்றிலும் வீழ்ந்திருந்த அந்தப் பெண்ணை விடுவிக்காமல், அதே நிலைமையில் பலவந்தப் படுத்தித் தமது கருத்தை நிறைவேற்றி அவளது செருக்கை அடக்காமல் ஏமாறிப் போனதன்றி, தான் செயலற்ற கேவலமான நிலைமைக்கு வந்து விட்டதை நினைக்க நினைக்க, அவரது மனம் பதறிப் புண்பட்டது. அவர் அவளைப் பார்த்துக் கெஞ்சி மன்றாடவும் வெட்கி, கீழே குனிந்துகொண்டு சும்மா இருந்துவிடவும் துணியாமல் இருதலைக்கொள்ளி எறும்பு போல இருந்து தத்தளிக்க, அவருக்கெதிரில் முறுக்காக நிமிர்ந்து நின்று கொண்டிருந்த பூர்ணசந்திரோதயம், கடைசியாக அவரை இன்னொரு முறை ஏளனமான பார்வையாகப் பார்த்துவிட்டு அந்த ரதிகேளி விலாசத்தை விட்டு அப்பால் நடந்து வெல்வெட்டு மாடத்தை அடைந்தாள். அடைந்தவள் அதற்குள் நுழைந்து தான் வந்தபோது கழற்றி நாற்காலியின் மீது வைத்திருந்த தனது பட்டு அங்கியை எடுத்துத் தனது உடம்பைத் தலைமுதல் கால்வரையில் போர்த்திக்கொண்டு வாசற் கதவண்டை போய்ச் சேர்ந்தாள். ஆனால், அந்தக் கதவு முன் தடவையில் அவள் முயன்றுபார்த்த போது பூட்டப்பட்டிருந்தது போலவே

அப்போதும் இருந்தது. அது அவ்வாறு இருந்ததைக் கண்டும் அந்த அழகிய மடந்தை மனம் தளர்வடையவில்லை. சிறிது நேரத்திற்குமுன் தான் நாற்காலியில் அகப்பட்டுக் கொண்டிருந்த காலத்தில் மருங்காபுரி ஜெமீந்தார் ஏதோ ஒரு கதவைத் திறந்து கொண்டு வந்த நினைவு தோன்றியது. ஆகையால், அந்த அதிதீர ரமணி அவ்விடத்தை விட்டு மறுபடியும் ரதிகேளி விலாசத்திற்கு வந்து சேர்ந்தாள்.

அதற்குள் ஒருவாறு தெளிவடைந்து பேசும் துணிவு பெற்ற மருங்காபுரி ஜெமீந்தார், அவள் மறுபடியும் திரும்பி வந்ததைக் கண்டு மிகவும் பரிதாபகரமான பார்வையாக அவளைப் பார்த்து, ''பெண்மணீ! பூர்ணசந்திரோதயம்! நான் உன் விஷயத்தில் செய்த தவறை மன்னித்துக் கொள். தயை செய்து என்னை இந்தத் துன்பத்திலிருந்து விடுவித்துவிட்டுப் போ; எனக்குப் புத்தி வந்து விட்டது. இனிமேல் நான் உன்னைப்பற்றித் தவறான நினைவே கொள்ளமாட்டேன்'' என்று கூறிக் கெஞ்சி மன்றாடினார்.

பூர்ணசந்திரோதயமோ அவர் சொன்ன சொற்களை இலட்சியம் செய்யாமல், கதவு எவ்விடத்தில் இருக்கிறது என்பதை ஆராய்ச்சி செய்யத் தொடங்கினாள்.

அதை உணர்ந்து மருங்காபுரி ஜெமீந்தார் மறுபடியும் அவளைக் கெஞ்சத் தொடங்கி, ''பூர்ணசந்திரோதயம்! என்ன நீ என்னிடத்தில் இவ்வளவு தூரம் வர்மம் பாராட்டுகிறாயே! நான் உன் விஷயத்தில் செய்த தவறுக்காக என்னை நீ இவ்வளவு நேரம் தண்டித்ததே போதுமான தாயிற்றே; இன்னமுமா நீ என்னை இழிவுபடுத்த வேண்டும். நான் திறந்துகொண்டு வந்த கதவு எங்கே இருக்கிறது என்று நீ தேடுகிறாய்! நீ எவ்வளவு தான் பிரயாசைப்பட்டாலும் எவ்வளவு நேரம் முயற்சி செய்தாலும் அந்த ரகசியமான கதவு எங்கே இருக்கிறது என்பதை நீ கண்டுபிடிக்க முடியாது. நீ தயை செய்து என்னை விடுவிப்பா யானால், நான் உனக்கு எவ்விதத் தீங்கும் நினையாமல், உன்னை வெளியில் அனுப்பிவிடுகிறேன்'' என்றார்.

அவரது பணிவையும் பரிதாபத்தையும் கண்ட பூர்ண சந்திரோதயத்தின் அருவருப்பும் குரோதமும் ஒருவாறு தணிவடைந்தன. அவள் முன்போல அவரிடத்தில் மரியாதையாகப் பேசத் தொடங்கி, "இல்லை இல்லை. இந்தக் கதவு இருக்கும் இடம் எனக்குத் தெரிந்தால் தெரியட்டும், தெரியாவிட்டாலும் கவலை இல்லை. நான் உம்மை மாத்திரம் விடுவிக்கமாட்டேன். இந்தக் கதவு எங்கே இருக்கிறது என்று நீர் சொல்லாவிட்டால், நான் மறுபடியும் வெல்வெட்டு மாடத்துக்குப் போய், ஜன்னலின் கண்ணாடிக் கதவை உடைத்துக் கூச்சலிட்டு ரஸ்தாவில் போகும் மனிதரைக் கூப்பிட்டு என்னை விடுவிக்கும் படி செய்கிறேன். அவர்கள் வந்து உம்மை இந்த நிலைமையில் பார்க்கும்படியான இழிவுக்கு நீர் சம்மதிக்கிறீரா? அப்படி வந்து கூடும் ஜனங்களிடத்தில் நான் இங்கே வந்த வரலாற்றையும் நீர் செய்த சதி ஆலோசனையின் விவரத்தையும் உமக்கு முன்னாகவே எடுத்துச் சொல்ல நேரிடும். அது உமக்கு இஷ்டமானால், அப்படியே செய்கிறேன்" என்று அழுத்தமாகவும் உறுதியாகவும் கூறினாள்.

அவள்து சொற்களைக் கேட்ட ஜெமீந்தார் சிறிதுநேரம் கீழே குனிந்து சிந்தனையில் ஆழ்ந்திருந்து மறுபடியும் நிமிர்ந்து அவளை நோக்கி, "சரி; உனக்கு அப்படிப்பட்ட பிரயாசை கொடுக்க எனக்கு இஷ்டமில்லை. அந்த ரகசியமான கதவைத் திறப்பதற்கு நான் வழி காட்டுகிறேன். ஆனால், அதற்குப் பதிலாக நீ எனக்கு ஒரு சிறிய உதவி செய்ய வேண்டும். சம்மதமானால், நான் உடனே ரகசியத்தை வெளியிடுகிறேன்" என்றார்.

பூர்ணசந்திரோதயம், "உம்மை விடுவிப்பதைத் தவிர வேறு விதமான சிறிய உதவி எதுவாக இருந்தாலும், அதை நான் செய்யத் தடையில்லை" என்றாள்.

ஜெமீந்தார், "சரி; அப்படியே ஆகட்டும். அதோ சுவரில் காகிதங்களினால் ஒட்டு வேலை செய்யப்பட்டிருக்கிறதைப்

பார். அதில் சிகப்புக் காகிதத்தினால் ரோஜாப் புஷ்பங்கள் செய்து ஒட்டப்பட்டிருக்கின்றன அல்லவா. அந்தப் புஷ்பங்களில் நடுவில் இருக்கும் புஷ்பத்தின் மேல் விரலை வை. அதற்குள் மறைந்திருக்கும் விசை உடனே கதவைத் திறந்து விடும். அந்த வழியாகப் போனால் படிகள் இறங்கும். அப்படியே நீ கீழே போய்ச் சேர்ந்தவுடன் என்னுடைய வேலைக்காரர்களைக் கண்டு, என் அந்தரங்கக் காரியதரிசியான கோவிந்தசாமியை நான் இந்த அறைக்கு உடனே வரச் சொன்னதாகச் சொல்லிவிட்டு நீ வெளியில் போய்விடு! அவ்வளவுதான் நீ எனக்குச் செய்ய வேண்டிய உதவி'' என்றார்.

அதைக் கேட்ட பூர்ணசந்திரோதயம் அப்படியே செய்வதாக ஒப்புக்கொண்டு சுவரண்டை போய் அவர் குறித்த ரோஜாப் புஷ்பத்தின்மீது விரலை வைக்க, உடனே பக்கத்தில் ஒரு கண்ணாடிக் கதவு திறந்துகொண்டது. அதைக் கண்டு மிகுந்த மனவெழுச்சியும் மகிழ்ச்சியும் நம்பிக்கையும் அடைந்த அந்தப் பெண்பாவை அதன் வழியாக அப்பாற் செல்ல, அவ்விடத்தில் படிக்கட்டு கீழே இறங்கியதைக் கண்டு, அதன் வழியாக தடதடவென்று கீழே இறங்கினாள்.

## 17-வது அதிகாரம்

## புதையல்

அன்றைய தினம் இரவில் பதினைந்து நாழிகை நேரமிருக்கலாம். சந்திரன் பகல் போன்ற நிலவையும் சீதளத்தையும் இன்பத்தையும் மண்ணுலகம் முழுதும் பரப்பிய வண்ணமும் ஆகாயத்தில் ஓட்டமாக ஓடிக்கொண்டிருந்தான். பூமி தேவியும் அதன் மக்களான கோடானுகோடி ஜீவஜெந்துக்களும் நித்திரையில் ஆழ்ந்து இருந்தமையால், எங்கும் நிசப்தமே குடிகொண்டிருந்தது. அப்போது தஞ்சையிலி

ருந்து திருவையாற்றுக்குப் போகும் ராஜபாட்டையின் வழியாக வந்து கொண்டிருந்த ஒருபெட்டி வண்டி வெண்ணாற்றங்கரை என்ற ஊரை அடைந்து, இந்தக் கதையின் இரண்டாவது அதிகாரத்தில் விவரிக்கப்பட்ட மூன்று உப்பரிகை களுள்ள மெத்தை வீட்டிற்கு எதிரில் நின்றது. அதற்குள்ளிருந்து ஒரு புருஷர் சந்தடி செய்யாமல் பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு கீழே இறங்கினார். அவருக்குப் பின்னால் ஒரு ஸ்திரீயும் வண்டிக்குள் இருந்து கீழே இறங்கினாள். உடனே அந்தப் புருஷர் வண்டிக்காரனை நோக்கி, வண்டியை மறைவான ஓரிடத்தில் நிற்க வைத்துக் கொண்டு அவ்விடத்தில் ஜாக்கிரதையாக இருக்கும்படி கூறி, யார் வந்தாலும் மாளிகைக்குள் விடாமல் தடுத்து அனுப்பி விடும்படி கண்டித்து உத்தரவு செய்துவிட்டுத் தமக்குப்பின்னால் நின்ற யௌவனப் பெண்ணை அழைத்துக்கொண்டு விரைவாக அப்பால் நடந்து போய், முன்பக்கத்தில், தாளிடப்படாமல் வெறுமையாக மூடப்பட்டிருந்த இரும்புக்கம்பிக் கதவைத் திறந்து உள்ளே நுழைந்து கதவை மறுபடியும் முன்போல மூடிவிட்டு அந்த ஸ்திரீயோடு விரைவாக உள்ளே சென்றார்.

அப்படி அவசரமாக நடந்த அந்தப் புருஷரும், மடந்தையும், வாயைத் திறந்து பேசாமல் மௌனமாகவே நடந்தனர். அந்தப் புருஷருக்குச் சுமார் நாற்பத்தைந்து அல்லது ஐம்பது வயதிருக்க லாம் என்று தோன்றியது. அவர் தக்க பெரிய மனிதர் போல உயர்வான ஆடைகளை அணிந்திருந்தார். ஆனாலும், அவரது முகம் மிகுந்த விசனத்தையும் கவலையையும் உள்ளடக்கிய கோபத்தையும் காட்டியது. அந்தப் பெண்பாவை சுமார் இருபது வயது அடைந்தவளாய் மகா அற்புதமான அழகும் வசீகரத் தன்மையும் நிரம்பப் பெற்றவளாகக் காணப்பட்டாள். அவள் ஒரு பெரிய துப்பட்டியால் தலைமுதல் கால்வரையில் தன்னை மூடிக்கொண்டு கோஷா ஸ்திரீ போலக் காணப்பட்டாள். அவளது திரேகம் துப்பட்டியால் மூடப்பட்டிருந்ததனால் அது ஏதோ ஒரு திகிலினால், அடிக்கடி

திடுக்கு திடுக்கென்று நடுங்கியதாகக் காணப்பட்டதன்றி, அவளது கை கால்களெல்லாம் காற்றில் அசையும் மாந்தளிர் போல நடுங்கிக் கொண்டிருந்ததாகத் தோன்றின. ஆனால், சகிக்க இயலாத குளிர் காற்று வீசியதனாலோ, அல்லது, அவளது உடம்பில் ஜுரம் முதலிய நோய் இருந்ததாலோ, அவளது தேகம் அப்படி நடுங்கியது என்று நாம் நினைக்க ஏதுமில்லாமல் இருந்தது. ஏனென்றால், அப்போது மந்த மாருதம் வெகு இனிமையாக வீசிக்கொண்டிருந்தது. அன்றி, அவளது உடம்பில் சூடு முதலிய எவ்வித அறிகுறியும் காணப்படவில்லை. ஆகையால், அவள் நடுங்கியதற்கு அவளது மனதின் நிலைமையே காரணமாக இருக்கலாம் என்று யூகிக்க வேண்டியிருந்தது. அவளது பல் வரிசைகளும், மார்கழி, தை மாசங்களில் நிகழ்வதுபோல நடுநடுங்கி ஒன்றோடொன்று சடசடவென்று மொத்துண்டன.

அவர்கள் இருவரும் எந்த மாளிகையை நோக்கி நடந்தார்களோ அது அரைக்கால் மயில் நீள அகலம் உள்ளதும் மதில் சுவர்களினால் சூழப்பட்டதுமான ஒரு பூந்தோட்டத்தின் நடுவில் அமைந்திருந்தது. முன் பக்கத்தில் இருந்த இரும்புக் கம்பிக் கதவிலிருந்து உள்ளே சென்று நேர்த்தியான பாதையின் இரண்டு பக்கங்களிலும் மரப் பாத்திகள் இருந்ததன்றி அதன் இரு புறங்களிலும் பூத் தொட்டிகளும் பழ மரங்களும் நெடுந்தூரம் வரையில் பரவியிருந்தன. இரும்புக் கம்பிக் கதவுகளிலிருந்த இடத்திற்கும், கட்டிடம் இருந்த இடத்திற்கும் நடுவில் அந்தப் பாதை சுமார் 200-கஜ தூரம் இருந்தது. அந்தப் பாதையின் வழியாக விரைந்து சென்ற புருஷர் ஐந்து நிமிஷ நேரத்தில் கட்டிடம் இருந்த இடத்தை அடைந்தார். அடைந்தவுடனே எதிரிலிருந்த தாழ்வாரத்தில் ஏறிக் கட்டிடத்தின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போகாமல், அவர் அந்த ஸ்திரீயை அழைத்துக் கொண்டு தரையிலேயே நடந்தபடி அந்தத் தோட்டத்தின் இடது பக்கமாகத் திரும்பினார். அதைக் கண்ட அந்த ஸ்திரீ முன்னிலும்

அதிகமாக நடுங்கி, ''என்ன இது! இன்றைய தினம் சாயுங்காலம் நீங்கள் நம்முடைய ஜாகைக்குத் திரும்பி வந்த பிறகு செய்யும் காரியம் ஒவ்வொன்றும் இன்னது என்று அறிந்துகொள்ள முடியாத பைத்தியக்காரச் செய்கையாக இருக்கிறதே. நீங்கள் ராத்திரிப் பத்து நாழிகை சமயத்தில் திடீரென்று வந்து படுக்கையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த என்னை எழுப்பினீர்கள். அவசரமாக ஓரிடத்துக்குப் போக வேண்டும். ஆகையால் உடனே புறப்படு என்கிறீர்கள். நானும் உங்களுடைய வார்த்தையை மறுக்கக் கூடாது என்ற எண்ணத்தோடு உடனே புறப்பட்டு வந்தேன். எந்த இடத்துக்கு எப்படிப்பட்ட அவசர காரியமாக நாம் போகிறோம் என்று நான் உங்களிடம் எவ்வளவோ கெஞ்சிக்கேட்டுப் பார்த்தும், நீங்கள் சொல்லாமல் என் மேல் சீறி விழுந்தீர்கள். அதுமுதல் என்னுடைய உடம்பு பயத்தினால் நடுங்குகிறது. மனம் கலங்கித் தவிக்கிறது. முன்பு ஒருநாள் ராத்திரி விருந்துக்குப் போயிருந்த நீங்கள், திடீரென்று திரும்பி வந்து, கோபண்ணாராவைக் கொன்று விட்டதாகவும், உடனே மைசூருக்குப் புறப்பட வேண்டும் என்றும் சொன்னீர்கள். அதைப்போல இன்றைக்கும் ஏதாவது அபாயத்தில் நீங்கள் மாட்டிக் கொண்டீர்களோ என்று நினைத்துப் பெரும் திகில் கொண்டு என் மனம் தத்தளிக்கிறது. நாம் மைசூரை விட்டுத் திரும்பிவந்த இந்த ஒருவார காலமாக நாம் வேறே பெயர் வைத்துக் கொண்டு மாரியம்மன் கோவில் என்ற ஊரில் ஒளிந்து கொண்டிருந்தோம். நீங்கள் நாம் இறங்கி இருக்கும் இடத்தை விட்டு வெளியில் போகவே இல்லை. இன்று சாயுங்காலம் தஞ்சைக்குப் போய்விட்டு உடனே திரும்பி வருவதாகச் சொல்லிவிட்டுப் போனீர்கள். போனவர் பத்து நாழிகைக்குத் திரும்பி வந்தீர்கள். வந்தவுடன் சங்கதி இன்னது என்று வெளியிடாமல் உடனே பிரயாணப்பட்டு என்னை அழைத்துக் கொண்டு வந்தீர்கள். இப்போது பார்த்தால், நாம் முன்னே வசித்த ஜாகை இருக்கும் வெண்ணாற்றங்கரைக்கு

வந்திருக்கிறீர்கள். இப்படி அவசரமாக வந்த காரணம் என்ன? முன்னே நடந்த கொலை சம்பந்தமாக ஏதாவது துன்பம் நேரப் போகிறதா? அப்படி இருந்தால், நாம் மறுபடியும் நம்முடைய சொந்த ஜாகையில் இருப்பது நமக்குக் கெடுதலாக அல்லவா முடியும். இங்கே என்னை அழைத்துக்கொண்டு வந்த நீங்கள் கட்டிடத்தின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போகாமல் இடதுபக்கமாகத் தோட்டத்துக்குள் எங்கே போகிறீர்கள்? நீங்கள் இப்படி மறை பொருளாகக் காரியங் களைச் செய்யச் செய்ய பயத்தினால் எனக்குக் குலைநடுக்கம் உண்டாகிறது. விஷயத்தை இரண்டொரு வார்த்தையில் சுருக்கமாகச் சொல்லுங்கள்'' என்றாள். அவளது வார்த்தை களைக் கேட்ட அந்தப் புருஷர் ஆத்திரம் அடைந்து, ''வாயை மூடிக்கொண்டு நடந்து வா என்று உனக்கு நான் எத்தனை தடவை சொல்லுகிறது. நான் எங்கே அழைத்துக் கொண்டு போகிறேனோ அங்கே வரவேண்டியது உன்னுடைய கடமை. அடிக்கடி தொண தொணவென்று பேச்சுக் கொடுக்காமல் வாயை மூடிக்கொண்டு வா. முடிவான இடத்துக்குப் போனால், எல்லாம் தானாகவே தெரிந்து போகிறது'' என்று கண்டித்து சுருக்கமான மறுமொழி கூறிய வண்ணம் விசையாக முன்னால் நடக்க, அந்தப் பெண்பாவை முன்னிலும் பன்மடங்கு பெருகிய கவலையும் கலக்கமும் திகிலும் கலவரமும் அடைந்து நடுநடுங்கி அவரைத் தொடர்ந்து ஓட்டமாக நடந்து சென்றாள்.

அவர்கள் இருவரும் தோட்டத்தின் வழியாக நடந்து கட்டிடங்களின் பின்புறத்தை அடைந்து அதற்கு அப்பாலிருந்த மாந்தோப்பிற்குள் நுழைந்து சிறிது தூரம் சென்றனர். ஆகாயத்தில் சந்திரன் நன்றாகப் பிரகாசித்து நிலவைப் பரப்பிக் கொண்டிருந்ததனாலும், அவ்விடத்தில் மாமரங்களின் கிளைகள் அடர்ந்து பரவிப் பந்தல் போடப்பட்டது போல ஆகாயத்தைப் போர்த்துக்கொண்டிருந்தன ஆகையால், தோப்பு முழுவதும் இருள் நிறைந்திருந்தது. அவர்கள் இருவரும் இருளடர்ந்த

அந்தத் தோப்பில் நடந்து சிறிது தூரம் செல்ல, சுமார் ஐம்பது கஜ தூரத்திற்கு அப்பால், ஒரு லாந்தரின் மங்கலான வெளிச்சம் தெரிந்தது. அவ்விடத்தில் ஒருவிதமான ஓசையுண்டானதையும் அந்தப்பெண் கேட்டாள். உடனே அவள் திடுக்கிட்டுக் கலங்கி, "என்ன வெளிச்சம் அது? இந்த நடு இரவில் யார் அங்கே வெளிச்சம் வைத்துக்கொண்டிருக்கி றார்கள்? அவர்கள் என்ன செய்கிறார்கள்? ஏதோ ஓசை கேட்கிறதே அது என்ன ஓசை?" என்று மிகுந்த கவலையோடு கேட்க, அந்தப் புருஷர் கடுகடுத்த முகமாக வைத்துக்கொண்டு அவளைநோக்கி, "அங்கே ஒரே ஒரு மனிதன்தான் இருக்கிறான், அவன் பூமியில் குழி தோண்டிக் கொண்டிருக்கிறான்" என்று சுருக்கமாக மறுமொழி கூறினார். அந்தப்பெண் முன்னிலும் பன்மடங்கு அதிகரித்த கிலியும் குழப்பமும் அடைந்து, "என்ன ஆச்சரியம் இது! இந்த நடு ராத்திரியில் அந்த மனிதன் எதற்காகக் குழி தோண்டுகிறான்? நாம் ஏன் இப்போது அங்கே போக வேண்டும்?" என்று அச்சத்தோடு கேட்க, அந்தப் புருஷர், "நடுராத்திரியில் மனிதர் திருட்டுத்தனமாக எதற்காகக் குழி தோண்டுவார்கள்? யாரையாவது அதற்குள் போட்டுப் புதைக்கத்தான் தோண்டுவார்கள். வேறே எதற்காகக் குழி தோண்டுவார்கள்" என்று அருவருப்பாகக் கூறினார்.

அதைக்கேட்ட மடந்தை கதிகலங்கிப்போய், "என்ன இது? இன்று ராத்திரி தஞ்சையிலிருந்து திரும்பிவந்த முதல் நீங்கள் புது மனிதராக மாறிப்போயிருக்கிறீர்களே! எப்போதும் என்னிடத்தில் காட்டும் பிரியமும் மதிப்பும் எங்கேயோ போய்விட்டனவே! யாரோ விரோதியிடத்தில் பேசுவதுபோல என்னிடத்தில் வெறுப்போடும் கோபத்தோடும் பேசுகிறீர்களே! குழிதோண்டி மனிதரைப் புதைக்கப் போவதாகச் சொல்லுகிறீர்கள். இன்ன சங்கதி என்று நன்றாக விவரித்துச் சொல்லக் கூடாதா? நான் உங்களிடத்தில் அப்படி என்ன தவறு செய்துவிட்டேன்? உங்களுக்காக நான் என்னுடைய உறவினர்

களையெல்லாம் மதியாமல், எனக்கு வர வேண்டிய அபார செல்வத்தையும் பொருட்படுத்தாமல் நீங்களே கதியாக இருந்து வந்திருக்கிறேன். நீங்கள் செய்த கொலைக் குற்றத்திலிருந்து உங்களைத் தப்ப வைப்பதற்காக, நான் எவ்வளவோ கேவலமான காரியங்களைச் செய்ய சம்மதித்து மிகவும் துணிகர மான விஷயங்களை நடத்தியிருக்கிறேன். அதையெல்லாம் கொஞ்சமும் நினையாமல் என்னிடத்தில் இப்படி புது மாதிரியாக நடக்கவேண்டிய காரணம் என்ன? இந்த மனிதன் இந்த நடுராத்திரியில் எதற்காகக் குழி தோண்டுகிறான்? நமக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? என் மனம் பதறுகிறதைக் கருதியாவது உண்மையை வெளியிடக் கூடாதா? அங்கே வர எனக்கு நிரம்பவும் பயமாக இருக்கிறது. நான் இவ்விடத்தி லேயே இருக்கிறேன். நீங்கள் போய்விட்டு வாருங்கள்'' என்று உருக்கமாகவும் பரிதாபகாரமாகவும் கூறி அப்படியே நின்றுவிட்டாள்.

உடனே அந்தப் புருஷர் முன்னிலும் அதிகரித்த சினங்கொண்டு மூர்க்கமான பார்வையாக அவளைப் பார்த்து, ''இப்போது நீ மரியாதையாக நடந்து பேசாமல் வந்தால் தப்புவாய். இல்லாவிட்டால், உன்னையும் உன்னுடைய ஆசை நாயகனோடு சேர்த்து அந்தக் குழிக்குள் போட்டுப் புதைத்து விடுவேன். யாரிடத்தில் உன்னுடைய மாயமான வித்தையை எல்லாம் காட்டுகிறாய்? நீ இதுவரையில் பதிவிரதைத்தனம் கொண்டாடி என்னை ஏமாற்றினதுபோல இனியும் செய்யலாம் என்று நினைக்காதே; உன்னுடைய யோக்கியதை எவ்வளவு என்பது எனக்கு நன்றாகத் தெரிந்து போய்விட்டது. ஒன்றையும் அறியாதவள்போல நீ இனியும் பாசாங்கு பண்ணுவதில் கொஞ்சமும் உபயோகமில்லை. காலதாமசம் ஆகிறது; நிற்காதே; நட; சீக்கிரம் ஆகட்டும்'' என்று கூறி, அவளது கையைப் பிடித்துப் பரபரவென்று இழுத்துக்கொண்டு விசையாக நடந்து லாந்தர் இருந்த இடத்தை நோக்கிச்

சென்றார். அந்த ஸ்திரீ இன்னது என்று விவரிக்க இயலாததும் சகிக்க இயலாததுமான அபாரமான திகிலினால் நரகவேதனை அடைந்து சித்தப்பிரமை கொண்டு கலங்கித் தவித்தவளாய் நடைப்பிணம் போல மாறி அவர் இழுத்த இடத்திற்குச் சென்று கொண்டிருந்தாள். அவளது கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகப் பொங்கி இரண்டு கன்னங்களின் வழியாகவும் வழிந்து கொண்டிருந்தது. நெருப்புத் தணலிற்குள் புதைபட்டவள் போல, வெதும்பிய தேகமும் சஞ்சலத்தினால் உளைவுண்ட மனதுமாக நடக்க, அடுத்த நிமிஷத்தில் அவர்கள் லாந்தர் இருந்த இடத்திற்குப் போய்ச் சேர்ந்தனர்.

அவ்விடத்தில் மரங்கள் நிரம்பவும் அடர்த்தியாக இருந்த பாகத்தில் ஒரு லாந்தர் தரையின்மீது வைக்கப்பட்டிருந்தது. கோர ரூபத்தோடு காணப்பட்ட ஒரு முரட்டு மனிதன் தனது கையில் ஒரு மண்வெட்டியை வைத்துக்கொண்டு பிரம்மாண்ட மான ஒரு குழி வெட்டிக்கொண்டிருந்தான். வியர்த்து விரு விருத்துத் தோன்றிய அவனது தேகத் தோற்றத்திலிருந்து அவன் வெகு நேரமாக நிரம்பவும் பிரயாசைப்பட்டு அவ்விடத்தில் குழி தோண்டிக் கொண்டிருக்கிறான் என்பது நன்றாகத் தெரிந்தது. பரம விகாரமாகத் தோன்றிய அந்த மனிதனையும், அவனால் தோண்டப்பட்ட குழியையும் காண, அந்த இளநங்கைக்குக் குலைநடுக்கம் உண்டாயிற்று. சகிக்க இயலாத கிலி எழுந்து அவளது உச்சி மயிரைப் பிடித்து உலுக்கியது. வியர்வை வெள்ளம் குபீரென்று கிளம்பி அக்கினிக் குழம்புபோல அவளது உடம்பு முழுவதையும் நீராட்டி வழிந்தோடியது. அவளது உயிர் விண்ணிற்கும் மண்ணிற்குமாக ஊசலாடுகிறது. அவளது மூளை குழம்பியதாகையால் அடிக்கடி மயக்கம் வந்தது. அவள் கீழே விழுந்து விடாமல் பக்கத்தில் இருந்த ஒரு மரத்தில் கையை வைத்து தன்னைச் சமாளித்துக் கொண்டாள். அவளைப் பிடித்து இழுத்துக்கொண்டு போன அந்தப் புருஷர் அங்கே குழிவெட்டிய ஆளை நோக்கி, ‘‘என்ன

கட்டாரீ! வேலை முடிந்து விட்டதா? நீ எப்போது முதல் வேலை செய்ய ஆரம்பித்தாய்?'' என்றார்.

உடனே கட்டாரித்தேவன், ''நான் வேலை செய்ய ஆரம்பித்து சுமார் இரண்டு நாழிகை நேரம் இருக்கும். முதலில் கொஞ்சதூரம் சுக்கான் தரையாக இருந்தது. அதனால் இவ்வளவு நேரமாகி விட்டது. இது இவ்வளவு பிரயாசை கொடுக்கும் என்று நான் முதலில் நினைக்கவில்லை. அநேகமாக முடித்து விட்டேன். இன்னும் ஓர் அடி ஆழமிருந்தால், அவ்வளவே போதுமானது. நாளைக்கு ஒருவேளை தோட்டக்காரன் வந்து சந்தேகப்பட்டுப் பார்த்தாலும் பார்ப்பான். ஆகையால், நாம் சரியான ஆழத்தில் போட்டு, மண்ணைத்தள்ளி மூடி, தரையை முன்போல சமப்படுத்தி, சருகுகளையும் சுள்ளிகளை யும் இந்தக் குழியின் மேலும் இதைச் சுற்றி வெகுதூரம் வரையிலும் போட்டு மறைத்துவிட வேண்டும். அதோ பாருங்கள்! சுள்ளிகளையும் சருகுகளையும் சேர்த்து வைத்திருக்கிறேன்'' என்றான். அதைக் கேட்ட அந்தப் புருஷர், ''சரி; நீ சொல்வதெல்லாம் நல்ல யோசனைதான்; இன்னும் ஓர் அடி ஆழம் தோண்டிவிட்டு நீ மெத்தைக்கு வா. நாங்கள் முன்னால் போய் ஆக வேண்டியதைச் செய்கிறோம்'' என்றார். கட்டாரித்தேவன், ''போங்கள். நான் இதோ வெகு சீக்கிரத்தில் வருகிறேன்'' என்று கூறிவிட்டு பள்ளத்திற்குள் குனிந்து அடியிலிருந்த மண்ணை வெட்டத் தொடங்கினான்.

உடனே அந்தப் புருஷர் தமக்கு அருகில் மயங்கி நின்றுகொண்டிருந்த தமது மனைவியைப் பிடித்து இழுத்துக் கொண்டு அவ்விடத்தை விட்டு கட்டிடம் இருந்த இடத்தை நோக்கிச் சென்றார். ஐந்து நிமிஷ நேரத்தில் அவர்கள் இருவரும் அந்த மாளிகையின் பின் பக்கத்தை அடைந்தனர். அந்தப் புருஷர் தமது இடையில் சொருகிக் கொண்டிருந்த திறவுகோலை எடுத்து அவ்விடத்திலிருந்த ஒரு கதவைத் திறந்து தமது மனைவியின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு

உட்புறத்தில் நுழைந்தார். உட்புறம் முழுதும் இருள் அடர்ந்து நிரம்பவும் பயங்கரமாக இருந்தது. அவர் அந்த மாதை அழைத்துக்கொண்டு எதிரில் இருந்த சமையலறைக்குள் நுழைந்து, அவ்விடத்தில் ஆயத்தமாக வைக்கப்பட்டிருந்த ஒரு லாந்தரை கொளுத்திக் கையில் எடுத்துக்கொண்டு சிறிது தூரத்திற்கு அப்பால் காணப்பட்ட படிக்கட்டை அடைந்து அதன் வழியாக மேன்மாடத்திற்கு ஏறிச்சென்றார்.

அவர்கள் இருவரும் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் மௌனமாகவே நடந்தனர். அந்த பயங்கரமான நடு இரவில் அந்த இடம் முற்றிலும் நிசப்தமாக இருந்தமையால், அந்தப் புருஷர் நடந்ததனால் உண்டான காலடி ஓசை மாத்திரம் அவ்விடத்தில் உண்டானது, அந்தப் பெண்ணின் புண்பட்ட மனதை ஈட்டியால் குத்துவதுபோல வந்து வந்து தாக்கியது. ஆனால், அவள் நடந்ததில் காலடியோசையே உண்டாக வில்லை. மகா துரதிர்ஷ்டசாலியான அந்த மடந்தையின் முகம் பிரேதக்களை அடைந்துவிட்டது. தான் மேன்மாடத்திற்கு போனவுடனே, அவ்விடத்தில் என்னவிதமான அபாயத்திற்கு ஆளாக வேண்டுமோ என்றும்; எப்படிப்பட்ட கோரக் காட்சி யைக் காண வேண்டுமோ என்றும் நினைத்து அவளது மனம் தாமரை இலைத் தண்ணீராகத் தவித்தது. அவளது உயிரில் பெரும் பாகமும் போய்விட்டது என்றே மதிக்கத் தகுந்த பரம விகாரமாக நிலைமையில் அவள் தனது கணவனைத் தொடர்ந்து வந்துகொண்டிருந்தாள். தானும் தனது கணவனும் சில நாட்களுக்கு முன்னர் திடீரென்று புறப்பட்டு மைசூருக்குப் போனகாலத்தில் தான் வென்னீர் அண்டாவிற்குள் மறைத்து வைத்துவிட்டுப் போன தனது கள்ளப்புருஷன் கொஞ்ச நேரத்தில் தப்பித்துக்கொண்டு போயிருப்பான் என்று அவள் உறுதியாக நினைத்தாள். அந்தச் சோர நாயகன் நூல் ஏணியை அப்படியே தொங்கவிட்டுப் போயிருக்கலாம் என்றும், அதைக் கண்டுகொண்ட தனது சொந்தப் புருஷர்,

தன்மேல் சந்தேகம் கொண்டு அவ்வாறு கோபங்கொண்டு தன்னை அழைத்து வந்திருக்கிறார் என்றும், தன்னை மேன்மாடத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் நூலேணியைத் தனக்குக் காட்டியபிறகு தன்னை மறுபடியும் அழைத்துக் கொண்டுபோய் தன்னை உயிரோடு அந்தக் குழியில் தள்ளிப் புதைத்துவிடத் தீர்மானித்திருக்கிறாரோ என்றும் அந்த மங்கை சந்தேகித்தாள். ஆகையால், அவளது கால்கள் மெத்தைக்குப் போகமாட்டாமல் பின்னுக்கு வாங்கின. தூக்கு மேடைக்கு அழைத்துக்கொண்டு போகப்படும் மரண தண்டனைக் குற்றவாளிபோல அவளது மனம் சகிக்க இயலாத சஞ்சலமும் திகிலும் நிறைந்து பரமவேதனை அடைந்து வெதும்பியது. அவர் அடிக்கடி அவளை வைது ஊக்கியதைக் கண்டு பயந்தே அவள் மேலே ஏறிச் சென்றாள். தனது ரகசியம் எல்லாம் தெரிந்துபோய் விட்டது ஆகையால், தான் எப்படியாகிலும் துணிந்து சமயோசிதமான தந்திரம் செய்து தப்பித்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உண்டானது. ஆனாலும், அவளது கோழை மனது முன்னிலும் அதிகமாக அஞ்சித் தளர்வடைந்ததே அன்றித் துணிவு கொள்ளவில்லை.

அவளது புருஷர் கையில் பிடித்த லாந்தரோடு படிக்கட்டைக் கடந்து எதிரில் இருந்த ஒரு கூடத்தை அடைய, அந்தப் பெண் அவருக்குப் பின்னாகவே வந்து கொண்டிருந்தாள். அவர்களது உடம்பின் நிழல்கள் பயங்கரமாக நீண்டு சுவரில் விழுந்து பேய்கள் போலத் தோன்றியதும், நிர்மாநுஷ்யமாகவும் நிசப்தமாகவும் இருந்த அந்த இடத்தில் அவர்கள் இருவரும் நடந்த தனிமையான ஓசை உண்டானதும் அந்த மடந்தையின் உடம்பை அடிக்கடி கிடுகிடென்று ஆட்டி வைத்தன. அவள் அந்தப் பரமசங்கடமான நிலைமையைச் சகிக்க மாட்டாமல் வாயைத் திறந்து கோவெனக் கதறியழத் தொடங்கினாள். அதைக் கண்ட புருஷர் மிகுந்த ஆத்திரமும் கோபமும் கொண்டு அவளை நோக்கித் தமது பற்களை நறநறவென்று கடித்து,

''என்னடீ பெருத்த சாகஸம் செய்கிறாய்? ஏன் இப்படி அழுது ஊர் கூட்டுகிறாய்? வாயை மூடிக்கொண்டு வரப் போகிறாயா? இல்லையா? உன்னுடைய ரகசியத்தைக் கண்டு கொண்டேன் என்று நினைத்து, இப்படி அழுது பாசாங்கு செய்கிறாயா? இப்படிச் செய்தால், நீ பரிசுத்தமானவள் என்று நான் நினைத்துக் கொள்வேன் என்ற எண்ணமா? இந்த நாடகம் எல்லாம் என்னிடம் பலிக்காது. இப்போதே ஏன் அழுகிறாய்? இன்னம் கொஞ்ச நேரத்தில் நீ ஒப்பாரி சொல்லி நன்றாகக் கதறி அழவேண்டிய சந்தர்ப்பம் வரும்; இதற்குள் ஏன் அழுகையைத் தொடங்குகிறாய்?'' என்று கூறியவண்ணம், அவளது கையை இறுகப் பிடித்து அவளைப் பலவந்தமாக இழுத்துக்கொண்டு அந்தக் கூடத்தின் வழியாக நடந்து அதற்கு அப்பாலிருந்த சமையல் அறைக்குப் போய்ச் சேர்ந்தார். சேர்ந்தவர் அவ்விடத்தில் நிற்காமல் விரைவாக மேலும் நடந்து பக்கத்தில் இருந்த ஸ்நான அறைக்குச் சென்றார். அதைக் கண்ட அந்த மடந்தையின் மனோதிடம் முற்றிலும் அடியோடு விலகிவிட்டது. அவளது இருதயம் படீரென்று தெரித்து விடக்கூடிய நிலைமையை அடைந்தது. குடிவெறிகொண்டு மயங்கிக் கீழே விழுகிறவனது சரீரம் போல, அவளது உடம்பு தள்ளாடித் தள்ளாடிக் கீழே சாய்ந்தது. அவள் தனக்கு எதிரில் இருந்த கட்டிலின் காலை உடனே பிடித்துக்கொண்டு சமாளித்து நின்றாள். அப்போதுதான் அவளுக்கு உண்மை இன்னதாக இருக்கும் என்பது தெரிந்தது. உடனே அவளது மூளை குழம்பியது. தலை சுழன்றது. கண்கள் பஞ்சடைத்து போயின. அவளது அடிவயிற்றிலும் மனதிலும் தேள்கள் லக்ஷம் கோடியாக இருந்து கொட்டி வதைப்பது போன்ற வேதனையும் சங்கடமும் உண்டாயின. அந்தச் சமயத்தில் அவளது புருஷர், ''ஏன் அங்கேயே நிற்கிறாய்? வா இப்படி?'' என்று பதைப்பாகவும், கோபமாகவும் அதட்டிக் கூறி, அவளை ஸ்நான அறைக்குள் அழைத்த ஓசை வந்து அவளது செவிகளில் மோதின. அதைக்கேட்ட அந்த மாது மறுபடியும் தனது மனத்தை ஒருவாறு

திடப்படுத்திக்கொண்டு மெதுவாகத்தளர்நடை நடந்து உயிரற்ற சவம்போலச் சென்று ஸ்நான அறைக்குள் நுழைந்தாள்.

நுழைந்தவுடனே, சகிக்க இயலாத ஒருவித துர்க்கந்தம், அந்த அறை முழுவதும் நிரம்பி இருந்தது ஆகையால், அது அவளது நாசியில் வந்து பலமாகத் தாக்கியது. உடனே அவளது வயிற்றில் புரட்டலும், ஒக்காளமும் உண்டாயின. அவள் தனது சேலைத் தலைப்பால் தனது மூக்கையும் வாயையும் மூடிக்கொண்டு தனது கணவன் இருந்த இடத்தை நோக்கி நடந்தாள். அவர் அவளைப் பார்த்து ஏளனமாகப் புன்னகை செய்து, ''ஏன் இப்படி அவஸ்தைப் படுகிறாய்? இந்தத் தவலைக்குள் உன்னுடைய ஆசை நாயகர் ஒளிந்து கொண்டிருக்கிறார்; நீ வந்து அவரைப் பார்த்து வெளியில் கூப்பிட்டால்தான் அவர் வருவாராம்; இல்லாவிட்டால் வரமாட்டாராம். நீ ஆசையோடு அணைந்து கொண்ட மனிதருடைய உடம்பிலிருந்து உண்டாகும் இந்தப் பரிமள கந்தத்தைக் கண்டு நீ ஆனந்தமடைய வேண்டியிருக்க, ஏன் இப்படி அவஸ்தைப் படுகிறாய்? வா இப்படி; சீக்கிரம் வந்து கூப்பிடு'' என்று புரளியாகக் கூறியவண்ணம், தமது கையில் இருந்த லாந்தரைப் பக்கத்துச் சுவரில் இருந்த ஒரு மாடத்தில் வைத்து விட்டு வென்னீர் அண்டாவின் மேல் இருந்த மூடியைத் திறந்தார்.

திறந்தவுடனே அண்டாவிற்குள்ளிருந்து துர்நாற்றம் குபீரென்று கிளம்பி வெளிப்பட்டு அந்த அறைமுழுதும் முன்னிலும் அதிகமாகச் சூழ்ந்து கொண்டது. வென்னீர் அண்டாவிற்கு அருகில் நின்றுகொண்டிருந்த அந்தப் புருஷரது மூக்கில் துர்நாற்றம் திடீரென்று வந்து தாக்கவே, அவருக்கு இரண்டொரு நிமிஷம் வரையில் மூச்சுத் திணறித் திக்குமுக்கால் ஆடியது. இருமலும் வாந்தியும் உண்டாயிற்று. அவர் அவ்விடத்தில் நிற்கமாட்டாமல் விரைவாகச் சுவரண்டை ஓடி இரண்டு மூன்று ஜன்னற் கதவுகளைத் திறந்துவிட, உடனே

சுத்தமான குளிர்காற்று உள்ளே நுழைந்து அந்த அறையிலிருந்து துர்நாற்றத்தை எல்லாம் வெளிப்படுத்தியது. பைத்தியம் கொண்டவள்போல உருட்டி உருட்டி விழித்து திக்பிரமை கொண்டவளாய் நின்ற தனது மனைவியின் கையைப் பிடித்து அந்த மனிதர் இழுத்துக்கொண்டு போய் வென்னீர் அண்டாவின் பக்கத்தில் நிற்க வைத்து, ''குனிந்து உள்ளே பார்; உன்னுடைய ஆசைநாயகர் இருக்கிறார். அநேக நாளாய் அவரை நீ இங்கே வைத்துவிட்டுப் போய்விட்டதைப் பற்றி அவர் கோபித்துக் கொண்டு வெளியில் வரமாட்டேன் என்கிறார். நீ உன் கையை உள்ளேவிட்டு அவரைப் பிடித்து வெளியில் தூக்கிவிடு'' என்று கூறியவண்ணம் லாந்தரை எடுத்து அண்டாவின் வாயண்டை வைத்துக்கொள்ள, அந்த மகாபரிதாபகரமான பெண்ணின் கண்பார்வை தானாகவே உள்ளே சென்று அவ்விடத்தில் என்ன இருக்கிறது என்று பார்த்தது. பார்த்தவுடனே, அவள் தன்னை மறந்து ஐயோவென்று அலறி, ''அண்டாவுக்குள் ஏதோ ஒரு பிணமல்லவா இருக்கிறது! இது யாருடைய பிணம் ? இந்த அண்டாவிற்குள் எப்படி வந்தது?'' என்று மிகுந்த வியப்போடு கூறினாள். அதைக் கேட்ட அந்தப் புருஷர் ரௌத்திராகாரமான கோபம்கொண்டு ''ஆகா! இன்னமுமா சாகஸம் செய்கிறாய்? உன்னுடைய படுக்கையறைக்குப் பக்கத்தில் உள்ள வென்னீர் அண்டாவில் வந்து மறைந்துகொள்ளக்கூடிய மனிதன் இன்னான் என்பது உனக்குத் தெரியவில்லையா? இன்னமும் என்னை ஏமாற்ற எண்ணுகிறாயா? அன்றையதினம் ராத்திரி நீ உன்னுடைய நகைப்பெட்டியை இந்த அண்டாவின்மேல் வைத்துவிட்டுக் கடைசிவரையில் நாடகம் ஆடியதை நான் கவனிக்கவில்லை என்று எண்ணிக்கொண்டாயா? மோதிரத்தைத் தேடுவதாகச் சொல்லி என்னை முன்னால் வண்டியில் ஏறிக்கொள்ளும்படி அனுப்பியவள் அல்லவா நீ? என்னை அனுப்பிவிட்டு நீ தனியாக இருந்து இந்த நல்ல புருஷனிடம் காதல் மொழி பேசி உத்தரவு வாங்கிக்கொண்டு வர நினைத்தாயோ, அல்லது

அவனை வெளியில் அழைத்து கடைசியாகக் கட்டி ஆலிங்கனம் செய்துவிட்டு வர நினைத்தாயோ, அல்லது, இதற்குள் கிடக்கும் நூலேனியை எடுத்து உள்ளே போட்டுவிட்டு வர நினைத்தாயோ என்னவோ தெரியவில்லை. நீ இப்படி இந்தப் பெரிய மனிதரை ஒளிய வைத்திருக்கிறாய் என்பது எனக்குத் தெரிந்திருந்தால், உன்னைக் கூப்பிடாமல் இங்கே இருக்கவிட்டு, நீங்கள் இருவரும் சுகமாக இருங்கள் என்று வாழ்த்துப் பாடிவிட்டு நான் மைசூருக்குப் போயிருப்பேன். உண்மையை மறைத்து வீணாகக் காரியத்தைக் கெடுத்துக் கொண்டாயே, நடந்தது நடந்து போய்விட்டது. இனி நீ விசனப்படுவதிலாவது பாசாங்கு செய்வதிலாவது எவ்வித உபயோகமும் இல்லை. உள்ளே இருக்கிறவரை வெளியில் எடுத்துப்போடு. நான் அவரைத் தொடமாட்டேன். நீ தான் எடுக்க வேண்டும்'' என்று கூறியவண்ணம், அதட்டி அவளைத் தூண்ட, அவள் திருட்டுவிழி விழிக்கிறாள். அவளது உடம்பு அபாரமான திகிலினால் கட்டுக்கு அடங்காமல் முறுக்கிக் கொண்டு வெடவெடவென்று நடுங்குகிறது. அவள் ஏதோ பேச முயற்சி செய்கிறாள்; வாய் குழறிப் போகிறது. கைகளை அண்டாவிற்குள் விட முயல்கிறாள். கைகள் சுவாதீனப் படாமல் முறுக்கிக் கொண்டு தாறுமாறாகப் போகின்றன. அவள் உடனே தனது கணவனது காலடியில் வேரற்ற மரம்போல விழுந்து, ''ஐயோ! எனக்கு மயக்கமாக இருக்கிறதே! நீங்கள் சொல்வது ஒன்றும் விளங்கவில்லையே. நான் யாரோ ஆசை நாயகனை வைத்திருந்ததாகச் சொல்லுகிறீர்கள். அன்றையதினம் நான் அவரை அண்டாவில் ஒளிய வைத்ததாகச் சொல்லுகிறீர்கள். இப்படிப்பட்ட அபாண்டமான பழியை நீங்கள் என்மேல் சுமத்துவது அடாது. இவன் யாரோ திருடன் போலிருக்கிறது; நூலேணி வைத்து ஏறி வந்திருக்கிறான். ஜனங்கள் நடமாட்டமாக இருந்ததைக் கண்டு இதற்குள் ஒளிந்துகொண்டிருக்கிறான்; பிறகு வெளியில் வரமாட்டாமல் இதற்குள்ளேயே இறந்து போயிருக்க

வேண்டும். அதற்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? இப்படி நீங்கள் என்னை உயிரோடு வதைப்பதைவிட, என்னுடைய உயிரை வாங்கி விடுவது நல்லது. இப்படிப்பட்ட நரக வேதனைக்கு என்னை ஆளாக்க வேண்டும் என்று நீங்கள் எத்தனை நாளாக மனதில் வைத்திருந்தீர்கள்? இந்த நடுராத்திரியில் இப்படி என்னை அழைத்துவந்து பயமுறுத்தி இந்தப் பிணத்தை எனக்குக் காட்டி என்னைச் சித்திரவதை செய்வது கொஞ்சமும் அடாது. என்னுடைய பிராணன் தானாகவே போய்விடும் போல இருக்கிறதே! ஐயோ! என்னை முதலில் வெளியில் கொண்டு போய்விட்டு விடுங்கள்'' என்று பிரலாபித்துக் கூக்குரலிட்டடு அழுதாள்.

அதைக்கண்ட அவளது புருஷர் சிறிதும் மனது இரக்க மாகிலும் அநுதாபமாகிலும் காட்டாமல் அருவருப்பும் ஆத்திரமும் அடைந்தவராய் அவளை நோக்கி, ''ஓகோ! இந்த மனிதர் யார் என்பது உனக்குத் தெரியாதோ! இவர் திருடுவதற்காக வந்தவரோ! உண்மைதான். என்னுடைய வீட்டுக்குள் எனக்குத் தெரியாமல் பாதி ராத்திரியில் நூலேணி வழியாக ஏறிவந்து என்னுடைய சொத்தாகிய என் பெண் சாதியின் உடம்பையும் காதலையும் கற்பையும் திருட வந்த மனிதன் என்பது நிச்சயமான சங்கதி; நான் இதற்குமுன் இந்த அண்டாவைத் திறந்து இதற்குள் இருக்கும் பொருள்களை யும் மனிதனையும் ஆராய்ந்து பார்க்காமல் யூகத்தின் மேல் பேசுகிறேன் என்று எண்ணிக் கொண்டாயா? இந்த மனிதனு டைய உடம்பு அழுகி இற்றுப்போய் அடியோடு உருமாறி இருக்கிறது. ஆனாலும், இவனுடைய கைவிரலிலுள்ள முத்திரை மோதிரத்தில் இவனுடைய பெயர் செதுக்கப்பட்டி ருக்கிறது. அதைப் பார்த்தாலே இவன் திருடனல்ல என்பது நன்றாக நிச்சயமாகிறது. அதோடு இந்தப் பட்டு நூலேணியின் வழியாக ஏறிவருபவன் பெண்ணைத் திருட வருபவனே அன்றி மற்ற பொருளைத் திருட வருகிறவனல்ல. ஆகையால், நீ

சொல்வது தப்பான சமாதானம் என்பதைப் பற்றி சந்தேகமே இல்லை. கட்டாரித்தேவன் வந்தால் அவன் இந்த மனிதனுடைய அடையாளத்தைக் கண்டு கொண்டாலும் கொள்வான். ஆகையால், நாம் அண்டாவில் இருக்கும் இவனை வெளியில் எடுத்து துப்பட்டியால் மூடித் தரையில் வைத்துவிட வேண்டும். இவன் யாரோ ஒரு திருடன் என்று நான் அவனிடம் சொல்லியிருக்கிறேன். ஆகையால், அவன் வருவதற்குள் நாம் எச்சரிப்பாக இருக்க வேண்டும். நேரமாகிறது; எழுந்திரு. அவன் வந்து அடையாளம் கண்டுகொண்டால், அதனால் பின் நமக்குப் பலவிதமான கெடுதல் வரும். முதலில், அவன் உன்னுடைய யோக்கியதை எவ்வளவு என்பதை அறிந்து கொள்வதோடு எப்போதாவது சமயம் வந்தால் இந்த இழிவை வெளிப்படுத்தினாலும் படுத்துவான். அதோடு, இறந்து போயிருக்கும் மனிதன் தக்க பெரிய மனிதன். ஆகையால், அவனைக் காணாமல் தேடித் தவித்துக் கொண்டிருக்கும் அவனுடைய சொந்தக்காரர்களிடத்தில் போய் ஏதாவது பணத்தை வாங்கிக்கொண்டு இந்த ரகசியத்தை வெளியிட்டு விடுவான். அவர்கள் அதிகாரிகளோடு வந்து குழியைத் திறந்து பிணத்தைப் பரிசோதனை செய்வதன்றி நம்மையும் கைது செய்வார்கள். அதனால் பலவிதத் துன்பமும் இழிவும் உண்டாகும். ஏற்கனவே நான் செய்துள்ள கொலைக் குற்றத்திலிருந்து தப்புவதற்கு நாம் எவ்வளவோ தந்திரங்களும் பிரயத்தினங்களும் செய்ய நேர்ந்தது. அந்த ரகசியத்தை இந்த கட்டாரித்தேவன் அறிந்து கொண்டிருப்பதால், இதையும் அவன் அறிந்து கொள்ள விட்டு நாம் இன்னும் அதிகமாக அவனுடைய வசத்தில் மாட்டிக்கொள்ளக் கூடாது. ஆகையால் சீக்கிரமாக எழுந்திரு. நீ இந்த அண்டாவிற்குள் இறங்கி உள்ளே இருக்கும் பிணத்தை மேலே தூக்கு. அதை நான் வாங்கி கீழ் வைக்கிறேன். உயிரோடு இருக்கும்போது இவன் உனக்குக் கரும்பு போல இனிப்பாக இருந்தான் போலிருக்கிறது. இப்போது இறந்து போன பிறகு மாத்திரம்

இவ்வளவு அருவருப்பும் பயமும் உண்டாக வேண்டிய காரணம் என்ன?'' என்றார். அதைக்கேட்ட அந்தப்பெண் முன்னிலும் பலமடங்கு அதிக உருக்கமாகக் கரைந்து அழுது, ''என் விஷயத்தில் இவ்வளவு க்ஷமையாகவும் பட்சமாகவும் நடந்து என் மானத்தைக் காப்பாற்றும் தாங்களே இந்தப் பிணத்தையும் வெளியில் எடுக்கக் கூடாதா? என்னை பயமுறுத்த வேண்டுமா?'' என்றாள்.

அதைக்கேட்ட அந்தப் புருஷர், ''ஓகோ! அப்படியா! நீ பலே கைகாரி! நியாயமாகப் பார்த்தால் என் விஷயத்தில் துரோகமாக நடந்து இப்படிப்பட்ட காரியம் செய்த நீதான் இவனை மறைப்பதற்கு வேண்டிய காரியங்களைச் செய்ய வேண்டும். நான் இந்தப் பிணத்தைத் தொடக்கூட நியாயமில்லை. எழுந்திருக்கிறாயா, அல்லது உன்னையும் தூக்கி இதற்குள் போட்டு இதன் வாயை மூடி இப்படியே அண்டாவோடு கொண்டுபோய் உங்கள் இரண்டு பேரையும் சேர்த்துப் புதைத்துவிடச் சொல்லுவேன். அதன்பிறகு நீயும் உன்னுடைய ஆசை நாயகரும் அண்டாவிற்குள் ஆனந்தமாக லீலைகள் செய்தபடியே கைலாசம் போய்ச் சேரலாம்'' என்று கூறியவண்ணம், தமது முழுபலத்தையும் இரு கரங்களால் உபயோகப்படுத்தி, அந்த அழகிய மடந்தையை ஒரு குழந்தையை எடுப்பது போலத் தூக்கி எடுத்து அண்டாவிற்குள் திணிக்க அவள் கரைகடந்த கிலியும் கட்டில் அடங்கா நடுக்கமும் அடைந்தவளாய், ''ஐயோ! என்னைக் கொல்லாதீர்கள். நீங்கள் சொன்னபடியே நான் செய்கிறேன். இதோ பிணத்தைத் தூக்குகிறேன்'' என்று கூறியவண்ணம் அண்டாவிற்குள் நின்றபடி கீழே குனிந்து அதற்குள் அழுகி நீராக ஓடிக் கொண்டிருந்த பிணத்தை மேலே தூக்க, அதன் கைகளும் கால்களும் அப்படியப்படியே இற்று வெவ்வேறாக விழுந்தன. அவள் சுவாசம் வாங்காமல் மூச்சை ஒடுக்கிக் கொண்டபடியே அந்த வேலையை விரைவில் செய்தாள்.

தலையும், கைகளும், கால்களும் இற்று அண்டாவிற்குள் விழுந்துவிட்டதால் முண்டம் மாத்திரம் மேலே வந்தது; அதற்குள் பக்கத்தில் இருந்த சயன அறைக்கு ஓடி, படுக்கை மீதிருந்த துப்பட்டிகளில் இரண்டை எடுத்துக்கொண்டு ஓடிவந்த அந்தப் புருஷர், அவைகளை விரித்துத் தரையில் போட்டு அவளால் கொடுக்கப்பட்ட முண்டத்தை வாங்கி துப்பட்டியில் வைத்து, மற்ற பாகங்களையும் எடுக்கும்படி துரிதப்படுத்த, அவள், தலை, கைகள், கால்கள் முதலியவற்றையும் உடனே எடுத்து அவரிடம் கொடுத்துவிட்டு அண்டாவைவிட்டு விரைவாகக் கீழே குதித்து பக்கத்தில் இருந்த படுக்கையறைக்கு ஓடி அதன் பிறகே மூச்சுவிட்டு சுவாசம் வாங்க ஆரம்பித்தாள். அந்த ஐந்து நிமிஷ நேரத்திற்குள் அவள் அனுபவித்த சங்கடமும், கஷ்டமும் நரக வேதனைகளுக்கே ஒப்பிடத் தக்கவையாக இருந்தன. அவளது பிராணன் அநேகமாய் எமனுலகை எட்டிப் பார்த்துவிட்டு வந்ததாகவே சொல்ல வேண்டும். அவ்வாறு படுக்கையறையில் வந்து நின்ற தமது மனைவியை அவர் அதட்டி உள்ளே வரும்படி கூப்பிட, அவள் அஞ்சி நடுங்கி மறுபடியும் ஸ்நான அறைக்கு ஓடிவந்து சேர்ந்தாள். உடனே அந்தப்புருஷர், பிணத்தின் வலது கையில் இருந்த முத்திரை மோதிரத்தை அவளுக்கு முன்பாகக் கழற்றி மறைவான ஓரிடத்தில் வைத்துவிட்டு, பிணத் துண்டங் களையும், நூலேணியையும் துப்பட்டிகளில் வைத்து ஒன்றாகச் சேர்த்து மூட்டைகட்டி வைக்க, அடுத்த நிமிஷத்தில் கட்டாரித்தேவன் அங்கே வந்து சேர்ந்தான்.

உடனே அந்தப் புருஷர் அவனை நோக்கி, "என்ன கட்டா? வேலை முடிந்து போய்விட்டதா? இதோ மூட்டை தயாராக இருக்கிறது. இதை எடுத்துக்கொண்டு போகலாமா? நாம் இரண்டு பேரும் சேர்ந்து தூக்கினால் அது போதுமா? மூன்றுபேரும் தூக்கவேண்டுமா?" என்றார்.

அதைக் கேட்ட கட்டாரித்தேவன், "வேலையை முடிக்காமல் நான் இங்கே வருவேனா; குழி சரியாக இருக்கிறது. இவ்வளவு சின்ன மூட்டையைத் தூக்குவதற்கு இரண்டாள் எதற்கு? மூன்றாள் எதற்கு? நான் இதைப் போலப் பத்து மூட்டைகளை ஒன்றாகச் சேர்த்துத் தூக்குவேனே! இதற்கு நீங்களும் வரவேண்டுமா? அந்த இருட்டில் அனாவசியமாக எஜமானியம்மாளையும் எதற்காக அழைத்துக் கொண்டு வர வேண்டும். நீங்கள் அம்மாளை அழைத்துக்கொண்டு நீங்கள் இருக்கும் இடத்துக்குப் போய்ச் சேருங்கள். நான் இந்த மூட்டையை எடுத்துக்கொண்டுபோய் குழியில் போட்டுப் புதைத்து, தரையைச் சரிப்படுத்திவிட்டு மறுபடியும் வந்து சாணியினால் இந்த அண்டாவையும் அறைகளையும் நாற்றமில்லாமல் சுத்தம் செய்துவிட்டு கதவைப் பூட்டிக் கொண்டு தங்களுடைய ஜாகையில் திறவுகோலைக் கொண்டு வந்து கொடுக்கிறேன். தாங்கள் நேரில் இருந்து காரியத்தை நடத்த வேண்டும் என்று அவசியமில்லை. போகலாம்" என்று கூறினான்.

அதைக் கேட்ட அந்தப் புருஷர் அவனை நம்பி எல்லாக் காரியங்களையும் செய்யும்படி விடக்கூடாது என்ற அச்சங் கொண்டார். ஆனாலும், அவனுடைய விருப்பத்திற்கு மாறாகத் தாம் நடந்து கொண்டால், அவனிடத்தில் நாம் அவநம்பிக்கைப் படுவதாக அவன் நினைத்து விடுவான் என்ற எண்ணம் கொண்டவராய் அந்தப் புருஷர் அவன் சொன்ன ஏற்பாடுகளை ஒப்புக் கொண்டார்.

உடனே கட்டாரித்தேவன் அந்த மூட்டையை அலட்சியமாகத் தூக்கிக் கையில் பிடித்துக்கொண்டவனாய், அவர்களிடம் விடைபெற்று அவ்விடத்தை விட்டு வெளியில் போய் விட்டான். அவன் மெத்தைப் படிகளின் வழியாகக் கீழே இறங்கிவிட்டான் என்பதை அவனது காலடி ஓசையிலிருந்து நிச்சயித்துக் கொண்ட அம்மனிதர், உடனே லாந்தரை எடுத்துத் தமது கையில் வைத்துக் கொண்டு சிறிது நேரத்திற்குமுன்

அவரால் மறைத்து வைக்கப்பட்டிருந்த முத்திரை மோதிரத்தை எடுத்து லாந்தர் வெளிச்சத்தில் காட்டி அதில் செதுக்கப்பட்டிருந்த எழுத்துக்களைப் படிக்கும்படி தமது மனைவியிடம் சொல்ல, அவள் நிரம்பவும் லஜ்ஜையும் கலக்கமும் கொண்டவளாய்த் தயங்கித் தயங்கி அதைப் பார்த்து பவானியம்பாள்புரம் ஜெமீந்தார் ராமலிங்கப் பிள்ளை என்று படித்தாள்.

அதைக்கேட்ட அவளது புருஷர், ''ஆகா! எனக்கு நீ எப்படிப்பட்ட பெருமை சம்பாதித்துக் கொடுத்திருக்கிறாய்! எல்லாருடைய வீட்டிலும், கள்ளனும், குறவனும், பள்ளனும், பறையனும் திருட வந்தால், நம்முடைய வீட்டில் எப்படிப் பட்ட உன்னத ஸ்திதியிலிருக்கும் ஜெமீந்தார் திருட வந்தார் பார்த்தாயா? இவருக்கு இருக்கும் திரவியம் இந்த ஊரிலுள்ள மருங்காபுரி ஜெமீந்தாருடைய செல்வத்துக்குச் சமதையாகச் சொல்லலாம். அப்படிப்பட்டவரே நம்முடைய வீட்டில் திருடவந்தால், இவரைவிட நாம் அதிக பணக்காரன் என்று அர்த்தமாகிறது அல்லவா? இப்படிப்பட்ட மேன்மையை எனக்குச் சம்பாதித்துக் கொடுத்தவளான உன்னை நான் மகா உபகாரியாக மதிக்கிறேன். ஆனால், உண்மையில் பார்த்தால் நம்மிடத்தில் இப்போது செலவுக்கு ஒரு காசுகூட இல்லை. பணக்காரன் என்று எனக்கு வெறும் பெயர் மாத்திரம் தேடிக்கொடுத்த நீ உண்மையில் பெருத்த பணத்தொகையையும் சம்பாதித்துக் கொடுப்பாயானால், அப்போதுதான் நீ நிஜமான உபகாரி என்று சொல்லத் தகுந்தவளாவாய். ஆனால், இதில் எனக்கு ஒரு சங்கதிதான் ஆச்சரியத்தை உண்டாக்குகிறது. நான்தான் வயதான கிழவனென்று என்னை வெறுத்து ஓர் ஆசை நாயகனைப் பிடித்துக் கொண்டாயே! இவனாவது குமரனாக இருக்கக் கூடாதா? இவனும் என்னைப் போல வயதான கிழவன்தானே! இவனுடைய பிள்ளைக்கே வயது இருபது இருபத்திரண்டு இருக்குமே! ஒருவேளை இவனுடைய பணத்துக்காக ஆசைப்பட்டு இவனைப் பிடித்துக்கொண்டாயா?

அப்படித்தான் ஒரு லக்ஷம், இரண்டு லக்ஷம் பெறத்தக்க பொருள் சம்பாதித்தாயா? எங்கே? நீ பணம் வைத்திருக்கிற இடத்தைக் காட்டு; நான் கொஞ்சம் எடுத்துக்கொள்ளுகிறேன்; வா போகலாம்; நேரமாகிறது. எனக்கு அவசரமான செலவுகளுக்குப் பணம் வேண்டியிருக்கிறது'' என்று குத்தலாக வும் பழிப்பாகவும் பேசி, அவளது கையை இறுகப் பிடித்து கோபத்தோடு அவளை இழுத்துக் கொண்டு உப்பரிகையை விட்டுக் கீழே இறங்கினார்.

18-வது அதிகாரம்

## போலீஸ் எத்தன்

மறுநாளாகிய சனிக்கிழமையன்று காலை பத்துமணி சமயமாயிற்று. அந்த நகரத்தின் ரகசியப் போலீஸ் இன்ஸ்பெக்டர் வடக்கு ராஜவீதியிலிருந்த மருங்காபுரி ஜெமீந்தாரது மாளிகையின் வாசலிற்கு வந்து வெளிக்கதவை இடிக்க, வாசற் காவற்காரன் வந்து கதவைத் திறந்து யாரென்று கேட்டு அவரால் கொடுக்கப்பட்ட ஒருதுண்டுச்சீட்டை எடுத்துக் கொண்டு வெல்வெட்டு மாடத்திற்குச் சென்றான்.

முதல் நாள் இரவில் பூர்ணசந்திரோதயத்தால், விசை வைத்த நாற்காலியில் தள்ளிவிடப்பட்ட கிழவர் எப்போது எப்படித் தம்மை விடுவித்துக்கொண்டார் என்பதைக் கவனிப்போம். அவரால் குறிக்கப்பட்ட ரோஜா புஷ்பத்தை அவள் தொட்ட மாத்திரத்தில் ரகசியமான ஒரு கண்ணாடிக் கதவு திறந்து கொண்டதும், அந்தத் திறப்பின் வழியாக அவள் சென்று படிக்கட்டின் வழியாகக் கீழே இறங்கியதும் தெரிந்த விஷயங்கள். கிழவரது காரியதரிசியான கோவிந்தசாமியை மேலே அனுப்பிவிட்டுப் போவதாக அவள் அவருக்கு வாக்கு

அளித்திருந்தாள். ஆனாலும், அதை நிறைவேற்ற அவளுக்கு மனமில்லை. தான் கோவிந்தசாமியிடம் மேலே போகும்படி சொன்னால், அவன் ஒருவேளை சந்தேகம் கொள்வான் என்று நினைத்தாள். எப்படி என்றால், பெரிய மனிதர்கள் எல்லாம் தங்களது வேலைக்காரர்களை அழைப்பது என்றால், அப்படி மனிதர் மூலமாகச் செய்தி சொல்லி அனுப்பாமல், தங்களது ஆசனத்திற்குப் பக்கத்திலுள்ள விசையை அழுத்தி வேலைக்காரர் இருக்கும் இடத்திலுள்ள மணியை அடித்து, தங்களது கருத்தைத் தந்திபோல ஒரே நொடியில் அவர்களுக்குத் தெரிவித்து அவர்களை அழைப்பது வழக்கம் என்பதைப் பூர்ணசந்திரோதயம் அறிவாள். ஆகையால், அந்த ஏற்பாட்டிற்கு மாறாக தான் அன்றைய தினம் நேரில் போய் வேலைக்காரனை வரச் சொன்னால், அது ஒருவேளை சந்தேகத்தை உண்டாக்கலாம் என்று நினைத்தாள். எவருக்கும் எளிதில் கிடைக்கத் தகாதவளான தன்னை அரும்பாடுபட்டு ஜெமீந்தார் கொண்டு வந்திருக்கையில், அவரே வேலைக்காரர்களை அழைத்துத் தன்னை மரியாதையாக வெளியில் அழைத்துக் கொண்டு போய் வண்டியில் ஏற்றி அனுப்ப வேண்டியது ஒழுங்காக இருக்க, அதைவிட்டு தன்னையே வெளியில் அனுப்பி வேலைக்காரரை மேலே வரச் செய்வது என்றால், அது வேலைக்காரரது மனதில் உடனே சந்தேகத்தை உண்டாக்கும் என்ற எண்ணம் பூர்ணசந்திரோதயத்தின் மனதில் உண்டாயிற்று. தான் கிழவரை ஏமாற்றிவிட்டு வருவதாக வேலைக்காரர்கள் உடனே நினைத்துத் தன்னை வெளியில் விடாமல் வழி மறித்து மறுபடியும் தன்னைப் பலவந்தமாக அழைத்துக்கொண்டு வந்து மேன்மாடத்தில் விட்டு, கிழவரையும் நாற்காலியிலிருந்து விடுவித்தால், அவர் தமது ஆத்திரத்தில் தன்னை வெளியில் விடாமல் எப்படியும் தனது கற்பை அழித்தே அனுப்புவார் என்ற அச்சம் தோன்றியது. ஆகையால், அவள் அவரது விருப்பத்தின்படி கோவிந்தசாமியை மேலே அனுப்ப எண்ண வில்லை. அதோடு, அந்தக் கிழவரின் துடுக்கிற்காகவும்

துணிவிற்காகவும் அவரைச் சரியானபடி தண்டிக்க வேண்டும் என்ற ஆத்திரம் கொண்டிருந்ததாலும், அவள் தனது வாக்குறுதியை நிறைவேற்ற விரும்பவில்லை.

ஆகையால், பூர்ணசந்திரோதயம் மேன்மாடத்தை விட்டுக் கீழே இறங்கி வாசலை நோக்கிச் சென்றபோது, இடையில் காணப்பட்ட கோவிந்தசாமியைக் கண்டு, ''அப்பா! உன்னுடைய பெயரென்ன?'' என்று கேட்க, அவன் தனது பெயர் கோவிந்தசாமி என்று சொன்னான். உடனே பூர்ணசந்திரோதயம், ''சரி; எஜமானர் இந்நேரம் என்னோடு சந்தோஷமாகப் பேசிக் கொண்டிருந்து மிகவும் அலுத்துப் போய் படுத்துத் தூங்குகிறார்; நாளைக் காலைவரையில் யாரும் வந்து தம்மை எழுப்பக் கூடாதென்று உன்னிடத்தில் சொல்லிவிட்டுப் போகும்படி உத்தரவு செய்தார். ஆகையால், நீயாவது வேறே யாராவது மேலே போய் அவருடைய தூக்கத்தைக் கெடுக்க வேண்டாம்'' என்று சொல்லிவிட்டு வெளியில் போய் விட்டாள். கோவிந்தசாமி அதை உண்மையென்று நம்பி மற்ற வேலைக்காரர்களை எல்லாம் படுக்கைக்கு அனுப்பிவிட்டுத் தானும் போய்ப் படுத்துத் தூங்கிவிட்டான்.

மருங்காபுரி ஜெமீந்தாரோ, இரும்புப் பொறியில் அகப்பட்ட எலி போலத் தமது நாற்காலியிலிருந்து அப்புறம் இப்புறம் திரும்பவும் மாட்டாமல் தத்தளித்துத் தளர்ந்து வேதனைப் பட்டிருந்தார். ஆனாலும், பூர்ணசந்திரோதயம் கீழே இறங்கி தமது உத்தரவைத் தெரிவித்தவுடனே கோவிந்தசாமி மேலே வந்து தம்மை அந்தச் சங்கடத்திலிருந்து விடுவிப்பான் என்று எதிர்பார்த்தவராய்த் தமது துன்பங்களை ஒருவாறு பொறுத்துக்கொண்டிருந்தார். அவ்வாறு அரை நாழிகை நேரம் கழிந்தது. கோவிந்தசாமி வரவில்லை. பூர்ணசந்திரோதயம் அவனை வரச் சொல்லாமல் போய்விட்டாள் என்ற எண்ணம் உண்டாயிற்று. உடனே அவரது மனதில் பெருத்த கலக்கமும் அச்சமும் கவலையும் உண்டாகி வருத்தத் தொடங்கின.

அவர் பல்லைக் கடித்துக்கொண்டு மேலும் ஒரு நாழிகை நேரம் பொறுத்துப் பார்த்தார். அப்போதும் அவன் வந்தபாடில்லை. அவள் தம்மை அந்த நிலைமையிலேயே இருக்க வைத்துவிட்டுப் போய்விட்டாள் என்பது சந்தேகமறத் தெரிந்தது. என்ன செய்வார்! அவர் தளர்ந்து மெலிந்துபோன சரீரமும் உடையவர். ஆதலால், அந்த நாற்காலியில் கட்டப்பட்டிருந்தது அவரால் சகிக்க இயலாத நரக வேதனை யாக இருந்தது. அதே நிலைமையில் தாம் அன்றிரவு முழுவதும் இருப்பது முற்றிலும் அசாத்தியமான காரியம் என்ற நினைவும் அந்த இரவு கழியும்முன் தமது உயிரே போய்விடும் என்ற அச்சமும் தோன்றி வதைக்கலாயின; தேகபாதையும், மனோ பாதையும் ஒன்று கூடி ஒரே காலத்தில் அவரைத் துன்புறுத்தின ஆகையால், அவர் நெருப்புத் தணலில் வீழ்ந்த புழுவைப் போல பரமசங்கடமான நிலைமையிலிருந்து உயிரிழிந்து கிடந்தார். அவ்வாறு சில நாழிகை நேரம் கழிந்தது. அவரது நிலைமை வாயால் விவரித்துச் சொல்ல அசாத்தியமானதாக இருந்தது. அவரது கண்கள் இருண்டன. மயக்கத்தினால் அறிவு பிறழ்ந்தது. அதற்குமேல் எவரும் வந்து தம்மை விடுவிக்க வரமாட்டார்கள் என்ற எண்ணமும் உண்டாகவே அவருக்கு ஒரு யோசனை தோன்றியது. தாம் வெட்கமுற்று அவ்வாறு மௌனமாக இருப்பதைவிட, தாம் கோவிந்தசாமியை அழைத்துக் கூக்குரலிட்டுப் பார்க்க வேண்டும் என்ற ஒரு யோசனை தோன்றியது. ஆகவே அவர் முதலில் தணிவாகவும் பிறகுஉரமாகவும் கூச்சலிட்டு கோவிந்தசாமியையும் மற்ற வேலைக்காரர்களையும் கூப்பிட்டுக் கூப்பிட்டுப் பார்த்தார். எவரும் வரவுமில்லை; மறுமொழி கொடுக்கவும் இல்லை. அவர் மேலும் அரைநாழிகை வரையில் தம்மால் இயன்ற வரையில் கூக்குரலிட்டுக் கூவிப் பார்த்தார். அதனால் எவ்விதப் பலனும் உண்டாகவில்லை. ஆகையால், அவர் அலுத்து நம்பிக்கையற்று அயர்ந்து அப்படியே ஓய்ந்து போய் விட்டார். தாம் எவரையாவது கொண்டுவந்து நாற்காலியில்

சிறைப் படுத்துகையில் அவர் கூச்சலிடுவது வெளியில் கேட்காமல் இருக்க வேண்டுமென்ற எண்ணத்தோடு அவர் மிகவும் தந்திரமாக அந்த அறையை அமைத்திருந்தார். ஆதலால், அது இப்போது அவருக்கே துன்பமாக முடிந்தது. அவரது கூக்குரல் வெளியில் கேட்காமல் போய்விட்டது. அவர் நாற்காலியில் கட்டுண்டிருந்து வேதனைப் படப்பட அதற்குமுன் தாம் பல தடவைகளில் மனிதரைக் கொணர்ந்து அந்த நாற்காலிகளில் சிறை வைத்துப் பொழுது விடியும் மட்டும் கவனியாமல் விட்டிருந்த காலத்தில், அவர்களது மனதும் உடம்பும் அப்படித்தானே தவித்து நரக வேதனையுற்று இருக்குமென்ற எண்ணமும் கழிவிரக்கமும் தோன்றி அவரது மனதைத் தண்டித்தன. அப்படிப்பட்ட மகா கேவலமான நிலைமையி லிருந்து வேதனைக் கடலில் ஆழ்ந்து அந்தக் கிழவர் நெடு நேரம் வரையில் தத்தளிக்க, அதற்குமேல் அவரது அங்கங்கள் முற்றிலும் தளர்ந்து உணர்வும் அசைவற்றுப் போனமையால், அவரது மனம் இருளடைந்து போய்விட்டது. அதன்பிறகு என்ன நடந்தது என்பதே அவருக்குத் தெரியாமல் போய்விட்டது.

மறுநாளைய பகல் ஒன்பது மணி வரையில் பொறுத்துப் பார்த்த கோவிந்தசாமி ஒருவாறு சந்தேகம் கொண்டு தமது எஜமானர், என்ன நிலைமையில் இருக்கிறார் என்பதை அறியும் பொருட்டு மேன்மாடத்திற்குப் போய் ரதிகேளி விலாசத்திற்குள் சந்தடி செய்யாமல் நுழைந்து பார்க்க, அவனது வியப்பும் திகிலும் அளவில் அடங்காதனவாக இருந்தன. தனது எஜமானர் விசை வைத்த நாற்காலி ஒன்றின் மேல் கட்டுண்டு இறந்தவர் போலக் கிடந்ததைக் கண்டு விரைந்தோடி, விசையை அழுத்தி அவரை விடுவித்து எடுத்து ஒரு கட்டிலின் மீது படுக்க வைத்து விசிறிகொண்டு வீசிப் பலவகையில் அவருக்கு உபசரணைகள் புரிய, அவர் களை தெளிந்தவராய் எழுந்து உட்கார்ந்து கோவிந்தசாமியிடத்தில்

பேசி முதல் நாள் இரவில் பூர்ணசந்திரோதயம் அவனைக் கண்டு அவனிடத்தில் சொல்லிவிட்டுப் போன பொய்யான செய்தியை உணர்ந்து மிகுந்த அவமானமும் ஏக்கமும் கொண்டவராய்ச் சிறிது நேரமிருந்து, தமது காலை உணவை முடித்துக் கொண்டு ரதி கேளி விலாசத்தை விட்டு முன்னால் இருந்த வெல்வெட்டு மாடத்திற்கு வந்து தமது ஆசனத்தில் அமர்ந்து சோர்வாகவும் விசனமாகவும் உட்கார்ந்து கொண்டி ருந்தார். அப்போது அவரது மனம் காதலைப்பற்றிய எண்ணங்களையாவது கொள்ளாமல் முற்றிலும் ஏமாற்றம் அடைந்து செயலற்று இருந்தது.

அந்தச் சமயத்தில் வேலைக்காரன் ஒருவன் உள்ளே வந்து அவரை வணங்கி, இந்த அதிகாரத் தொடக்கத்தில் விவரிக்கப்பட்டபடி ரகசியப் போலீஸ் இன்ஸ்பெக்டர் கொடுத்து அனுப்பிய துண்டுச்சீட்டைக் கொணர்ந்து கொடுக்க, அதை வாங்கிப் படித்து உணர்ந்த ஜெமீந்தார், உடனே அந்த இன்ஸ்பெக்டரை உள்ளே அனுப்பும்படி உத்தரவு செய்து வேலைக்காரனை அனுப்பினார். சோர்ந்து தளர்ந்து கிடந்த அவரது மனம் ஒருவித உற்சாகத்தையும் ஊக்கத்தையும் அடைந்தது. அவர் ஏதாகிலும் புதுமையான செய்தி கொண்டு வந்திருக்க வேண்டும் என்ற ஆவலும் மகிழ்ச்சியும் கொண்டவராய் உட்கார்ந்திருந்தார்.

அடுத்த நிமிஷத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டர் அவரிடம் வந்து கும்பிடுபோட, ஜெமீந்தார் புன்னகை செய்து அவரை உபசரித்து ஆசனம் கொடுத்து உட்காரச் செய்து, "என்ன இன்ஸ்பெக்டர் ஐயா? அந்தப் பார்சீஜாதிப் பெண்ணைப் பற்றியாவது, எங்களை வழிமடக்கி அழைத்துக்கொண்டு போனவர்களைப் பற்றியாவது ஏதாகிலும் சங்கதி தெரிந்ததா?" என்றார். இன்ஸ்பெக்டர், "ஓ! எல்லாச் சங்கதியும் நன்றாகத் தெரிந்து போய்விட்டது. அதைத் தெரிந்துகொள்ளாமல் நான் தூங்குவேனா! அல்லது நல்ல சங்கதியொன்றையும் தெரிந்து

கொள்ளாமல் நான் இங்கேதான் வருவேனா!'' என்று தற்பெருமையாக மறுமொழி கூறினார்.

அந்தச் செய்தியைக்கேட்ட ஜெமீந்தார் மிகுந்த மன எழுச்சியும் குதூகலமும் ஆவலும் அடைந்தவராய், ''பலே பேஷ்! இப்படிப்பட்ட அபாரமான திறமை உம்மிடம் இருப்பதனாலேதான் எல்லோரும் உம்மைப்பற்றி அவ்வளவு அதிகமாகப் புகழுகிறார்கள்; நானும் மற்றவர்களை விட்டு இந்தக் காரியத்துக்கு உம்மைத் தேர்ந்தெடுத்தேன்'' என்று புகழ்ச்சியாகப் பேசினார். உடனே இன்ஸ்பெக்டர் மகிழ்ச்சி அடைந்து, ''தங்களைப் போன்ற பிரபுக்கள் எல்லாம் என்னைப் புகழ்வதைக் கேட்பதாலுண்டாகும் ஆனந்தம் இருக்கிறதே அதைவிட நான் பெறக்கூடிய சன்மானம் வேறே ஒன்றும் இருக்காது என்பது நிச்சயம். ஆனால், இந்த ரகசியத்தைக் கண்டுபிடிப்பதற்கு நான் பட்டபாடு இவ்வளவு அவ்வளவல்ல. நான் உயிர் தப்பிப் பிழைத்து வந்ததை மறு ஜென்மம் என்றே சொல்லவேண்டும்; இருந்தாலும் நான் அதைப் பற்றிக் கொஞ்சமும் கவலைப்படவில்லை. என்னுடைய உத்தியோகமே அப்படிப்பட்டது. நான் இதுவரையில் இதைப் போல எத்தனையோ தடவை அபாயங்களில் அகப்பட்டுத் தப்பி வந்திருக்கிறேன். ஆனால், இந்தத் தடவை நான் உயிர் தப்பி வந்தது தெய்வச் செயலினால் என்று சொல்ல வேண்டுமே அன்றி என்னுடைய சாமர்த்தியத்தினால் என்று சொல்ல முடியாது'' என்று பீடிகை போட்டுப் பேசினார்.

அதைக்கேட்ட ஜெமீந்தார் விவரங்களை அறிய ஆவல்கொண்டவராய், ''ஓகோ! அப்படியா சங்கதி! போகட்டும்; நல்லவேளையாக உயிர் தப்பித் திரும்பி வந்தீரே! அது ஒன்றே பெரிய சந்தோஷ சங்கதி; அதோடு காரியத்தையும் ஜெயமாக்கிக் கொண்டு வந்திருக்கிறீர். ஆகையால், நாம் இரட்டிப்பு சந்தோஷம் அடைவதோடு உம்மையும் இரட்டிப்பாகப் புகழ வேண்டும்; இருக்கட்டும்.

நான் மறுபடியும் இளவரசரைப் பார்க்கும்போது உம்மைப் பற்றித் தக்கபடி சிபாரிசு செய்து உமக்கு ஏதாவது பெரிய உத்தியோகம் கொடுக்கும்படி செய்கிறேன். விவரங்களைக் கேட்கவேண்டும் என்று எனக்கு நிரம்பவும் ஆவலாக இருப்பதால், நீர் அதிகமாக வளர்த்தாமல் சுருக்கமாகச் சங்கதியைச் சொல்லும்'' என்றார்.

உடனே இன்ஸ்பெக்டர், ''ஓ! அப்படியே சொல்லுகிறேன். புதன்கிழமை முழுதும் நான் பிச்சைக்காரனைப்போல வேஷம் போட்டுக் கொண்டு ரஸ்தாவில் உட்கார்ந்திருந்தது பிரயோசனப்படாமல் போன சமயத்தில், தங்களுடைய வேலைக்காரனால் அழைக்கப்பட்டு நான் தங்களிடம் வந்து, பேசிக்கொண்டிருந்துவிட்டு வெளியில் போனேன் அல்லவா. அதன்பிறகு எனக்கு அன்றைய இரவு முழுதும் தூக்கமே வரவில்லை. என் மனம் முழுதும் அதே விஷயத்தில் லயித்துப் போயிருந்ததன்றி, அன்றைய பகல் முழுதும் தாங்களும் நானும் அவ்வளவு தூரம் விழிப்பாக இருந்தும் நமக்குத் தெரியாமல் கண்கட்டு வித்தையில் நடப்பதுபோல, தினசரி டைரிப் புத்தகம் பூத்தொட்டிக்குள் வந்து சேர்ந்ததை நினைக்க நினைக்க, என்னுடைய ஆச்சரியம் சொல்லிமுடியாது. தங்களுடைய அந்தரங்க வேலைக்காரனான கோவிந்தசாமியும், அன்றைய தினம் தங்களுடைய ஜாகைக்கு வந்து விட்டுப் போன மூன்று மனிதர்களும் இந்த விஷயத்தில் கொஞ்சமும் சம்பந்தப்படக் கூடியவர்கள் அல்ல என்பது என் மனசில் நிச்சயமாகப்பட்டது. ஆகையால், என்னுடைய மூளை குழம்பிப் போய்விட்டது. அறிவு கலங்கிப் போய்விட்டது. பொழுது விடிகிறவரையில் நான் என்னுடைய அறிவை உபயோகப்படுத்தி பலவித யூகங்களும், ஆட்சேபணை சமாதானங்களும் செய்து கொண்டிருந்து மறுநாட் காலையில் ஒருவித முடிவிற்கு வந்தேன். புதன்கிழமையன்று தினசரி டைரியை ரகசியமாகக் கொண்டுவந்து தங்களிடம்

சேர்த்தவர்கள் யாராக இருக்கலாம் என்பதை முன்னால் கண்டுபிடிப்பதற்காக நான் என் மூளையை வதைத்துக் கொள்வதைவிட, அதைக் கடைசியில் வைத்துக்கொண்டு திங்கட்கிழமை ராத்திரி உங்களை வழிமறித்து பலவந்தமாகக் கொண்டு போனவர்கள் யாவர் என்பதையும் அந்தப் பெண் யார் என்பதையும் முதலில் கண்டுபிடித்தால், மற்ற விஷயம் அதிலிருந்து எளிதில் விளங்கிவிடும் என்று எண்ணிக் கொண்டேன். அந்த வழிப்பறியின் விவரங்களைத் தாங்கள் அன்றையதினம் என்னிடத்தில் விவரமாகச் சொன்னபோது, அந்த விவரங்களிலிருந்து எனக்கு இரண்டு சூசனைகள் அகப்பட்டன. தங்களையும் இளவரசரையும் வழிமறித்து அழைத்துக்கொண்டு போன முரட்டு மனிதர்களில் ஒருவன் இளவரசரை மாத்திரம் தனியாக அழைத்துக்கொண்டு போய் பார்சீ ஜாதிப் பெண்ணின் இடத்தில் விட்டுவிட்டுத் திரும்பி வந்து தங்களிடம் இருந்த கடிகாரம், மோதிரங்கள், பணம், தினசரி டைரிப் புஸ்தகம் முதலிய பொருள்களை அபகரித்துக் கொண்டான் என்று சொல்லி, அவனுடைய உயரம், பருமன் முதலிய அடையாளங்களை எல்லாம் எடுத்துச் சொன்னீர்கள் அல்லவா? அதிலிருந்து எனக்கு ஒரு சந்தேகம் உண்டாயிற்று. நம்முடைய காசாநாட்டில் கட்டாரித் தேவன் என்று மாடு பிடிக்கிற கொள்ளைக்காரன் ஒருவன் இருக்கிறதாகத் தாங்கள் ஒருவேளை கேள்வியுற்றிருக்கலாம். அவன் இதுவரையில் எத்தனையோ கொள்ளைகளை நடத்தி இருந்தாலும் அவன்தான் வந்தவன் என்று சொல்லி ருஜூப்படுத்த சாட்சிகள் முன்வராமையால், அவனை நாங்கள் பிடித்துத் தண்டனைக்குக் கொண்டுவராமல் இருக்கிறோம். அவனை நான் இரண்டொரு தடவைகளில் பார்த்திருக்கிறேன். அவனுடைய அடையாளங்களுக்கும் தாங்கள் சொன்ன விவரங்களுக்கும் ஒற்றுமையாக இருந்தன. ஆகையால், அப்படித் துணிந்துவந்து வழிமறித்துத் தங்களையும் இளவரசரையும் கொண்டுபோனவன் கட்டாரித்தேவனாகத்

தான் இருக்க வேண்டும் என்று நான் யூகம் செய்து கொண்டேன். ஆனால், அவன் எப்போதும் திருட்டோடு நிற்பானேயொழிய இப்படிப்பட்ட காதல் விஷயங்களில் தலையிடக்கூடியவன் அல்ல என்ற சந்தேகம் உண்டாயிற்று. ஆகையால், நான் மேலும் சிந்தித்தேன். அன்றைய தினம் அவர்கள் செய்திருந்த ஏற்பாடுகளை எல்லாம் பார்த்தால், அவர்கள் தற்செயலாக அதைச் செய்யவில்லை என்பதும், முன்னாக முடிவு செய்தே அப்படிப்பட்ட ஏற்பாடுகள் எல்லாம் செய்தார்கள் என்பதும் புலப்பட்டன. இளவரசரும் தாங்களும் அன்றைய தினம் ராத்திரி அம்மன்பேட்டை அன்னத்தின் வீட்டுக்கு வந்திருந்துவிட்டு நடு இரவில் திரும்பிவரப் போகிறீர்கள் என்பதை எல்லாம் முன்னாக அறிந்தே அவர்கள் சகலமான ஏற்பாடுகளையும் தோதாகச் செய்து வைத்திருக்க வேண்டும் என்ற ஒரு நிச்சயம் என் மனசில் உண்டாயிற்று. ஆகவே, அன்னத்தம்மாளுடைய வீட்டில் உள்ள யாரோ ஒரு மனிதர் இந்த விஷயத்தில் சம்பந்தப்பட்டிருந்து, அவர் அந்தச் சமாசாரத்தைச் சொன்னதனாலேயே, கட்டாரித் தேவன் அதற்குப் பொருத்தமாக சகலமான ஏற்பாடுகளையும் செய்திருக்கிறான் என்று நான் எண்ணிக் கொண்டேன். ஆகவே இந்த இரண்டு சூசனைகளையும் வைத்துக் கொண்டு வேலை செய்தால், உண்மை விளங்கிப் போகும் என்று உறுதி செய்து கொண்டவனாய், நான் வியாழக்கிழமை காலையில் புறப்பட்டு அம்மன்பேட்டைக்குப் போய்ச் சேர்ந்தேன்'' என்றார்.

ஜெமீந்தார் மிகுந்த வியப்புற்று, ''பலே! பேஷ்! அன்றைய தினம் என்னிடம் சொத்துக்களை அபகரித்தவன் கட்டாரித் தேவனா! அவன் பரம துஷ்டன் என்று ஜனங்கள் சொல்லக் கேள்வியுற்றிருந்தேன். கடைசியில் அவன் என்னிடத்திலும் வந்து தம் சாமர்த்தியத்தைக் காட்டிவிட்டான் போல் இருக்கிறது. அன்னத்தம்மாள் வீட்டில் இருக்கும் எவனோ

சங்கதி சொல்லிய பிறகே இது நடந்திருக்க வேண்டும் என்று நீர் நினைத்தது சரியான விஷயம். உம்முடைய புத்திக் கூர்மையை நான் நிரம்பவும் மெச்சுகிறேன். நானும் இளவரசரும் அதைப்பற்றி எவ்வளவோ யோசித்து யோசித்துப் பார்த்தோம். நீர் சொன்ன சூசனை எங்களுக்குப் படவே இல்லை. ஒரு குறிப்பும் இல்லாமல் எதைக் கொண்டு இவர்களைக் கண்டுபிடிப்பது என்று நாங்கள் நம்பிக்கை அற்றிருந்தோம். இப்போது எல்லா விஷயமும் சுலபமாகத் தோன்றுகிறது. சரி; இருக்கட்டும். மற்ற விவரங்களைச் சொல்லும்'' என்றார்.

இன்ஸ்பெக்டர் மேலும் பேசத் தொடங்கி, ''நான் என்னுடைய சுயரூபத்தோடு போனால், ஜனங்கள் சந்தேகப்பட இடம் உண்டாகும் என்று நினைத்து, உடைந்து போன இரும்பு பித்தளை சாமான்களுக்குப் பேரீச்சம்பழம் விற்கிற ஒரு கிழவன் மாதிரி நான் மாறுவேஷம் போட்டுக் கொண்டேன்; அழுக்கு அடைந்த கிழிந்த துணியினால் முண்டாசு கட்டிக்கொண்டேன்; நெற்றியில் நன்றாக நாமம் போட்டுக் கொண்டேன்; நரைத்துப்போன மயிர்களால் ஆன மீசை தாடிகளை முகத்தில் ஒட்டவைத்துக் கொண்டேன்; அழுக்கு அடைந்ததும், பலவிடங்களில் கிழிந்து போனதுமான ஒரு சட்டையையும் வேஷ்டியையும் அணிந்து கொண்டு கொஞ்சம் பேரீச்சம்பழம், திராசு, படிக்கல்கள், பழைய இரும்பு பித்தளை சாமான்கள் முதலியவைகளை ஒரு மூங்கில் தட்டில் வைத்துக் கொண்டு நான் அம்மன் பேட்டைக்குப் போய்ச் சேர்ந்தேன். சேர்ந்து, அன்னத்தம்மாளுடைய வீடு இருந்த தெருவிற்குள் நுழைந்து பகல் இரண்டு மணி சமயத்தில் பேரீச்சம்பழம் விற்றுக் கொண்டே போனேன். அன்றைய தினம் காலையிலிருந்து, வேண்டும் என்றே, நான் எவ்வித ஆகாரமும் சாப்பிடாமல் போயிருந்தேன். ஆகையால், பசி தாகங்களினால் நான் மிகவும் களைத்துச் சோர்வடைந்து இருந்ததால் நான் மூன்று நாட்களாகப் பட்டினி கிடந்தவன்

போல நடித்துப் பிரமாதமாகக் களைத்துப் போனவன் போலப் பாசாங்குபண்ணி அடிக்கடி திண்ணைகளின் மேல் உட்கார்ந்து உட்கார்ந்து எழுந்து போனேன். அந்த ஊரிலுள்ள குழந்தைகளும் பெண்பிள்ளைகள் பலரும் வந்து சூழ்ந்துகொண்டு பழைய இரும்பு பித்தளைகளைக் கொடுத்து, பேரீச்சம்பழம் வாங்கிக் கொண்டு போயினர். அப்படி வந்தவர்களுள் பத்து வயதுப் பையன் ஒருவன் இருந்தான். அவன் ஏழைப் பையன் போலக் காணப்பட்டான். அவனுக்குப் பழைய இரும்பு பித்தளை சாமான்கள் ஒன்றும் கிடைக்கவில்லை. ஆனால், பேரீச்சம் பழத்தில் அவனுக்கு இருந்த ஆசையினால் அவன் என்னை விட்டுப் போக மாட்டாமல் என்னோடு கூடவே தொடர்ந்து வந்தான். மற்றவர்கள் எல்லோரும் பேரீச்சம்பழம் வாங்கிக் கொண்டு போய்விட்டார்கள். அந்தப் பையன் மாத்திரம் ஏங்கிய பார்வையாகப் பார்த்துக்கொண்டு என்னோடு கூடவே வந்து, நான் உட்கார்ந்த இடத்துக்குப் பக்கத்திலெல்லாம் நின்று கொண்டே இருந்தான். அந்தத் தெருவிலிருந்த வீடுகள் எல்லாவற்றிலும் அன்னத்தம்மாளுடைய வீடே பெரிய அரண்மனைபோல இருந்த மெத்தைவீடு. அந்த வீட்டுக்கு எதிரில் இருந்த வீட்டுக்குப் போன நான், நிரம்பவும் களைத்துப் போனவன் போலப் பாசாங்கு பண்ணி அங்கேயே கொஞ்ச நேரம் உட்கார்ந்து கொண்டேன். எனக்கெதிரில் அந்தப் பையனும் நின்று கொண்டிருந்தான். அவனுக்குக் கொஞ்சம் பேரீச்சம்பழம் கொடுத்து எனக்கு வேண்டிய சங்கதிகளை யெல்லாம் அவனிடத்திலிருந்து கிரகித்துக் கொள்ளலாம் என்ற யோசனை என் மனதில் உண்டாயிற்று. பழத்தை அதிகமாகக் கொடுத்தால், அவன் அதை வாங்கிக்கொண்டு போனாலும் போய்விடுவான் என்று நினைத்துக் கொஞ்சமாக முதலில் கொடுத்து அவனுடைய ஆசையை அதிகப்படுத்தி, அதன்பிறகு அவனை வசப்படுத்த எண்ணி அவனைப் பார்த்து அன்பாகப் பேசத் தொடங்கி, "ஆரப்பா நீ! அப்ப மொதக் கொண்டு நீ என்னோட கூடவே வாரியே. ஒங்க

ஊட்டுல, இரும்பு, பித்தளெ ஒண்ணும் இல்லையா?'' என்றேன். அவன் ஒன்றுமில்லை என்று விசனத்தோடு மறுமொழி கூறினான். நான் உடனே, ''எது ஒங்க ஊடு?'' என்றேன். அவன் தங்களுடைய வீடு பக்கத்துத் தெருவில் இருக்கிறது என்று சொன்னான். ''அப்படியானா நீ அடுத்த தெருவுல இருந்தா என்னோட வாறே? ஒன்னெப் பார்த்தா நல்ல பையனாட்டம் தோணுது. போனாப் போவுது. ஒனக்கு நான் சொம்மாக் கொஞ்சம் பேரீச்சம்பழந் தாரேன். தின்னுப்புட்டு போ; தம்பி?'' என்று நிரம்பவும் பிரியமாகப் பேசியபடி இரண்டு சிறிய சுளைகளை எடுத்து அவனிடத்தில் நீட்டினேன். எதிர்பாராத அந்த வெகுமதியை மிகவும் சந்தோஷமாக வாங்கிக்கொண்ட அந்தப் பையன் ஆவலோடு அதை வாயில் போட்டு மென்று தின்றான். அவன் அந்த இன்பத்தை அநுபவித்துக் கொண்டிருந்த சமயத்தில் நான் அவனை, ''அடேய் பையா! இதோ பக்கத்துலே பெரிய ஊடு இருக்குதே, அது யாரோடே வீடு தெரியுமா ஒனக்கு?'' என்று லோகாபிராமமாகக் கேட்டேன். நான் அவனுக்கு அன்போடு பழம் கொடுத்ததைப் பற்றி, என்னிடத்தில் மிகுந்த நன்றியறிதல் சுரந்தவனாகக் காணப்பட்ட அந்தப் பையன், எனக்கு வேண்டிய எந்த உதவியையும் செய்யத் தயாராக இருப்பதைத் தோற்றுவித்து, மிகவும் துடியாக எனக்குப் பதில் சொல்லத் தொடங்கி, ''அந்த வீடு அன்னத்தம்மாளோடெ வீடு. அவுங்க ரொம்ப பணக்காரரு. அவுங்க வீட்டுக்குத் தஞ்சாவூரு ராசா கீசாவெல்லாம் வாரது வளமையிங்க; அவுங்க பேரீச்சம்பழம் எப்பவும் வாங்கறதில்லே'' என்று ஒன்றுக்கு நான்காக பதில் சொல்லி, நான்கேட்ட கேள்வியை என்னுடைய தொழிலுக்குச் சம்பந்தப்படுத்திப் பேசினான். அதை வைத்துக்கொண்டு நான், ''சரி; அவுங்க வாங்குவாங்களா! மாட்டாங்கதான். அவுங்க வீட்டுலே வேலை செய்யற ஆளுங்க யாராச்சும் இருப்பாங்களே, அவுங்ககூட வாங்கமாட்டாங்களா?'' என்றேன். உடனே அந்தப் பையன் ''ஓ! அவுங்க வாங்குவாங்க. ஆனா அவுங்க இந்த ஊட்டு

வேலையெல்லாம் முடிச்சுப்புட்டு அவங்களோட சொந்த ஊட்டுக்குப் போயிருப்பாங்க; இங்கிட்டு இருக்க மாட்டாங்க. அதனாலெதான், அவுங்க பேரீச்சம்பளம் வாங்கல்லே'' என்றான். நான் உடனே அவனைப் பார்த்து , ''இந்தப் பெரிய வூட்டுலே வேலைக்காரரு ஒரு சுமாரு பத்துப் பேரு இருப்பாங்களா?'' என்றேன். அந்தப் பையன், ''இல்லே இல்லே. பொம்புள்ள ரெண்டுபேரு இருக்கறாளுவ. ஒருத்தி சமயக்காரி, ஒருத்தி வேலைக்காரி. ஆம்புள்ள ஒருத்தன்தான் இருக்கான். அவனோட பேரு கந்தசாமி வாண்டையானுன்னு சொல்லுவாங்க. அவனோட ஊடு பள்ளித் தெருவிலே இருக்குது'' என்றான். நான் உடனே அவனைப் பார்த்து, ''ஆனா சரி; நானும் வாண்டையாச் சாதியாந்தான். எனக்கு ரொம்ப பசிக்குது. அவுங்க வூட்டுக்குப் போயிக் கொஞ்சம் சோறுபோடச் சொல்லித் தின்னாத்தான் இனிமேலே நடக்கமுடியும். நீ என்னோட கூடவே வந்து அந்த ஊட்டெக் காட்டினா ஒனக்கு இன்னும் கொஞ்சம் பேரீச்சம்பழம் தர்றேன், காட்டுறியா?'' என்றேன். பையன், ''ஓ! காட்டறேன். வா போவலாம்'' என்று துடியாக பதில் சொன்னான். உடனே நான் என்னுடைய பேரீச்சம்பழத் தட்டைத் தூக்கித் தலையில் வைத்துக்கொண்டு மெல்ல மெல்ல நடந்து அந்தத் தெருவை விட்டுப் பக்கத்தில் இருந்த பள்ளித் தெருவுக்குப் போனேன். அது பதினைந்து இருபது குச்சு வீடுகள் உள்ள சிறிய தெரு. அந்தப் பையன் தூரத்தில் இருந்தபடி கந்தசாமி வாண்டையானுடைய வீட்டைக் காட்டினான். அவனுக்கு மறுபடியும் நான் கை நிறையப் பேரீச்சம்பழம் கொடுத்துப் போகும்படி அனுப்பி விட்டு அவனால் அடையாளம் காட்டப்பட்ட வீட்டுக்குப் போய், ''உஸ் அப்பாடா'' என்று சொல்லிக் கொண்டு திண்ணையின்மேல் உட்கார்ந்து கொண்டு ''ஓட்டை ஒடசல் செம்பு பித்தளைக்குப் பேரிச்சம்பழம்'' என்று ஒரு பெரிய கூச்சல் போட்டேன். முந்திய தெருவில் ஜனங்கள் வந்தது போல அவ்விடத்திலும் ஏராளமானவர்கள் வந்து பழைய இரும்பு

பித்தளை சாமான்களைக் கொடுத்துப் பேரீச்சம்பழம் வாங்கிக் கொண்டு போனார்கள். நான் உட்கார்ந்திருந்த வீட்டில் இருந்து ஓர் ஆண் பிள்ளையும், அவனுடைய பெண்டு பிள்ளைகளும் வெளியில் வந்து தங்களுடைய வீட்டில் இருந்த உடைந்த வஸ்துக்களை கொடுத்துப் பழம் வாங்கினார்கள். அந்த மனிதன்தான் கந்தசாமி வாண்டையான் என்று நான் யூகித்துக்கொண்டு மற்றவர்களுக்குக் கொடுத்ததைவிட அவனுக்கு அதிகமாகப் பழம் கொடுத்தேன்; அவனும் அவனுடைய பெண்ஜாதியும் பிள்ளைகளும் நிரம்பவும் சந்தோஷம் அடைந்ததன்றி என்னிடத்தில் பிரியமாகப் பேசினார்கள். அவர்களுடைய வீட்டின் மூலை முடுக்குகளில் எல்லாம் தேடிப்பார்த்து அவர்களுடைய கையில் அகப்படக் கூடிய சாமான்களை எல்லாம் கொண்டு வந்து போட்டுப் போட்டு மேன்மேலும் பழம் வாங்கிக் கொண்டார்கள். நானும் பழத்தைத் தாராளமாக அள்ளி அள்ளிக் கொடுத்துக்கொண்டே வந்தேன். மற்றவர்களுக்குக் கொஞ்சமாகக் கொடுத்ததையும் அவர்கள் கண்டுகொண்டார்கள். ஆகையால், அவர்கள் என்னை ஒரு ஆப்த சிநேகிதனைப் போல மதித்து என்னிடத்தில் அன்பாகப் பேசியதன்றி, மற்ற ஜனங்கள் போனபிறகு, என்னுடைய சொந்த ஊர் முதலிய விவரங்களையும் யோக க்ஷேமங்களையும் விசாரிக்கத் தொடங்கினர். நான் இருப்பது தஞ்சாவூர் ஆட்டுமந்தைத் தெருவில் என்றும், நானும் வாண்டையார் ஜாதியைச் சேர்ந்தவன் என்றும், பெரிய குடும்பஸ்தன் என்றும், பேரீச்சம்பழ வியாபாரத்தில் நஷ்டமே வருவதன்றி லாபம் வருகிறது இல்லை என்றும், வேறே என்ன தொழில் செய்கிறது என்பது தெரியாமையால் நான் அந்தத் தொழிலை விடாமல் செய்து வருவதாகவும், நான் சாப்பிட்டு இரண்டு தினங்கள் ஆயின என்றும், பசியினால் நிரம்பவும் தள்ளாடுவதாகவும் சொல்லி அந்த ஊரில் ஏதாவது சோற்றுக்கடை இருக்கிறதா என்று கேட்டேன். கந்தன் என் விஷயத்தில் நிரம்பவும் இரக்கம்கொண்டு, அந்த ஊரில்

பித்தளை சாமான்களைக் கொடுத்துப் பேரீச்சம்பழம் வாங்கிக் கொண்டு போனார்கள். நான் உட்கார்ந்திருந்த வீட்டில் இருந்து ஓர் ஆண் பிள்ளையும், அவனுடைய பெண்டு பிள்ளைகளும் வெளியில் வந்து தங்களுடைய வீட்டில் இருந்த உடைந்த வஸ்துக்களை கொடுத்துப் பழம் வாங்கினார்கள். அந்த மனிதன்தான் கந்தசாமி வாண்டையான் என்று நான் யூகித்துக்கொண்டு மற்றவர்களுக்குக் கொடுத்ததைவிட அவனுக்கு அதிகமாகப் பழம் கொடுத்தேன்; அவனும் அவனுடைய பெண்ஜாதியும் பிள்ளைகளும் நிரம்பவும் சந்தோஷம் அடைந்ததன்றி என்னிடத்தில் பிரியமாகப் பேசினார்கள். அவர்களுடைய வீட்டின் மூலை முடுக்குகளில் எல்லாம் தேடிப்பார்த்து அவர்களுடைய கையில் அகப்படக் கூடிய சாமான்களை எல்லாம் கொண்டு வந்து போட்டுப் போட்டு மேன்மேலும் பழம் வாங்கிக் கொண்டார்கள். நானும் பழத்தைத் தாராளமாக அள்ளி அள்ளிக் கொடுத்துக்கொண்டே வந்தேன். மற்றவர்களுக்குக் கொஞ்சமாகக் கொடுத்ததையும் அவர்கள் கண்டுகொண்டார்கள். ஆகையால், அவர்கள் என்னை ஒரு ஆப்த சிநேகிதனைப் போல மதித்து என்னிடத்தில் அன்பாகப் பேசியதன்றி, மற்ற ஜனங்கள் போனபிறகு, என்னுடைய சொந்த ஊர் முதலிய விவரங்களையும் யோக க்ஷேமங்களையும் விசாரிக்கத் தொடங்கினர். நான் இருப்பது தஞ்சாவூர் ஆட்டுமந்தைத் தெருவில் என்றும், நானும் வாண்டையார் ஜாதியைச் சேர்ந்தவன் என்றும், பெரிய குடும்பஸ்தன் என்றும், பேரீச்சம்பழ வியாபாரத்தில் நஷ்டமே வருவதன்றி லாபம் வருகிறது இல்லை என்றும், வேறே என்ன தொழில் செய்கிறது என்பது தெரியாமையால் நான் அந்தத் தொழிலை விடாமல் செய்து வருவதாகவும், நான் சாப்பிட்டு இரண்டு தினங்கள் ஆயின என்றும், பசியினால் நிரம்பவும் தள்ளாடுவதாகவும் சொல்லி அந்த ஊரில் ஏதாவது சோற்றுக்கடை இருக்கிறதா என்று கேட்டேன். கந்தன் என் விஷயத்தில் நிரம்பவும் இரக்கம்கொண்டு, அந்த ஊரில்

பித்தளை சாமான்களைக் கொடுத்துப் பேரீச்சம்பழம் வாங்கிக் கொண்டு போனார்கள். நான் உட்கார்ந்திருந்த வீட்டில் இருந்து ஓர் ஆண் பிள்ளையும், அவனுடைய பெண்டு பிள்ளைகளும் வெளியில் வந்து தங்களுடைய வீட்டில் இருந்த உடைந்த வஸ்துக்களை கொடுத்துப் பழம் வாங்கினார்கள். அந்த மனிதன்தான் கந்தசாமி வாண்டையான் என்று நான் யூகித்துக்கொண்டு மற்றவர்களுக்குக் கொடுத்ததைவிட அவனுக்கு அதிகமாகப் பழம் கொடுத்தேன்; அவனும் அவனுடைய பெண்ஜாதியும் பிள்ளைகளும் நிரம்பவும் சந்தோஷம் அடைந்ததன்றி என்னிடத்தில் பிரியமாகப் பேசினார்கள். அவர்களுடைய வீட்டின் மூலை முடுக்குகளில் எல்லாம் தேடிப்பார்த்து அவர்களுடைய கையில் அகப்படக் கூடிய சாமான்களை எல்லாம் கொண்டு வந்து போட்டுப் போட்டு மேன்மேலும் பழம் வாங்கிக் கொண்டார்கள். நானும் பழத்தைத் தாராளமாக அள்ளி அள்ளிக் கொடுத்துக்கொண்டே வந்தேன். மற்றவர்களுக்குக் கொஞ்சமாகக் கொடுத்ததையும் அவர்கள் கண்டுகொண்டார்கள். ஆகையால், அவர்கள் என்னை ஒரு ஆப்த சிநேகிதனைப் போல மதித்து என்னிடத்தில் அன்பாகப் பேசியதன்றி, மற்ற ஜனங்கள் போனபிறகு, என்னுடைய சொந்த ஊர் முதலிய விவரங்களையும் யோக க்ஷேமங்களையும் விசாரிக்கத் தொடங்கினர். நான் இருப்பது தஞ்சாவூர் ஆட்டுமந்தைத் தெருவில் என்றும், நானும் வாண்டையார் ஜாதியைச் சேர்ந்தவன் என்றும், பெரிய குடும்பஸ்தன் என்றும், பேரீச்சம்பழ வியாபாரத்தில் நஷ்டமே வருவதன்றி லாபம் வருகிறது இல்லை என்றும், வேறே என்ன தொழில் செய்கிறது என்பது தெரியாமையால் நான் அந்தத் தொழிலை விடாமல் செய்து வருவதாகவும், நான் சாப்பிட்டு இரண்டு தினங்கள் ஆயின என்றும், பசியினால் நிரம்பவும் தள்ளாடுவதாகவும் சொல்லி அந்த ஊரில் ஏதாவது சோற்றுக்கடை இருக்கிறதா என்று கேட்டேன். கந்தன் என் விஷயத்தில் நிரம்பவும் இரக்கம்கொண்டு, அந்த ஊரில்

சோற்றுக்கடையே இல்லை என்றும், தன் வீட்டில் கொஞ்சம் சாப்பாடு போடச் சொல்வதாகவும் சொல்லி விட்டுத் தன்னுடைய பெண் ஜாதியைக் கூப்பிட்டு எனக்கு உடனே சாப்பாடு போடும்படி உத்தரவு செய்தான். உடனே நான் உள்ளேபோய் அவனுடைய பெண் ஜாதியினால் அன்பாகப் படைக்கப்பட்ட ஆகாரத்தை உண்டபின் வெளியில் வந்து அப்பாடாவென்று திண்ணையில் படுத்துக்கொண்டு அவர்களுடைய நற்குணத்தைப்பற்றியும், தயான மனசைப் பற்றியும், அவர்கள் செய்த தருமத்தைப் பற்றியும், பலவாறு புகழ்ந்து பேசிப் பேசி, என்னுடைய தட்டில் மிச்சம் இருந்த சுமார் ஒரு வீசை பேரீச்சம்பழத்தை எல்லாம் அப்படியே கந்தனிடம் கொடுத்து அவனுடைய பிள்ளை குட்டிகளுக்கு எல்லாம் கொடுத்துவிடும்படி சொல்ல, அவன் வேண்டாம் வேண்டாம் என்று உபசார வார்த்தை சொல்லிக்கொண்டே அதை வாங்கிக் கொண்டான். என்னுடைய பெரும் புத்தியையும், தயாள குணத்தையும் கண்ட கந்தன் அளவற்ற சந்தோஷம் அடைந்து என்னிடத்தில் பிரமாதமான வாஞ்சை வைக்க ஆரம்பித்தது அன்றி, என்னைவிட்டுப் பிரியாமல் திண்ணைக்கு வந்து என் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு என்னோடு சந்தோஷமாகப் பேச ஆரம்பித்தான். நானும் அவனும் அதன்பிறகு இரண்டு நாழிகை நேரம் வரையில் பற்பல விஷயங்களைப் பற்றி வேடிக்கையாகவும் சந்தோஷமாகவும் பேசிக்கொண்டிருந்தோம். அதற்குள் நான் அவனுடைய மனசையெல்லாம் அடியோடு கவர்ந்துவிட்டேன். அவன் என்னைத் தன்னுடைய அந்தரங்க சிநேகிதன் போலவே மதித்து, சகலமான விஷயங்களையும் மறைக்காமல் பேசும் நிலைமைக்கு வந்துவிட்டான். அதன் பிறகு நாங்கள் இருவரும் சாராயக்கடைக்குப் போய்க் குடித்துவிட்டு வருகிறது என்று தீர்மானித்தோம். உடனே நான் அவனை அழைத்துக்கொண்டு அந்த ஊருக்கு வெளியில் இருந்த சாராயக்கடைக்குப் போனேன். என்னுடைய சட்டைப்பையில் நான் ஏராளமாக

வைத்திருந்த பணத்தை எடுத்துச் செலவு செய்து அவனுடைய மனம் திருப்தி அடையும்வரையில் அவனுக்கு விருந்து நடப்பித்தேன். நானும் குடிக்க வேண்டும் என்று அவன் என்னை அடிக்கடி வற்புறுத்தினதைக் கண்டு நான் பாத்திரத்தை வாயில் வைத்து வைத்துக் குடிப்பதாகப் பாசாங்கு பண்ணி, அதே சமயத்தில் அவனுடைய கவனத்தை வேறே விஷயங்களில் திருப்பி விட்டேன். நான் உண்மையில் குடிப்பதாகவே அவன் எண்ணிக் கொண்டான். அன்றையதினம் சாயுங்காலம் வரையில் நானும் அவனும் அவ்விடத்திலேயே இருந்துவிட்டு அதன்பிறகு அவ்விடத்தை விட்டு வெளிப்பட்டோம். தான் தன்னுடைய எஜமானியம்மாளுடைய வீட்டுக்குப்போய் சாயுங்கால வேளையில் செய்யவேண்டிய அலுவல்களைச் செய்துவிட்டு வருவதாகச் சொல்லிவிட்டு, அவன் என்னை அன்னத்தம்மாள் வீட்டு வாசல் திண்ணையில் உட்கார வைத்துவிட்டு உள்ளே போய் அரைநாழிகையில் தன்னுடைய வேலைகளை எல்லாம் முடித்துக்கொண்டு வெளியில் வந்தான். அதன் பிறகு நானும் அவனும் பக்கத்தில் இருந்த ஆற்றங்கரைக்குப் போனோம். ஆற்றின் ஒரு பக்கத்தில் ஆழமான ஜலம் போய்க் கொண்டிருந்தது. கொஞ்ச பாகத்தில் நல்ல மணல் அழகாகப் பரவி இருந்தது. நாங்கள் இருவரும் போய் மணல் பரப்பில் படுத்து வெகுநேரம் வரையில் பேசிக் கொண்டிருந்தோம். அவன் தன்னுடைய ரகசியங்களை எல்லாம் ஒன்று விடாமல் தாராளமாக வெளியிட்டுக்கொண்டு வந்தான். நான் அவனைப் பார்த்து, "ஏன் அண்ணே! ஒனக்கு இந்த அன்னத்தம்மா ஊட்டுலெ சம்பளம் எம்பிட்டு?" என்றேன். கந்தன், "அவ நல்ல பணக்காரிதான். ராசாமவன் கிட்டவும், மத்த பெரிய மனிசரு கிட்டவும் ஆயிரம் ஆயிரமாகக் கொள்ளையடிக்கிறா. ஆனா, மத்தவங்களுக்குக் குடுக்க மாத்தரம் அவளுக்கு மனம் வராது. அவ சுத்த தரித்திரம் புடிச்சவ. எனக்கு பேருக்கு மாசம் நாலு கலநெல்லு குடுக்கிறா. அதுக்காகவா நானு வேலை செய்யறேன். நான் இவ்வூட்டுலே

வேலைக்கி அமர்ந்து கொண்டு ரெண்டு மாத காலமாவுது. ஒரு காரியத்தெ மனசுலெ வச்சிக்கிட்டு நான் இங்கிட்டு இருக்கறேன். இல்லாமப்போனா இவ குடுக்கற சம்பளத்துல எங்க ஊட்டுச் செலவெல்லாம் ஆயிப்பூடுமா?'' என்றான். நான், ''மாஷத்துக்கு நாலு கல நெல்லு எப்பிடிப் பத்தும்? பத்தாதுதான். இருந்தாலும் நாம்ப இப்பிடிப்பட்டவங்களை அண்டித்தான் வயறு வளக்கணும். பணக்காரரு மனசாறக் குடுக்க மாட்டாங்கதான். அவுங்களாக் குடுக்கறது கொஞ்சமாத்தான் இருக்கும். அவுங்களுக்குத் தெரியாம நாம் பலவிதமாக அவுங்களொட சொத்தைக் கொள்ளையடிக்க வேண்டியது தான். பின்னே என்னதான் செய்யறது? அது இருக்கட்டும். எனக்கு இந்தப் பேரிச்சம்பள வியாபாரம் சுத்தமாகக் கட்டி வரல்லே. எனக்கு இந்த மாதிரி ஒரு ஊடு பாத்து வேலையிலே அமித்திப்புடு அண்ணே! ஒனக்குப் புண்ணியமுண்டு. எங்க வூட்டுலே புள்ளெ குட்டிங்கள்ளாம் பட்டினி கெடந்து சாவுதுங்க. இந்த மாதிரி ஊடு அம்பிடாமெப் போனாலும், வேறே எப்பிடிப்பட்ட தொழிலைக் காட்டினாலும், அது எனக்கு இஷ்டந்தான். நீ கொள்ளையடிக்கச் சொன்னாலும் எனக்குச் சம்மதிதான்'' என்றேன். அதைக் கேட்ட கந்தன் நிரம்பவும் அன்பாகவும் ரகசியமாகவும் பேசத் தொடங்கி, ''கவலைப்படாதே அண்ணே! கள்ளப்பிள்ளையாப் பொறந்த நீ சாப்பாட்டுக்கு இல்லாம கஷ்டப்பட்றேங்கலாமா? நீ சொல்றதைக் கேட்க எனக்கு லெச்சையா இருக்குதுண்ணே! உனக்கு இந்தப் பேரிச்சம்பள வியாபாரமும் வாணாம், ஒண்ணும் வாணாம். நீ நான் சொல்ற வேலையெச் செய்யறதாயிருந்தா ஒன்றோட பங்குக்கு மாத்தரம் மாசம் ஆயிரம் ஐநூறு வந்துடும்; ராசாகணக்கா இருக்கலாம்'' என்றான். அதைக் கேட்ட நான் நிரம்பவும் சந்தோஷமடைந்தவன் போலப் பாசாங்கு செய்து, ''சரி அண்ணே! அடேயப்பா! அந்த மாதிரியான பெரிய அதிர்ஷ்டம் எனக்கு வரப்போவுதா? அந்த வளியெ நீ எனக்குக் காட்டிக் குடுத்தீன்னா, நான் ஒன்ன ஆண்டவனாட்டம் வச்சு

ரெண்டு கையும் எடுத்துக் குடும்பிடுவேன் அண்ணே! என்னோடெ புள்ளெ குட்டிக்களும் பொளச்சுப் போவாங்க'' என்றேன். உடனே கந்தன் தணிவான குரலில் ரகசியமாகப் பேசத் தொடங்கி, '' நீ பயப்பட வேணாம். இன்னமெ ஒன்னெக் காப்பாத்தறதுக்கு நானாச்சு. ஆனா, நீ எங்கிட்ட உண்மையாகவும் உறுதியாகவும் நடந்துக்கணும். தலை போனாலும் நம்பளொட ரகசியத்தை யாருக்கிட்டேயும் வெளியிடக்கூடாது. அந்த மாதிரி நடந்துக்கறேன்னு நீ கையடிச்சு சத்தியம் பண்ணிக்குடு. உனக்கு நான் உடனே நெசத்தெச் சொல்றேன்'' என்றான். உடனே நான் கையடித்து, ஐயனாரப்பன், மதுரைவீரன் முதலிய குல தெய்வங்கள் எல்லாம் அறியப் பிரமாணம் செய்து கொடுத்தேன். அவன் திருப்தி அடைந்து, ''அண்ணே! நான் ஊருக்கு வந்ததே ஒரு காரணமா வந்தேன். நான் இருக்கறது காசாநாடு. அந்த ஊருலெ கட்டாரித் தேவனுன்னு ஒருத்தன் இருக்கறானா, அவனைப் பத்தி நீ கேள்விப்பட்டிருப்பே. அவனோட ஆளு நானு. இந்தக் கூத்தாடிச்சு ஊட்டுலெ லச்சக் கணக்குலெ பணம் நகையெல்லாம் இருக்குதுன்னு அவன் கேள்விப்பட்டான். ஆனா, இவ தரையிலே சொரங்கம் வெட்டி அதுக்குள்ளாற இரும்பு பொட்டீலே எல்லாப் பொருளையும் வச்சிருக்கறான்னு எல்லா சனங்களும் சொல்லிக்கிட்டாங்க. அதுக்காவ அச்சே பாக்கறதுக்கு அவன் என்னை இங்கிட்டு அனுப்பிச்சு வச்சிருக்கான். நான் இந்த இரண்டு மாசகாலமா இவ ஊட்டுலெ வேலையிலே அமர்ந்து ஊட்டுக்குள்ளே பூந்து எல்லாச் சங்கதியையும் அறிஞ்சு கட்டாரிக்குச் சொன்னேன். நாளை தரிச்சு மைக்கானா பெரிய கொள்ளை நடக்கப் போவுது. கட்டாரித்தேவன் முப்பது ஆளுங்களை அளெச்சிக்கிட்டு சரியா பதினைஞ்சு நாளிக்கி வரப் போறான். எல்லாருமா ஊட்டுக்குள்ளாற நொளெஞ்சு கூத்தாடிச்சியையும் மவளுவளெயும் கட்டிப்போட்டுட்டு, சொரங்கத்துலே பூந்து சொத்துவளெ யெல்லாம் கொண்டு பூடப்போறோம். அப்ப,

எங்கிளுக்கு ஆளுங்க ரொம்ப வேணும். அதுல நீயும் கலந்துக்கிட்டு எங்கிளுக்கு ஒத்தாசயா இருந்தா, ஒனக்கும் பங்கு வாங்கித் தர்றேன். இது ஒண்ணுலேயே நாம்ப எல்லோரும் பெரிய பணக்காரரு ஆயிப்பூடலாம். இதெப்போலெ அப்பப்ப இன்னும் பெரிய பெரிய இடத்துல கொள்ளை நடக்கும்; அதுலேயும் ஒன்னெச் சேத்துக்கறோம்'' என்றான். அந்த வரலாற்றைக் கேட்ட நான் எனக்குள் மிகுந்த ஆச்சரியம் அடைந்தேன். ஆனாலும் அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், அவன் சொன்ன ஏற்பாடுகளுக்கு இணங்கினவன் போலவும், அதைப்பற்றி அளவற்ற சந்தோஷம் அடைந்தவன் போலவும் பாசாங்கு செய்து, ''சரி; அண்ணே! இனி நான் ஒன்னோட மனிசன். நீ உசிரெக் குடுக்கச் சொன்னாலும் குடுக்கத் தடையில்லை. நீ சொல்ற மாதிரியே நான் நடந்துக்கறேன்'' என்றேன். அதைக் கேட்டுக் கந்தன் நிரம்பவும் திருப்தி அடைந்து நான் சொன்னதை எல்லாம் உண்மை என்று நம்பினான். நான் அதன்பிறகு வேறே பல விஷயங்களில் அவனுடைய மனதைத் திருப்பி அநேக கேள்விகள் கேட்டுக் கடைசியில், ''ஆமா அண்ணே! இந்த ரெண்டு மாசமா நீ இந்தக் கூத்தாடிச்சி ஊட்டுலே இருந்து வாறியே. நம்ப கட்டாரித்தேவன் எப்பவாச்சும் இங்கிட்டு வந்து அவளோட வீட்டைப் பாத்திருக்கிறானா? புதுசா நாளெத் தரிச்சு ராத்திரி அவன் வந்தா, அவ ஊட்டுச் சொரங்கம் எல்லாம் அவனுக்குத் தெரியுமா?'' என்றேன். கந்தன், ''அவன் இந்த இரண்டு மாசத்துலே எத்தினியோ தரம் இங்கிட்டு வந்திருக்கிறான். வீட்டையும் பார்த்திருக்கிறான். ஒரு நாள் பாதி ராத்திரியிலே எல்லோரும் தூங்கச்செ உள்ளேயும் பூந்து எல்லா எடத்தையும் பார்த்திருக்கிறான். நாலஞ்சு நாளைக்கி மின்னே கூட, ஒரு சின்ன வேடிக்கை பண்ணிப்புட்டான்'' என்றான். அதைக் கேட்ட நான் ஆச்சரியத்தைக் காண்பித்து, ''அது என்ன வேடிக்கை அண்ணே!'' என்றேன். உடனே கந்தன் சந்தோஷமாகச் சிரித்து, ''நம்ப தஞ்சாவூரு மவராசாவோடெ புள்ளெ இருக்கறாரல்ல.

அவரு அப்பப்ப ராவுலே இந்தக் கூத்தாடிச்சு ஊட்டுக்கு வந்து சந்தோஷமா இருந்துப்புட்டுப் போறது வளமெ. போன சனிக்கிழமை கட்டாரித்தேவன் இங்கிட்டு வந்து ராசாமவன் கூத்தாடிச்சி ஊட்டுக்கு வாரதா யிருந்தா, ஒரு நா முன்னாடி தனக்குச் சேதி சொல்லியனுப்பச் சொல்லிப்புட்டுப் போனான். மைக்கானா, ராசமவங்க கிட்டயிருந்து சங்கதி வந்துச்சு. அவரு திங்கக்கிளமை ராவுலெ வாறேன்னு சேதி சொல்லி அனுப்பிச்சிருந்தாரு. நான் ஒடனெ எம்பொஞ்சாதியைக் காசாநாட்டுக்கு அனுப்பிச்சு சேதி சொல்லிப்புட்டு வரச்சொன்னேன். அவ போயிட்டு வந்தா. திங்கக்கிழமை ராவுலே, ராசாமவனும், மருங்காபுரி செமீந்தாரும், வந்திருந்து கூத்தடிச்சுப்புட்டு ராத்திரி ரெண்டு மணிக்குப் பொறப்பட்டுப் போனாங்க. கட்டாரியும் ஆளுங்களுமா அவுங்களெ வளிவறிச்சு, வண்டிக்காரனெக் கட்டிப் போட்டுட்டு, அவுங்க ரெண்டு பேரையும் வண்டியிலேயே வச்சு அளெச்சிக்கிட்டு, ஆறு மயிலு வண்டியை ஓட்டிக்கிட்டு மாரியம்மங் கோவில் இருக்குதல்ல அந்த ஊருக்குப் போனாங்களாம். அந்த ஊருலெ செட்டித் தெருவுலே ஒரு பங்களா இருக்குதாம். அதுலே யாரோ ஒரு பெரிய மனிசரும் அவரோட பொஞ்சாதியும் இருக்காங்களாம். அவுங்களுக்கு அந்த ராசா மவனாலே என்னமோ காரியம் ஆவணுமாம். நேருலெ கேட்டா ராசாமவன் அதுக்கு ஒப்புக்க மாட்டானாம். அந்தப் பெரிய மனிசரோட பொஞ்சாதி ரதி மாதிரி நல்லா சொகுசா இருப்பாளாம். அவளுக்குப் பார்சிப் பொம்புள்ளே மாதிரி வேசம் போட்டு, அவளை ஒக்காத்திவச்சு ராசாமவனை மயக்கி, அவங்கிட்ட தந்திரமா என்னமோ எழுதி வாங்கிட்டாவளாம். கட்டாரித் தேவன் மருங்காபுரி செமீந்தாருக்கிட்ட இருந்த சொத்தையெல்லாம் புடிங்கிட்டா னாம். மறுபடி கட்டாரியும் ஆளுங்களும் அவுங்களைக் கொண்டாந்து வழிமறிச்ச எடத்துலேயே உட்டுப்புட்டு ஓடிப் பூட்டாங்க! தந்தரம் எப்படி இருக்குது பார்த்தியா?'' ''தந்தரம் நல்லா இருக்குது அண்ணே! கட்டாரித் தேவன் மகா

கெட்டிக்காரனாட்டமா இருக்குது. அவனைப் பார்க்க ஆசை உண்டாகுது. அன்றைக்கு இரவிலே, எம்பிட்டு ரூபா அம்பிட்டுது? உனக்கு ஏதாச்சும் குடுத்தானா?'' என்றேன். கந்தன், ''அன்றைக்கு நான் போக முடியலை. என்னென்ன கொள்ளையடிச்சாங்கறது எனக்குத் தெரியலை. ஆனா எனக்கு நூறு ரூபா பணம் வந்துச்சு'' என்றான். நான், ''ஓ! சந்தோசம்!அது போதாதா? அந்த மாதிரி ஒவ்வொரு கொள்ளைக்கும் அம்பிட்டாப் போதுமானது. அதிருக்கட்டும். மாரியம்மன் கோயில்லே யாரோ பெரிய மனிசரு ராசாமகன் கிட்டே என்னமோ எழுதி வாங்கினான்னு சொன்னியே! என்ன எழுதி வாங்கினாவ?'' என்றேன். கந்தன், ''அந்தச் சங்கதி எனக்கு நல்லாத் தெரியாது. அந்தப் பெரிய மனிசரும் அவரோடெ பெஞ்சாதியும் என்னத்துக்காகவோ பயந்து அந்த ஊருலெ ஒளிஞ்சிக்கிட்டிருக்கிறாளாம். அதுக்காக ராசாமவன் கிட்டே ஒரு கடுதாசி மேலே இன்னொரு கடுதாசியை ஒட்டி, மேலே இருந்த கடுதாசியிலே ஒரு சங்கதியை எழுதினார்களாம்; கீழே இருந்த கடுதாசியிலே வேறே என்னமோ முக்கியமான சங்கதியை எழுதிக் கிட்டாங்களாம். மேலே இருந்த கடுதாசி சின்னதாம். அது அடிக் கடுதாசிக்கு முக்கால் பங்கு இருக்குமாம். அடிப்பக்கத்துலே அவுரு கையெழுத்துப் போட்டு முத்திரை வச்சாராம். அப்படி வச்சது கீழே இருந்த கடுதாசி மேலேயாம். ராசாமவனுக்கு அது தெரியலியாம்; ஏமாத்திப்புட்டாங்களாம்'' என்றான். அதைக் கேட்ட நான் அதற்கு மேலும் அந்த விஷயத்தைப்பற்றிக் கிளறிக் கிளறிக்கேட்கக் கூடாது என்று அவ்வளவோடு நிறுத்தி வேறே சங்கதிகளைப் பற்றிப் பேசத் தொடங்கினேன்'' என்றார்.

அதுவரையும் மிகுந்த வியப்போடும் பொறுமையோடும் கேட்டு வந்த மருங்காபுரி ஜெமீந்தார், ''என்ன ஆச்சரியம்! நம்முடைய கூத்தாடி அன்னத்தின் வீட்டில் இருக்கும் கந்தன் பார்ப்பதற்கு மகாயோக்கியன் போல இருக்கிறானே!

அவன் கட்டாரித்தேவனுடைய கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவனா! அவன் நம்பிக்கைக்குப் பாத்திரமானவன் என்று நினைத்து அன்னத்தம்மாளும், இளவரசரும் அவனிடத்தில் எத்தனையோ ரகசிய சங்கதிகளைச் சொல்லி இருக்கிறார்களே! அன்றைய தினம் ராத்திரி எங்களைக்கொண்டுபோனது மாரியம்மன் கோவிலுக்கா! அந்த ஊர் செட்டித் தெருவில் பங்களாவில் இருக்கும் பெரிய மனிதரும் அவருடைய சம்சாரமும் எதற்காக அப்படி ஒளிந்து கொண்டிருக்கிறார்கள்? இளவரசரிடத்தில் என்ன சங்கதி எழுதி வாங்கிக் கொண்டிருப்பார்கள்? உமக்கு ஏதோ அபாயம் நேர்ந்ததாகச் சொன்னீரே, அது எப்போது? என்ன அபாயம்?'' என்றார்.

அதைக்கேட்ட போலீஸ் இன்ஸ்பெக்டர், ''மற்ற வரலாற்றையும் சொல்லிவிடுகிறேன் கேளுங்கள். அப்படி நானும் கந்தனும் வெகுநேரம் வரையில் ஆற்றின் மணலில் இருந்து பேசிக்கொண்டிருந்து சாப்பாட்டுக்கு நேரமாகிறது என்று ராத்திரி சுமார் 10 மணிக்கு அவ்விடத்தை விட்டு அவனுடைய வீட்டுக்கு வந்து சேர்ந்தோம். இன்னம் இரண்டொரு நாள் அவனுடைய வீட்டிலேயே இருந்து இன்னம் கிரகிக்கக் கூடிய ரகசியங்களை எல்லாம் கிரகித்துக் கொள்ளலாமென்ற எண்ணத்தோடும், அன்றைய தினமே எல்லாவற்றையும் ஊன்றி ஊன்றி கேட்பது சந்தேகத்துக்கு இடம் கொடுக்கும் என்ற எண்ணத்தோடும் நான் கேள்விகளை அவ்வளவோடு நிறுத்திக் கொண்டேன். கந்தனுடைய பெண்ஜாதி அன்றைய தினம் எனக்காக நல்ல கறியும் சோறும் சமைத்திருந்தாள். அவனும் நானும் நன்றாக போஜனம் செய்து எழுந்தோம். எழுந்தவர்கள் வாசல் திண்ணையில் போய் உட்கார்ந்து கொண்டு வெற்றிலை புகையிலை முதலியவை களைப் போட்டு மென்று கொண்டு மேலும் இரண்டு நாழிகை வரையில் வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருந்தோம். பிறகு கந்தன் இரண்டு பாய்களையும் தலையணைகளையும் கொண்டு

வந்து திண்ணையில் போட, நானும் அவனும் படுத்துக் கொண்டோம். திண்ணை நிரைச்சலினால் மறைக்கப் பட்டிருந்தது. அவன் படுத்துக் கொண்டான்; அவனுக்கு அப்பால் நான் படுத்துக்கொண்டேன். கொஞ்ச நேரத்தில் நாங்கள் இரண்டு பேரும் தூங்கிப்போய் விட்டோம். ராத்திரி சரியாக ஒருமணி சமயம் இருக்கும்; ஒரு முரட்டு மனிதன் வந்து, திண்ணையில் முதலில் படுத்திருந்த கந்தனை மெதுவாகத் தட்டி எழுப்பினான். நான் உடனே விழித்துக் கொண்டேன். ஆனால், அவன் கந்தனை மிகவும் ரகசியமாகக் கூப்பிட்ட மாதிரியைக் காண, எனக்கு ஏதோ ஒரு வித சந்தேகம் தோன்றியது. அந்த மனிதன் யார் என்று நான் உற்றுப் பார்த்தேன். அவன் கட்டாரித்தேவன் என்ற எண்ணம் உண்டாயிற்று; ஆகையால் அவர்கள் என்ன பேசுகிறார்கள், அல்லது, என்ன செய்கிறார்களென்பதைக் கவனிக்க வேண்டும் என்ற தீர்மானத்தோடு நான் கண்களை மூடிக்கொண்டு தூங்குகிறவன் போலப் பாசாங்கு பண்ணினேன். அவன் மறுபடியும் கந்தனைத் தட்டி எழுப்ப, அவன் திடுக்கிட்டு விழித்து எழுந்து உட்கார்ந்து, ''ஓகோ கட்டாரியா! வாப்பா! ஏது இந்நேரத்துலே வந்தது! அவரசசோலி ஏதாவது உண்டா?'' என்று மெதுவாகப் பேசினான்.

கட்டாரித்தேவன் ஏதோ ரகசியமான விஷயத்தைப் பற்றி அவனோடு பேசவிரும்புகிறவன் போலக் காண்பித்துக்கொண்டு என் பக்கம் திரும்பி, ''அது யார்?'' என்று தணிவாகக் கேட்க, உடனே கந்தன், ''அவனும் நம்முடைய மனிதன்தான். அவனைப்பற்றி யோசனை பண்ணவேண்டாம். சங்கதியைச் சொல்லலாம்'' என்றான். அதற்குள் திண்ணையில் உட்கார்ந்து கொண்ட கட்டாரித்தேவன், ''அது யாரப்பா அவ்வளவு நம்பிக்கையான புது சிநேகம்? இதுவரையில் இந்த மனிதனைப் பற்றி நீ என்னிடம் எவ்வித பிரஸ்தாபமும் செய்ததில்லையே! ஆசாமி யாரப்பா?'' என்று ஆச்சரியத்தோடு கேட்டான். உடனே

கந்தன், "ஆம்; புது சிநேகந்தான். மனிதன் நம்பிக்கைக்குப் பாத்திரமான நல்ல குணமுடையவன். இவன் இருப்பது தஞ்சாவூர் ஆட்டுமந்தைத் தெருவாம்; வாண்டையாச் சாதியைச் சேர்ந்தவன். நம்முடைய காரியங்களுக்கு நன்றாக உபயோகப்படக் கூடியவன். ஆகையால் இவனைச் சிநேகம் பிடித்தேன்; அன்னத்தம்மாள் வீட்டுக்கொள்ளைக்கு நமக்கு அநேக ஆள்கள் வேண்டுமல்லவா? அதற்காகவும் இவனைப் பிடித்தேன்; நம்முடைய இஷ்டப்படி நடந்து கொள்ளுவதாக இவனும் ஒப்புக் கொண்டிருக்கிறான். இந்தக் கொள்ளை விஷயமும் இவனிடத்தில் பிரஸ்தாபித்தேன். இவன் சரிதான் என்று ஒப்புக் கொண்டிருக்கிறான். இவனை எழுப்புகிறேன். நீ வேண்டுமானால் இவனோடு பேசிப் பார்" என்றான். அந்த வரலாற்றைக் கேட்ட கட்டாரித்தேவன், "சரி; இருக்கட்டும். நீ சொன்னால் அது தவறாக இருக்காது. தூங்குகிறவனை எழுப்ப வேண்டாம். ஆனால், இவன் நம்பிக்கைக்குப் பாத்திரமானவனா, அல்லது ரகசியங்களை வெளியிடக் கூடியவனா என்பதை நாம் நன்றாக உறுதிப்படுத்திக்கொள்ள வேண்டும். ஆட்டு மந்தைத் தெருவில் வாண்டையாச் சாதியான் யார் இருக்கிறான்! எனக்குத் தெரிந்திருக்க வேண்டுமே! இருக்கட்டும்; வீட்டுக்குள் போய் ஒரு விளக்கு எடுத்துக்கொண்டு வா; ஒருவேளை இவன் எனக்குத் தெரிந்தவனாக இருக்குமோ என்று பார்க்கிறேன்" என்றான். உடனே கந்தன் விளக்கை எடுத்துக்கொண்டு வருவதற்காக உள்ளே போனான். அப்போது என் மனசில் பெருத்த திகிலும் கவலையும் உண்டாயின. நான் அவனை எப்போதோ பார்த்திருக்கிறேன். ஆகையாலும், அவன் என்னிடம் நெருங்கி வந்து எப்போதும் பார்த்ததில்லை. ஆகையால், அவனுக்கு என்னுடைய அடையாளம் தெரியாது என்ற எண்ணம் உண்டானது. ஆகையால், நான் மனசை அடக்கிக் கொண்டு நன்றாகத் தூங்குகிறவன் போலப் பாசாங்கு செய்தேன். அடுத்த நிமிஷத்தில் கந்தன் கையில் விளக்கோடு வெளியில் வந்து

திண்ணையில் ஏறி நான் படுத்திருந்த இடத்துக்கு வந்து விளக்கைக் காட்ட, கட்டாரித்தேவன் மெதுவாக வந்து எனக்குப் பக்கத்தில் நின்று என்னுடைய முகத்தை உற்று நோக்கினான். நான் தூங்குவதாகப் பாசாங்கு செய்ய எவ்வளவோ சிரமப்பட்டு முயன்றேன். ஆனாலும், என் முகத்தில் ஒருவித சலனம் உண்டாவதாக எனக்கே தெரிந்தது. என்னை உற்றுப் பார்த்த கட்டாரித்தேவன் உடனே திடுக்கிட்டு ஆச்சரியம் அடைந்தவனாய், ''அடேய் கந்தா! நீ கூட இப்படி ஏமாறிப் போனாயே! இவன் தஞ்சாவூரில் இருக்கும் போலீஸ் இன்ஸ்பெக்டரல்லவா! இவனிடத்தில் நம்முடைய ரகசியங்களை எல்லாம் சொல்லி விட்டாயே!'' என்றான். அதைக் கேட்டு திடுக்கிட்டு நடுங்கி, ''என்ன ஆச்சரியம்! இவன் பேரீச்சம்பழம் விற்றுக்கொண்டு வந்தான். பேசியதும் பட்டிக்காட்டான் போலவே இருந்தது. அதைக் கண்டு அல்லவா நான் ஏமாறிப் போனேன்'' என்று அவன் சொல்லி வாய்மூடு முன் கட்டாரித்தேவன் புலிபோல ஒரே பாய்ச்சலாக என்மேல் பாய்ந்து என்னுடைய குரவளையைப் பிடித்து அழுத்திக்கொண்டு நான் கூச்சலிட முடியாமல் செய்துவிட்டான். இருந்தாலும் நான் மூச்சுவிட மாட்டாமல் தத்தளித்து, அவனுடைய இரும்புப் பிடியிலிருந்து என்னை விடுவித்துக் கொள்ள முயற்சி செய்தேன். ஆனால் அந்த முரட்டு விலங்கின் இடத்தில் என்னுடைய முயற்சி ஒன்றும் பலிக்கவே இல்லை. ஆகவே, நான் திமிறாமல் சும்மா இருந்தால், அவன் அதிக உபத்திரவம் செய்யாமல் இருப்பான் என்ற நினைவோடு நான் திமிறாமல் சும்மா இருந்தேன். எப்படியும் அவர்கள் என்னைக் கொன்று விடுவார்கள் என்ற எண்ணமே என் மனசில் உண்டாயிற்று. நான் முற்றிலும் ஜெயமடைந்து விட்டதாக நினைத்திருந்த சமயத்தில் எதிர்பாராதபடி கட்டாரித்தேவன் வந்து என்னைக் கண்டு கொண்டதும், நான் தப்ப வகையின்றி அவனிடம் அகப்பட்டுக்கொண்டதும் என் மனதில் சொல்ல முடியாத திகிலையும் கலவரத்தையும்

உண்டாக்கின. நான் வாயைத் திறந்து பேச அவன் இடம் கொடுத்திருந்தால், நான் அவனிடத்தில் ஏதாவது பொய் சொல்லி அவனை ஏமாற்ற முயன்றிருக்கலாம். அல்லது, கூச்சலிட்டு அந்தத் தெருவில் இருக்கும் மனிதரை உதவிக்கு அழைத்திருக்கலாம். நான் வாயைத் திறந்து கூச்சலிட முடியாமல் அவன் என்னுடைய தொண்டையை இறுகப் பிடித்து நெறித்துக் கொண்டிருந்தான். ஆகையால், அந்த அபாயத்தில் என்ன செய்கிறதென்பதை உணராமல் நான் பொறியில் அகப்பட்ட எலிபோலத் தவித்திருக்க உடனே கட்டாரி கந்தனைப் பார்த்து, ''அடேய் கந்தா! நீ நம்முடைய ரகசியங்களை எல்லாம் இவனிடத்தில் சொல்லியிருக்கிறாய். இவனை நாம் சுயேச்சையாகப் போக விட்டால், இவன் போய் நம்மை வேரறுத்துவிட எத்தனிப்பான்; ஆகையால், இவன் இந்த ஊரை விட்டுப் போகாமல், இவனை நாம் ஒழித்துவிட வேண்டும். நீ உள்ளே போய் நல்ல கயிறாகப் பார்த்துக் கொஞ்சம் எடுத்துக்கொண்டு வந்து கால்களையும் கைகளையும் கட்டிவிடு; கந்தைத் துணி இருந்தால் கொஞ்சம் கொண்டுவா; வாயில் வைத்துஅடைத்து விடுவோம்'' என்றான். உடனே கந்தன் உள்ளே போய்விட்டான். அப்போதே என்னுடைய உயிரில் முக்கால் பாகமும் போய்விட்டது என்று சொல்ல வேண்டும். எனக்குக் குலைநடுக்கம் உண்டாயிற்று. நாம் இனி தப்புவதில்லை என்ற நிச்சயம் என் மனதில் உண்டாகி விட்டது. கொஞ்சநேரத்தில் கந்தன் வெளியில் வர, கந்தைத் துணிப்பந்து என் வாய்க்குள் வைத்துத் திணிக்கப்பட்டது. என்னுடைய கைகளும் கால்களும் தாம்புக் கயிற்றால் கட்டப்பட்டுப் போயின. உடனே கட்டாரி தனது பிடியை விட்டுவிட்டான். நான் மூச்சுவிட முடியாமல் திக்குமுக்காடிக் கொண்டிருந்தேன். என்னுடைய வாய் கிழிந்துபோய் விடும்போல ஆகிவிட்டது. கைகால்கள் எல்லாம் இரத்த ஓட்டம் தடைப்பட்டதனால் மரத்து உணர்வற்று விண் விண்ணென்று துடிக்கலாயின. அப்போதே நான் பிணம்போல

உண்டாக்கின. நான் வாயைத் திறந்து பேச அவன் இடம் கொடுத்திருந்தால், நான் அவனிடத்தில் ஏதாவது பொய் சொல்லி அவனை ஏமாற்ற முயன்றிருக்கலாம். அல்லது, கூச்சலிட்டு அந்தத் தெருவில் இருக்கும் மனிதரை உதவிக்கு அழைத்திருக்கலாம். நான் வாயைத் திறந்து கூச்சலிட முடியாமல் அவன் என்னுடைய தொண்டையை இறுகப் பிடித்து நெறித்துக் கொண்டிருந்தான். ஆகையால், அந்த அபாயத்தில் என்ன செய்கிறதென்பதை உணராமல் நான் பொறியில் அகப்பட்ட எலிபோலத் தவித்திருக்க உடனே கட்டாரி கந்தனைப் பார்த்து, ''அடேய் கந்தா! நீ நம்முடைய ரகசியங்களை எல்லாம் இவனிடத்தில் சொல்லியிருக்கிறாய். இவனை நாம் சுயேச்சையாகப் போக விட்டால், இவன் போய் நம்மை வேரறுத்துவிட எத்தனிப்பான்; ஆகையால், இவன் இந்த ஊரை விட்டுப் போகாமல், இவனை நாம் ஒழித்துவிட வேண்டும். நீ உள்ளே போய் நல்ல கயிறாகப் பார்த்துக் கொஞ்சம் எடுத்துக்கொண்டு வந்து கால்களையும் கைகளையும் கட்டிவிடு; கந்தைத் துணி இருந்தால் கொஞ்சம் கொண்டுவா; வாயில் வைத்துஅடைத்து விடுவோம்'' என்றான். உடனே கந்தன் உள்ளே போய்விட்டான். அப்போதே என்னுடைய உயிரில் முக்கால் பாகமும் போய்விட்டது என்று சொல்ல வேண்டும். எனக்குக் குலைநடுக்கம் உண்டாயிற்று. நாம் இனி தப்புவதில்லை என்ற நிச்சயம் என் மனதில் உண்டாகி விட்டது. கொஞ்சநேரத்தில் கந்தன் வெளியில் வர, கந்தைத் துணிப்பந்து என் வாய்க்குள் வைத்துத் திணிக்கப்பட்டது. என்னுடைய கைகளும் கால்களும் தாம்புக் கயிற்றால் கட்டப்பட்டுப் போயின. உடனே கட்டாரி தனது பிடியை விட்டுவிட்டான். நான் மூச்சுவிட முடியாமல் திக்குமுக்காடிக் கொண்டிருந்தேன். என்னுடைய வாய் கிழிந்துபோய் விடும்போல ஆகிவிட்டது. கைகால்கள் எல்லாம் இரத்த ஓட்டம் தடைப்பட்டதனால் மரத்து உணர்வற்று விண் விண்ணென்று துடிக்கலாயின. அப்போதே நான் பிணம்போல

உண்டாக்கின. நான் வாயைத் திறந்து பேச அவன் இடம் கொடுத்திருந்தால், நான் அவனிடத்தில் ஏதாவது பொய் சொல்லி அவனை ஏமாற்ற முயன்றிருக்கலாம். அல்லது, கூச்சலிட்டு அந்தத் தெருவில் இருக்கும் மனிதரை உதவிக்கு அழைத்திருக்கலாம். நான் வாயைத் திறந்து கூச்சலிட முடியாமல் அவன் என்னுடைய தொண்டையை இறுகப் பிடித்து நெறித்துக் கொண்டிருந்தான். ஆகையால், அந்த அபாயத்தில் என்ன செய்கிறதென்பதை உணராமல் நான் பொறியில் அகப்பட்ட எலிபோலத் தவித்திருக்க உடனே கட்டாரி கந்தனைப் பார்த்து, ''அடேய் கந்தா! நீ நம்முடைய ரகசியங்களை எல்லாம் இவனிடத்தில் சொல்லியிருக்கிறாய். இவனை நாம் சுயேச்சையாகப் போக விட்டால், இவன் போய் நம்மை வேரறுத்துவிட எத்தனிப்பான்; ஆகையால், இவன் இந்த ஊரை விட்டுப் போகாமல், இவனை நாம் ஒழித்துவிட வேண்டும். நீ உள்ளே போய் நல்ல கயிறாகப் பார்த்துக் கொஞ்சம் எடுத்துக்கொண்டு வந்து கால்களையும் கைகளையும் கட்டிவிடு; கந்தைத் துணி இருந்தால் கொஞ்சம் கொண்டுவா; வாயில் வைத்துஅடைத்து விடுவோம்'' என்றான். உடனே கந்தன் உள்ளே போய்விட்டான். அப்போதே என்னுடைய உயிரில் முக்கால் பாகமும் போய்விட்டது என்று சொல்ல வேண்டும். எனக்குக் குலைநடுக்கம் உண்டாயிற்று. நாம் இனி தப்புவதில்லை என்ற நிச்சயம் என் மனதில் உண்டாகி விட்டது. கொஞ்சநேரத்தில் கந்தன் வெளியில் வர, கந்தைத் துணிப்பந்து என் வாய்க்குள் வைத்துத் திணிக்கப்பட்டது. என்னுடைய கைகளும் கால்களும் தாம்புக் கயிற்றால் கட்டப்பட்டுப் போயின. உடனே கட்டாரி தனது பிடியை விட்டுவிட்டான். நான் மூச்சுவிட முடியாமல் திக்குமுக்காடிக் கொண்டிருந்தேன். என்னுடைய வாய் கிழிந்துபோய் விடும்போல ஆகிவிட்டது. கைகால்கள் எல்லாம் இரத்த ஓட்டம் தடைப்பட்டதனால் மரத்து உணர்வற்று விண் விண்ணென்று துடிக்கலாயின. அப்போதே நான் பிணம்போல

மாறிப் போனேன். உடனே அவர்கள் இரண்டு பேரும் என்னை எப்படிக் கொல்வது என்பதைப் பற்றித் தங்களுக்குள் கலந்து யோசனை செய்தனர். பக்கத்தில் உள்ள ஆற்றில் ஓரிடத்தில் இருக்கும் மடுவில் என்னைக் கொண்டுபோய்ப் போட்டு விடுவது என்று அவர்கள் தீர்மானித்தனர். அந்த மடுவில் இரண்டாள் ஆழம் ஜலம் இருப்பதாகவும், அவ்விடத்தில் முதலைகள் இருப்பதாகவும் அவர்களுடைய சம்பாஷணையி லிருந்து நான் தெரிந்து கொண்டேன். அப்போதே எனக்கு அநேகமாக ஸ்மரணை தப்பிப் போய்விட்டது. அதன்பிறகு அவர்கள் இருவரும் என்னைப் பிடித்துத் தூக்கிக்கொண்டு ஆற்றங்கரைக்குப் போனார்கள். ஆனால், என்னுடைய அதிர்ஷ்டவசத்தினால்,அவ்விடத்தில் அதற்குள் ஒரு மாறுபாடு உண்டாகியிருந்தது. நானும் கந்தனும் அன்று சாயுங்காலம் அந்த ஆற்றங்கரையில் மணலின் மேல் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்த போதே, அந்த ஆறு பெருக்கெடுத்துக் கொண்டிருந்தது போலிருக்கிறது. ராத்திரி ஒரு மணிக்குள் ஆறு முழுவதும் தண்ணீர் நிரம்பி வெள்ளமாக பிரவாகம் போய்க் கொண்டிருந்தது. அவர்கள் உடனே தங்களுடைய மனசை மாற்றிக்கொண்டார்கள். என்னைத் தூக்கிக் கொண்டு வெகு தூரம் போய் முதலையிருக்கும் மடுவில் போட வேண்டிய அவசியம் இல்லை என்று எண்ணி, அந்த ஆற்றின் பாலத்தில் இருந்தபடி என்னை ஆற்றின் நடுவில் வெள்ளத்தில் போட்டு விட்டார்கள். போட்டவர்கள் நான் எப்படியும் வெள்ளத்தில் ஆழ்ந்து இறந்துபோய் விடுவேன் என்று நிச்சயித்துக் கொண்டு அவ்விடத்தை விட்டுப் போய்விட்டனர். தண்ணீர் வெள்ளத்தில் நான் தலைகுப்புறப் போய் விழுந்தேன். விழுந்த வேகத்தில் என் வாயில் இருந்த துணிப்பந்து நழுவி வெளியில் வந்துவிட்டது. உடனே என்னுடைய பிராணன் திரும்பியது. சுவாசம் சரியாக வரத் தொடங்கியது. நான் விழுந்த இடத்தில் தண்ணீர் நிலைக்காமல் இருந்தது. ஆகையால், கட்டப்பட்டிருந்த கைகளையும் கால்களையும் உபயோகித்து

நீந்தமாட்டாமல் நான் உருண்டு புரண்டு மேலே வந்து உள்ளே ஆழ்ந்து கொஞ்சதூரம் கிழக்கு முகமாகப் போய்விட்டேன். நான் நீஞ்சுவதற்கு நன்றாகப் பழகி இருந்தேன். ஆகையால், கட்டப்பட்ட கால்களை உபயோகப்படுத்தி உந்தி உந்தி நான் தண்ணீரின்மேல் வந்துகொண்டே போக, தற்செயலாக என்னுடைய கால்கள் ஒரு மணல் திட்டின் மேல் பட்டன. நான் உடனே அவ்விடத்தில் உறுதியாக நின்றுகொண்டு, கட்டப்பட்டிருந்த என்னுடைய கைகளை வாய்க்குக் கொண்டுபோய், நெடுநேரம் வரையில் பல்லால் கடித்துக் கடித்துக் கட்டை விலக்கிக்கொண்டேன். அதன் பிறகு கைகளை உபயோகித்து என்னுடைய கால் கட்டை அவிழ்த்துக் கொள்வது சுலபமாகவே இருந்தது. உடனே நான் நீந்திக் கரை ஏறினேன். நான் மறுபடியும் ஊருக்குள்போய், ஊர் ஜனங்களினுடைய உதவியைக் கொண்டு கந்தன் வீட்டுக்குப் போய் அவர்கள் இரண்டு பேரையும் பிடிக்கலாம் என்ற எண்ணம் உண்டானது. ஆனாலும், அது சரியல்ல என்று நினைத்துக் கொண்டேன். நான் இறந்துபோனதாகவே, அவர்கள் எண்ணிக் கொண்டிருப்பது நல்லதென்று நான் நினைத்து, அவ்விடத்தை விட்டு ரஸ்தாவுக்கு வந்து மெல்ல மெல்ல நடந்து விடியற்காலையில் தஞ்சாவூருக்கு வந்து சேர்ந்தேன். அதாவது வெள்ளிக்கிழமையாகிய நேற்றையதினம் காலையில் நான் தஞ்சாவூருக்குத் திரும்பி வந்தேன். அவர்கள் என்னைப் படுத்தி வைத்த பாட்டினால் நான் நிரம்பவும் அலுத்துப் போயிருந்தேன். ஆகையால், நேற்று சாயுங்காலம் வரையில் படுக்கையை விட்டு நான் எழுந்திருக்க முடியாமல் போய்விட்டது. இன்று விடியற்காலம் நான் ஒரு குதிரை வண்டியில் ஏறிக்கொண்டு மாரியம்மன் கோவிலுக்குப் போய், ஊருக்கு வெளியிலேயே இறங்கி, பிச்சைக்காரனைப் போல உருமாறி செட்டித் தெருவில் நுழைந்து கந்தன் சொன்ன பங்களாவைக் கண்டேன். அந்தத் தெருவில் அந்த ஒரு பங்களாதான் இருக்கிறது. அதற்குள் இருப்பவர் யார்

நீந்தமாட்டாமல் நான் உருண்டு புரண்டு மேலே வந்து உள்ளே ஆழ்ந்து கொஞ்சதூரம் கிழக்கு முகமாகப் போய்விட்டேன். நான் நீஞ்சுவதற்கு நன்றாகப் பழகி இருந்தேன். ஆகையால், கட்டப்பட்ட கால்களை உபயோகப்படுத்தி உந்தி உந்தி நான் தண்ணீரின்மேல் வந்துகொண்டே போக, தற்செயலாக என்னுடைய கால்கள் ஒரு மணல் திட்டின் மேல் பட்டன. நான் உடனே அவ்விடத்தில் உறுதியாக நின்றுகொண்டு, கட்டப்பட்டிருந்த என்னுடைய கைகளை வாய்க்குக் கொண்டுபோய், நெடுநேரம் வரையில் பல்லால் கடித்துக் கடித்துக் கட்டை விலக்கிக்கொண்டேன். அதன் பிறகு கைகளை உபயோகித்து என்னுடைய கால் கட்டை அவிழ்த்துக் கொள்வது சுலபமாகவே இருந்தது. உடனே நான் நீந்திக் கரை ஏறினேன். நான் மறுபடியும் ஊருக்குள்போய், ஊர் ஜனங்களினுடைய உதவியைக் கொண்டு கந்தன் வீட்டுக்குப் போய் அவர்கள் இரண்டு பேரையும் பிடிக்கலாம் என்ற எண்ணம் உண்டானது. ஆனாலும், அது சரியல்ல என்று நினைத்துக் கொண்டேன். நான் இறந்துபோனதாகவே, அவர்கள் எண்ணிக் கொண்டிருப்பது நல்லதென்று நான் நினைத்து, அவ்விடத்தை விட்டு ரஸ்தாவுக்கு வந்து மெல்ல மெல்ல நடந்து விடியற்காலையில் தஞ்சாவூருக்கு வந்து சேர்ந்தேன். அதாவது வெள்ளிக்கிழமையாகிய நேற்றையதினம் காலையில் நான் தஞ்சாவூருக்குத் திரும்பி வந்தேன். அவர்கள் என்னைப் படுத்தி வைத்த பாட்டினால் நான் நிரம்பவும் அலுத்துப் போயிருந்தேன். ஆகையால், நேற்று சாயுங்காலம் வரையில் படுக்கையை விட்டு நான் எழுந்திருக்க முடியாமல் போய்விட்டது. இன்று விடியற்காலம் நான் ஒரு குதிரை வண்டியில் ஏறிக்கொண்டு மாரியம்மன் கோவிலுக்குப் போய், ஊருக்கு வெளியிலேயே இறங்கி, பிச்சைக்காரனைப் போல உருமாறி செட்டித் தெருவில் நுழைந்து கந்தன் சொன்ன பங்களாவைக் கண்டேன். அந்தத் தெருவில் அந்த ஒரு பங்களாதான் இருக்கிறது. அதற்குள் இருப்பவர் யார்

என்பதைப் பற்றி நான் அக்கம்பக்கத்தில் விசாரித்தேன். மாசிலாமணிப் பிள்ளையென்ற ஒரு தணிகரும், அவருடைய யௌவனப் பெண்ஜாதியும் சில தினங்களாக வந்திருப்பதாகவும், அவர்கள் வீட்டைவிட்டு வெளியிலேயே வருவதில்லை என்றும் சொன்னார்கள். நான் பிச்சை கேட்கிறவன் போல உள்ளே நுழைந்து பார்த்தேன். மாசிலாமணிப் பிள்ளை என்பவர் என் கண்ணில் படவில்லை. ஆனால், ஓர் அறைக்குள் இருந்து ஒரு பெண் வெளிப்பட்டு இன்னோர் அறைக்குப் போனதை நான் பார்த்து அப்படியே பிரமித்துப் போய்விட்டேன்! ஆகா! அந்தப் பெண்ணை தெய்வலோகத்து ரம்பை, திலோத்தமைகளுக்கே ஒப்பிட வேண்டும். வயசு சுமார் பதினெட்டு இருக்கலாம். அந்தப் பெண்ணைப் போல அவ்வளவு சொகுஸான வடிவழகியை நான் இதுவரையில் கண்டதே இல்லை. அன்றைய தினம் இளவரசர் பார்த்த பார்சீஜாதிப் பெண்ணைப்பற்றி அவர் வர்ணித்துச் சொன்ன குறிப்புகளும், நடைஉடை பாவனைகளும், சாயலும் இந்தப் பெண்ணிடத்தில் அப்படியே இருக்கின்றன. ஆகையால், அந்தப் பெண்ணே அன்றையதினம் இளவரசரை ஏமாற்றியவள் என்பதை நிச்சயமாக எண்ணிக்கொள்ளலாம். அந்த பங்களாவின் அமைப்பும் நீங்கள் கண்டதாகச் சொன்னபடியே இருக்கிறது. ஆகையால், உங்களை வழிமறித்து அழைத்துக் கொண்டு போன இடம் அந்த பங்களா என்பதையும் தாங்கள் நிச்சயமாக வைத்துக் கொள்ளலாம்'' என்றார்.

அந்த வரலாற்றைக் கேட்ட மருங்காபுரி ஜெமீந்தார் மிகுந்த வியப்பும் களிப்பும் அடைந்தவராய், ''அப்படியா! அந்தப் பெண்ணை நீர் பார்த்தீரா? அவள் உண்மையில் நல்ல அழகான பெண்தானா?'' என்றார்.

இன்ஸ்பெக்டர்:- ஓ! தடையில்லை. அவளை ரதிதேவி என்றே சொல்லவேண்டும் அன்றி மனிதப் பிறப்பைச் சேர்ந்தவள் என்று சொல்லவே கூடாது.

*ஜெமீந்தார்:- இதோ நம்முடைய தெற்கு வீதியில் ஜெகன் மோகன விலாசத்தில் பூர்ணசந்திரோதயம் என்று ஒருபெண் வந்திருக்கிறாளே. அவளை நீர் எப்போதாவது பார்த்திருக்கிறீரா?*

*இன்ஸ்பெக்டர்:- ஓ! எத்தனையோ தடவை பார்த்திருக்கிறேன்.*

*ஜெமீந்தார்:- இந்த இரண்டு பேரில் யாரை உயர்வாக மதிக்கலாம்? பூர்ணசந்திரோதயம் அதிக அழகா? மாசிலாமணிப் பிள்ளையின் சம்சாரம் அதிக அழகானவளா?*

*இன்ஸ்பெக்டர்:- ஸ்திரீகளின் அழகை ஒத்திட்டு எது உயர்வு எது தாழ்வு என்று சொல்ல எனக்கு அவ்வளவு திறமை போதாது. இருந்தாலும் அவளுடையது ஒரு மாதிரியான அழகு; இவளுடையது வேறு மாதிரியான அழகு; அநேகமாய் இரண்டும் சமமாகவே சொல்லலாம். நான் பிறந்த முதல் இந்த இரண்டுபேரைப்போன்ற இவ்வளவு அபாரமான அழகு வாய்ந்த பெண்களைப் பார்த்ததே இல்லை.*

*ஜெமீந்தார்:- ஓகோ! அப்படியா! இருக்கட்டும். ஆனால் அந்த மாசிலாமணிப்பிள்ளையின் சம்சாரந்தான் சல்லாயப்பட்டு அணிந்து பார்சீ ஜாதிப் பெண்போல வந்தவள் என்பது நிச்சயந்தானா?*

*இன்ஸ்பெக்டர்:- அதைப்பற்றிக் கொஞ்சம் கூட சந்தேகம் தேவையில்லை. அவளேதான் வந்து ஏமாற்றினவள்.*

*ஜெமீந்தார்:- அப்படியானால், அவள் இளவரசரிடத்தில் காதல் கொண்டவள் போலப் பாசாங்கு செய்தது எல்லாம் தன் புருஷனுடைய சம்மதியின் மேலேதான் நடந்திருக்க வேண்டும்?*

*இன்ஸ்பெக்டர்:- ஆம்; தடையென்ன? ஏதோ முக்கியமான தஸ்தாவேஜியில் இளவரசருடைய கையெழுத்தை வாங்க வேண்டும் என்பதே அவர்களுடைய முக்கிய நோக்கம். அதற்காக அந்த மனிதன் தன்னுடைய சம்சாரத்தை*

இப்படிப்பட்ட தந்திரம் செய்யும்படி அனுப்பியிருக்கிறான்.

*ஜெமீந்தார்:-* சரி; அதிருக்கட்டும்; நீர் இப்போ அந்தக் கட்டாரித்தேவன்மேல் ஏதாவது நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகிறீரோ?

*இன்ஸ்பெக்டர்:-* இல்லை இல்லை. இது சம்பந்தமாக நான் இப்போது அவர்கள் பேரில் நடவடிக்கை எடுத்துக் கொண்டால், தங்களுடைய பெயரையும் இளவரசருடைய பெயரையும் நான் வெளியிட வேண்டியிருக்கும். ஆகையால், நான் இது சம்பந்தமாக அவர்களைப் பிடிக்கப் போகிறதில்லை. இன்றைய தினம் ராத்திரி அவர்கள் அன்னத்தம்மாளுடைய வீட்டில் புகுந்து கொள்ளையடிக்க எண்ணியிருக்கிறதைப் பற்றி கந்தன் என்னிடம் சொன்னான் அல்லவா! ஆகையால், நான் தக்க ஏற்பாடுகளுடன் இன்றையதினம் ராத்திரி அம்மன்பேட்டைக் குப் போய், கட்டாரித்தேவனையும் அவனுடைய கூட்டத்தாரை யும் பிடித்துவிடத் தீர்மானித்து இருக்கிறேன்.அதற்காக நான் அவசரமாகச் சில இடங்களுக்குப் போக வேண்டும். அதற்கு முன் உங்களிடம் வந்து ரகசியத்தை வெளியிட்டுப்போக எண்ணி வந்தேன்.

*ஜெமீந்தார்:-* சரி; நீர் சொல்வது சரியான யோசனைதான்; அப்படியே செய்யும். ஆனால், அவர்கள் இளவரசரிடத்தில் எழுதி வாங்கிய தஸ்தாவேஜு இன்னது என்று கண்டுபிடிக்கக் கூட இல்லையே.

*இன்ஸ்பெக்டர்:-* எனக்கு இன்னம் சில தினங்கள் வரையில் அவகாசம் கொடுத்தால் அதையும் நான் கண்டுபிடித்துச் சொல்லுகிறேன்.

*ஜெமீந்தார்:-* இருக்கட்டும். அப்படியே செய்யும். அதோடு என்னுடைய தினசரி டைரிப் புஸ்தகம் என்னிடம் எப்படித் திரும்பி வந்தது என்பதையும் நீர் கண்டுபிடித்துச் சொல்லும்.

இன்ஸ்பெக்டர்:- ஆகா! அப்படியே செய்கிறேன். நான் உத்தரவு வாங்கிக்கொள்ளலாமா? எனக்கு நேரமாகிறது. அவசரமான சில வேலைகள் இருக்கின்றன.

ஜெமீந்தார்:- இன்ஸ்பெக்டரே! நீர் இந்த விஷயத்தில் மிகவும் சாமர்த்தியமாக நடந்து இவ்வளவு தூரம் உண்மையைக் கண்டுபிடித்ததைப்பற்றி எனக்கு நிரம்பவும் சந்தோஷமாக இருக்கிறது. நீர் இதில் படாத பாடெல்லாம் பட்டு தெய்வச் செயலாக உயிர் தப்பி வந்திருக்கிறீர். அதற்கு எல்லாம் சன்மானமாக நான் உமக்கு இதோ ஒரு பை பணம் தருகிறேன். இதை வாங்கிக்கொள்ளும். இன்னும் நான் இளவரசரிடம் சொல்லி உமக்கு இன்னமும் பெரிய உத்தியோகம் செய்து வைக்கச் சிபாரிசு செய்கிறேன். நீர் போய் இன்றைய ராத்திரி வேலையைப் பாரும். போம்- என்று கூறிய வண்ணம் தமது மேஜையைத் திறந்து, அதற்குள் இருந்த பணப் பையை எடுத்து அன்போடு உபசரித்து இன்ஸ்பெக்டரிடம் கொடுக்க, அவர் வேண்டாம் வேண்டாம் என்று மறுத்து உபசார வார்த்தை கூறியபடி அதை வாங்கிக்கொண்டு அவரை வணங்கி உத்தரவு பெற்றுக்கொண்டு, அவ்விடத்தை விட்டு வெளியில் போய்விட்டார்.

பிறகு தனிமையில் இருந்த மருங்காபுரி ஜெமீந்தார் மிகுந்த மனவெழுச்சியும் குதூகலமும் அடைந்தவராய் இன்ஸ்பெக்டர் சொன்ன விஷயங்களில் தமது மனதைச் செலுத்தி எண்ணமிட்டவராக உட்கார்ந்திருந்தார். அவர் தமக்குள்ளாக சிந்தனை செய்யத் தொடங்கி, "சரி; இந்தப் பூர்ணசந்திரோதயம் மகா பொல்லாதவள், போக்கிரித்தனம் நிறைந்தவள். அவள் இளவரசருடைய செல்வத்தையும் செல்வாக்கையுமே பெரிதாக நினைத்து அவரைப் பிடித்துக் கொள்ளத் தீர்மானித்திருக்கிறாள் என்பது நிச்சயம்; அந்தப் பீடையை இளவரசரே கட்டிக்கொண்டு அழட்டும். எனக்கு அவள் வேண்டாம். இவ்வளவு தூரம் காரியம் நடந்தபின் அவளை

மதித்து நான் மறுபடியும் அவளை அடைய முயற்சி செய்வது கண்ணியம் ஆகாது. ஆகையால், அவளை நான் இன்றோடு மறந்துவிடுகிறேன். பார்சீ ஜாதிப்பெண் போல வேஷம் போட்டுக் கொண்டு வந்தவளான இந்த மாசிலா மணிப் பிள்ளையின் சம்சாரத்தை நான் அடைய முயற்சி செய்து பார்க்கிறேன். எப்போது இளவரசரிடத்தில் அவள் அவ்வளவு துணிந்து தாராளமாக நடந்தாளோ, அவள் சுத்தமான மனுஷி யல்ல என்பது நிச்சயமாகிறது. பணத்தை வாரி இறைத்தால் அவளுடைய மனசை எப்படியும் கவர்ந்து விடலாம். அவளுடைய புருஷனும், அதற்குச் சம்மதிக்கக் கூடியவனாகவே தோன்றுகிறான். ஆகையால், நான் உடனே இதற்குத் தக்க மனுஷியை அனுப்பி, அவளைச் சரிப்படுத்தி அழைத்துக் கொண்டு வரச்செய்கிறேன். இந்த விஷயத்தில் மகா திறமை வாய்ந்தவளான நம்முடைய ஹேமாபாயியை உடனே வரவழைத்தால் அவள் எப்படிப்பட்ட பெண்ணையும் ஒரு நிமிஷத்தில் சொக்குப்பொடி போட்டு மயக்கிக் கொண்டு வந்து விடுவாள். இந்தப் பெண்ணை வெல்வது அரிதல்ல'' என்று தமக்குள் தீர்மானித்துக்கொண்டு உடனே விசையை அழுத்த, அடுத்த நிமிஷத்தில், அவரது காரியதரிசி அவருக்கு எதிரில் வந்து வணக்கமாக நின்றான்.

ஜெமீந்தார் அவனைப் பார்த்து, ''நீ உடனே ராணி வாய்க்கால் சந்துக்குப் போய் நம்முடைய ஹேமாபாயியை அழைத்துக் கொண்டு வா!'' என்று உத்தரவு செய்ய, கோவிந்தசாமி அப்படியே செய்வதாகச் சொல்லிவிட்டு அவ்விடத்தை விட்டு வெளியில் போய்விட்டான்.

★ ★ ★

ஒரு மணிநேரம் கழிந்தது. கோவிந்தசாமி ஹேமாபாயியை அழைத்துக்கொண்டு வந்து சேர்ந்தான்.

## 19-வது அதிகாரம்

# சனிக்கிழமை - ஆறாவது வலை

வெள்ளிக்கிழமை இரவில் மருங்காபுரி ஜெமீந்தாரினது மாளிகைக்குள்ளிருந்து தந்திரமாகத் தப்பித்துக்கொண்டு வெளியில் வந்த பூர்ணசந்திரோதயம் ராஜபாட்டையை அடைந்து சிறிது தூரம் நடக்க, அவளுக்கு எதிரில் ஒரு வாடகைக் குதிரை வண்டி ஓடிவந்தது. அந்த மடமயிலாள் அதை நிறுத்தி வாடகைக்கு அமர்த்தி அதற்குள் ஏறி உட்கார்ந்து கொள்ள, அரைக்கால் நாழிகையில், வண்டி கீழ் ராஜவீதியின் வழியாக ஓடி அரண்மனைத்தோட்டத்து திட்டி வாசலண்டை வந்து நின்றது. அவ்விடத்தில் இரண்டு பாராக்காரர்கள் நின்று காவல் காத்திருந்தனர். பூர்ணசந்திரோயம் உடனே வண்டியை விட்டுக் கீழே இறங்கி, ஒரு பக்கத்தில் சிறிது நேரம் நிறுத்தி வைத்திருக்கும்படி வண்டிக்காரனுக்கு உத்தரவு கொடுத்துவிட்டு, அங்கிருந்த பாராக்காரர்களிடம் நெருங்கி, ''சின்ன மகாராஜா உள்ளே இருக்கிறாரா?'' என்ற கேட்க, அவர்கள் அவளது ஜாஜ்வல்லியமான அலங்காரத்தையும் மகா உன்னதமான கட்டழகையும், அற்புத தேஜஸையும் கண்டு, அவள் இளவரசருடைய ஆசை நாயகிகளுள் ஒருத்தி என்றும் அவருடைய உத்தரவின்மேல் அவள் வந்திருக்க வேண்டும் என்றும் நிச்சயித்துக்கொண்டு மிகுந்த பயபக்தி மரியாதை களைக் காட்டிக் குனிந்து, ''அம்மணீ! மகாராஜா உள்ளே இருக்கிறார். ஏன்? தாங்கள் அங்கே போக வேண்டுமா?'' என்றார்கள். பூர்ணசந்திரோதயம், ''ஆம்'' என்க, அவர்கள் உடனே திட்டி வாசலைத் திறந்தனர். ஒருவன் அந்தப் பூங்கோ தைக்கு வழிகாட்டி முன்னால் நடக்க, அவள் அவனைத் தொடர்ந்து பின்னால் சென்றாள். அவர்களிருவரும் பற்பல சந்துப்பாதைகளையும் கூடங்களையும் மாடங்களையும்

கடந்து ஏழாவது உப்பரிகையில் இருந்த இளரவரசரது கந்தர்வ மகாலை அடைந்தனர்.

அதன் வாசலில் சில அந்தரங்க மெய்க்காவலர் நின்று கொண்டிருந்தனர். பூர்ணசந்திரோதயத்தை அழைத்துச் சென்ற பாராக்காரன் அங்கிருந்த மெய்க்காவலரிடம் நெருங்கி, காதோடு ரகசியமாகச் சில வார்த்தைகள் சொல்ல, அவர்களது தலைவன் பூர்ணசந்திரோதயத்தை வணங்கி உபசரித்து வரவேற்று, அவ்விடத்தில் இருந்த ஒரு ஸோபாவில் ஒரு நிமிஷநேரம் உட்கார்ந்துகொள்ளும்படியும் அவளது பெயரைத் தெரிவிக்கும் படியும் வேண்டிக்கொள்ள பூர்ணசந்திரோதயம் தனது பெயரை வெளியிடாமல், ''நீ மகாராஜாவிடத்தில் என்னுடைய பெயரைச் சொல்லவேண்டும் என்பதில்லை. இன்றையதினம் இரவு ஒன்பதுமணிக்கு வரச்சொன்ன மனிதர் வந்திருப்பதாகச் சொல். அதுவே போதுமானது'' என்றாள். உடனே அந்த மெய்க் காவலன் உள்ளே போய்விட்டான்.

பூர்ணசந்திரோதயம் ஸோபாவின் மீது உட்கார்ந்து கொண்டாள். ஆனாலும், அவள் அதிக நேரம் காத்திருக்க வில்லை. உள்ளே போன மெய்க்காவலன் இரண்டொரு நிமிஷத்தில் திரும்பிவந்து, முன்னிலும் அதிக பயபக்தியோடு கைக்கட்டி வாய் புதைத்து, ''அம்மணி மகாராஜா தங்களுடைய வருகையை எதிர்பார்த்திருக்கிறார். தாங்கள் தயை செய்து உள்ளே போகலாம்'' என்று நயந்து கூற, அதைக் கேட்ட பூர்ணசந்திரோதயம் உடனே எழுந்து வாசல் கதவைத் திறந்து மறுபடி மூடிக்கொண்டு நவரத்ன மணிமண்டபமான அந்த கந்தர்வ மகாலுக்குள் நுழைந்தாள். சுவர்க்கலோகமே அந்த வடிவாக வந்திருந்ததோ என அவள் சந்தேகித்து மயங்கும்படி அவ்வளவு அழகாகவும் புதுமையாகவும் அலங்கரிக்கப்பட்டு மருங்காபுரி ஜெமிந்தாரது வெல்வெட்டு மாடம், ரதிகேளி விலாசம் முதலிய அற்புத மாடங்களைக் காட்டிலும் பதினாயிரம் மடங்கு அதிக வசீகரமாக அமைக்கப்பட்டிருந்த

அந்த கந்தர்வ மாடத்திற்குள், நமது பூர்ணசந்திரோதயம் நுழைந்து இரண்டோரடி தூரம் நடக்குமுன், சற்று தூரத்தில் கோடிசூரியப் பிரகாசமாக மின்னிய நவரத்ன மஞ்சத்தில் மல்லிகை, ரோஜா முதலிய புஷ்பங்களின் இதழ்கள் ஒரு முழ உயரம் பரப்பப் பெற்றிருந்த வெகு ஸொகுஸான வெல்வெட்டு மெத்தையின் மேல் உட்கார்ந்து கொண்டிருந்த இளவரசர் சடக்கென்று கீழே இறங்கி அவளுக்கு எதிராக ஆவலோடு பாய்ந்து, "கண்ணே பூர்ணசந்திரோதயம்! இப்படி வா! இந்தக் கட்டிலின் மேல் உட்கார்ந்து கொள்" என்று கனிவாகக் கூறியவண்ணம், புன்னகையாலும், மகிழ்ச்சியாலும் தமது முகத்தை மலர்த்திய வண்ணம், அவளுக்குக் கைவாகு கொடுத்து வாத்சல்யத்தோடு அழைத்துவர எத்தனிக்க, அவள் அவரது கைக்கு அகப்படாமல், சிறிது அப்பால் நழுவிச் சென்று, "இல்லை இல்லை நான் இங்கே உட்கார நேரமில்லை. இரண்டொரு வார்த்தைகள் பேசிவிட்டு நான் உடனே போய்விட வேண்டும். இந்த அகால வேளையில் நான் இங்கே வந்து, அலுத்துப்போய்த் தூங்கிக் கொண்டிருந்த மகாராஜாவை எழுப்பும்படியான அபராதத்துக்கு ஆளானேன். மகாராஜா கோபிக்கக் கூடாது"என்று நயமாகக் கூறினாள். அவளது சந்திரவதனம் தனது இயற்கையான குளிர்ச்சியையும் இனிமையையும் காட்டாமல், உள்ளடக்கிய விசனத்தையும் அதிருப்தியையும் காண்பித்தது. அவளது மாறுபட்ட நிலைமையையும் நடத்தையையும் கண்டு ஒருவாறு வியப்படைந்த இளவரசர் முன்னிலும் அதிக இளக்கமாகவும் நயமாகவும் பேசத் தொடங்கி, "ஆகா! பூர்ணசந்திரோதயம்! இன்றையதினம் ஒன்பது மணிக்கு நீ வரப்போகிறாய் என்று நான் என்னென்ன சிறந்த ஏற்பாடுகள் செய்திருந்தேன் தெரியுமா? நான் கடைசியாக வண்டியை அனுப்பப் போன சமயத்தில் நீ அனுப்பிய கடிதம் வந்து சேர்ந்தது. அதைக் கண்டவுடனே, என் மனம் அடைந்த ஏக்கத்தையும் துயரத்தையும் என்னவென்று எடுத்துச் சொல்லுவேன்!

அந்த கந்தர்வ மாடத்திற்குள், நமது பூர்ணசந்திரோதயம் நுழைந்து இரண்டோரடி தூரம் நடக்குமுன், சற்று தூரத்தில் கோடிசூரியப் பிரகாசமாக மின்னிய நவரத்ன மஞ்சத்தில் மல்லிகை, ரோஜா முதலிய புஷ்பங்களின் இதழ்கள் ஒரு முழ உயரம் பரப்பப் பெற்றிருந்த வெகு ஸொகுஸான வெல்வெட்டு மெத்தையின் மேல் உட்கார்ந்து கொண்டிருந்த இளவரசர் சடக்கென்று கீழே இறங்கி அவளுக்கு எதிராக ஆவலோடு பாய்ந்து, ''கண்ணே பூர்ணசந்திரோதயம்! இப்படி வா! இந்தக் கட்டிலின் மேல் உட்கார்ந்து கொள்'' என்று கனிவாகக் கூறியவண்ணம், புன்னகையாலும், மகிழ்ச்சியாலும் தமது முகத்தை மலர்த்திய வண்ணம், அவளுக்குக் கைவாகு கொடுத்து வாத்சல்யத்தோடு அழைத்துவர எத்தனிக்க, அவள் அவரது கைக்கு அகப்படாமல், சிறிது அப்பால் நழுவிச் சென்று, ''இல்லை இல்லை நான் இங்கே உட்கார நேரமில்லை. இரண்டொரு வார்த்தைகள் பேசிவிட்டு நான் உடனே போய்விட வேண்டும். இந்த அகால வேளையில் நான் இங்கே வந்து, அலுத்துப்போய்த் தூங்கிக் கொண்டிருந்த மகாராஜாவை எழுப்பும்படியான அபராதத்துக்கு ஆளானேன். மகாராஜா கோபிக்கக் கூடாது''என்று நயமாகக் கூறினாள். அவளது சந்திரவதனம் தனது இயற்கையான குளிர்ச்சியையும் இனிமையையும் காட்டாமல், உள்ளடக்கிய விசனத்தையும் அதிருப்தியையும் காண்பித்தது. அவளது மாறுபட்ட நிலைமையையும் நடத்தையையும் கண்டு ஒருவாறு வியப்படைந்த இளவரசர் முன்னிலும் அதிக இளக்கமாகவும் நயமாகவும் பேசத் தொடங்கி, ''ஆகா! பூர்ணசந்திரோதயம்! இன்றையதினம் ஒன்பது மணிக்கு நீ வரப்போகிறாய் என்று நான் என்னென்ன சிறந்த ஏற்பாடுகள் செய்திருந்தேன் தெரியுமா? நான் கடைசியாக வண்டியை அனுப்பப் போன சமயத்தில் நீ அனுப்பிய கடிதம் வந்து சேர்ந்தது. அதைக் கண்டவுடனே, என் மனம் அடைந்த ஏக்கத்தையும் துயரத்தையும் என்னவென்று எடுத்துச் சொல்லுவேன்!

அந்த கந்தர்வ மாடத்திற்குள், நமது பூர்ணசந்திரோதயம் நுழைந்து இரண்டோரடி தூரம் நடக்குமுன், சற்று தூரத்தில் கோடிசூரியப் பிரகாசமாக மின்னிய நவரத்ன மஞ்சத்தில் மல்லிகை, ரோஜா முதலிய புஷ்பங்களின் இதழ்கள் ஒரு முழ உயரம் பரப்பப் பெற்றிருந்த வெகு ஸொகுஸான வெல்வெட்டு மெத்தையின் மேல் உட்கார்ந்து கொண்டிருந்த இளவரசர் சடக்கென்று கீழே இறங்கி அவளுக்கு எதிராக ஆவலோடு பாய்ந்து, ''கண்ணே பூர்ணசந்திரோதயம்! இப்படி வா! இந்தக் கட்டிலின் மேல் உட்கார்ந்து கொள்'' என்று கனிவாகக் கூறியவண்ணம், புன்னகையாலும், மகிழ்ச்சியாலும் தமது முகத்தை மலர்த்திய வண்ணம், அவளுக்குக் கைவாகு கொடுத்து வாத்சல்யத்தோடு அழைத்துவர எத்தனிக்க, அவள் அவரது கைக்கு அகப்படாமல், சிறிது அப்பால் நழுவிச் சென்று, ''இல்லை இல்லை நான் இங்கே உட்கார நேரமில்லை. இரண்டொரு வார்த்தைகள் பேசிவிட்டு நான் உடனே போய்விட வேண்டும். இந்த அகால வேளையில் நான் இங்கே வந்து, அலுத்துப்போய்த் தூங்கிக் கொண்டிருந்த மகாராஜாவை எழுப்பும்படியான அபராதத்துக்கு ஆளானேன். மகாராஜா கோபிக்கக் கூடாது''என்று நயமாகக் கூறினாள். அவளது சந்திரவதனம் தனது இயற்கையான குளிர்ச்சியையும் இனிமையையும் காட்டாமல், உள்ளடக்கிய விசனத்தையும் அதிருப்தியையும் காண்பித்தது. அவளது மாறுபட்ட நிலைமையையும் நடத்தையையும் கண்டு ஒருவாறு வியப்படைந்த இளவரசர் முன்னிலும் அதிக இளக்கமாகவும் நயமாகவும் பேசத் தொடங்கி, ''ஆகா! பூர்ணசந்திரோதயம்! இன்றையதினம் ஒன்பது மணிக்கு நீ வரப்போகிறாய் என்று நான் என்னென்ன சிறந்த ஏற்பாடுகள் செய்திருந்தேன் தெரியுமா? நான் கடைசியாக வண்டியை அனுப்பப் போன சமயத்தில் நீ அனுப்பிய கடிதம் வந்து சேர்ந்தது. அதைக் கண்டவுடனே, என் மனம் அடைந்த ஏக்கத்தையும்

அந்த கந்தர்வ மாடத்திற்குள், நமது பூர்ணசந்திரோதயம் நுழைந்து இரண்டோரடி தூரம் நடக்குமுன், சற்று தூரத்தில் கோடிசூரியப் பிரகாசமாக மின்னிய நவரத்ன மஞ்சத்தில் மல்லிகை, ரோஜா முதலிய புஷ்பங்களின் இதழ்கள் ஒரு முழ உயரம் பரப்பப் பெற்றிருந்த வெகு ஸொகுஸான வெல்வெட்டு மெத்தையின் மேல் உட்கார்ந்து கொண்டிருந்த இளவரசர் சடக்கென்று கீழே இறங்கி அவளுக்கு எதிராக ஆவலோடு பாய்ந்து, ''கண்ணே பூர்ணசந்திரோதயம்! இப்படி வா! இந்தக் கட்டிலின் மேல் உட்கார்ந்து கொள்'' என்று கனிவாகக் கூறியவண்ணம், புன்னகையாலும், மகிழ்ச்சியாலும் தமது முகத்தை மலர்த்திய வண்ணம், அவளுக்குக் கைவாகு கொடுத்து வாத்சல்யத்தோடு அழைத்துவர எத்தனிக்க, அவள் அவரது கைக்கு அகப்படாமல், சிறிது அப்பால் நழுவிச் சென்று, ''இல்லை இல்லை நான் இங்கே உட்கார நேரமில்லை. இரண்டொரு வார்த்தைகள் பேசிவிட்டு நான் உடனே போய்விட வேண்டும். இந்த அகால வேளையில் நான் இங்கே வந்து, அலுத்துப்போய்த் தூங்கிக் கொண்டிருந்த மகாராஜாவை எழுப்பும்படியான அபராதத்துக்கு ஆளானேன். மகாராஜா கோபிக்கக் கூடாது''என்று நயமாகக் கூறினாள். அவளது சந்திரவதனம் தனது இயற்கையான குளிர்ச்சியையும் இனிமையையும் காட்டாமல், உள்ளடக்கிய விசனத்தையும் அதிருப்தியையும் காண்பித்தது. அவளது மாறுபட்ட நிலைமையையும் நடத்தையையும் கண்டு ஒருவாறு வியப்படைந்த இளவரசர் முன்னிலும் அதிக இளக்கமாகவும் நயமாகவும் பேசத் தொடங்கி, ''ஆகா! பூர்ணசந்திரோதயம்! இன்றையதினம் ஒன்பது மணிக்கு நீ வரப்போகிறாய் என்று நான் என்னென்ன சிறந்த ஏற்பாடுகள் செய்திருந்தேன் தெரியுமா? நான் கடைசியாக வண்டியை அனுப்பப் போன சமயத்தில் நீ அனுப்பிய கடிதம் வந்து சேர்ந்தது. அதைக் கண்டவுடனே, என் மனம் அடைந்த ஏக்கத்தையும் துயரத்தையும் என்னவென்று எடுத்துச் சொல்லுவேன்!

வெகுநேரம் வரையில் மன நிம்மதி இல்லாமல் சங்கடப் பட்டுக் கொண்டு உட்கார்ந்துவிட்டு இப்போது தான் அரை நாழிகைக்கு முன் படுத்துத் தூங்க ஆரம்பித்தேன். மெய்க் காவலர் வந்து எழுப்பி நீ வந்திருப்பதாகச் சொன்னான். உன் கடிதத்தை நான் கண்டபிறகு, இன்றைய தினம் நீ மறுபடியும் வந்து இப்படி என்னை இன்பசாகரத்தில் ஆழ்த்தப் போகிறாய் என்று நான் கொஞ்சமும் எதிர்பார்க்கவே இல்லை. ஏன் உன் முகம் ஒரு மாதிரியாக இருக்கிறது? இன்னமும் உடம்பு அசௌக்கியமாகவே இருக்கிறதா?'' என்றார்.

அந்தரங்கமான அன்போடும் பட்சத்தோடும் பேசப்பட்ட அவரது வார்த்தைகளைக் கேட்ட பூர்ணசந்திரோதயம், ''என்ன ஆச்சரியம்! நானாவது தங்களுக்குக் கடிதம் எழுதவாவது? நான் இதுவரையில் தங்களுக்காவது வேறு யாருக்காவது கடிதம் எழுதியதே இல்லையே!'' என்றாள்.

இளவரசர் திடுக்கிட்டு முன்னிலும் பன்மடங்கு அதிகரித்த வியப்படைந்து, ''நீ எழுதியதுபோல சாயுங்காலம் எட்டரை மணிக்கு எனக்கொரு கடிதம் வந்ததே! நீ சொல்வதைப் பார்த்தால், ஏதோ மோசடி நடந்திருப்பதாகத் தெரிகிறது. அதனால்தான் நான் உன்னைத் தொடக்கூட நீ இடங்கொடுக்க மாட்டேன் என்கிறாயா? உன் முகம் கோபத்தினால் ஜ்வலிப்பது இப்போதுதான் தெரிகிறது!'' என்று கூறி மிகுந்த சஞ்சலத்தோடு அவளண்டை நெருங்கினார். அப்போது பூர்ண சந்திரோதயத்தினது முகம் மேகங்களினால் மறைக்கப்பட்ட பூர்ணசந்திரன்போல, ஆத்திரத்தினால் கருத்து அவளது கண்களிலிருந்து கண்ணீர் ததும்பிக் கன்னங்களின் வழியாகக் கீழே வழிந்தது. அவள் நிரம்பவும் ஆத்திரத்தை உள்ளடக்கிக் கொஞ்சலாகவும் சலுகையாகவும் பேசத் தொடங்கி, ''என்மேல் கோபம் இருந்தால் என்னை இப்படிப் பட்ட அவமானத்துக்கும், இழிவுக்கும் கொடூரமான தேகத் துன்பத்துக்கும் ஆளாக்கி அவமரியாதைப் படுத்துவதைவிட

என்னை மகாராஜாவே தங்களுடைய கையால் கொன்று போட்டிருக்கலாம். அதுவே எனக்குப் பெருத்த உதவியாக இருந்திருக்குமே!'' என்று கூறி முன்னிலும் பன்மடங்கு அதிகமாகப் பிணங்கி ஒரு பக்கமாகத் திரும்பி நின்றாள்.

அவளது விபரீத நிலைமையைக் கண்டு மிகுந்த கலக்கமும் மன இளக்கமும் அடைந்த இளவரசர் மறுபடியும் அவளண்டை நெருங்கி அன்பாகவும் மிருதுவாகவும் அவளது அழகுவழிந்த மேனியைத்தொட்டு அவளது மோவாயில் தமது கையை வைத்துக் கொஞ்சி, ''கண்ணே! பூர்ணசந்திரா! கோபிக்காதே; நான் உன் விஷயத்தில் எவ்விதத் தவறும் செய்யவில்லை. இனி என் ஆயிசுகால பரியந்தம் செய்யவும் மாட்டேன். நான் அறியாமல் என்னால் ஏதாவது தவறு ஏற்பட்டிருந்தாலும், அதை நீ பாராட்டாமல் என்னை மன்னித்துக்கொள்ள வேண்டும். நான் பிறந்தது முதல் எப்படிப்பட்ட உயர்வான மனிதரிடத்திலும், எப்படிப்பட்ட உன்னதமான ரதிதேவியிடத்திலும் நான் மன்னிப்பு என்ற சொல்லை உபயோகித்தே அறியாதவன். அந்த வார்த்தை நான் அறியாமலே உன் விஷயத்தில் என் வாயிலிருந்து வந்ததிலிருந்து உன்னை நான் இந்த உலகத்திலுள்ள சகலமான மனிதர்களுக்கும் உயர்ந்தவளாகவும் அருமையானவளாகவும் மதிக்கிறேன் என்பதை நீ அறிந்து கொள்ள வேண்டும்'' என்று மிக மிகக் கனிவாகப் பேசினார்.

அவரது உண்மையான வாஞ்சையையும் மதிப்பையும் கண்டு ஒருவாறு சாந்தமடைந்த பூர்ணசந்திரோதயம் அவரது பக்கம் திரும்பி, ''நான் ஏதோ கடிதம் எழுதியதாகச் சொன்னீர்களே! அதைக்காட்டுங்கள். பார்க்கிறேன்'' என்று கிள்ளைபோலக் கொஞ்சலாக மொழிந்தாள்.

உடனே இளவரசர், ''அந்தக் கடிதம் அதோ பஞ்சணையின் மேல் இருக்கிறது. நீ நிற்கக்கூடாது. அங்கே வந்து உட்கார்ந்து கொள். நான் உடனே கடிதத்தைக் காட்டுகிறேன். நீ நிற்பதனால் உன்னுடைய இடை தள்ளாடுவதைப் பார்க்கப் பார்க்க,

என்னுடைய உயிரே தள்ளாடித் துடிக்கிறது. வா; கட்டிலுக்குப் போகலாம்'' என்று உருக்கமாகக் கூறியவண்ணம், தமது வலக் கரத்தைக் கொடுத்து அவளது இடையைச் சுற்றி அணைத்துப் பிடித்த வண்ணம், அந்த அழகிய கலாப மயிலை நடத்தி அழைத்துக் கொண்டு போய் நவரத்னக் கட்டிலை அடைந்து ஆவலோடும் ஆவேசத்தோடும் அவளைத் தூக்கிக் கட்டிலின் மீது உட்காரவைத்து தலையணையின் கீழ் இருந்த ஒரு கடிதத்தை எடுத்து அவளிடம் கொடுத்துவிட்டுத் தாமும் கட்டிலின் மேல் ஏறி அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டார்.

அந்த மின்னாள் மிகுந்த ஆவலோடு அந்தக் கடிதத்தை வாங்கிப் பிரித்து, விளக்கு வெளிச்சத்தின் உதவியால் அதைப் படித்துப் பார்த்தாள். அதன் எழுத்துகள் முத்து முத்தாக அழகாய் இருந்ததன்றி, யாரோ ஸ்திரீயினால் எழுதப்பட்டன வாகத் தென்பட்டன. கடிதம் அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது-

வெள்ளிக்கிழமை மாலை 8 மணி

ராஜாதிராஜ ராஜ பூபதியான மாட்சிமை தங்கிய இளவரசர்கள் பொற்பாத கமலங்களின் அடியாள் பூர்ணசந்திரோதயம் சாஷ்டாங்க தெண்டன் சமர்ப்பித்துச் செய்து கொள்ளும் தாழ்மையான விக்ஞாபனம். இன்றைய தினம் சாயுங்காலம் ஏழரை மணி வரையில் என் உடம்பு சரியாக இருந்தது. அதன் பிறகு திடீரென்று கடுமையான ஜுரமும் தலைவலியும் வந்து என்னை வதைக்கத் தொடங்கிவிட்டன. ஆகையால், நான் தங்களுக்கு வாக்குக்கொடுத்த பிரகாரம் ஒன்பது மணிக்கு அவ்விடம் வரக்கூடாத நிலைமையில் இருக்கிறேன். நான் எதிர்பார்த்த சுகம் கிடைக்காமல் போகும்படி இப்படிப்பட்ட எதிர்பார்க்காத இடையூறு வந்து நேர்ந்தது முக்கியமாக என்னுடைய துர்ப்பாக்கியத்தின் கோளாறென்றே நான் எண்ணுகிறேன். என் உடம்பு இப்போது இருக்கும்

நிலைமையிலிருந்து எனக்கு எப்போதுதான் குணம் ஏற்படும் என்பது நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. ஆகையால், நான் தங்களைத் தரிசிப்பதற்கு உகந்த இன்னொரு நாளை இந்தக் கடிதத்தில் குறிப்பிட இயலவில்லை. என் தேக ஸ்திதி ஒழுங்குபட்டவுடனே நான் மறுபடி இன்னொரு விக்ஞாபனம் எழுதித் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அதுவரை யில் இந்த ஏழையை க்ஷமித்து அருள வேண்டும்.

இங்ஙனம், தங்களை என்றும் மறவாத அடியாள்,
பூர்ணசந்திரோதயம்.

- என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தைப் படித்து முடித்த உடனே அந்தக் கட்டழகி, ''ஆகா! இது என்னால் எழுதப்பட்ட கடிதமே அல்லவே! நான் எழுதியதாக வேறே யாரோ மோசடியாக இதை எழுதி இருக்கிறார்கள். இது என்னுடைய எழுத்தே அல்ல. நான் நல்ல தேக ஸ்திதியோடு இப்போது இங்கே வந்திருப்பதே இந்தக் கடிதத்தை நான் எழுதவில்லை என்பதற்குப் போதுமான ருஜுவல்லவா!'' என்று மிகுந்த வியப்போடும் மனக்கலக்கத்தோடும் கூறினாள்.

அந்தச் சொற்களைக் கேட்ட இளவரசர், அவளைக் காட்டிலும் பன்மடங்கு அதிகரித்த வியப்பும் திகைப்பும் அடைந்தவராய், ''ஆ! அப்படியா! இதை நீ எழுதவில்லையா! சரி; இதை எழுதினது யார் என்பது எனக்கு இப்போதுதான் தெரிந்தது. உனக்கு என்ன விதமான அவமரியாதை நேர்ந்தது? நீ இந்நேரம் எங்கே போயிருந்தாய்? எல்லா விவரங்களையும் சொல்'' என்று கூறினார். மருங்காபுரிக் கிழவர்தான் அந்தப் பொய் கடிதத்தைத் தயார் செய்து தமக்கு அனுப்பி இருக்க வேண்டும் என்ற நிச்சயம் உடனே அவருக்கு ஏற்பட்டுவிட்டது.

அவரது சொற்களைக் கேட்ட பூர்ணசந்திரோதயம், ''விவரங்களை நான் சொல்வது இருக்கட்டும். நேற்றைய தினம் நமக்குள் அந்தரங்கமாக நடந்த விஷயங்களை எல்லாம்

மகாராஜா யாரிடத்தில் வெளியிட்டது என்பதைத் தயை செய்து எனக்குச் சொல்ல வேண்டும்'' என்று கோபமாகக் கேட்டாள்.

இளவரசர் தாம் செய்த தவறைக் குறித்து உண்மையில் வருந்தி அவளிடத்தில் கரைகடந்த அன்பும் பச்சாதாபமும் கொண்டவராய், ''கண்ணே! கோபித்துக் கொள்ளாதே! நான் அந்த விஷயத்தில் செய்தது என்மேல் குற்றந்தான். நான் அப்படிச்செய்தது சுத்த முட்டாள்தனம்; பைத்தியக்காரத்தனம். நான் நம்முடைய ரகசியங்களை எல்லாம் வெளியிட்டு விட்டேன் என்று உன் மனம் நிரம்பவும் சஞ்சலப்படுவது நியாயமே. இந்த ஒரு தடவை மாத்திரம் நீ என்னை மன்னித்துக் கொள். இனிநான் நம்முடைய எந்த விஷயத்தையும் வெளியிட மாட்டேன் என்பதை நீ உறுதியாக எண்ணிக் கொள்ளலாம்'' என்று கூறி மறுபடியும் அவளது மோவாயைப் பிடித்துக் கொஞ்ச, அவள் அவரது கையை மெதுவாக நகர்த்திப் பிடித்துக்கொண்டு, ''போனது போகட்டும். நடந்து போனதைப் பற்றி வருத்தப்பட்ட இனி ஆகப்போவது ஒன்றும் இல்லை. தங்களுடைய வண்டி சரியாக ஒன்பது மணிக்கு வரும் என்று நான் நன்றாக அலங்காரம் செய்துகொண்டு என்னுடைய காரியங்களை எல்லாம் முடித்துக்கொண்டு புறப்பட ஆயத்தமாக இருந்தேன். வண்டி சரியாக 9மணிக்கு வந்தது. நான் அதற்குள் உட்கார்ந்துகொண்டு போனேன். தாதிகள் என்னை அழைத்துக்கொண்டுபோய் மருங்காபுரி ஜெமீந்தாருடைய மாளிகையின் மேன்மாடத்தில் விட்டுக் கதவைப் பூட்டிக்கொண்டு போய்விட்டார்கள்'' என்றாள்.

இளவரசர்:- (மிகுந்த கோபத்தோடு) என்ன ஆச்சரியம்! அந்தக் கிழவனுக்கு அவ்வளவு துணிச்சலும், துடுக்கும் ஏற்பட்டு விட்டனவா? உன்னை அப்படிச் சிறை வைத்து அவன் அதற்குமேல் என்ன செய்தான்? சீக்கிரமாகச் சொல்.

**பூர்ணசந்திரோதயம்:-** (புரளியாகப் புன்னகை செய்து) அவர் செய்தது நியாயந்தானே! வெள்ளிக்கிழமை முறை

அவருடையது தானே! அவர் மேல் ஆத்திரப்படுவதில் உபயோகம் என்ன?

இளவரசர்:- என்ன ஆச்சரியம்! அந்த விவரங்கூட உனக்குத் தெரிந்திருக்கிறதா? அதையும் அந்தக் கிழவரே சொன்னாரா?

பூர்ணசந்திரோதயம்:- அதை அவர் சொல்வாரா! அந்த சூரக்கோட்டைப் பாளையக்காரர்தான் சொன்னார்.

இளவரசர்:- (கோபங்கொண்டு) அந்த சூரக்கோட்டைப் பாளையக்காரன் இவ்வளவு அயோக்கியத்தனமாக நடப்பார் என்று எனக்கு ஏற்கெனவே தெரிந்திருந்தால், அவனை நான் எனக்குப் பக்கத்திலேயே வரவிட்டிருக்க மாட்டேன். இனிமேல் அவன் என்னிடத்தில் வந்தால், பாராக்காரனை விட்டு அவனைக் கொண்டு போய் வீதியில் விடச் சொல்லுகிறேன்.

பூர்ணசந்திரோதயம்:- அவர் மேல் மாத்திரம் ஆத்திரப்படுவது நியாயமாகுமா? ஆண்பிள்ளை ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டதை அவர் என்னிடத்தில் வெளியிட்டார். மகாராஜா, தமக்கும் தம்மிடத்தில் உண்மையான காதல் கொண்ட ஒரு பெண்பாலுக்கும் அந்தரங்கத்தில் நடந்ததும், பிறருக்குத் தெரியத் தகாததுமான ரகசியத்தை வேறு ஒருவரிடம் வெளியிட்டதைவிட அது பெரிய குற்றமல்ல. அது போகட்டும். தாங்கள்தான் ஏதோ அந்தரங்க நண்பராயிற்றே என்று அந்தக் கிழவரை மதித்து ரகசியத்தை வெளியிட்டால், அவர் இப்படியா நம்பிக்கைத் துரோகம் செய்கிறது? அவர் எப்படிப்பட்ட தந்திரந்தான் செய்தாலும், அது இந்தப் பூர்ணசந்திரோதயத்தின் இடத்திலா பலிக்கப் போகிறது. அவருக்குத் தகுந்த தண்டனையை நானே நடத்தி வைத்து நற்புத்தி புகட்டிவிட்டு வந்து விட்டேன். இதை அவர் இனி அவருடைய ஜென்மத்துக்கு மறக்கவே மாட்டார். மகாராஜா இனி அவரைக் காணும்போது இதைப்பற்றி அவரிடம் பிரஸ்தாபிக்க வேண்டும் என்ற அவசியமே இல்லை. நான்

செய்துவைத்த மரியாதையே அவருக்கு ஏழேழு தலை முறைக்கும் போதும்.

இளவரசர்:- (மிகுந்த திகைப்பும் ஆவலும் கொண்டு) ஆகா! அப்படியா! அவருக்குத் தக்க பிராயச்சித்தம் செய்து வைத்து விட்டாயா? நல்லதாயிற்று. அதை விவரமாகத்தான் சொல்லேன்.

பூர்ணசந்திரோதயம்:- அவர் எலிப்பொறியில் அகப்பட்டு விழித்துக்கொண்டு இருக்கிறார். நாளைக் காலை வரையில் யாரும்போய் அவரை விடுவிக்காதபடி தந்திரம் செய்துவிட்டு வந்து விட்டேன்.

இளவரசர்:- ஸபாஷ்! பூர்ணசந்திரோதயம்! மெச்சினேன்! மெச்சினேன்! அவருடைய ரதிகேளி விலாசத்திலுள்ள இரும்பு நாற்காலியில் அவரை மாட்டிவிட்டு வந்திருக்கிறாய் என்பது நன்றாகத் தெரிகிறது. கிழவருக்கு அவ்வளவும் வேண்டியது தான். எத்தனை பேரை அவர் ஈவிரக்கம் இன்றி இதுவரையில் அதில் மாட்டவைத்தாரோ, அந்தப் பாவம் எல்லாம் ஒன்றுகூடி இன்று அவருக்கு வந்து வாய்த்தது போலிருக்கிறது. உன்னிடத்தில் எவ்வளவுக்கெவ்வளவு நிகரற்ற அழகு பொருந்தி இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு மன உறுதியும் புத்தி சாதுர்யமும் நிறைந்திருக்கின்றன. அதனாலேதான், என் ஆசையை எல்லாம் நான் உன்மேல் வைத்துவிட்டேன். இனி என் ஆயிசுகால பரியந்தம் நான் உன்னுடைய அடிமை என்பது நிச்சயம். போனது போகட்டும். இப்படிப்பட்ட துன்பகரமான விஷயம் நடந்தது என்ற நினைவையே நீ மறந்துவிடு. நாம் இன்றிரவு கொஞ்சமும் துன்பமே இல்லாத நிச்சலமான பேரின்ப சுகம் அனுபவிக்க வேண்டும். நீ களைத்து வந்திருக்கிறாய். இங்கே சகலமான பக்ஷண பலகாரங்களும் கனி வர்க்கங்களும் இளநீர் பால் முதலிய இனிய பானங்களும் இருக்கின்றன. முதலில் நீ

அவைகளை அருந்தி, உன் ஆயாசத்தை தீர்த்துக் கொள். பிறகு நாம் தாம்பூலந் தரித்து ஆனந்தமாக இருப்போம்'' என்று நிரம்பவும் கனிவாகக் கூறிக் கரைகடந்த மோக ஆவேசத்தோடு தமது இரு கைகளையும் கொடுத்து அந்த இன்ப வல்லியைப் பிடித்து அணைத்து ஆலிங்கனம் செய்து முத்தமிட முயல, அவள் அதற்கு இடங்கொடுத்தும் கொடுக்காமலும் கொஞ்சலாகப் பிணங்கி சடக்கென்று பஞ்சணையை விட்டுக் கீழே குதித்து, ''ஐயோ! எனக்கு நிரம்பவும் நேரமாகிவிட்டது. நான் பத்தரை மணிக்கெல்லாம் திரும்பி வீட்டுக்கு வந்து விடுவதாகச் சொல்லிவிட்டு வந்திருக்கிறேன். என்னுடைய வேலைக்காரிகள் காத்திருப்பார்கள். இப்போது பதினொரு மணிக்கு மேல் ஆகிவிட்டது. என்னைப்பற்றி அவர்கள் இன்னம் கொஞ்ச காலத்துக்குத் தன்பான அபிப்பிராயம் கொள்ளக்கூடாது. ஆகையால், நான் மறுபடியும் இன்னொரு நாள் சாவகாசமாக வருகிறேன். இப்போது தயைசெய்து என்னை விட்டுவிடுங்கள். என் தேகம் பதறுகிறது. என் மனம் முழுதும் வீட்டிலேயே இருக்கிறது. வேண்டாம்; விட்டு விடுங்கள்'' என்று கெஞ்சிக் கூத்தாடிப் புறப்பட ஆயத்தமானாள். மோகலாகிரி தலைக்கேறி, மெய்மறந்து துடிதுடித்து நின்ற இளவரசர், ''கண்ணே! உன் மனமென்ன கல்லா? என்னை உயிரோடு கொல்வதற்காகவா நீ இப்போது இங்கே வந்தாய்? இது உனக்கு தருமமா? என்னைப் பித்தனாக்கி விட்டாயே! நான் என்ன செய்யப்போகிறேன்! உன்னை விட்டுப் பிரிந்து நான் எப்படி சகித்திருப்பேன்? உன்மேல் வைத்த பிரியம் என்னை நெருப்பாகப் பற்றி தகிக்கிறதே! உன்னுடைய உண்மையான எண்ணந்தான் என்ன? அதை வெளியிடு. நான் உன் இஷ்டப்படி நடந்து கொள்ளுகிறேன்'' என்று மிக மிக உருக்கமாக நைந்து இளகிக் கூற, அதைக்கேட்ட பூர்ணசந்திரோதயம் தனது பற்களை இனிமையாகவும் வசீகரமாகவும் வெளியில் காட்டிக் கெஞ்சிக் கொஞ்சி அவரது மனதை மயக்கி மறுபடியும் அதி சீக்கிரத்தில் தான் அவருக்குக் கடிதம் எழுதி அவரது எண்ணத்தைப் பூர்த்தி

செய்துவைப்பதாக வாக்குறுதி கூறி, அவரைக் கடைசி முறையாக ஆலிங்கனம் செய்து, விடை பெற்றுக்கொண்டு அந்த கந்தருவ மாளிகையை விட்டு வெளிப்பட்டு, ராஜபாட்டைக்கு வந்து அவ்விடத்தில் நின்று கொண்டிருந்த குதிரை வண்டியில் ஏறித் தனது ஜெகன்மோகன விலாசத்திற்கு வந்து சேர்ந்தாள். வந்து சேர்ந்தவள் தனது சயனக் கிரகத்தை அடைந்து படுத்துக் கொண்டாள். அன்றைய தினம் தான் ஒரு கருத்தை வைத்துக் கொண்டு இளவரசரது அரண்மனைக்குப் போக அது நிறைவேறாமல் போனதையும் மருங்காபுரி ஜெமீந்தாரின் மாளிகையில் நிகழ்ந்த சம்பவங்களையும் அதன்பிறகு தான் இளவரசரது மாளிகைக்குப் போய்த் திரும்பியதையும் பற்றி நெடு நேரம் வரையில் சிந்தித்திருந்து கடைசியில் துயிலில் ஆழ்ந்தாள்.

மறுநாளைய பிற்பகலில் மூன்றுமணி சமயமாயிற்று. பூர்ண சந்திரோதயம் என்னும் கட்டழகி தனது இயற்கைப்படி சீவிச் சிங்காரித்து மையிட்டுப் பொட்டிட்டு உயர்ந்த ஆடை ஆபரணங்களை அணிந்துகொண்டு யாரோ ஒருவரது வருகையை எதிர்பார்ப்பவள்போலப் படபடத்து உட்கார்ந்தும், அழகாக மலர்ந்து புன்னகை செய்து புஷ்பங்களைப் பறித்து மோந்தும், அவளைக் கண்டு கொஞ்சிக் குலாவிய பஞ்சவர்ணக் கிளி, பாரசீகக் கிளி முதலியவைகளை ஒவ்வொன்றாக எடுத்துப் பார்த்துக் கொண்டும் நலிந்து பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தாள்.

அப்போது தடதடவென்று யாரோ ஒருவர் மெத்தைப் படியின் மீது ஏறித் தான் இருந்த உப்பரிகைக்கு வந்த ஓசையைக் கேட்டு அவள் பல இடங்களிலும் சென்றிருந்த தனது கவனத்தை ஒருமுகப்படுத்தி அங்கே வந்து கொண்டிருந்த மனிதர் யாராக இருக்கலாம் என்று எண்ணமிட்டுக் கொண்டிருக்க, அடுத்த நிமிஷத்தில் சாமளராவ் புன்னகையாலும் மகிழ்ச்சியாலும் இனிமையாக மலர்ந்த முகத்தினனாக அவளுக்கு எதிரில்

வந்து சேர்ந்தான். வந்தவன் சாமளராவ் என்பதை உணர்ந்தவுடனே பூர்ணசந்திரோதயத்தின் சஞ்சலம் நீங்கியது. மகிழ்ச்சியும் பூரிப்புங்கொண்ட பூர்ணசந்திரோதயம் அவனை நோக்கி இனிமையாகப் புன்னகை செய்தவளாய், "வாருங்கள் அண்ணா!" என்று அந்தரங்கமான வாஞ்சையோடு அவரை வரவேற்று அழைத்துக்கொண்டு பக்கத்தில் இருந்த கூடத்திற்கு நடத்திக் கொண்டுபோய், "உட்கார்ந்து கொள்ளுங்கள், அண்ணா!" என்று உவப்போடு அவனை உபசரித்த வண்ணம் தானும் ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டாள். பூர்ணசந்திரோதயத்தைக் கண்டு மட்டற்ற மன மகிழ்ச்சியும் குதூகலமும் அடைந்தவனாய்க் காணப்பட்ட சாமளராவ், "பூர்ணசந்திரோதயம்! என்ன நீ இன்றைய தினம் கூட என்னை அண்ணா என்று கூப்பிடுகிறாய்? நான் உண்மையில் யார் என்பதை மறந்துவிட்டாயா?" என்றான். அதைக்கேட்ட பூர்ணசந்திரோதயம் அவனது கருத்து இன்னது என்பது அறிந்து கொள்ள மாட்டாமல் சிறிது நேரம் குழம்பித் திகைத்து, "ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்? நீங்கள் எனக்கு எப்போதும் அண்ணாதானே! இன்றைக்கு அண்ணா என்கிற முறைமை ஏன் உதவாது?" என்று ஒருவித கிலேசத்தோடு கேட்க, அவன் சிரித்துக்கொண்டு பேசத் தொடங்கி, "எங்கள் பந்தய ஏற்பாட்டின்படி இன்று என்னுடைய முறை என்பதை நீ மறந்து விட்டாய் போலிருக்கிறதே! இந்தப் பந்தயம் ஏற்படுத்திய ஆறு பேர்களுள் நான் ஒருவன்தான் உன்னிடத்தில் காதல் சம்பந்தமான வார்த்தைகளைச் சொல்லத் துணிய மாட்டேன் என்பது உனக்கு ஏற்கெனவே தெரியும் போலிருக்கிறது?" என்று பரிகாசமாகப் பேசினான்.

அதைக் கேட்ட பூர்ணசந்திரோதயம் சந்தோஷம் அடைந்து சிரித்து, "ஓகோ! அப்படியா சங்கதி! அதை நான் சுத்தமாக மறந்து போய்விட்டேன். எல்லோருக்கும் பரிமாறும்

தாய்க்குக் கடைசியில் வெறும் பாத்திரந்தான் மிஞ்சும் என்று ஜனங்கள் பழமொழி சொல்வது பொய்யாகுமா? அதுபோல, இந்தப் பந்தயம் வைப்பதற்கு நீங்கள் மூலாதாரமான மனிதராக இருந்தும், கடைசியாக வந்தபடியால் உங்களுக்கு ஒன்றும் மிஞ்சவில்லை. இந்தப் பந்தயத்தின் முக்கிய கருத்து நிறைவேறி விட்டதாகையால், எனக்கு இந்தப் பந்தயதைப் பற்றிய நினைவே உண்டாகவில்லை'' என்றாள்.

அதைக் கேட்ட சாமளராவ் மிகுந்த ஆச்சரியமும், சந்தோஷமும் கொண்டவனாய், ''எனக்கு மற்றது எல்லாம் அவ்வளவு வேடிக்கையாகத் தோன்றவில்லை. அந்த மருங்காபுரிக் கிழவன் நேற்று ராத்திரி தந்திரம் செய்து, கடைசியில் உன்னால் அவமானம் அடைந்ததுதான் எனக்கு நிரம்பவும் வேடிக்கையாக இருக்கிறது. இன்று காலையில் நீ எழுதிய கடிதத்திலிருந்து, நேற்று ராத்திரி நடந்த சங்கதிகளை எல்லாம் படித்த முதல் அந்தக் கிழவனுடைய விஷயத்தை நினைக்க நினைக்க, நான் என்னை மறந்து பல தடவை வாய் விட்டுச் சிரிக்கும்படி நேர்ந்தது. அவனுடைய அந்தரங்க வேலைக்காரனான கோவிந்தசாமியும், மற்றவர்களும் நேற்று ராத்திரி முழுதும் அவன் இருந்த இடத்துக்குப் போகாமலே இருந்தால், இன்று காலை வரையில் அவன் அந்த நாற்காலியிலேயே மாட்டிக்கொண்டு தானே கிடந்திருப்பான். ஐயோ பாவம்! நிரம்பவும் வயசான கிழவன். அந்த அவஸ்தையைப் பொறுக்க முடியாமல் செத்துப் போனாலும் போய்விடுவான். உன் கடிதத்தை நான் நம்முடைய அம்மாவிடம் படித்துக் காட்டினேன். அம்மாள் புதன்கிழமை தினம் கூட அவனிடம் போய் மூவாயிரம் ரூபாய் பிடுங்கிக் கொண்டு வந்தாள். கடைசியில் அவன் சுத்தப் பைத்தியக்காரன். அம்மாளிடத்தில் அவனுக்கு நிரம்பவும் பிரியம் உண்டு. ஆகையால் அவன் நாற்காலியில் மாட்டிக்கொண்ட செய்தியைக் கேட்கவே அம்மாளுக்கு நிரம்பவும் விசனமாக இருந்தது.

அம்மாள் ஏதோ வேறே காரியமாக அந்தக் கிழவனைப் பார்க்கப் போகிறவள் போல, சுமார் 12 மணிக்கு அவனுடைய மாளிகைக்குப் போய் பார்த்துவிட்டு வந்தாள். கிழவன் வழக்கம்போல உற்சாகமாகத்தான் இருக்கிறானாம். நேற்று ராத்திரி நடந்த சங்கதி எதையும் அவன் அம்மாவிடம் வெளியிடவே இல்லையாம். ஒன்றையும் அறியாதவள் போல அம்மாள் அவ்வளவோடு வந்துவிட்டாள். நேற்று ராத்திரி முழுதும் நாற்காலியிலிருந்து வேதனைப்பட்டிருப்பான் என்று தான் எண்ண வேண்டியிருக்கிறது'' என்றான்.

பூர்ணசந்திரோதயம், ''ஆம்; அது எனக்குக் கூட விசனமாகத் தான் இருந்தது. இருந்தாலும் நான் வேறே என்ன செய்கிறது? அந்த இடத்திலிருந்து நான் தப்பித்துக் கொண்டு வர வேறே மார்க்கம் இல்லை. அவனை அப்படி மாட்டி வைத்துவிட்டு வர வேண்டியது கட்டாயமாகி விட்டது. இனிமேல் கிழவன் வேறே யாரையும் அந்தக் கொடிய நாற்காலியில் சிறை வைக்கத் துணியமாட்டான். அது என்னால் ஏற்பட்ட அநுகூலம். ஆனால், அவன் இப்படிச் செய்ததில் நமக்கும் ஒரு பெரிய அனுகூலம் ஏற்பட்டது. வெகு நேரம் வரையில் நான் அந்தக் கிழவனுடைய வீட்டில் இருந்துவிட்டு அகாலத்தில் இளவரசரிடத்திற்குப் போனதும் நன்மையாகவே முடிந்தது. அந்தக் காரணத்தினால், நான் வீட்டுக்குத் திரும்பிப் போக நேரமாகிவிட்டது என்று சொல்லி, இளவரசருடைய எண்ணத்தைப் பூர்த்தி செய்யாமல் வர அநுகூலமாக இருந்தது. இளவரசரால் நமக்கு ஆகவேண்டிய மிகுதிக் காரியத்தையும் பலிதமாக்கிக் கொண்டு, அதற்குமேல், அவருடைய இஷ்டப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பது என்னுடைய கருத்து. சகலமான ஏற்பாடுகளையும் நம்முடைய இஷ்டப்படி முடித்துக்கொள்ளுமுன், அவருடைய ஆவல் தீர்ந்து போகுமானால், அதன்பிறகு, அவர் அவ்வளவு சுலபமாக வழிக்கு வரமாட்டார்; அதைக் கருதி நான் அவரை எப்படி

ஏமாற்றப் போகிறோம் என்று நிரம்பவும் கவலை கொண்டு தான் நேற்று ஒன்பது மணிக்குப் புறப்பட்டேன். தெய்வம் நம்முடைய கட்சியில் இருந்து அந்தக் கிழவன் மூலமாக இந்த இடையூறைச் செய்து வைத்தது. நான் மறுபடியும் கடிதம் எழுதி அனுப்புவதாகச் சொல்லிவிட்டு வந்திருக்கிறேன். அந்தக் கடிதத்தை மிகவும் பக்குவமாகவும் தந்திரமாகவும் எழுதி இன்றையதினம் சாயுங்காலம் அனுப்பிவிட வேண்டும்'' என்றாள்.

சாமளராவ், ''பூர்ணசந்திரோதயம்! உன்னுடைய அபாரமான புத்திசாலித்தனத்தையும், சமயோசிதமான தந்திர ஞானத்தையும், நான் என்னவென்று புகழுவேன்! இந்த தேசத்தில் மகா புத்திசாலிகளான ஆண்பிள்ளைகள் எல்லோருடைய விவேகமும் ஒன்று சேர்ந்தால்கூட, ஒரு பெண்ணாகிய உன்னுடைய தீவிர புத்திக்கு உரை போடக் காணாது. மகா சாமர்த்தியசாலிகளான நான்கு மனிதரை நீ ஒரு நிமிஷத்தில் தோற்கடித்து அவமானப்படுத்திவிட்டாய். எவளுடைய வலையிலும் அகப்படாத இளவரசர் உன் விஷயத்தில் பைத்தியம்கொண்டு அலையும் படி செய்துவிட்டாய். நம்முடைய கருத்து இதுவரையில் நமக்க அனுகூலமாகவே முடிந்துவிட்டது. இனிமேல், அவர் உன்னுடைய வலையிலிருந்து தப்பப் போவதில்லை. நீ இன்றையதினம் கடிதத்தின் மூலமாக அவரிடம் கேட்டுக்கொள்ளும் விஷயமும் எளிதில் முடிந்துபோகும். நீ இன்னம் இரண்டொரு தினத்தில் அரண்மனையின் ஏழாவது உப்பரிகைக்குப் போய்ச் சேர்ந்து ராஜாத்தி ஆகிவிடுவாய். அதைப்பற்றிக் கொஞ்சமும் சந்தேகமே இல்லை. இப்படியெல்லாம் நடக்கும் என்று நானும் அம்மாளும் ஏற்கெனவே முடிவு கட்டிவிட்டோம். ஆனால், இவ்வளவோடு நாம் திருப்தி அடைந்து சும்மா இருந்துவிடக் கூடாது. நாம் எடுத்துக்கொண்ட காரியம் பலித்துக் கடைசி வரையில் நிலைத்து நீடித்து நிற்கவேண்டும்.

அழகிலும் புத்திசாலித்தனத்திலும் உன்னை மீறியவர்கள் கிடைப்பது அருமையாதலால் இளவரசர் உன்னிடத்தில் நீடித்த காதலையும் பிரேமையையும் வைத்திருப்பார் என்பது நிச்சயமானது. ஆனாலும், இன்னம் கொஞ்ச காலத்தில் அவருடைய புத்தி எப்படி மாறுமோ? தாலிகட்டின பட்டமகிஷிக்கும், சேர்க்கையாக வந்த வைப்பாட்டிக்கும் பேதம் உண்டல்லவா? அவருக்குப் பிரியம் இருக்கும் வரையில்தான் வைப்பாட்டிக்குச் செல்வாக்கும் மேன்மையும் இருக்கும். அவருக்கு இஷ்டமில்லாவிட்டால், எல்லாம் ஒரு நிமிஷத்தில் தரைமட்டமாகிவிடும். ஆகையால், நாம் இது வரையில் செய்தது ஒரு பெரிய காரியமல்ல. இனிமேல் செய்ய வேண்டிய காரியம்தான் மகா அரிதான காரியம். அதை உன்னிடம் சொல்லாமல் நானும் அம்மாளுமாக இதுவரையில் யோசனை செய்து ஒருவித முடிவுக்கு வந்து அதைக்குறித்து ரகசியமான சில முயற்சிகள் செய்திருக்கிறோம். ஆனால், அதில் உனக்கு எவ்விதப் பிரயாசையும் இல்லை. வேறே சில மனிதர்களால் அந்தக் காரியம் ஆக வேண்டும். அவர்களுக்குக் கொடுப்பதற்காகவே அம்மாள் புதன்கிழமையன்று மருங்காபுரிக் கிழவனிடம் போய் மூவாயிரம் ரூபாய் வாங்கிக் கொண்டு வந்தாள். ஆனால், அவர்கள் அந்தக் காரியத்தை முடித்து வைத்தவுடனே, நாம் அவர்களுக்கு ஒரு பெரிய சன்மானம் செய்ய வேண்டும். அந்தச் சன்மானம் சாதாரணமாக நம்மைப் போன்றவர்களால் செய்யக்கூடியதல்ல. அது மகா ராஜாக்கள் பார்த்துச் செய்யக்கூடிய சன்மானம். நீ இளவரசரைத் தூண்டி அந்தச் சன்மானத்தைச் செய்து வைக்க வேண்டும். அதெல்லாம் பிந்தி நடக்கவேண்டிய காரியமாதலால், அதைப்பற்றி நாம் இப்போது கவலைப்பட வேண்டியதில்லை'' என்றான்.

அதைக் கேட்ட பூர்ணசந்திரோதயம் ஒருவாறு வியப்படைந்து, ''ஓகோ! அப்படியானால், நீங்களும் அம்மாளும் சேர்ந்து

ரகசியத்தில் வேறே ஏதேதோ ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கிறீர்கள் போலிருக்கிறது. அந்த விவரத்தை இதுவரையில் என்னிடம் ஏன் வெளியிடவில்லை? அது எனக்குத் தெரியக்கூடாத விஷயமா?அது எனக்குத் தெரிந்திருந்தால், அதற்குத் தோதாக நான் இளவரசரிடத்தில் நடந்து கொள்ளலாமே'' என்றாள்.

சாமளராவ், ''அந்த விவரம் உனக்குத் தெரியக்கூடாது என்ற எண்ணத்தோடு நாங்கள் அதை உன்னிடம் தெரிவிக்காமல் இருக்க வில்லை. இந்தப் பந்தய ஏற்பாட்டின் மூலமாகத் தந்திரம் செய்து, நீ எப்படியாவது இளவரசருடைய வாஞ்சை யையும் பிரேமையையும் முதலில் சம்பாதித்துக் கொண்டால், அதன் பிறகு மற்ற ரகசிய சமாசாரத்தை உன்னிடம் வெளியிடுவது நல்லது என்று நினைத்தோம். ஏனென்றால், எல்லா விஷயங்களையும் ஒருமுட்டாக உன்னிடம் தெரிவித்தால், நீ ஒருவேளை மலைத்து அஞ்சிப் பின் வாங்கிவிடுவாயோ என்று நாங்கள் எண்ணினோம். நீ இந்தப் பந்தய விஷயத்தில் எவ்வளவோ திறமையாக நடந்து வெற்றியடைய வேண்டியவள். ஆகையால், நீ மற்ற எல்லா விஷயங்களையும் கேட்டு மலைப்பு அடைந்து இந்தப் பந்தய விஷயத்தில் ஏமாறிப் போய்விடுவாயோ வென்று நாங்கள் கவலை கொண்டிருந்தோம். இப்போது நீ இந்தப் பந்தய விஷயத்தில், நம்முடைய கருத்தை முற்றிலும் மகா சாமர்த்தியமாக நிறைவேற்றி விட்டாய். ஆகையால், இனி நீ மற்ற விவரத்தையும் தெரிந்து கொள்ளலாம். அதை உன்னிடம் இனி வெளியிடலாம் என்று அம்மாளும் என்னிடம் சொன்னார்கள். ஆகையால், அதையும் நான் இப்போது உனக்குத் தெரிவிக்கின்றேன். நம்முடைய இளவரசருக்கு எத்தனையோ வைப்பாட்டிமார்கள் இருந்தாலும், அவர் சாஸ்திரப்படி கல்யாணம் செய்துகொண்ட பட்டமகிஷி ஒரே ஒருத்திதான் என்பது உனக்குத் தெரிந்திருக்கும். அவளிடத்தில் நம்முடைய

இளவரசருக்கு உண்மையான பிரியமே கிடையாது. அவள் இவரைக் கலியாணம் செய்துகொண்ட பிறகு ஒருநாள் கூட இவர் அவளுடைய அந்தப்புரத்துக்குப்போய் அவளுடைய முகத்தைப் பார்த்தறியார். இவருடைய பிரியத்தைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டுமென்று, அவள் எவ்வளவோ முயற்சிகள் செய்தும், அழுதும், பட்டினி கிடந்தும் பார்த்ததெல்லாம் பயனற்றுப் போய் விட்டது. இந்த இளவரசருடைய தாயாரான பெரிய ராணிக்கு மாத்திரம் இவருடைய பட்டமகிஷியினிடத்தில் அன்பும் இரக்கமும் இருந்துவந்தன. பெரிய ராணி தம்முடைய புத்திரனுக்கு எவ்வளவோ நற்புத்தி புகட்டியும், வேண்டியும் பார்த்தாள். இளவரசர் அதற்குச் செவிகொடுக்கவில்லை. அப்படி இருந்த சமயத்தில், இளவரசருடைய பட்டமகிஷியின் தகப்பனாரான பூனாதேசத்து மகாராஜன் நோயடைந்து படுத்திருப்பதாகவும் பெரிய அரசரிடத்திலும் அனுமதி பெற்றுக் கொண்டு பூனாவுக்குப் போனாள். அவள் போய் சுமார் மூன்று மாச காலமாகிறது. அவளுடைய தகப்பனார் இன்னமும் படுத்த படுக்கையாகவே இருக்கிறாராம். அவர் எப்பொழுது குணமடைவார் என்பது தெரியவில்லையாம். அந்த நிலைமையில் அவரை விட்டுவர அந்தப் பட்டமகிஷிக்கு மனமில்லை. ஆகையால், இன்னம் இரண்டு மூன்று மாசகாலம் அங்கிருந்துவிட்டு வருவதாக அவள் நம்முடைய பெரிய ராணிக்கு எழுதியிருக்கிறாள். அதோடு, அவள் இன்னொரு விஷயமும் எழுதியிருக்கிறாள். அந்த ஊரில் அவளுடைய மனசுக்கு உகந்தபடி நடந்துகொள்ளக்கூடிய தாதிமார்கள் இல்லையாம். ஆகையால் நல்லவர்களாகப் பார்த்து நான்கு தாதிகளை அனுப்பி வைத்தால், தான் திரும்பித் தஞ்சைக்கு வரும்போது அவர்களையும் கூடவே அழைத்துக்கொண்டு வர சௌகரியமாக இருக்கும் என்று எழுதியிருக்கிறாள். இந்த ஊர்ப் பெரிய ராணிக்கு நம்முடைய அம்மாளிடத்தில் நிரம்பவும் அபிமானம் உண்டு என்பது எனக்குத் தெரிந்த விஷயம். சில தினங்களுக்குமுன் அம்மாள் பெரிய ராணியைப்

பார்க்கப் போயிருந்தகாலத்தில் அவள் அந்தக் கடிதத்தின் விஷயத்தை அம்மாளிடம் சொல்லி, நல்லவர்களாகப் பார்த்து நான்கு தாதிப் பெண்கள் சம்பாதித்துக் கொடுக்கும்படி கேட்டுக் கொண்டார்களாம். அம்மாள் அப்படியே செய்வதாக ஒப்புக் கொண்டு வந்திருக்கிறார்கள். நமக்கு அனுகூலமானவர்களாகப் பார்த்து நான்கு பெண்களைப் பொறுக்கி அனுப்பி வைக்க வேண்டும் என்றும், அந்தப் பெண்கள் பூனா தேசத்திலுள்ள நம் இளவரசருடைய பட்டமகிஷியிடம் போய், மகா யோக்கியர்கள் போல நடந்துகொண்டே இருந்து, கடைசியில் அந்தப் பட்ட மகிஷிக்கு விபசாரதோஷம் கற்பிக்கத் தகுந்த சில ஏற்பாடுகளை மிகவும் தந்திரமாகச் செய்ய வேண்டும் என்றும் நாங்கள் ஏற்பாடு செய்திருக்கிறோம். தம்முடைய பட்டமகிஷி விபசார தோஷமுடையவள் என்பது இளவரசருக்குத் தெரியும் படியும் நாம் சூழ்ச்சி செய்ய வேண்டும். அப்படிச் செய்தால், அவர் உடனே தம்முடைய பட்டமகிஷியை வேண்டாம் என்று விலக்கிவிடுவதோடு, வேறொரு பெண்ணை உடனே கலியாணம் செய்துகொண்டு அவளைப் பட்டமகிஷியாக ஆக்குவார் என்பது நிச்சயம். அந்தப் பட்டமகிஷி ஸ்தானத்தில் உன்னை வைக்க வேண்டும் என்பது அம்மாளுடைய தீர்மானம். ஆகையால், நீ இப்போது இளவரசருடைய கருத்துக்கு இணங்கி, அவருடைய அரண்மனைக்குப் போய் ஏழாவது உப்பரிகையிலிருந்து கொண்டு அவரிடத்தில் அன்னியோன்னியமாக இருந்துவந்தாலும், உனக்கும் அவருக்கும் தேக சம்பந்தம் உண்டு என்பது எவருக்கும் தெரியவே கூடாது. நீ அந்த விஷயத்தில் அவ்வளவு திறமையாகவும் ஜாக்கிரதையாகவும் நடந்து கொள்ள வேண்டும். நீ தார்வார் தேசத்து மகாராஜனுடைய அபிமான புத்திரி என்றும், இந்த தேசத்து மகா ராஜாவுக்கு சொந்தக்காரி ஆதலால், ஏதோ ஒரு காரியார்த்தமாக இந்த அரண்மனைக்கு வந்திருப்பதாகவும், நீ கடைசிவரையில் சொல்லிக்கொண்டிரு. அப்படிச் செய்தால் தான், உன்னை இவர் கடைசியில்

கலியாணம் செய்து கொள்ளத் தோதாக இருக்கும். நீ தார்வார் தேசத்து மகாராஜனுடைய அபிமான புத்திரியென்பது பொய்யென்று நீ ஏற்கெனவே இளவரசரிடம் ஒப்புக் கொண்டிருக்கிறாய். ஆனாலும், நீ இப்போது இளவரசருக்கு எழுதப்போகும் கடிதத்தில், அந்த விஷயத்தை அவருக்கு மறுபடியும் எழுதி, உன்னுடைய கண்ணியத்தைக் கருதி, அந்த வதந்தியை நிஜமான வதந்தியாகச் செய்து விடும்படி கேட்டுக்கொள்ள வேண்டும். நீ அப்படிச் செய்துகொண்டு இளவரசர் உன்மேல் வைத்துள்ள பிரியத்தை முன்னிலும் அதிகமாக விருத்தி செய்துகொண்டு வருவாயானால், நாங்கள் எப்படியாகிலும் பிரயத்தனப்பட்டு இவர் உன்னையே கலியாணம் செய்துகொண்டு பட்டமகிஷியாக்கும்படி செய்து வைக்கிறோம். இது சம்பந்தமாக நாங்கள் செய்துவரும் முயற்சிகளில் நீ கொஞ்சமும் சம்பந்தப்படவும் வேண்டாம்; அதனால், உனக்குக் கொஞ்சமும் பிரயாசையும் உண்டாகாது. நான் சொல்வது தெரிகிறதா?'' என்றான்.

அவன் சொல்லிவந்த வரலாற்றைக் கேட்ட பூர்ணசந்திரோதயம் மிகுந்த மனவெழுச்சியும் சஞ்சலமும் அடைந்து, ''ஆகா! என் விஷயத்தில் நீங்கள் இருவரும் இதுவரையில் செய்துள்ள உதவிகளை விட இப்போது செய்யப்போவது மகா பிரமாதமானதாக இருக்கிறதே! ஏதோ எனக்கு இளவரசருடைய நட்பு ஏற்படுவது சுலபந்தான். ஆனால், நான் பட்டமகிஷியாவது சாதாரணமான காரியமா? அதுதான் பலிக்குமோ என்பது எனக்குச் சந்தேகமாக இருக்கிறது'' என்றாள்.

சாமளராவ், ''அந்தக் கவலை உனக்கு எதற்கு? நாங்கள் சொல்வதுபோல, நீ நடந்து கொண்டுவா. மற்ற விஷயங்களை முடித்து வைப்பது எங்களைச் சேர்ந்த பொறுப்பு. அந்த விஷயத்தில் நாங்கள் முயற்சி செய்வதால், உனக்கு எவ்வித நஷ்டமாவது, பிரயாசையாவது, துன்பமாவது உண்டாகப்

போகிறதில்லை என்பதை நீ நிச்சயமாக நம்பலாம்'' என்றான்.

பூர்ணசந்திரோதயம் சிறிது யோசனை செய்து, ''சரி; உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள். அதிருக்கட்டும்; பூனாவுக்கு அனுப்ப, தாதிகளைத் தெரிந்தெடுத்து விட்டீர்களா? அவர்களை நாம் கடைசிவரையில் நம்பலாமா? முடிவுவரையில் உறுதியாக இல்லாமல் அவர்கள் ரகசியத்தை வெளியிட்டு விட்டால், குடிகெட்டுப் போய்விடும். கடைசியில் நாமெல்லோரும் இந்த ஊரைவிட்டே துரத்திவிடப்படுவோம். அப்படிப்பட்ட கெடுதல் உண்டாகாமல், நீங்கள் நிரம்பவும் ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும்'' என்னாள்.

சாமளராவ், ''நாங்கள் அப்படிப்பட்ட மனிதர்களைப் பார்த்துப் பிடிப்போமா? முடிவுவரையில் நம்மிடத்தில் உறுதியாக உள்ளவர்களைத்தான் நாங்கள் தேடிப் பிடித்திருக்கிறோம். அவர்கள் ஒருவருக்கொருவர் சம்பந்தம் இல்லாதவர்களாக இருந்தால், நால்வரும் ஒற்றுமையாக வேலை செய்ய மாட்டார்கள் என்ற எண்ணத்தோடு, அவர்கள் நால்வரும், ஒரே வயிற்றில் பிறந்த அக்காள் தங்கைச்சிகளாகப் பார்த்து ஏற்பாடு செய்திருக்கிறோம். இதோ அம்மன்பேட்டை என்ற ஓர் ஊர் இருக்கிறதே. அங்கே அன்னத்தம்மாள் என்று ஒரு கூத்தாடிச்சி இருக்கிறாள். அவளுக்கு நாலு பெண்கள் இருக்கிறார்கள். அவர்கள் நால்வரையும் அனுப்பும்படி அன்னத்தம்மாளிடம் ஏற்பாடு செய்திருக்கிறோம். அவர்களுக்கும் இளவரசருக்கும் அன்னியோன்னியமான சிநேகம் இருக்கிறது. ஆனாலும், அன்னத்தம்மாளுக்கு இளவரசருடைய பட்டமகிஷியிடத்தில் ஒரு காரணமாகப் பகை உண்டு. வருஷா வருஷம் தீபாவளிப் பண்டிகை அன்று எல்லாப் பெண்களும் பட்டமகிஷியிடம் போய்ச் சன்மானம் வாங்குவது உண்டு. போன வருஷம் அன்னத்தம்மாள் பட்டமகிஷியைப் பார்க்கப்போனகாலத்தில் இவள் கூத்தாடிச்சி என்பதையும், இவளுடைய பெண்களிடத்தில் இளவரசர்

அன்னியோன்னியமாக இருக்கிறார் என்பதையும் கருதி, பட்டமகிஷி இவளுக்குப் பேட்டி கொடுக்காமல் தூஷித்து அனுப்பி விட்டாள். அந்த வருத்தத்தை அன்னத்தம்மாள் இன்னமும் மனசில் வைத்துக் கொண்டிருக்கிறாள். அது நம்முடைய அம்மாளுக்குத் தெரியும். ஆகையால், அவள் இந்த விஷயத்தில் நம்மிடத்தில் உறுதியாக இருப்பாள் என்றே நாங்கள் நினைக்கிறோம். அது மாத்திரமல்ல. அவளுடைய பெண்கள் பூனாதேசத்துக்குப் போய், நம்முடைய கருத்தை நன்றாக நிறைவேற்றி வைப்பார்களானால், இளவரசருக்கு ஏற்படும் புதிய பட்டமகிஷியின் சிபார்சைக் கொண்டு அன்னத்தம்மாளுக்கு ஒரு பெரிய சன்மானம் செய்வதாக அம்மாள் அவளுக்குச் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறாள். அதாவது, அன்னத்தம்மாள் இருக்கும் கிராமமாகிய அம்மன்பேட்டை என்னும் ஊர் முழுதையும் அவள் பேருக்கு சர்வமானியமாகப் பட்டயத்தின் மூலமாய் இளவரசர் எழுதிக் கொடுத்துவிடும்படி நீ செய்ய வேண்டும். உன்னை இளவரசர் பட்டமகிஷியாக்கிக் கொள்வாரானால், அதன்பிறகு, உனக்கு இது ஒரு பெரிய காரியமல்ல; நீ சொல்லுகிறபடி இளவரசர் நடந்து கொள்வார்'' என்றான்.

பூர்ணசந்திரோதயம், ''அதெல்லாம் சரிதான். நீங்கள் என்னைத் தான் இளவரசருக்குப் புதிய பட்டமகிஷியாக்கப் போகிறீர்கள் என்பது அன்னத்தம்மாளுக்குத் தெரியுமோ?'' என்றாள்.

சாமளராவ், ''அதை வெளியிடுவோமா? உனக்கும் எங்களுக்கும் உள்ளுக்குள் சம்பந்தம் இருக்கிறது என்பதே இந்த ஊரில் எவருக்குமே தெரியாது. கடைசிவரையில், இந்த ரகசியம் மாத்திரம் வெளிவராதபடி நாம் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்; இந்த விஷயத்தில் நீயும் அதிக ஜாக்கிரதையாகவே நடந்து கொள்ள வேண்டும்''என்றான்.

பூர்ணசந்திரோதயம், ''அதைச் சொல்லவும் வேண்டுமா? என் மூலமாக எந்தச் சங்கதியாவது வெளியாகி விடுமோ என்ற கவலையே உங்களுக்குக் கொஞ்சமும் வேண்டாம். என்னை மகோன்னத பதவியில் வைப்பதற்காக நீங்கள் எல்லோரும் இவ்வளவு பாடுபடுகிறீர்கள். அப்படி இருக்க, அதை நானே வெளியிட்டுக் கெடுத்துக் கொள்வதென்றால், என்னைவிடப் பொறுக்கியெடுத்த முட்டாள் யார் இருப்பார்கள்?'' என்றாள்.

சாமளராவ் மகிழ்ச்சியாகப் புன்னகை செய்து ''சரி; நேரமாகிறது. நீ இளவரசருக்கு அனுப்ப வேண்டிய கடிதத்தை எழுது. அதை நானும் பார்த்துவிட்டுப் போகிறேன். உன்னுடைய கடிதம் இளவரசரிடத்திற்கு வந்து சேரும்போது, நான் தற்செயலாக இருப்பவன்போல், அவரோடு கூட அங்கே இருந்து ஒரு வேலை செய்ய வேண்டும்'' என்றான்.

அதைக்கேட்ட பூர்ணசந்திரோதயம் உடனே எழுந்து காகிதம், மை, எழுதுகோல் முதலிய கருவிகளில் இருந்து ஒரு மேஜைக்குப்போய் அதன் பக்கத்தில் இருந்த நாற்காலியின் மேல் உட்கார்ந்து இளவரசருக்குக் கடிதம் எழுதத் துவக்கினாள்.

## 20-வது அதிகாரம்

## ஹேமாபாயி - தூதுக்கிழவி

ஹேமாபாயி என்பவள் நாற்பத்தைந்து வயதுக்கு மேல் அடைந்தவள். அவளது உடம்பு கொழுகொழுப்பாகவும், அழகாகவும் இருந்தது. அவள் தனது ஏராளமான ஆபரணங்களை வாரி உச்சி முதல் உள்ளங்கால் வரையில் அணிந்து கொண்டிருந்தது அன்றி, மகா ஆடம்பரமான ஜரிகைச் சேலை, ரவிக்கை முதலியவைகளைத் தரித்திருந்தாள். அவள் தாசியின்

வகுப்பைச் சேர்ந்தவள். ராணி வாய்க்கால் சந்து என்ற பெயர் கொண்ட சிறிய தெருவில் அவளுக்கு மூன்று உப்பரிகைகள் உள்ள ஒரு மாளிகை இருந்தது. அவள் இளம் பிராயத்தில், எப்பேர்ப்பட்டவரது மனதையும் ஒரு நொடியில் கவரத்தக்க அற்புதமான அழகோடு இருந்தாள். அந்த ஊரிலுள்ள ஏராளமான பெரிய மனிதர்கள் அவளிடத்தில் நட்பாக இருந்து தங்களது பெருஞ் செல்வத்தை அவளுக்குக் கொடுத்து வந்திருக்கிறார்கள். அப்படி அவளிடம் நட்பாக இருந்தவர்களுள், நமது மருங்காபுரிக் கிழவர் முக்கியமான மனிதர். அவள் வயதடைந்து கிழவியான பிறகு தனது வருமானம் குறைந்து போனதைக் கண்டு, கண்ணியமான குடும்பங்களில் உள்ள யௌவனச் சிறுமிகளை மயக்கி அழைத்துவந்து தனது மாளிகையில் வைத்துக் கொண்டு, தனக்குப்பதிலாக, அவர்களை அந்தத் துறையில் விடுவித்து வந்தாள். அவள் எப்போதும் சிரித்த முகமும், கனிந்த பார்வையும், மாதுரியமான சொற்களும் உடையவளாகவே காணப்படுவதால், எப்படிப் பட்டவர்களும் எளிதில் மயங்கி அவளது வஞ்சக வலையில் வீழ்ந்து விடுவார்கள். ஆனால், அவள் தன் வசம் அகப்பட்டுக் கொண்ட மனிதர்கள் ஒட்டாண்டியாகிற வரையில் கொள்ளை அடித்துக்கொண்டே விடுவாள். அப்படிப்பட்ட பேராசைக் காரிகள் நூறுபேர் சேர்ந்து அபகரித்தால்கூடக் குறையாத செல்வம் மருங்காபுரிக் கிழவரிடம் குவிந்து கிடந்தது. ஆகையால், அவரது நட்பு அவளுக்குச் சாசுவதமாக இருந்து வந்தது.

முன்னே விவரிக்கப்பட்டபடி தமது வெல்வெட்டு மாடத்தில் இருந்த மருங்காபுரி ஜெமீந்தாருக்கு முன்னால் ஹேமாபாயி சிரித்த முகத்தோடு வந்து அவரை வணங்கிக் கும்பிடுபோட்டு நிற்க, அவளைக் கண்டு அளவற்ற மகிழ்ச்சியும், புன்னகையும் கொண்ட கிழவர், "ஹேமாபாயி! உட்கார்ந்துகொள். ஓர் அவசரமான காரியமாக நான் உன்னை வரவழைத்திருக்கிறேன்.

நீ எனக்கு இப்படிப்பட்ட உதவி செய்து நிரம்பகாலம் ஆகிறது. இதுவரையில் நீ எனக்காக எத்தனையோ முயற்சிகள் செய்து ஜெயம்பெறச் செய்திருக்கிறாய். அதெல்லாம் அவ்வளவு பெரிதல்ல. இந்தக் காரியத்தை நீ முடித்துக் கொடுப்பாயானால், அப்போதுதான் நீ உண்மையில் கெட்டிக்காரி; என்னிடம் நீ இதுவரையில் பெற்றுள்ள சம்மானத்தை எல்லாம் விடப் பெரிதாக இந்தத் தடவை பெறுவாய்; என்ன சொல்லுகிறாய்? இந்தக் காரியத்தை முடித்துக் கொடுக்க, உனக்கு அவகாசமும் இஷ்டமும் இருக்குமா? சொல்; பார்ப்போம்'' என்றார்.

உடனே ஹேமாபாயி இனிமையாகச் சிரித்து, ''நான் எத்தனையோ கடினமான விஷயங்களில் என்னுடைய வல்லமையை எஜமானருக்கு நன்றாகக் காட்டி இருக்கிறேனே! அப்படி இருக்க, இந்த ஒரு விஷயத்தில் மாத்திரம் எஜமானர் இப்படி சந்தேகப்பட வேண்டிய காரணம் என்ன? எப்படிப்பட்ட காரியமாக இருந்தாலும் யோசிக்காமல் வெளியிடலாம். அதை நான் வெகு சீக்கிரத்தில் முடித்துக் கொடுக்கிறேன். எஜமானருக்கு உபயோகப்படாமல் நான் வேறு என்னதான் செய்யப்போகிறேன்?'' என்றாள்.

மருங்காபுரி ஜெமீந்தார் மிகுந்த களிப்படைந்து, ''சரி; அப்படியானால் சொல்லுகிறேன் கேள். இந்த ஊருக்கு நான்கு மைல் தூரத்திலுள்ள மாரியம்மன் கோவில் என்ற ஊரில், செட்டித் தெருவில் ஒரு பங்களா இருக்கிறதாம். அந்தத் தெருவில் இருப்பது ஒரே ஒரு பங்களாதானாம். அதற்குள் மாசிலாமணிப் பிள்ளை என்ற ஒருவரும், அவருடைய சம்சாரமும் இருக்கிறார்களாம். அந்தப் பெண்ணுக்கு இணையான அழகுடைய பெண்ணே இந்த உலகத்தில் இல்லையென்று எனக்குச் சங்கதி கிடைத்திருக்கிறது. அது மாத்திரமல்ல. அவன் வயதான கிழவனாம். அந்தப் பெண் நல்ல பக்குவகாலத்து குமரியாம். அந்த மாசிலாமணிப்பிள்ளை தன்னுடைய பெண்சாதி பதிவிரதையாக இருக்கவேண்டுமென்ற

பௌரஷம் உடையவன் அல்லவாம்;ஏதோ ஒரு காரியத்தை உத்தேசித்து அவன் இதற்குமுன் தன் பெண்ஜாதியை ரகசியமாக ஒரு பெரிய மனிதரிடத்திற்கு அனுப்பி வைத்ததாக எனக்கு நிச்சயமான செய்தியும் கிடைத்திருக்கிறது. ஆகையால், அவனுக்கு நாம் ஏராளமான பொருள் கொடுத்தால், அவன் நம் விஷயத்திலும் இணங்கி வரலாம் என்று நினைக்கிறேன். ஆனால், நாம் கொஞ்சம் எச்சரிப்பாகவே நடந்து கொள்ள வேண்டும். அவன் நம்முடைய பணத்தை வாங்கிக் கொண்டு அவளை அனுப்பிவிட்டு, பிறகு நம்மீது நஷ்டத்துக்கு தாவா செய்தாலும் செய்வான். அப்படிப்பட்ட அவமானத்துக்கு இடம் கொடுக்காமல் நாம் நிரம்பவும் ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும்'' என்றார்.

*ஹேமாபாயி:-* ஓ! அப்படியே செய்வோம். எஜமானருடைய பெயரையே வெளியிடாமல், நான் இந்தக் காரியத்தை எளிதில் முடித்துத் தருகிறேன். அவள் வருவதாக ஒப்புக் கொண்டால், அவளை நான் என்னுடைய ஜாகைக்கே அழைத்து வந்து மூன்றாவது உப்பரிகையில் வசதியாக வைக்கிறேன். எஜமானர் அவளை அவ்விடத்திலேயே வந்து பார்த்தால், எஜமானர் யார் என்பதை அவள்அறிந்து கொள்ள வழி இல்லாமல் போகும். இதற்குமுன் அவள் எஜமானரைப் பார்த்திருந்தாலன்றி மற்றப்படி அவள் எப்படித் தெரிந்து கொள்ளப் போகிறாள்?

*ஜெமீந்தார்:-* நான் இன்னார் என்பதை அவள் இதற்குமுன் தெரிந்துகொண்டிருப்பாளென்று நான் நினைக்கவில்லை. மாசிலாமணிப்பிள்ளை என்ற பெயருள்ள எந்த மனிதனோடும் நான் பழகியதில்லை. என் மனசில் ஒரு சந்தேகம் உண்டாகிறது. அந்த மனிதனுடைய உண்மைப் பெயர் மாசிலாமணிப் பிள்ளையாக இருக்காது என்று என் மனசில் ஓர் எண்ணமும் உண்டாகிறது. அவர்கள் யாராக இருந்தாலும் இருக்கட்டும். அவளை நாம் கொண்டுவந்து தான் தீரவேண்டும். அதனால்,

அவமானம், அல்லது, துன்பம் வரக்கூடியதாக இருந்தாலும் பரவாயில்லை. நான் யார் என்பது முக்கியமாக அவளுடைய புருஷனுக்குத் தெரியாதிருப்பதுதான் அவசியமானது. அவளுக்கு மாத்திரம் தெரிந்தால், அதனால் அவ்வளவாகக் கெடுதல் உண்டாகாது என்று நினைக்கிறேன். அவளை அடைய ஆசைப்படுகிற மனிதர் ஒரு ஜெமீந்தார் என்பதையே நீ வெளியிட வேண்டாம்.

ஹேமாபாயீ:- ஆம்; அப்படித்தான் செய்ய வேண்டும். அவன் எந்த நியாய ஸ்தலத்துக்குத்தான் போகட்டுமே. இந்த ஹேமாபாயி மனசு வைப்பாளானால், திரிமூர்த்திகள் வந்தாலும், இவளுடைய வாயிலிருந்து உண்மையில் ஒரு வார்த்தைகூட கிரகிக்க முடியாது என்பதை எஜமானர் நிச்சயமாக வைத்துக் கொள்ளலாம். எனக்கொன்றும் தெரியாது என்று ஆயிரம் பிரமாணம் வேண்டுமானாலும் செய்து துணிபோட்டுத் தாண்டி விடுவேன். சத்தியமாவது பிரமாணமாவது. அதைப் பற்றி எல்லாம் நான் கொஞ்சமும் கவனிக்கிறவளே அல்ல.

ஜெமீந்தார்:- (மகிழ்ச்சியடைந்து புன்னகை செய்து) ஆம்; நிஜந்தான். இப்படிப்பட்ட ஸ்திரீ விஷயங்களில் சத்தியமும் நியாயமும் பார்த்தால், மனிதன் ஒரே ஸ்திரீக்கு மேல் அதிகமான ஸ்திரீகளுடைய முகத்தைக் கூட பார்க்க வழியில்லாமல் போய்விடும். ஆகையால், நீ சொல்வது சரியான பேச்சு. அது போகட்டும். பண விஷயத்தைப்பற்றி நீ கொஞ்சமும் யோசிக்கவாவது, பின்வாங்கவாவது வேண்டாம். அவர்களுடைய புருஷன் இதற்கு இணங்கினால், அவனுக்கு இரண்டாயிரம் ரூபாய் வேண்டுமானாலும் கொடுத்து விடலாம். ஆனால், முழுத்தொகையையும் நாம் முன்னால் கொடுக்கக் கூடாது. நாம் அனுப்பும் பெட்டிவண்டியில் அவன் தன்னுடைய சம்சாரத்தைக் கொண்டு வந்து ஏற்றிவிடும்போது பாதித்தொகையைக் கொடுத்துவிடு. இன்னொரு பாதித் தொகையை அந்தப் பெண் உன்னுடைய ஜாகைக்கு

வந்தவுடனே அவளிடத்திலேயே கொடுத்து விடுவோம். ஆனால், அவனும் கூடவே தொடர்ந்து உன்னுடைய ஜாகைக்கு வராமல் நீ ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

ஹேமாபாயி:- எஜமானருடைய பிரியப்படியே நான் சகல விஷயங்களையும் திறமையாக நிறைவேற்றி வைக்கிறேன். அதைப் பற்றி எஜமானருக்குக் கொஞ்சமும் கவலையே வேண்டாம்.

ஜெமீந்தார்:- உனக்கு நான் செய்யப்போகும் சன்மானம் இப்படிப்பட்டது என்பதை நான் இப்போதே வெளியிட வேண்டும் என்பதில்லை என்று நினைக்கிறேன். உன் விஷயத்தில் நான் எவ்வளவு தாராளமாக நடந்து கொள்வேன் என்பது உனக்குத் தெரியாததல்ல.

ஹேமாபாயி:- (அதைக்கேட்டு சஞ்சலமடைந்தவள் போல நடித்து) எனக்குச் சன்மானம் கொடுப்பதைப்பற்றி எஜமானர் இப்போது சொல்லக்கூட வேண்டுமா? அந்த வார்த்தையையே எடுக்கத் தேவையில்லை. எஜமானர் விஷயத்தில் பிரயாசை எடுத்துக் கொண்டு உழைப்பதே ஓர் ஆனந்தமாகும். ஆகையால், நான் என்னால் இயன்ற வரையில் எப்படியாவது முயற்சி செய்து காரியத்தைப் பலிதமாக்குகிறேன். அதுதான் பிரதானம். மற்றது எனக்கு ஒரு பொருட்டல்ல. நான் போகலாம் அல்லவா? இன்னம் ஏதாவது என்னால் ஆகவேண்டுமா?

ஜெமீந்தார்:- வேறே ஒன்றுமில்லை. நீ சீக்கிரமாகப் போய்க் காரியத்தை முடி. இப்போதே செலவுக்கு ஏதாவது பணம் வேண்டுமா?

ஹேமாபாயி:- பணத்துக்கு என்ன அவசரம்? அதெல்லாம் பின்னால் பார்த்துக் கொள்ளுகிறேன். அவசரமாகப் பணம் வேண்டுமானால், நான் என்னிடம் இருப்பதை உபயோகப்படுத்திக் கொள்ளுகிறேன்.

வந்தவுடனே அவளிடத்திலேயே கொடுத்து விடுவோம். ஆனால், அவனும் கூடவே தொடர்ந்து உன்னுடைய ஜாகைக்கு வராமல் நீ ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

*ஹேமாபாயி:-* எஜமானருடைய பிரியப்படியே நான் சகல விஷயங்களையும் திறமையாக நிறைவேற்றி வைக்கிறேன். அதைப் பற்றி எஜமானருக்குக் கொஞ்சமும் கவலையே வேண்டாம்.

*ஜெமீந்தார்:-* உனக்கு நான் செய்யப்போகும் சன்மானம் இப்படிப்பட்டது என்பதை நான் இப்போதே வெளியிட வேண்டும் என்பதில்லை என்று நினைக்கிறேன். உன் விஷயத்தில் நான் எவ்வளவு தாராளமாக நடந்து கொள்வேன் என்பது உனக்குத் தெரியாததல்ல.

*ஹேமாபாயி:-* (அதைக்கேட்டு சஞ்சலமடைந்தவள் போல நடித்து) எனக்குச் சன்மானம் கொடுப்பதைப்பற்றி எஜமானர் இப்போது சொல்லக்கூட வேண்டுமா? அந்த வார்த்தையையே எடுக்கத் தேவையில்லை. எஜமானர் விஷயத்தில் பிரயாசை எடுத்துக் கொண்டு உழைப்பதே ஓர் ஆனந்தமாகும். ஆகையால், நான் என்னால் இயன்ற வரையில் எப்படியாவது முயற்சி செய்து காரியத்தைப் பலிதமாக்குகிறேன். அதுதான் பிரதானம். மற்றது எனக்கு ஒரு பொருட்டல்ல. நான் போகலாம் அல்லவா? இன்னம் ஏதாவது என்னால் ஆகவேண்டுமா?

*ஜெமீந்தார்:-* வேறே ஒன்றுமில்லை. நீ சீக்கிரமாகப் போய்க் காரியத்தை முடி. இப்போதே செலவுக்கு ஏதாவது பணம் வேண்டுமா?

*ஹேமாபாயி:-* பணத்துக்கு என்ன அவசரம்? அதெல்லாம் பின்னால் பார்த்துக் கொள்ளுகிறேன். அவசரமாகப் பணம் வேண்டுமானால், நான் என்னிடம் இருப்பதை உபயோகப்படுத்திக் கொள்ளுகிறேன்.

வந்தவுடனே அவளிடத்திலேயே கொடுத்து விடுவோம். ஆனால், அவனும் கூடவே தொடர்ந்து உன்னுடைய ஜாகைக்கு வராமல் நீ ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

*ஹேமாபாயி:-* எஜமானருடைய பிரியப்படியே நான் சகல விஷயங்களையும் திறமையாக நிறைவேற்றி வைக்கிறேன். அதைப் பற்றி எஜமானருக்குக் கொஞ்சமும் கவலையே வேண்டாம்.

*ஜெமீந்தார்:-* உனக்கு நான் செய்யப்போகும் சன்மானம் இப்படிப்பட்டது என்பதை நான் இப்போதே வெளியிட வேண்டும் என்பதில்லை என்று நினைக்கிறேன். உன் விஷயத்தில் நான் எவ்வளவு தாராளமாக நடந்து கொள்வேன் என்பது உனக்குத் தெரியாததல்ல.

*ஹேமாபாயி:-* (அதைக்கேட்டு சஞ்சலமடைந்தவள் போல நடித்து) எனக்குச் சன்மானம் கொடுப்பதைப்பற்றி எஜமானர் இப்போது சொல்லக்கூட வேண்டுமா? அந்த வார்த்தையையே எடுக்கத் தேவையில்லை. எஜமானர் விஷயத்தில் பிரயாசை எடுத்துக் கொண்டு உழைப்பதே ஓர் ஆனந்தமாகும். ஆகையால், நான் என்னால் இயன்ற வரையில் எப்படியாவது முயற்சி செய்து காரியத்தைப் பலிதமாக்குகிறேன். அதுதான் பிரதானம். மற்றது எனக்கு ஒரு பொருட்டல்ல. நான் போகலாம் அல்லவா? இன்னம் ஏதாவது என்னால் ஆகவேண்டுமா?

*ஜெமீந்தார்:-* வேறே ஒன்றுமில்லை. நீ சீக்கிரமாகப் போய்க் காரியத்தை முடி. இப்போதே செலவுக்கு ஏதாவது பணம் வேண்டுமா?

*ஹேமாபாயி:-* பணத்துக்கு என்ன அவசரம்? அதெல்லாம் பின்னால் பார்த்துக் கொள்ளுகிறேன். அவசரமாகப் பணம் வேண்டுமானால், நான் என்னிடம் இருப்பதை உபயோகப்படுத்திக் கொள்ளுகிறேன்.

*ஜெமீந்தார்:- சரி! அப்படியானால், நீ போய்விட்டு வா-என்றார்.*

உடனே ஹேமாபாயி அவரிடம் செலவு பெற்றுக்கொண்டு அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டாள். புறப்பட்டவள் நேராகத் தனது ஜாகைக்குப் போய்த் தனக்குத் தேவையான வஸ்துக்களை எடுத்துக்கொண்டாள். தனது வேலைக்காரியை அனுப்பி மாரியம்மன் கோயிலுக்குப் போய்வர, ஒரு குதிரை வண்டி அமர்த்திக்கொண்டு வரச்செய்து, அதில் உட்கார்ந்து கொண்டு உடனே பிரயாணமானாள். குதிரை வண்டி விசையாக ஓடி, மாலை ஆறு மணிக்கு அவளைச் செட்டித் தெருவில் கொண்டு போய்விட்டது. அந்தத் தெருவில் பங்களா இருந்த இடத்தை அறிந்துகொண்டு அவள் நேராக அதற்குள் நுழைந்தாள். வாசலில் இருந்த தோட்டக்காரன் அவளைப் பார்த்து, யாரோ பெரிய மனிதர் வீட்டு ஸ்திரீ என்றும்,தனது எஜமானருக்கு வேண்டியவள் என்றும் நினைத்து, எழுந்து வணக்க ஒடுக்கமாக நின்று, ''என்ன, அம்மணீ! வேண்டும்?'' என்று கேட்டான்.

அவள், ''ஏனப்பா மாசிலாமணிப் பிள்ளையினுடைய பங்களா இதுதானே?'' என்றாள்.

தோட்டக்காரன், ''ஆம், அம்மணீ! இதுதான்'' என்றான்.

ஹேமாபாயி, ''அவர் உள்ளே இருக்கிறாரா? அல்லது, எங்கே யாவது வெளியில் போயிருக்கிறாரா?''

தோட்டக்காரன், ''உள்ளேதான் இருக்கிறார்கள்; அம்மணீ! உங்களுக்கு என்ன ஆகவேண்டும்?' என்றான்.

ஹேமாபாயி, ''ஒன்றுமில்லை. நீ அவரிடம்போய் தஞ்சாவூரிலிருந்து ஓர் அம்மாள் வந்திருப்பதாகவும், அவரைப் பார்க்கப் பிரியப் படுவதாகவும் சொல்!'' என்று நயமாகக் கூறினாள்.

தோட்டக்காரன் அப்படியே செய்வதாகச் சொல்லி விட்டு விரைவாக உள்ளே ஓடி விஷயத்தைத் தெரிவிக்க, மாசிலாமணிப் பிள்ளை என்பவர் உடனே வெளியில் வந்தார். அவர் தூரத்தில் வரும்போதே, ஹேமாபாயி அவரது முகத்தை உற்றுநோக்கி ஆராய்ச்சி செய்தாள். ஏனென்றால், அவள் செய்து வந்த தொழில் நிரம்பவும் தந்திரமாகவும் சாமர்த்தியமாகவும் நடத்தப்பட வேண்டியது. ஆகையால், எதிராளியின் முகக்குறியிலிருந்து அவனது குணா குணங்களை நன்றாக அறிந்துகொண்டு அதன் பிறகே, விஷயத்தை வெளியிடுவது வழக்கம். அவ்வாறு பழகிப் பழகி மனிதரது முகக்குறிகளை ஆராய்ந்து அறிவதில் அவள் அதிகத் தேர்ச்சி பெற்றிருந்தாள். ஆகையால், அவள் மாசிலாமணிப் பிள்ளையின் முகக் குறிகளிலிருந்து, அவர் எல்லா விஷயத்திற்கும் துணிந்த அயோக்கிய சிகாமணி என்று ஒருவாறு யூகித்துக் கொண்டாள். அதோடு அந்த மனிதரது முகம் அவள் அதற்குமுன் பார்த்துப் பழகிய முகமாகவும் தோன்றியது. அவரைத் தான் எங்கே எப்போது பார்த்திருக்கக் கூடுமென்று அவள் தனக்குள் சிந்தனை செய்தவண்ணம் நின்றாள்.

அவளண்டை நெருங்கிவந்த மாசிலாமணிப்பிள்ளை என்பவருக்கும் அவளைக் கண்டு ஒருவித வியப்பும் இன்பமும் அடைந்தவர் போலக் காணப்பட்டது. அன்றி, அவளை நோக்கித் தயங்கித் தயங்கிப் பேசத் தொடங்கி, "ஏனம்மா வாசலில் நிற்கிறீர்களே! இப்படி உள்ளே வருகிறதுதானே! உங்களை நான் இதற்குமுன் எங்கேயோ பார்த்திருப்பதாக ஒரு நினைவு உண்டாகிறது. எங்கே பார்த்திருக்கலாம்?" என்ற வண்ணம் அவளை உபசரித்து உள்ளே அழைத்துக் கொண்டுபோனார். அவரைத் தொடர்ந்து பின்னாக நடந்து வந்த ஹேமாபாயி, "நானும் உங்களை எங்கேயோ பார்த்த மாதிரிதான் இருக்கிறது. ஆனால், சரியானபடி நினைவு உண்டாக

மாட்டேன் என்கிறது. மாசிலாமணிப் பிள்ளையென்று பெயர் கொண்ட என்னுடைய சிநேகிதர் ஒருவர் இருக்கிறார். நான் இந்தத் தெருவின் வழியாகப் போனபோது, இந்த பங்களாவைக் கண்டு இது யாருடையது என்று விசாரித்தேன். மாசிலாமணிப் பிள்ளையினுடையது என்று சொன்னார்கள். ஒருவேளை என்னுடைய சிநேகிதர்கள் இங்கே ஜாகை வைத்துக் கொண்டிருக்கிறாரோ என்று சந்தேகித்து, அவரைப் பார்க்கலாம் என்று வந்து உங்களுக்கு அநாவசியமான தொந்தரவு கொடுத்துவிட்டேன்'' என்று நேர்த்தியாகவும் தேன்போல இனிமையாகவும் மொழிந்தாள். அதற்குள் அவர்கள் இருவரும் கட்டிடத்தை அடைந்து, முதலில் காணப்பட்ட ஒரு கூடத்தை அடைந்தனர். மாசிலாமணிப் பிள்ளை பக்கத்தில் இருந்த ஒரு விசிப் பலகையின் மேல் உட்கார்ந்து கொள்ளும்படி அவளை உபசரித்த வண்ணம், தாம் வேறோர் ஆசனத்தில் அமர்ந்தார். ஹேமாபாயி ஒருவிதத் துணிவடைந்தவளாய் அவரால் காட்டப்பட்ட விசிப் பலகையின் மேல் உட்கார்ந்து கொண்டாள்.

உடனே மாசிலாமணிப் பிள்ளை அவளது முகத்தைத் திரும்ப ஒருமுறை கூர்ந்து நோக்கி, அப்போதே உண்மையைக் கண்டுகொண்டவர்போலக் காட்டி, ''ஓகோ! சரி சரி; இப்போதுதான் நினைவு உண்டாகிறது. தஞ்சாவூர் ராணி வாய்க்கால் சந்தில் இருக்கும் ஹேமாபாயியல்லவா நீ?'' என்று சந்தேகமாகவும் மகிழ்ச்சியாகவும் கூறினார்.

அதைக் கேட்ட ஹேமாபாயி உண்மையிலேயே அளவு கடந்த மகிழ்ச்சி அடைந்தாள். தான் அவரிடம் பேசவேண்டிய விஷயம் அசாதாரணமான விஷயம். ஆகையால், அதற்குமுன் முகம் அறியாத மனிதரிடத்தில் தான் துணிந்து தனது கருத்தை எப்படி வெளியிடுவதென்று அவள் அஞ்சி வந்ததற்கு அநுகூலமாக, அவர் தன்னை முன்னரே அறிந்தவராக இருக்கிறார் என்ற விஷயம் அவளது மனதில் உற்சாகத்தையும் நம்பிக்கையையும்

துணிவையும் உண்டாக்கியது. தனது காரியம் சுலபத்தில் பலித்து விடும் என்ற ஒரு நிச்சயமும் ஏற்பட்டது. அவள் உடனே புன்னகை செய்து, ''ஓகோ! அப்படியா! கடைசியில் நான் உங்களுக்குத் தெரிந்தவளாகவே இருக்கிறேன். நான் ஏதோ தவறாக நினைத்து இங்கே வந்துவிட்டதாக எண்ணினேன். இனி நான் விசனப்பட வேண்டிய அவசியமே இல்லை. உங்களை இதற்கு முன் நான் எப்போது பார்த்தேன் என்பது எனக்கு ஞாபகம் உண்டாகவில்லையே! நீங்கள் என்னை எப்போது பார்த்தீர்கள்? நீங்கள் என்னுடைய ஜாகைக்கு எப்போதாவது வந்திருக்கிறீர்களா?'' என்றாள்.

மாசிலாமணிப்பிள்ளை, ''இப்போது சமீபகாலத்தில் நான் உன்னுடைய ஜாகைக்கு வந்ததில்லை. நாலைந்து வருஷங்களுக்கு முன், நான் அடிக்கடி உன்னுடைய ஜாகைக்கு வந்து சந்தோஷமாக இருந்துவிட்டுப் போவது வழக்கம். ஆனால், நான் வந்தால் என்னுடைய பெயரையும் சொல்வதில்லை; அவ்வளவு பகிரங்கமாகவும் வருவதில்லை. இராக்காலத்தில் ரகசியமாக வந்து ரகசியமாகப் போய் விடுவேன். அதனால்தான், இப்போது உன்னைப் பார்த்தவுடனே எனக்கே அடையாளம் தெரியவில்லை'' என்றார்.

உடனே ஹேமாபாயி இனிமையாகப் புன்னகை செய்து, ''ஓகோ! இருக்கலாம் இருக்கலாம். எனக்குக்கூட இப்போதுதான் ஞாபகம் உண்டாகிறது. நானும் உங்களைப் பார்த்துத்தான் இருக்கிறேன்'' என்றாள்.

**மாசிலாமணிப்பிள்ளை:-** (வேடிக்கையாகக் கண்ணைச் சிமிட்டிக்கொண்டு) என்ன விசேஷம்? க்ஷேமந்தானே? உன்னுடைய காலக்ஷேபம் பழைய மாதிரியே நடந்து கொண்டு வருகிறதல்லவா?

**ஹேமாபாயி:-** (மகிழ்ச்சியாகப் புன்னகை செய்து) என்னவோ உங்களைப் போன்ற பிரபுக்களுடைய தயவினால்

நான் சுகமாக ஜீவித்துக்கொண்டுதான் இருக்கிறேன். என்னுடைய ஜாகையை நீங்கள் இப்போது சமீபகாலத்தில் பார்த்தில்லையே. நாலைந்து வருஷகாலத்துக்கு முன்தானே பார்த்தீர்கள். பழைய கட்டிடத்தை அடியோடு இடித்துவிட்டு இப்போது மூன்று உப்பரிகைகள் வைத்து வெகு ஏற்பாடாகக் கட்டி இருக்கிறேன். நீங்கள் என்னுடைய ஜாகைக்கு ஒரு நாளைக்குத்தான் வந்து பாருங்களேன். பழைய சிநேகிதர்களை இப்படி அடியோடு கைவிடுவது தருமமாகுமா?

*மாசிலாமணிப்பிள்ளை:-* (மகிழ்ச்சியாக நகைத்து) ஓ! அவசியம் வருகிறேன். கரும்பு தின்னக் கூலி கேட்பதுண்டா! நீ மூன்று உப்பரிகைகள் வைத்துக் கட்டியிருப்பதாகச் சொல்வதைப் பார்த்தால், அது பெரிய அரண்மனைபோல இருக்க வேண்டுமே!

*ஹேமாபாயி:-* நீங்கள் வந்துதான் பாருங்களேன். ஒவ்வோர் உப்பரிகையையும் சொர்க்க லோகம் போல அலங்கரித்து இருக்கிறோம். ரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை முதலிய தெய்வ தாசிகளைப் பழிக்கத்தக்க அற்புதமான அழகு வாய்ந்த பெண்களை எல்லாம் நீங்கள் அங்கே பார்க்கலாம். ஏதோ ஈசுவரன் ஏராளமாகப் பணம் கொடுத்துக் கொண்டுதான் இருக்கிறான். அதைச் செலவு செய்து இப்படி ஒரு வீடு கட்டினேன். பணம் ஏராளமாக வந்து கொண்டிருந்ததால், அதை என்ன செய்யவேண்டுமென்பது கூடசில சமயங்களில் தெரியமாட்டேன் என்கிறது.

*மாசிலாமணிப்பிள்ளை:-* (நயமாகப் புன்னகை செய்து) ஓகோ! அப்படியா சங்கதி! நீ எப்போதும் அதிர்ஷ்டசாலிதான். எந்தத் தொழிலுக்குப் போனாலும், அதிர்ஷ்டம் வேண்டும். உன்னிடம் மேன் மேலும் வந்து குவிந்து கொண்டிருக்கும் பணத்தை என்ன செய்வது என்பது உனக்குத் தெரியவில்லை. எங்களைப்போல இருக்கிறவர்களுக்குப் பணம் இருக்கிற இடமாவது, அதைச்சம்பாதிக்கிற விதமாவது தெரியமாட்டேன்

என்கிறது. என்ன செய்கிறது! நீ நன்றாகப் பணம் சம்பாதித்துச் சம்பாதித்துப் பழகியிருக்கிறாயே. என்னிடம் இப்போது பணமில்லாமையால், நான் நிரம்பவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறேன். பணம் சம்பாதிக்கிற வழி ஏதாவது உன்னைப் போன்றவர்கள் கற்றுக்கொடுத்தால் இந்தச் சமயத்துக்கு நிரம்பவும் அனுகூலமாக இருக்கும். அதுபோகட்டும். நீ இந்தச் சாயுங்கால வேளையில் இந்த ஊரில் வந்து என்ன செய்து கொண்டிருக்கிறாய்?

ஹேமாபாயி:- (அவரிடம் அந்தரங்க விசுவாசமுள்ளவள் போல நடித்து) நீங்கள் என்னைக் கண்டு பழைய சிநேகிதை என்பதை உணர்ந்து அதை வெளியில் காட்டி அன்பு பாராட்டினீர்கள். அப்படியிருக்க, நான் உங்களை அன்னியராக எண்ணி விஷயத்தை மறைப்பது சரியல்ல. நான் ஒரு முக்கியமான விஷயமாக இந்த ஊரில் அலைந்து திரிந்து கொண்டிருக்கிறேன். இதில் மாத்திரம் நான் ஜெயமடைவேன் ஆனால், எனக்கும் இருநூறு முன்னூறு கிடைக்கும். நான் அழைத்துக் கொண்டு போகும் பெண்ணும் ஒரு ராத்திரியில் இரண்டாயிரம் ரூபாய் வரையில் சம்பாதித்துக் கொள்ளலாம். அப்படிப்பட்ட அதிர்ஷ்டம் எவளுக்கு வாய்க்கக் காத்திருக்கிறதோ தெரியவில்லை.

மாசிலாமணிப்பிள்ளை:-(வியப்பும், மகிழ்ச்சியும் சுவாரஸ்யமும் அடைந்து) அது என்ன விஷயம்? அதை நன்றாக உடைத்துத்தான் சொல்லேன். மூடிமூடிப் பேசுகிறாயே.

ஹேமாபாயி:- (தணிவாகவும் ரகசியமாகவும் பேசத் தொடங்கி) அந்தச் சங்கதி நிரம்பவும் வேடிக்கையானது. ஆனால், அது புதுமையானதல்ல. அதைப்போல எத்தனையோ தடவை களில் நடத்தியிருக்கிறேன் வேறொன்றுமில்லை. என்னை ஆதரித்து வரும் பிரபுக்களில் எல்லாம் முக்கியமானவர் ஒரு கிழவர். அவர் உங்களை விட வயசில் மூத்தவராக இருப்பார். அவ்வளவு வயசானாலும், அவருக்கு இந்த

விஷயத்தில் இருக்கும் பைத்தியம் இவ்வளவு அவ்வளவல்ல. அவர் இன்று காலையில் என் ஜாகைக்கு வந்து என்னோடு பேசிக் கொண்டிருந்தார். இதுவரையில் அவர் பார்த்துப் பழகிய பெண்கள் எல்லாம் அவருக்குப் பிடிக்கவில்லையாம். அவர்களுடைய அழகெல்லாம் முதல்தரமானது அல்லவாம். என் வீட்டுக்கு வருவதற்கே அவருக்கு வெறுப்பு உண்டாகி விட்டதாம். ஆனால், அவருக்கு அவ்வளவு வயசாகி இருந்தாலும், பார்வைக்கு அவர் அழகாகத்தான் இருக்கிறார். அவரிடத்திலுள்ள பணம் நம்முடைய தேசத்து ராஜாவினிடத்தில் கூட இருக்காது.

*மாசிலாமணிப்பிள்ளை:-* (புரளியாகப் பேசத் தொடங்கி) அதற்காக அவர் உன்னை என்ன செய்யச் சொல்லுகிறார்? இது வரையில் அவர் பார்த்த பெண்களை எல்லாம்விட அதிக அழகான ஒருத்தியைக் கொண்டுவந்தால்தான், தம்முடைய மோகவிடாய் தணியும் என்று சொல்லி, இந்த ஊரில் தேடிப் பிடிக்கும்படி உன்னை அனுப்பினாரா?

*ஹேமாபாயி:-* (நயமாகச் சிரித்துக்கொண்டு) ஆம் ஆம்; அப்படித்தான். நான் கண்டுபிடிக்கும் பெண் அபூர்வமான அழகு வாய்ந்தவளாக இருக்க வேண்டும். அது மாத்திரமல்ல. அவள் மகா ஸரஸ குணம் பொருந்தியவளாகவும், அசட்டுத்தனமாகப் பேசாமல் மரியாதையாகவும், புத்திசாலித்தனமாகவும், வேடிக்கையாகவும் பேசித் தன்னுடைய இனிய குணங்களால், அவரை மகிழ்விக்கக் கூடியவளாக இருக்க வேண்டுமாம். இந்த அம்சங்கள் வாய்ந்தவளாக இருக்கிற பெண் எவளாக இருந்தாலும், நான் அவளை அழைத்துக்கொண்டு போனால், அவர் ஏற்றுக்கொள்வார். அப்படிப்பட்ட யோக்கியதை வாய்ந்த ஒரு பெண் இந்த ஊரில் இங்கே ஏதோ ஒரு தெருவில் இருப்பதாகச் சிலர் சொல்லக்கேட்டு நான் இந்த ஊருக்கு வந்து விசாரித்தேன்.அவள் தன் புருஷனோடு இந்த ஊரை விட்டுப் புறப்பட்டு வேறே எங்கேயோ போய்விட்டதாகக் கேள்வி

யுற்றேன். இனி என்ன செய்கிறது என்பது தெரியவில்லை. அதுதான் கவலையாக இருக்கிறது. அவள் இருந்திருப்பாள் ஆனால், இன்று ராத்திரி இரண்டாயிரம் ரூபாய் அவளுடைய கைக்கு வந்து சேர்ந்திருக்கும். அவளும் பதிவிரதைத்தனம் கொண்டாடி அந்தத் தொகையை ஏற்றுக் கொள்ளாதிருக்க மாட்டாள்.

மாசிலாமணிப்பிள்ளை:- நீ சொல்வது ஆச்சரியமாக இருக்கிறது. ஒரு நாளைக்கு யாராவது இரண்டாயிரம் ரூபாய் கொடுப்பார்களா? ஒருவேளை இருநூறு ரூபாயாக இருக்குமோ?

ஹேமாபாயி:- இல்லை இல்லை. இரண்டாயிரந்தான். அது மாத்திரமா? எனக்குப் பிரத்தியேகமாக இருநூறு ரூபாயாவது கொடுப்பார். அதெல்லாம் சரி; அப்படிப்பட்ட பெண் அல்லவா வேண்டும். அதற்குத்தான் என்ன செய்வது என்பது தெரியவில்லை.

மாசிலாமணிப்பிள்ளை:- நீ சொல்வது நம்பக்கூடாத விஷயமாக இருக்கிறது. ஒரு பெண்ணினிடம் ஒரு ராத்திரியில் அவ்வளவு பெரிய தொகையை எடுத்து எறிய, அவன் என்ன அவ்வளவு முட்டாளாகவா இருப்பான்?

ஹேமாபாயி:- அவர் ஒரு கோடீசுவரர் அல்லவா? அவருக்கு இந்த இரண்டாயிரம் ரூபாய் இரண்டாயிரம் ஒட்டாஞ் சில்லுகளுக்குச் சமானம். அவர் கலியாணமே செய்து கொள்ளவில்லை. தம்முடைய ஆயிசுகாலமெல்லாம் இப்படி சிற்றின்பம் அனுபவித்தே போக்கி வருகிறார். சித்தம் போக்கு சிவன்போக்கு என்கிறபடி, அவர் மனசுக்கு இஷ்டமானால், ஆயிரமல்ல, பதினாயிரமல்ல வாரி ஒரு நொடியில் வீசிக் கனகாபிஷேகம் செய்துவிடுவார். அதைப் பற்றிச் சந்தேகமே வேண்டாம்.

மாசிலாமணிப்பிள்ளை:- நீ சொல்வது வாஸ்தவமாக

இருக்கலாம். அப்பேர்ப்பட்ட பைத்தியக்காரர்கள். எத்தனையோ பேர் உலகத்தில் இருக்கிறார்கள்தான். (சிறிது யோசனை செய்து) எனக்கு ஒரு விஷயம் ஞாபகம் உண்டாகிறது. எனக்குத் தெரிந்த பெண் ஒருத்தி இந்த ஊரில் இருக்கிறாள். நீ விவரித்த யோக்கியதா பட்சமெல்லாம் அவளிடம் பூர்த்தியாக நிரம்பி இருக்கின்றன. அந்த மனிதர் இரண்டாயிரம் ரூபாய் கொடுப்பது உண்மையானால், அவள் ஒருவேளை இசைந்தாலும் இசையலாம் என்று நினைக்கிறேன்.

ஹேமாபாயி:- (மிகுந்த களிப்பும் உற்சாகமும் அடைந்தவளாய்) ஆகா! அப்படியா! நிரம்ப சந்தோஷம்! பருத்தி துணியாகவே காய்த்தது போலாயிற்று. நீங்கள் மாத்திரம் என் பேரில் தயை வைத்து அந்தப் பெண்ணை நான் அடையக் கூடிய மார்க்கத்தைக் காட்டுவீர்களானால், அந்த அபாரமான உதவியை நான் ஒருநாளும் மறக்கவே மாட்டேன். இந்த விஷயம் கொஞ்சமும் வெளியாகாமல், பரம ரகசியமாகவே நான் மற்ற எல்லாக் காரியங்களையும் முடிக்கிறேன்.

மாசிலாமணிப் பிள்ளை:- (தணிவான குரலில் பேசத் தொடங்கி) அதெல்லாம் சரிதான். பணம் எப்போது கொடுக்கிறது? அது முதலில் வந்தால்தானே பெண்ணுக்கு நம்பிக்கையும் சந்தோஷமும் உண்டாகும்.

ஹேமாபாயி:- பணத்தைப்பற்றிய கவலையே தேவையில்லை. அந்த விஷயத்தில் அவ்விடத்து அபிப்பிராயம் எப்படியோ அப்படியே மிகவும் லலிதமாகக் காரியத்தை முடித்துக் கொள்ளலாம். அந்தப் பெண் மாத்திரம் வருவதாக ஒப்புக்கொண்டு வருவாளானால், அவளை அழைத்துக் கொண்டு போக நானே நேரில் ஒரு பெட்டி வண்டியோடு வந்து சேருகிறேன். பாதித் தொகையை நான் என்னுடைய உத்தர வாதத்தின் மேல் அப்போதே கொடுத்துவிட்டுப் பெண்ணை அழைத்துக்கொண்டு போகிறேன். அவள் என்னுடைய

ஜாகைக்கு வந்தவுடன், என்னுடைய உப்பரிகையில் வந்து ஆயத்தமாக இருக்கப் போகிற அந்தப் பிரபுவுக்கும் அவளுக்கும் நான் உடனே சந்திப்புச் செய்து வைக்கிறேன். அப்போது அவரே நேரில், மிகுதித் தொகையையும் கொடுத்துவிட்டு அவளோடு பேசுவார். இந்த ஏற்பாடு நல்லதுதானே? இந்தமாதிரி செய்ய அவளுக்கு இஷ்டம் இருக்குமல்லவா?

*மாசிலாமணிப்பிள்ளை:-* (சிறிது யோசனை செய்து) சரி! இந்த ஏற்பாடு ஒழுங்கானதாகத்தான் இருக்கிறது. அவள் இதை அநேகமாய் ஒப்புக்கொள்ளலாம் என்று நம்புகிறேன். இந்த ஒப்பந்தம் முடிந்த மாதிரியாகவே வைத்துக்கொள். அவளை அழைத்துக் கொண்டுபோக சௌகரியமான நாள் எதுவென்று நாம் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். இன்றைக்கு என்ன கிழமை? சனிக்கிழமை அல்லவா? இப்போது சாயுங்கால வேளையாகிவிட்டது. இன்றையதினம் ராத்திரி நான் அவளைப் பார்க்க முடியுமோ முடியாதோ. நாளையதினம் நான் அவளை அவசியம் பார்க்கக் கூடும். அவளுடைய சமயம் பார்த்து நான் அவளிடம் இந்த விஷயத்தை வெளியிட்டு அவளுடைய சம்மதியைப் பெறுகிறேன். நாளைய தினம் ராத்திரி அவள் வரமாட்டாள். திங்கள்கிழமை ராத்திரி எட்டு அல்லது ஒன்பது மணிக்கு அவள் வரத் தயாராக இருப்பாளென்று நான் நிச்சயமாகச் சொல்லக்கூடும். அந்த மனிதருக்கு அது சௌகரியமான காலமாக இருக்குமோ என்னவோ அதை நீ அறிந்துகொண்டு சொன்னால், அதற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளலாம்.

*ஹேமாபாயி:-* அந்தப் பெண் எவ்விடத்தில் இருக்கிறவளோ? அவளை அழைத்துக்கொண்டு போக நான் எவ்விடத்துக்கு வண்டி கொண்டு வருகிறது? அதை முதலில் சொல்லுங்கள்.

*மாசிலாமணிப்பிள்ளை:-* உண்மையை உன்னிடத்தில் மறைப்பதில் உபயோகம் ஒன்றுமில்லை. அந்தப் பெண்

என்னுடைய சம்சாரத்துக்கு நிரம்பவும் அன்னியோன்னியமான சிநேகிதை. ஆனால், அவள் புருஷனுக்குள் இருப்பவள்; அது நினைவிருக்கட்டும். அந்தப் புருஷன் இப்போது இந்த ஊரில் இல்லை. வெளியூருக்கு ஏதோ காரியார்த்தமாகப் போயிருக்கிறான். அவள் கொஞ்சம் தமாஷாக இருக்கக் கூடியவள்தான். ஆனால், காதும் காதும்வைத்தது போல காரியத்தை மிகவும் ரகசியமாகவே நடத்திக்கொள்வாள்.

ஹேமாபாயி:- (இனிமையாக நகைத்து) அவள் எப்படிப் பட்டவளாகவாவது இருக்கட்டும். அந்த விவரத்தை எல்லாம் நான் யார் பொருட்டு இந்த முயற்சி செய்கிறேனோ அந்த மனிதர் அந்தப் பெண்ணின் பெயர் முதலிய எந்த விவரத்தையும் கேட்கப் போகிறதில்லை. ஆனால் அந்தப் பெண் அவருடைய மனசுக்குப் பிடித்தவளாக இருந்து அவர் அவளை மறுபடியும் பார்க்க ஆசைப்பட்டால், அவர் தம்முடைய பெயரை வேண்டுமானால் அவளிடம் வெளியிடலாம். இது அவருடைய இஷ்டத்தைப் பொருத்தது. திங்கட்கிழமை ராத்திரி நான் வருவதைப் பற்றித் தடையில்லை. நான் எவ்விடத்துக்கு வருகிறது என்பதைச் சொல்லுங்கள்.

மாசிலாமணிப்பிள்ளை:- நீ என்னவிதமான வண்டி கொண்டுவரப் போகிறாய்?

ஹேமாபாயி:- நன்றாக மூடியிருக்கும் பெட்டிவண்டி ஒன்று கொண்டு வருகிறேன்.

மாசிலாமணிப்பிள்ளை:- சரி; திங்கள்கிழமை சரியாக எட்டு மணிக்கு நீ பெட்டிவண்டியோடு வந்து சேர். ஆனால், இந்த ஊருக்குள்ளேயே நீ வரவேண்டாம். வீடுகள் ஆரம்பமாகும் இடத்துக்குக் கொஞ்ச தூரத்தில் சமுத்திரம் என்று பெயர்கொண்ட ஏரி இருக்கிறதல்லவா? அதன் கரையண்டை வண்டியை நிறுத்திக் கொண்டிரு. நான் அந்தப் பெண்ணை சித்தமாக அதே காலத்தில் கொண்டுவந்து வண்டியில் ஏற்றிவிட்டு அனுப்புகிறேன்- என்றார்.

ஹேமாபாயி அந்த ஏற்பாட்டை ஒப்புக்கொண்டவளாய் அவரிடம் செலவு பெற்றுக்கொண்டு வெளியில் போய் விட்டாள்.

21-வது அதிகாரம்

## கொள்ளையும் - கொலையும்

ஹேமாபாயியும் மாசிலாமணிப் பிள்ளையும் சனிக்கிழமை தினம் மாலையில் மேலே குறிக்கப்பட்டபடி சந்தித்துப் பேசிக் கொண்டிருந்த அதேசமயத்தில் அம்மன்பேட்டையில் கூத்தாடி அன்னத்தம்மாள் எவரும் அறியாதபடி தனது மாளிகையின் கொல்லைப் பக்கத்துக் கதவைத் திறந்துகொண்டு வெளியில் போய், தோட்டத்துக் கதவைத் திறந்து கொண்டு அப்பால் சென்று, அவ்விடத்தில் குறுக்கிட்ட சிறிய வாய்க்காலைக் கடந்து, வயல்களிடையில் போன ஒற்றையடிப் பாதையின் வழியாகக் கொஞ்ச தூரம் நடந்துபோய், அவ்விடத்தில் இருந்த பாழ் மண்டபத்தை அடைந்தாள். அப்போது மாலை மயங்கும் சமயமாக இருந்தது. அந்த மண்டபம் இருந்த இடம் அந்த ஊருக்கு வெளியில் ஒதுப்புறமான ஒரு மூலையாதலால், அவ்விடத்தில் மனிதரது நடமாட்டமே காணப்படாதிருந்தது. அப்படிப்பட்ட இடத்திற்குப் போய்ச் சேர்ந்த அன்னத்தம்மாள் அங்கும் இங்கும் திரும்பிப் பார்த்தாள். அதன்பிறகு சிறிது நேரம் தயங்கி நின்ற பின் மண்டபத்துக்கு அருகில் நெருங்கித் தலையை நீட்டி அதற்குள் எட்டிப் பார்த்தாள். அந்த மண்டபம் இரண்டிரண்டு ஆட்கள் சுற்றிப் பிடிக்கத்தகுந்த பெரும் பெருங் கருங்கல் கம்பங்களுடையதாக இருந்தது. அன்றி அதன் ஒரு பக்கத்தில் பெருத்த திண்ணையையும் மறைவுச் சுவரையும் உடையதாக இருந்தது. அந்த மறைவிற்குள் அவள் தனது பார்வையைச் செலுத்தியபோது, அங்கிருந்து

சிவசிதம்பரம்! நடராஜா! என்ற ஒரு குரல் உண்டாயிற்று. அடுத்த நிமிஷம் ஒரு பரதேசி அவ்விடத்திலிருந்து மெதுவாக வெளிப்பட்டான். அவனது தலைமுகம் முதலிய இடங்களில் எல்லாம் கருப்பான உரோமம் காடுபோல அடர்ந்து உப்புசமாக இருந்தது. தலையில் செம்பட்டை நிறமுள்ள சடைகள் தொங்கிக் கொண்டிருந்தன. அவர் தமது உடம்பு முழுதையும் காஷாய வஸ்திரத்தால் மூடிக் கொண்டிருந்தார்; கழுத்திலும் கைகளிலும் உருத்திராக்ஷ மாலைகள் தென்பட்டன. அவரது ஒரு கையில் ஒரு திருவோடும், இன்னொரு கையில் முறுக்கலான கருத்த தடியொன்றும் காணப்பட்டன. அவ்வாறு காணப்பட்ட பரதேசியைக் கண்ட அன்னத்தம்மாள் ஒருவித ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைந்தவளாய் அவரை நோக்கிப் புன்னகை செய்து, ''சுவாமிகளுடைய இருப்பிடம் எதுவோ? தாங்கள் இந்தப் பாழும் மண்டபத்தில்தானா இருக்க வேண்டும். இவ்விடத்தில் ராத்திரியில் பாம்பு முதலிய துஷ்ட ஜெந்துக்கள் வந்து அடையுமே? ஊருக்குள் இருக்கும் சத்திரத்தில் வந்து தங்கக் கூடாதா?'' என்று சந்தேகமாகப் பேசினாள்.

அவளது சொற்களைக் கேட்ட பரதேசி, ''இல்லை அம்மணீ! எங்களைப்போன்ற உண்மைப் பரதேசிகள் ஊருக்குள் இருப்பது தகாது. நியாயமாக நாங்கள் எல்லோரும் நிர்மாநுஷ்யமான காடுகளிலேதான் இருக்க வேண்டும். உண்மையில் உலகைத் துறக்காமல் வெளிவேஷம் போடும் பரதேசிகள்தான் ஊருக்குள் கிடந்து கிரகஸ்தர்களுக்குப் பாரமாக இருந்து, சோற்றுக்கும் துணிக்கும் அவர்களை வதைப்பார்கள்'' என்றார்.

அதைக்கேட்ட அன்னத்தம்மாள் ஒருவித ஐயங்கொண்டு, ''அப்படியா!சரி; இப்படிப்பட்ட உண்மையான பரதேசியின் தரிசனம் எனக்குக் கிடைத்ததும் ஓர் அரிய பாக்கியம்தான்'' என்றாள்.

உடனே பரதேசி, ''நல்லது. நான் உண்மையான பரதேசியோ, அல்லது வேறே யாரோ என்று உங்களுடைய மனசில் ஒரு

சந்தேகம் உண்டாகி இருப்பதாக என் ஞானதிருஷ்டி எனக்குக் காட்டுகிறது. நீங்கள் யார் என்பதுபோன்ற உங்களுடைய வரலாற்றைச் சொல்லி நான் உண்மையான பரதேசி என்பதை நான் ருஜுப்படுத்துகிறேன். அதற்கு மேலாவது நம்பிக்கைப் படுமல்லவா! நீங்கள் இருப்பது அம்மன்பேட்டை; உங்களுடைய பெயர் அன்னத்தம்மாள் என்பது. இந்த ஊரிலுள்ள எல்லாரையும் விட நீங்கள் அதிக ஆஸ்தியுடைய வர்கள். இன்றையதினம் காலையில் கூட உங்களுக்கு ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதம் தஞ்சையிலுள்ள துப்பறியும் போலீஸ் இன்ஸ்பெக்டரால் எழுதப்பட்டது. உங்களுக்கு ஒரு பெருத்த அபாயம் நேரப் போகிறது. ஆகையால், நீங்கள் இன்று சாயுங்காலம் இந்த மண்டபத் தண்டை தனியாக வந்தால், அவர் ஒரு மனிதரை அனுப்பி, அந்த அபாயம் இன்னது என்பதை ரகசியமாகத் தெரிவிக்கச் செய்கிறேன் என்று எழுதியிருக்கிறார். அதற்காகவே நீங்கள் இப்போது இங்கே வந்திருக்கிறீர்கள். அவ்வளவு தான் சங்கதி. நான் உண்மையான பரதேசி என்பது இப்போது நிச்சயப்படுகிறது அல்லவா?'' என்றார்.

அவரது சொற்களைக் கேட்டு அளவற்ற ஆச்சரியமும் திகைப்பும் ஐயமும்கொண்ட அன்னத்தம்மாள் சிறிதுநேரம் தயங்கி, ''சரி; சுவாமிகள் சொன்ன வரலாறு எல்லாம் உண்மையானதுதான். ஆனால், சுவாமிகள் உண்மையான பரதேசியாக இருந்தாலும் இருக்கலாம். இன்ஸ்பெக்டரால் அனுப்பப்பட்ட மனிதராக இருந்தாலும் இருக்கலாம். ஏனென்றால், அவரால் அனுப்பப்படும் மனிதனுக்கு ஞான திருஷ்டியின் உதவியில்லாமலேயே இந்த விவரம் எல்லாம் தெரியுமல்லவா?'' என்றாள்.

பரதேசி:- ஆம்; உண்மைதான்; நான் யாராக இருந்தால் என்ன? உங்களுக்கு வேண்டியது, இன்று என்ன அபாயம் நேரப் போகிறது என்ற விவரம்தானே. அதை நானே தெரிவித்து

விடுகிறேன். நான் சொல்வது ஒருவேளை பொய்யாக இருக்குமோ என்று சந்தேகிக்க வேண்டாம். இதுவரையில் நடந்த விஷயத்தை நான் எடுத்து உண்மையாகச் சொன்னது போல இனி நடக்கப் போகும் விஷயமும் உண்மையாகவே நடக்கக்கூடியது என்று நீங்கள் நிச்சயமாக நம்புங்கள். இன்று காலையில் உங்களுக்கு வந்த கடிதத்தில் முக்கிய மான இன்னொரு விஷயம் இருந்ததே! அந்தப்படி நடந்து கொண்டீர்களா? அதாவது, அந்தக் கடிதம் வந்தது என்பதையும், நீங்கள் இப்போது இங்கே தனியாக வந்து ஒரு மனிதரோடு பேசப் போகிறீர்கள் என்பதையும், உங்களைத் தவிர, வேறே யாரும் அறிந்து கொள்ளாதபடி நிரம்பவும் எச்சரிப்பாக நடந்து கொள்ள வேண்டும் என்று இன்ஸ்பெக்டர் எழுதி இருந்தாரே. அதுபோல நடந்து கொண்டீர்கள் அல்லவா?

*அன்னம்:-* ஓ! அப்படியே நடந்து கொண்டேன். என்னுடைய சொந்தப் பெண்களுக்குக் கூட இந்த விஷயம் தெரியாது.

*பரதேசி:-* சரி; நல்லது! நான் இப்போது சொல்லப்போகும் செய்தியைக் கேட்டு நீங்கள் திகில் கொண்டு தவிக்க வேண்டாம். ஏனென்றால், உங்களுக்கு இன்று நேரப்போகும் பெருத்த அபாயத்திலிருந்து உங்களைக் காப்பாற்றுவதற்காக அந்தச் இன்ஸ்பெக்டர் தக்க ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறார். அந்த சம்பந்தமாக நீங்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை உங்களுக்குச் சொல்லிக் கொடுத்துவிட்டு வருவதற் காகவே, உங்களை அவர் இங்கேவரச் செய்தார். உங்கள் வீட்டின் அடியில் சுரங்கத்தில் அபரிமிதமான சொத்துக்களை மறைத்து வைத்திருக்கிறீர்கள் அல்லவா?

*அன்னம்:-* (மிகுந்த பிரமிப்பும் திகிலும் அடைந்து) ஆம்; உண்மைதான். நான் சுரங்கத்தில் என் சொத்துக்களை எல்லாம் வைத்திருப்பது என்னைத் தவிர வேறே யாருக்குமே தெரியாதே! அப்படியிருக்க, அது சம்பந்தமாக எனக்கு என்னவிதமான

அபாயம் நேரப்போகிறது? எத்தனையோ தலைமுறையாக நாங்கள் பாடுபட்டுத் தேடிவைத்துக் காப்பாற்றிவரும் அந்தச் சொத்தை யாராவது அபகரிக்க நினைத்திருக்கிறார்களா?

பரதேசி:- ஆம்; இன்று ராத்திரி சரியாகப் பதினைந்து நாழிகைக்கு, உங்களுடைய வீட்டிற்குள் திருடர்கள் புகுந்து உங்களை எல்லாம் கொன்று போட்டுவிட்டு சுரங்கத்திற்குள் நுழைந்து எல்லாப்பொருள்களையும் கொள்ளை அடித்துக் கொண்டுபோக எத்தனித்து இருக்கிறார்கள்.

அன்னம்:- (கட்டிலடங்காத் திகிலும் நடுக்கமும் அடைந்து கையைப் பிசைந்துகொண்டு) ஐயோ! நாங்கள் என்ன செய்யப் போகிறோம். இந்தப் பயங்கரமான அபாயத்திலிருந்து எப்படித் தப்பிப் பிழைக்கப் போகிறோம்.

பரதேசி:- அம்மா! திருடர்கள் கட்டாயமாக இன்றைய தினம் உங்களுடைய வீட்டுக்குள் வந்துதான் தீருவார்கள். ஆனால், அந்த இன்ஸ்பெக்டருடைய விருப்பப்படியும் புத்திமதிப் படியும் நீங்கள் நடந்துகொண்டால், உங்களுக்கு எவ்விதக் கெடுதலும் நேராது. உங்களுடைய சொத்துகளில் ஒரு துரும்பைக் கூட அந்தத் திருடர் எடுத்துக்கொண்டு போக முடியாது.

அன்னம்:- நான் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பது எனக்குத் தெரிந்தால், நான் அதுபோலவே நடந்து கொள்ளுகிறேன்.

பரதேசி:- இந்தத் திருட்டுக்கு மூலாதாரமான உள்ளாள் உங்கள் வீட்டிலேயே இருந்து உங்களுடைய சோற்றையே தின்று வளர்ந்து வருகிறான். அவனைப் போன்ற பரம அயோக்கியன் வேறு எவனுமே இருக்கமாட்டான். அவனுடைய பெயர் கந்தன்.

அன்னம்:- ஆ! என்ன ஆச்சரியம்! எங்கள் வீட்டு வேலைக்காரக் கந்தனா இப்படிப்பட்ட காரியத்தைச் செய்யப்

போகிறான்!அவன் பரமயோக்கியன் போல நடந்து வருகிறானே!

பரதேசி:- அப்படி யோக்கியனாக நடந்தால்தானே அவனைப் பற்றிச் சந்தேகப்படமாட்டீர்கள். இன்றைய தினம் ராத்திரி நடக்கப்போகும் சம்பவங்களிலிருந்து அவன் எப்படிப்பட்ட மனிதன் என்பதை நீங்கள் நேரிலேயே காண்பீர்கள். நீங்கள் இன்று என்ன செய்ய வேண்டுமென்றால், உங்களுடைய சாப்பாட்டை முடித்துக்கொண்டு வேலைக்காரர் களை எல்லாம் வழக்கம்போல வீட்டுக்கு அனுப்பி விடுங்கள். அதற்குள் ராத்திரி சுமார் பத்துமணி வரையில் பிடிக்கும் என்று நினைக்கிறேன். இன்று திருட்டு நடக்கப்போவதைப் பற்றி உங்களுக்குச் செய்தி கிடைத்திருக்கிறது என்பதையே உங்களுடைய வேலைக்காரர் அறிந்து கொள்ளாதபடி வெகு ஜாக்கிரதையாக நடந்து கொள்ளுங்கள். எல்லோரையும் அனுப்பிய பிறகு, நீங்கள் மெதுவாக எழுந்து வந்து, கொல்லைப் பக்கத்து கதவின் உள்தாழ்ப்பாளை விலக்கி, கதவை வெறுமையாக மூடியபடி வைத்துவிட்டுப் போய் உங்களுடைய பெண்களையும் அழைத்துக்கொண்டு பந்தோபஸ்தான ஓர் அறைக்குள் போய் உள் தாழ்ப்பாளை மாட்டிக்கொண்டு ஜாக்கிரதையாக இருங்கள். அவ்வளவுதான் நீங்கள் செய்ய வேண்டியது. மற்ற சங்கதிகளை எல்லாம் அந்த இன்ஸ்பெக்டர் பார்த்துக்கொள்வார். இவ்வளவுதான் சங்கதி. இனி நீங்கள் வீட்டுக்குப் போகலாம். அந்த இன்ஸ்பெக்டருடைய ஆளை நீங்கள் பார்க்க வேண்டும் என்ற அவசியமில்லை. அவன் இனி இங்கே வருவானானால், நான் அவனிடம் பேசி, நீங்கள் வந்ததையும், நான் என்னுடைய திரிகால ஞானத்தினால் எல்லாச் சங்கதிகளையும் உணர்ந்து உங்களுக்குச் சொல்லி, உங்களை வீட்டுக்கு அனுப்பி வைத்ததையும் சொல்லி, அவனைத் திருப்பி அனுப்பி விடுகிறேன். நீங்கள் அதிகமாக இவ்விடம் தாமதித்து நின்றால்,

கந்தன் ஒருவேளை உங்களைக் காணுவான்; இங்கே நீங்கள் எதற்காக வந்தீர்கள் என்பதைப் பற்றி சந்தேகப்பட்டு எச்சரிக்கை அடைவான். ஆகையால், நீங்கள் உடனே புறப்பட்டுப் போய்விடுங்கள் - என்று சொன்னார்.

அந்த வரலாற்றைக் கேட்டு மிகுந்த கலக்கமும் கலவரமும் அடைந்த அன்னத்தம்மாள் அந்தப் பரதேசி வெளியிட்ட வரலாற்றைக் கேட்டு இன்ஸ்பெக்டரது ஆளைச் சந்திக்காமல் போய்விட்டால், அதனால் தனக்கு ஏதேனும் துன்பம் நேருமோ என்று கவலை கொண்டாள். ஆனால், அவர் தனக்குக் கடிதம் வந்தது முதல் சகலமான வரலாற்றையும் பொருத்தமாகச் சொன்னதிலிருந்து அவரே இன்ஸ்பெக்டரைச் சேர்ந்த மனிதர் என்ற ஓர் எண்ணம் அவளது மனதில் எழுந்து உறுதிப்பட்டுக் கொண்டிருந்தது. அதிக நேரம் தான் அவ்விடத்தில் நிற்பது தவறு என்பதும் மனதில் பட்டது. ஆகவே, அந்தப் பரதேசியை வணங்கி உத்தரவு பெற்றுக்கொண்டு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு விரைவாக நடந்து முன் வந்த வழியாகவே நடந்து கால் நாழிகை நேரத்தில் தனது வீட்டை அடைந்தாள். தான் பாழ் மண்டபத்திற்குப் போய்விட்டு வந்த விஷயத்தைக் கந்தன் முதலிய எவரேனும் அறிந்து கொண்டிருப்பார்களோ என்ற சம்சயத்தினால் தூண்டப்பட்ட வளாய் அவர்களோடு சந்தோஷமாகவும் சாதாரணமாகவும் பேசிப் பார்த்துத்தான் அவ்வாறு சம்சயப்பட ஏதுவில்லை என்று நிர்ணயித்துக் கொண்டு ஏதோ காரியத்தைக் கவனிப்பவள்போலத் தனது பொழுதைப் போக்கி வந்தாள்.

இரவும் வந்தது. மணி, எட்டு, ஒன்பது, பத்தும் ஆயிற்று. எல்லோருக்கும் போஜனம் முடிவடைந்தது. வேலைக்காரர்கள் தத்தம் வீடு போய்ச் சேர்ந்தனர். கந்தன் எப்போதும் வாசல் திண்ணையில் படுத்துக்கொள்வது வழக்கம். ஆதலால், அவன் அங்கே போய்ப் படுத்துக் கொண்டானா

என்பதை நிச்சயித்துக் கொண்டாள். முன் பக்கத்து வாசற் கதவு வழக்கப்படி உட்புறத்தில் தாளிடப்பட்டது. பரதேசியின் ஆக்ஞைப்படி அவள் கொல்லைப் பக்கத்துக் கதவை உட்புறம் தாளிடாமல் வெறுமையாக மூடிவைத்துவிட்டு தனது புதல்வியர் நால்வரையும் அழைத்துக் கொண்டு நடுமத்தியில் இருந்த பந்தோபஸ்தான ஓர் அறைக்குள் போய் உட்புறத்தில் தாளிட்டுக் கொண்டவளாய் உட்கார்ந்து கொண்டாள். அப்போது அவளது மனதும் அவளது பெண்களினது மனமும் பட்டபாட்டையும் அடைந்த ஆவலையும் வேதனையையும் விவரித்துச் சொல்வது மகா அசாத்தியமான காரியம் என்றே சொல்ல வேண்டும். பெருத்த திகிலும் நடுக்கமும் தவிப்பும் அவர்களது மனத்தைப் புண்படுத்தி, தேகத்தை நரகவேதனைக்கு ஆளாக்கிக் கொண்டிருந்தன. இன்னதுதான் நடக்கப்போகிறது என்று நிச்சயமாக நம்பமாட்டாமல், அவர்கள் நெருப்பில் இருப்பவர்கள் போலத் தவித்திருந்தனர். பரமயோக்கியனாக நடந்து வரும் கந்தன் அப்படிப்பட்ட அயோக்கியத்தனத்தில் தலையிடுவானா என்ற சந்தேகமே பெரிதாக எழுந்து உலப்பத் தொடங்கியது. அப்படி உண்மையிலேயே அவன் உளவாக இருந்து திருடர்களை வரச் செய்திருந்தாலும் அந்த ரகசியம் இன்ஸ்பெக்டருக்குத் தெரிந்திருக்குமா என்ற எண்ணமும் தோன்றியது. ஒருகால் வேறே யாராவது தங்கள் வீட்டில் கொள்ளையடிக்க எண்ணி, அதற்கு அனுகூலமாக, வேலைக்காரர்களை எல்லாம் அனுப்பிவிட்டுக் கொல்லைக் கதவைத் திறந்து வைத்துவிட்டுத் தங்களையும் ஓர் அறைக்குள் போய் ஒளிந்துகொண்டிருக்கச் செய்துவிட்டால், திருடர்கள் சுலபமாக உள்ளே புகுந்து எவ்விதப் பூசலும் இன்றி எல்லாப் பொருட்களையும் அடித்துக்கொண்டு போகலாம் என்ற எண்ணத்தோடு திருடர்களே தங்களுக்கு நன்மை செய்கிறவர்கள் போல நடித்து இன்ஸ்பெக்டர் எழுதியதுபோல ஒரு கடிதமும் எழுதிவிட்டு பரதேசி வேஷம் போட்டு ஒருவனை அனுப்பி இருப்பார்களோ என்ற ஒரு முக்கியமான சந்தேகம் தோன்றி

அவர்களது மனதைச் சித்திர வேதனைக்கு உள்ளாக்கியது. அந்தப் பரதேசியின் சொல்லை வேத வாக்கியமாக நம்பி அப்படியே நடந்துகொண்டிருந்தாலும், முன்னெச்சரிக்கையாக சில ஆட்களை தயாரித்துத் தங்களுக்குப் பாதுகாப்பாக வைத்திருக்காமல் போனோமே என்ற எண்ணமும் தோன்றி மனதைப் புண்படுத்தியது. அவ்வாறு அவர்கள் சஞ்சலக் கடலில் ஆழ்ந்து மனம் நொந்து ஆவலே வடிவாக மாறி உட்கார்ந்திருக்கப் பொழுதும் போய்க் கொண்டிருந்தது. அவர்களது திகிலும், நடுக்கமும், குழப்பமும் வேதனையும் மலைபோலப் பெருகிக்கொண்டே போயின.

அந்த நிலைமையில் மணி பதினொன்றாயிற்று. அவர்கள் இருந்த அறைக்குப் பக்கத்தில், வீட்டுக்குள் மனிதர்கள் நடந்ததனால் உண்டான காலடி ஓசை உண்டாயிற்று. அதைக் கேட்டவுடனே அன்னத்தம்மாள் முதலியோரது உடம்பு களெல்லாம் கரைகடந்து கிலியினால் கிடுகிடென்று ஆடத் தொடங்கின. வியர்வை வெள்ளம் குபீரென்று கிளம்பி அக்கினிக் குழம்புபோல வழிந்தோடுகிறது. மயிர் சிலிர்த்து விறைத்து நிற்கிறது. எழுந்து நிற்கக் கால் எழுமாட்டேன் என்கிறது. வாயைத் திறக்கமாட்டாமல் தொண்டை அடைத்துப் போய்விட்டது. அப்படிப்பட்ட பரமவேதனையான நிலைமையிலிருந்த அவர்களுள் அன்னத்தம்மாள் மெதுவாக எழுந்து தனக்குப் பக்கத்தில் இருந்த ஜன்னலண்டை நின்று, மூடப்பட்டிருந்த அதன் கதவிடுக்கில் வலது கண்ணை வைத்து, அப்புறம் என்ன நடக்கிறது என்பதைக் கவனித்தாள். வீட்டுக்குள் மங்கலாக ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. ஆகையால், வெளியில் யார் இருந்தார்கள் என்பதும், அவர்கள் என்ன செய்தார்கள் என்பதும் அவளுக்கு உடனே தெரிந்தன. இருபது இருபத்தைந்து போலீஸ் ஜவான்கள் கத்தி துப்பாக்கிகளை உபயோகிக்க ஆயத்தமாக ஏந்திய கைகளோடு சந்தடி செய்யாமல் முட்டுக் கல்களைப்போல அப்படி

அப்படியே உட்கார்ந்திருந்ததைக் காண அதுகாறும் அவளது மனதை அழுத்திக்கொண்டிருந்த திகிலாகிய பெருஞ் சுமை ஒரு நிமிஷத்தில் விலகியது. அதுகாறும் தப்ப இயலாத மகா அபாய மான நிலைமையிலிருந்து தப்பி பந்தோபஸ்தான நிலைமைக்கு வந்து விட்டவள்போல, அவள் முற்றிலும் மனோதிடம் அடைந்ததன்றி, உடனே கீழே குனிந்து விஷயத்தை இரண்டொரு வார்த்தையில் சுருக்கமாகத் தனது பெண்களிடம் தெரிவிக்க, உடனே அவர்களும் துணிவும் குதூகலமும் அடைந்தவர்களாய், மாறிமாறி எழுந்து நின்று ஜன்னலின் கதவிடுக்கின் வழியாக வெளியில் பார்த்துப் பார்த்து மகிழ்ச்சியடைந்து அதன்பிறகு என்ன நடக்குமோ என்பதை அறிய ஆவல் கொண்டவர்களாய்த் துடி துடித்துத் தவித்திருந்தனர். அவ்வாறு வெளியில் வந்திருந்த ஜவான்களி டையில் இன்ஸ்பெக்டரது உடைகள் தரித்திருந்த கம்பீரமான தோற்றமுள்ள ஒருவரும் காணப்பட்டார். அவரது முகத்தை அன்னத்தம்மாள் உற்று நோக்கினாள். அவள் அதற்குமுன் அந்த முகத்தை எங்கேயோ பார்த்திருப்பதாக ஒரு நினைவு உண்டாயிற்று. அவள் இமை கொட்டாமல் சிறிது நேரம் அவரது முகத்தையே உற்று நோக்கிக் கொண்டிருக்க அவர் தமது தலையில் இருந்து வழிந்த வியர்வையைத் துடைப்பதற் காகத் தமது தலைப்பாகையைக் கழற்றித் தரையில் வைத்துவிட்டுப் சட்டைப் பையிலிருந்த முகம் துடைக்கும் சவுக்கத்தை எடுத்து தலையைத் துடைத்துக் கொண்டார். தான் அன்று சாயுங்காலம் பாழ்மண்டபத்தில் கண்டு பேசிய பரதேசியின் முகத்துக்கும் அந்த இன்ஸ்பெக்டரது முகத்துக்கும் நெருங்கிய ஒற்றுமை இருந்ததாக ஒரு நினைவு உண்டாயிற்று. ஒருவேளை அந்த இன்ஸ்பெக்டரே, தம்மை யாராகிலும் பார்த்துவிடப் போகிறார்களோ என்ற நினைவினால், பரதேசியைப்போல உருமாறி வந்திருப்பாரோ என்ற நினைவு தோன்றியது. மேலும் சிறிது நேரம் வரையில் அவரது முகத்தை அவள் பார்த்திருக்க, அந்தச் சந்தேகமே உண்மையாக இருக்க

வேண்டும் என்ற நிச்சயம் ஏற்படத் தொடங்கியது. தங்களது விஷயத்தில் அவ்வளவு பிரயாசை எடுத்துக்கொண்டு உழைப்பவரான அவர் அன்றைய தினம் தங்களுக்கு எவ்வித அபாயமும் நேராமல் காப்பாற்றுவார் என்ற நம்பிக்கையும் மனோதிடமும் உண்டாயின. ஆனாலும், முரட்டு மனிதர்களான கொள்ளைக்காரர்கள் எப்படிப்பட்ட பிரமாதமான ஏற்பாடுகளோடு வருவார்களோ என்றும், போலீசாரால் அவர்களை வெல்ல முடியுமோ முடியாதோ என்றும் பலவாறு எண்ணமிட்டவளா யிருந்த அன்னத்தம்மாள், மாறி மாறி இன்பமும் துன்பமும் தைரியமும் மனத்தளர்வும் அடைந்து நிரம்பவும் பரிதாபகரமான நிலைமையில் இருந்து வந்தாள்.

அவர்களது நிலைமை அங்ஙனம் இருக்க வீட்டுத் திண்ணையில் வழக்கம்போலப் படுத்திருந்த கந்தன் சரியாகப் பதினொன்றரை மணிக்கு மெதுவாக எழுந்து வாசலுக்குச் சென்றான். தனது எஜமானியான அன்னத்தம்மாள் சகலமான ரகசியங்களையும் அறிந்து கொண்டு விட்டாள் என்பதைப் பற்றியும், போலீஸ் இன்ஸ்பெக்டர் தமது பரிவாரங்களோடு ஆயுதபாணிகளாக வந்து அதிக ஜாக்கிரதையாக திருடர்களது வருகையை எதிர்ப் பார்த்திருக்கிறார்கள் என்பதைப் பற்றியும் சிறிதும் சந்தேகியாத கந்தன் சொற்ப நேரத்தில் கட்டாரித் தேவனும், அவனது ஆட்களும் சேர்ந்து அன்னத்தம்மாளினது ஐசுவரியத்தை எல்லாம் எளிதில் அபகரித்துக் கொண்டுபோய்ப் பங்கிட்டுக் கொள்ளலாம் என்று நினைத்துக் கட்டிலடங்காக் குதூகலமும் மனவெழுச்சியும் அடைந்து, தனது கூட்டாளிகள் வந்திருக்கிறார்களோ என்று மிகுந்த ஆவலோடு அங்குமிங்கும் பார்த்துக் கொண்டு நின்றான். சரியாகப் பதினைந்து நாழிகை சமயமாயிற்று. புற்றிலிருந்து ஈசல்கள் புறப்படுவதுபோல பல முரட்டு மனிதர்கள்அந்தத் தெருவின் பல இடங்களிலிருந்தும் தோன்றி சந்தடி செய்யாமல் நடந்து அன்னத்தம்மாளினது மாளிகை

வாசலை அடைந்து திண்ணையின்மேல் ஏறினர். அவ்வாறு அந்த மனிதர்கள் எல்லோரும் பனங்கட்டைகளைப்போலக் கருத்துத் தடித்து நீண்ட பயங்கரமான சரீரங்களை உடையவர்களாகக் காணப்பட்டனர். ஒவ்வொருவனும் இடுப்பில் ஒட்டுச் சடலமணிந்து கையில் பாளை சீவும் நீண்ட பீச்சாங் கத்தி ஒன்றையும், வலுவான பச்சைப் புளியந்தடி ஒன்றையும் வைத்திருந்தான். அவர்களிடையில் மற்றவர்களைக் காட்டிலும் பன்மடங்கு பயங்கரமாகவும் பைசாக கணங்களின் சேனாதிபதி போலவும் காணப்பட்ட கொடிய அரக்கனான கட்டாரித்தேவன், தன்னருகில் வந்து நின்ற கந்தனைப் பார்த்து, ''என்னடாப்பா கந்தா! அன்னத்தம்மாள் இதைப்பற்றி சந்தேகப்படாமல் இருக்கிறாள் அல்லவா?'' என்று தணிவான குரலில் வினவினான்.

கந்தன், ''அவள் ஏன் சந்தேகப் படப் போகிறாள்? வழக்கம்போல சுகமாகத் தூங்கிக் கொண்டிருக்கிறாள். அவளையும் அவளுடைய மக்களையும் கொன்று போடுவதை விட வாயில் துணியை அடைத்துக் கட்டி ஓர் அறைக்குள் உருட்டிவிட்டு நம்முடைய காரியத்தைச் சுலபத்தில் முடித்துக்கொண்டு போவதே நல்லது. ஏனென்றால், இவர்கள் நம்முடைய மகாராஜாவுக்கு நிரம்பவும் விருப்பமானவர்கள். இவர்களுடைய சொத்துகள் மாத்திரம் களவு போனால், இளவரசர் அதைப்பற்றி அவ்வளவாக விசனப்படாமல் இன்னமும் ஏராளமான பொருளைக் கொடுத்துவிடுவார். இவர்களைக் கொன்றுவிட்டால், அவர் அதைச் சும்மா விடமாட்டார். போலீசாரை எல்லாம்விட்டு, எப்படி யாவது பிரயாசைப்பட்டு நம்மையெல்லாம் பிடித்துவிடச் செய்வார். அதற்கு நாம் ஏன் இடம் கொடுக்க வேண்டும். நமக்கு வேண்டியது இவர்களுடைய சொத்தே அன்றி இவர்களுடைய உயிரல்ல'' என்றான்.

கட்டாரித்தேவன், ''சரி; உன் இஷ்டப்படியே செய்வோம். நாம் இவர்களுடைய பணத்தை எடுத்துக் கொண்டுபோக முடியாமல், இவர்கள் ஏதாவது இடைஞ்சல் செய்தால் அப்போது நாம் தாட்சணியம் பாராமல் இவர்களுடைய உயிரை வேண்டுமானாலும் எடுத்துவிடத்தான் நேரும். அது இருக்கட்டும். கதவு உட்புறத்தில் தாளிடப்பட்டிருக்கிறதோ, பூட்டப்பட்டு இருக்கிறதோ? யாராவது ஒருவன் ஓட்டின் மேல் ஏறி உள்ளே இறங்கிவந்து தாழ்ப்பாளைத் திறந்து விடச் செய்யலாமா, அல்லது வெளியிலிருந்தபடியே கன்னக்கோலால் துளை போட்டு தாழ்ப்பாளைத் திறக்கச் செய்யலாமா?'' என்றான்.

கந்தன், ''துளைபோட்டுத் திறப்பதே நல்லது. மேலே ஏறி உள்ளே வந்து திறந்தால், என்மேல் சந்தேகத்துக்கு இடமும் உண்டாகும். ஒருவேளை நான் உள்ளே இருந்து கதவைத் திறந்துவிட்டிருப்பேனோ என்ற எண்ணம் உண்டானாலும் உண்டாகலாம்'' என்றான்.

உடனே கட்டாரித்தேவன் தனது கையில் இருந்த கள்ளக் கோலைத் தாழ்ப்பாள் இருந்த இடத்தண்டை கொடுத்து இரண்டு மூன்று திருகுதிருக, அவ்விடத்திலிருந்த சுவர் அப்படியே பிய்த்துக் கொண்டது. அவ்வாறு பெயர்ந்த கட்டியை அவன் எடுத்து மெதுவாகத் தரையில் வைத்துவிட்டு அவ்விடத்தில் உண்டான இடுக்கில் கையை நுழைத்து உள்புறத்தில் இருந்த தாழ்ப்பாளை விலக்கி கதவை மெதுவாகத் திறந்து வைத்தான். பிறகு அவன் அவ்விடத்தில் இருந்த தனது ஆட்களில் சுமார் பதினைந்து பேர்களை ஏவி அந்த வீட்டைச் சுற்றிக் காவல் காத்து நிற்கச் செய்ததன்றி, வீட்டின் உட்புறத்தில் ஆண்பிள்ளைகள் எவரும் இல்லை என்ற நம்பிக்கையினால் துணிவடைந்து, தன்னோடு வேறே நான்கு ஆட்களையும் கந்தனையும் மாத்திரம் அழைத்துக் கொண்டு உள்ளே புகுந்தான். அந்த மாளிகை மூன்று கட்டுகளை

உடையது. ஆகையால், அவர்கள் முன் கட்டைக்கடந்து நடுக்கட்டுக்குள் போய், அவ்விடத்தில் இருந்த ஓர் அறைக்குள் நுழைந்து, பூமியில் மூடப்பட்டிருந்த ஒரு இரும்புக் கதவைத் தூக்க முயன்று கொண்டிருந்த சமயத்தில் முதல் கட்டிலும், மூன்றாவது கட்டிலும் இரண்டு பாகமாகப் பிரிந்து மறைந்து கொண்டிருந்த போலீஸார் குபீரென்று கிளம்பிவந்து திருடர்களைச் சூழ்ந்து கொண்டனர். அறையின் வாசலி லிருந்து கந்தன் திடீரென்று தோன்றிய செந்தலைப் புலிகளைக் கண்டு திடுக்கிட்டுத் திகிலும் குலைநடுக்கமும் அடைந்து பிரமித்து நிற்க, அவ்விடத்தில் வந்த இன்ஸ்பெக்டர் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து கந்தனைப் பிடித்துக்கொண்டார். அப்போது சுரங்கக் கதவைத் தூக்கி நிமிர்த்த எத்தனித்துக் கொண்டிருந்த கட்டாரித் தேவனும் அவனது ஆட்களும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்துப் போலீசார் வந்திருப்பதைக் கண்டுகொண்டனர். உடனே கட்டாரித்தேவன் தனது கையிலிருந்த பளபளப்பான பீச்சாங் கத்தியை ஓங்கிக் கொண்டு குபீரென்று இன்ஸ்பெக்டரை நோக்கிப் பாய்ந்து, அவரது கழுத்தைப் பார்த்து ஒரே வீச்சாக வீச, அதை உணர்ந்த இன்ஸ்பெக்டர் பொறித்தட்டும் நேரத்தில் சடக்கென்று கீழே உட்கார்ந்தபடி பாய்ந்து கட்டாரித்தேவனது இரண்டு கால்களையும் பிடித்து இழுத்துவிட்டார். அதற்குள் கட்டாரித் தேவனால் வீசப்பட்ட கத்தியின் பலமான வீச்சு, இன்ஸ்பெக்டருக்குப் பக்கத்தில் இருந்த கந்தனது கழுத்தில் பட்டு ஊடுருவிப் பாய்ந்து அவனது தலையை வெட்டி வேறாக்கிக் கீழே தள்ளிவிட்டது. அவனது வாயிலிருந்து வீரிட்ட ஓசையொன்று கேட்டது. தடாரென்ற ஓசையுடன் கந்தனது தலையும் முண்டமும் கீழே விழுந்தன. இரத்தம் குபீரென்று வெளிப்பட்டு ஆற்று வெள்ளம்போலப் பெருகி அந்த அறை முழுதும் பரவிப்போயிற்று. கந்தனது கழுத்து வெட்டப்பட்ட சமயத்தில் இன்ஸ்பெக்டரால் காலை இழுத்துவிடப்பட்ட கட்டாரித்தேவன் வேரற்ற மரம்போலப்

பின்புறமாகத் தரையில் விழ, அவனது முதுகுப் பக்கம் தடாரென தரையில் மொத்துண்டது. உடனே அவ்விடத்தில் பெருத்த குழப்பமும் அமர்க்களமும் ஆயிற்று. கட்டாரித் தேவனோடு வந்திருந்த முரட்டு மனிதர்களும் வந்து போலீசார் மீது பாய, இரண்டு கட்டுகளிலும் நிறைந்திருந்த சுமார் முப்பது போலீஸ் ஜவான்கள் வந்து வளைத்துக்கொண்டு திருடர்களைப் பிடிக்க முயன்றனர். திருடர்கள் ஐவரே இருந்தமையாலும், போலீசார் ஏராளமாக இருந்தமையாலும், அந்தக் கூட்டத்தில் திருடர்கள் நன்றாக அகப்பட்டுக் கொண்டனர். தாங்கள் இனி தப்ப முடியாது என்ற திகில் உண்டாகிவிட்டது. ஆகையால், திருடர்கள் ஐவரும் வீராவேசம் கொண்டு தங்களது உயிரைத் திரணமாக மதித்துத் தங்களது கையிலிருந்த கத்திகளையும், கட்டாரிகளையும் உபயோகித்துப் போலீசாரை அடித்தும், உதைத்தும், குத்தியும், வெட்டியும் ஆர்ப்பரிக்க போலீசாரும் அவர்களுக்குக் கொஞ்சமும் பின்னிடாமல் குத்தியும், அடித்தும், வெட்டியும் சண்டை செய்ய, ஐந்து நிமிஷ நேரத்தில், அந்த யுத்தம் ஒருவாறாக முடிவடைந்தது. கட்டாரித்தேவனோடு வந்த நான்கு திருடர்களும் நன்றாக வெட்டப்பட்டுக் கீழே விழுந்து உயிரை இழந்தனர். கட்டாரித்தேவன் மாத்திரம், இன்ஸ்பெக்டரால் தள்ளிவிடப்பட்டபிறகு போலீசார் ஏராளமாக வந்திருப்பதைக் கண்டு மெதுவாக எப்படியோ தந்திரம் செய்து நழுவித் தப்பித்துக்கொண்டு மூன்றாவது கட்டை நோக்கி ஓடத் தொடங்கினான். அவ்வாறு வீட்டிற்குள் பெருத்த யுத்தம் நடந்தபோது, சடார் படாரென்று கத்திகளும், கட்டாரிகளும் ஒன்றோடொன்று மோதியதால் உண்டான பெருத்த ஓசையைக் கேட்டு, வெளியிலிருந்த திருடர்கள் பயந்து ஓட்டம்பிடித்து விட்டார்கள். கட்டாரித்தேவன் தனது முழுவல்லமையையும் வெளிப்படுத்தி வாயுவேக மனோவேகமாக ஓட ஆரம்பித்து மூன்றாவது கட்டிற்குள் புகுந்து கொல்லைப் பக்கத்தின் வழியாகப் பறக்கிறான். முக்கியமான மனிதன் அவ்வாறு

தப்பி ஓடுகிறான் என்பதைக்கண்ட போலீசார் வீராவேசம் கொண்டு மெய் மறந்து அவனைத் தொடர்ந்து ஒரே பாய்ச்சலாகப் பாய்கிறார்கள். முன்னால் ஓடிய கட்டாரித்தேவன் கொல்லைப் பக்கத்துக் கதவைத் தாண்டி வெளியில் போனவுடனே திரும்பி அந்தக் கதவை மூடி வெளிப் புறத்தில் தாளிட்டுக்கொண்டு அப்பால் ஓடிப் போய்விட்டான். அவனைத் தொடர்ந்து ஓடி வந்த போலீசார் கதவு வெளிப்பக்கத்தில் தாளிடப்பட்டுப் போனதைக் கண்டு அதோடு தளர்வடையாமல் உடனே திரும்பி வந்து, சிறிது தூரத்தில் காணப்பட்ட முற்றத்தின் வழியாக ஓட்டின் மேல் ஏறிப் போய்ப்பின் புறத்தில் குதித்து, அவனைத்துரத்தத் தொடங்கினர். அப்போது ஆகாயம் சுத்தமாக இருந்தது. ஆகையால் நட்சத்திரங்களின் வெளிச்சம் பிரகாசமாக இருந்தது. ஓட்டின்மேல் ஏறி அப்பால் குதித்த போலீசார் நால்வரும் நான்கு பக்கங்களிலும் திரும்பிப் பார்த்து கட்டாரித்தேவன் சுமார் ஐம்பது கஜதூரத்துக்கு அப்பால் ஓடிக்கொண்டிருந்ததைக் கண்டு கட்டிலடங்கா மனோதிடமும் வேகமும் அடைந்து அதே திக்கில் ஓடத் தொடங்கினர். கட்டாரித்தேவனும், போலீசாரும் ஓடிய இடம் வயல்களும் வரப்புகளும் நிறைந்த இடமாதலால், ஒரே பாய்ச்சலில் மேடுகளையும் பள்ளங் களையும் வேலிகளையும் மக்களையும் சப்பாத்துப் புதர்களை யும் தாண்டுவோரும் விடாதே பிடி பிடி என்போரும் துப்பாக்கியால் சுடுவோருமாகப் போலீசார் அவனைத் தொடர்ந்து துரத்த அவன் தனது உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் எண்ணத்தோடு அவர்களை விட அதிக விசையாகவும் அரக்கனைப்போல அபூர்வமான திறமையை வெளிப்படுத்தியும் வைக்கோல் போர்களையும், வாய்க் கால்களையும் ஒரே தாண்டாகத் தாண்டி அப்பால் இப்பால் திரும்பி வளைந்து வளைந்து மனக்குதிரை போலப் பறக்கிறான். அவர்கள் அவ்வாறு மிகமிக ஆச்சரியமாக ஓடுவதும் துரத்துவதுமாக அரைநாழிகை நேரம் கடத்த, முன்னால் ஓடிய

கட்டாரித் தேவன் தாறுமாறாகச் சென்று நெருக்கடியான ஓரிடத்தில் அகப்பட்டுக் கொண்டான். அவனுக்கு எதிரில் அந்த ஊரில் வரும் பெருத்த ஆறு குறுக்கிட்டது. அந்த ஆற்றில் சேரும் வண்டலும் நிறைந்து பதினைந்து அடி ஆழமுள்ள தண்ணீர்ப்பிரவாகம் போய்க்கொண்டிருந்தது. ஒரு மனிதன் நீந்துவதில் எவ்வளவு திறமைசாலியாக இருந்தாலும், அந்த மழை வெள்ளத்தில் விழுந்தால், தப்பிப் பிழைப்பது துர்லபமான காரியம். அப்படிப்பட்ட மகா பயங்கரமான வண்டல் வெள்ளம் நிறைந்த ஆறு எதிரில் குறுக்கிட்டது. இன்னொரு பக்கத்தில், நிரம்பவும் ஆழமான ஒரு படிக்குளம் இருந்தது. மூன்றாவது பக்கத்தில், ஆகாயத்தை அளாவியதும் அடர்த்தியாக நிறைத்து பரவியிருந்ததுமான சப்பாத்துப் புதர் இருந்தது. நான்காவது பக்கத்தில், போலீசார் துரத்திக்கொண்டு ஓடி வந்தனர். அப்படிப்பட்ட மகா இக்கட்டான இடத்தில் போய் அகப்பட்டுக்கொண்ட கட்டாரித்தேவன் சுற்றுமுற்றும் பார்க்கிறான்; தான் எந்த வழியாகப் போனால் பிடிபடாமல் தப்பியோடி விடலாம் என்று யோசிக்கிறான். அவ்வாறு அவன் தயங்கி நின்ற ஒவ்வொரு நொடியும் ஒவ்வொரு யுகமாகத் தோன்றியது. அவன் அவ்வாறு மலைத்து நின்றதைக் கண்ட போலீசார் முன்னிலும் அதிக விசையாகப் பாய்ந்து ஓடி வருகிறார்கள். அவனுக்கும் அவர்களுக்கும் நடுவிலிருந்த தூரம் குறைந்து கொண்டே வருகிறது. இன்னம் இரண்டு நிமிஷ நேரத்தில் அவர்கள் வந்து அவனைப் பிடித்துக் கொள்வார்கள். ''அடேய் கட்டாரித்தேவா! நீ திமிறாமல் எங்களிடம் வந்துவிடு. இல்லாவிட்டால், துப்பாக்கியின் ஒரே வெடியால், உன்னை எமபட்டணத்துக்கு அனுப்பி விடுவோம்'' என்று ஜவான்கள் சொல்லிக்கொண்டு துப்பாக்கிகளை அவனுக்கு எதிரில் பிடித்தபடி நெருங்கி வந்துவிட்டார்கள். தான் அவர்களோடு கை கலந்து பலாத்காரமாகத் தப்பி ஓட முயன்றால், அவர்கள் தன்னைச் சுட்டுவிடுவார்கள் என்ற அச்சம் உண்டானது. ஆகையால், தான் அவ்வாறு மரிப்பதைவிட கடைசி

முயற்சியாக ஆற்று வெள்ளத்தில் விழுந்து தப்ப முயல்வதே நல்லதென்று முடிவுகட்டிக் கொண்ட கட்டாரித்தேவன் பொறித்தட்டும் நேரத்தில் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து ஆற்று வெள்ளத்தில் தலை குப்புற வீழ்ந்து முழுகிப் போய்விட்டான். அடுத்த நிமிஷத்தில் ஜவான்கள் ஆற்றுத்தண்ணீரின் ஓரமாக வந்து நின்றனர். அவனைப் பிடிக்க வேண்டுமென்ற ஆவலினால் அவர்களது தேகம் அளவுகடந்து பதறியது. ஆனாலும் மகா பிரமாதமாகக் காணப்பட்ட பயங்கரமான ஆற்று வெள்ளத்தைக் கண்டு தயங்கி நின்றவர்களாய், அவன் எந்தப் பக்கமாக நீந்திப் போகிறானென்று கவனித்துக் கொண்டிருந்தனர்.

அந்த அபரிமிதமான பெரு வெள்ளத்தில் மரங்களும் புதர்களும் கட்டைகளும் குத்துக்குத்தாக மிதந்து போய்க் கொண்டிருந்தன ஆகையால், அவர்களது பார்வைக்கு எதுவும் தெளிவாகத் தெரியவில்லை. தண்ணீருக்குள் முழுகிய கட்டாரித்தேவன் அதன் பிறகு வெளியில் கிளம்பிய தாகவும் தெரியவில்லை. ஆகவே, நிரம்பவும் ஆவலோடு அவர்கள் கால் நாழிகை நேரம், அவ்விடத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்து, அவன் வெள்ளத்தில் முழுகி இறந்து போய் விட்டான் என்று நிச்சயித்துக் கொண்டவர்களாய் அவ் விடத்தை விட்டுத் திரும்பி அன்னத்தம்மாளினது மாளிகையை நோக்கி விரைவாகச் செல்லலாயினர்.

அதற்குள் அன்னத்தம்மாள் இருந்த தெரு அல்லோ கல்லோலப் பட்டது. போலீஸ் இன்ஸ்பெக்டரும் மிகுதி இருந்த ஜவான்களும் தூக்கத்திலிருந்து எழுப்பப்பட்டுப்போன அந்தத் தெருவின் ஜனங்களும், அன்னத்தம்மாள் முதலியோரும் அந்த மாளிகையில் நிறைந்து போயினர். கந்தன் கொள்ளைக் காரர்களைச் சேர்த்துக்கொண்டு அந்த மாளிகைக்குள் நுழைந்து கொள்ளையடிக்க முயன்றான் என்ற விஷயமும், அதை எப்படியோ முன்னாகவே தெரிந்து கொண்ட

போலீஸார் ஒளிந்திருந்து அவர்களைச் சின்னாபின்னமாக்கி ஓட்டி விட்டார்கள் என்று விஷயமும் ஒரு நிமிஷத்தில் அந்த ஊர் முழுதும் பரவின. கட்டாரித்தேவன் இன்ஸ்பெக்டரை வெட்ட முயன்று முடிவில் கந்தனையே வெட்டிக் கொன்று விட்டான் என்ற சங்கதியும் தெரிந்தது. அடிபட்டு விழுந்து கிடந்த நான்கு திருடர்களும் இறந்து போய் விட்டார்கள் என்பது சந்தேகமறத் தெரிந்தது. அன்னத்தம்மாளும் ஜனங்களும் வந்து மாண்டுகிடந்தவர்களது ஐந்து பிணங்களை யும் கண்டு திகிலும் நடுக்கமும் அருவருப்பும் கொண்டு பிரமித்து ஸ்தம்பித்து நின்றனர்.

அந்தச் சமயத்தில் கட்டாரித்தேவனைத் துரத்திக்கொண்டு போன நான்கு ஜவான்களும் திரும்பி அவ்விடத்திற்கு வந்து தங்களது வரலாற்றை இன்ஸ்பெக்டரிடத்தில் எடுத்துக் கூறினர். அதைக் கேட்ட ஜனங்கள் எல்லோரும் அளவற்ற வியப்பும் களிப்பும் அடைந்து கட்டாரித் தேவனும் ஆற்று வெள்ளத்தில் இறந்துபோயிருப்பான் என்றே தீர்மானித்தனர். உடனே இன்ஸ்பெக்டர் அந்த ஐந்து பிணங்களையும் ஒரு வண்டியில் வைத்துத் தஞ்சையிலிருந்த வைத்தியசாலைக்கு அனுப்பி விட்டுப் பொழுது விடிகிறவரையில் அவ்விடத்திலேயே பாதுகாப்பாக இருக்க வேண்டும் என்ற தீர்மானத்தோடு அங்கேயே எச்சரிப்பாக இருந்தார்.

## 22-வது அதிகாரம்

## எங்குமில்லா மானக்கேடு

சனிக்கிழமை இரவு சுமார் இரண்டு மணி சமயம் இருக்கலாம். அதாவது, அம்மன்பேட்டை அன்னத்தம்மாளினது மாளிகையில் கொள்ளை நடந்த காலத்திற்கு இரண்டு மணி

நேரத்திற்குப் பிறகு மாரியம்மன் கோயில் என்ற ஊரின் செட்டித் தெருவில் மாசிலாமணிப் பிள்ளை வசித்துக்கொண்டிருந்த பங்களாவின் வாசற்கதவை யாரோ தடதடவென்று இடித்த ஓசையைக் கேட்டு பங்களாவிற்குள் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த வேலைக்காரர்களும் மாசிலாமணிப் பிள்ளையும் அவரது அழகிய மனைவியும் திடுக்கிட்டு விழித்துக் கொண்டார்கள். தனியாக அமைந்த ஒரு சயனக்கிரகத்தில் இருந்த மாசிலாமணிப் பிள்ளை விவரிக்க இயலாத திகில் கொண்டவராய்த் தமது மனைவியை நோக்கி, ''என்ன ஆச்சரியம்! இந்த அகாலவேளையில் வேறே யார் வந்து இப்படிக் கதவை இடிக்கப் போகிறார்கள்! சரி; கடைசியில், போலீசார்தான் என்னைக் கைது செய்து பிடித்துக் கொண்டு போவதற்காக வந்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். நான் எங்கேயாவது ஒளிந்துகொள்ளுகிறேன். அவர்கள் வந்து விசாரித்தால், நான் ஊரில் இல்லை என்று சொல்லிவிடு. கதவைத் திறப்பதற்குள் வேலைக்காரர்களை எச்சரித்துவிடு'' என்று கூறிய வண்ணம் ஒரு மூலையில் போடப்பட்டிருந்த அழுக்குத் துணி மூட்டையைப் பிரித்து அதற்குள் சுருட்டி முடக்கிக்கொண்டு ஒடுங்கி உட்கார்ந்து மூடிக்கொள்ள எத்தனித்தார். அவரது அச்சத்தையும் கலக்கத்தையும் கண்டு நடுநடுங்கி நின்ற அவரது யௌவன மனைவி, ''ஏன் இப்படி பயப்படுகிறீர்கள்? போலீசார் வந்தால் வரட்டுமே. நமக்கென்ன பயம். நம்மிடத்தில்தான் அந்த தஸ்தாவேஜி இருக்கிறதே. அதைக் காட்டினால், அவர்கள் அதைப்பார்த்து விட்டுப் பேசாமல் போய்விடுகிறார்கள். அதைப்பற்றிக் கவலைப் படுவதேன்?'' என்று மறுமொழி கூறி அவரைத் தேற்ற முயன்றாள்.

அவளது சொற்களைக்கேட்ட மாசிலாமணிப் பிள்ளை, ''நம்மிடத்தில்அந்த தஸ்தாவேஜி இருந்தால் என்ன. போலீசார் அதைப் பார்த்து எனக்கு எவ்வித அனுகூலமும் செய்ய

முடியாது. என்னைப் பிடிக்கும்படி வாரண்டு பிறந்திருந்தால், போலீசாருடைய கடமை என்னைப் பிடித்து நியாயாதிபதியின் முன் கொண்டுபோய் விடுவதே யன்றி, மற்ற விசாரணைகளை எல்லாம் நடத்தமாட்டார்கள். விசாரணை காலத்தில்தான் நான் அந்த தஸ்தாவேஜியை நியாயாதி பதியினிடம் காட்டி மன்னிப்புப் பெற வேண்டும். அதுவரையில் நான் சிறைச்சாலை யில் இருந்துதான் தீரவேண்டும். நாளைக்குப் பொழுது விடிந்தவுடன் முக்கியமான ஒருவிஷயத்தைப் பற்றி நான் உன்னிடம் பிரஸ்தாபிக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். அதற்குக்கூட வசதி இல்லாமல், இந்தப் போலீசார் என்னை இப்போதே பிடித்துக்கொண்டு போய்விடுவார்கள் போலிருக்கிறதே! என்ன செய்கிறது?'' என்று மிகுந்த கவலையோடும் கலக்கத்தோடும் கூறினார்.

அப்போது வாசல் கதவு முன்னிலும் அதிக வலுவாக இடிக்கப் படவே, தாங்கள் அதிகநேரம் பேசிக்கொண்டிருக்க அது சரியான சந்தர்ப்பம் அல்ல என்று நினைத்த மாசிலாமணிப்பிள்ளை தமது மனைவியைப் பார்த்து, ''சரி; கதவை இடிப்பது யாரென்பது நீ கேள். அவர்கள் போலீஸ்காரராக இருந்தால், நீ கதவைத் திறக்காமல் உள்ளே இருந்தபடியே நான் ஊரில் இல்லை என்று சொல்லி அவர்களை அனுப்பிவிடு. அவர்கள் போகாமல் கதவைத் திறக்கும்படி பிடிவாதம் செய்தால், உடனே நான் ஒளிந்துகொள்ளுகிறேன், பிறகு நீ கதவைத் திறக்கலாம்'' என்றார்.

அதற்கு இணங்கிய அவரது மனைவி பக்கத்தில் இருந்த கதவண்டை போய்நின்று, ''யாரது கதவை இடிக்கிறது?'' என்று ஒன்றையும் அறியாதவள்போல விநயமாகக் கேட்க, வெளியிலி ருந்து உடனே ஒரு மனிதர், ''நான்தான். கதவைத் திறவுங்கள். என்னுடைய குரலிலிருந்து நான் இன்னான் என்பது தெரியவில்லையா?'' என்றான்.

அந்தக் குரல் மாசிலாமணிப் பிள்ளையின் மனைவிக்கு அதற்கு முன் பழகிய குரலாகத் தோன்றியது. ஆனாலும், அந்த மனிதன் இன்னான்தான் என்ற நிச்சயம் ஏற்படவில்லை. ஆகையால், தான் என்ன செய்வது என்பதை அறியாமல், அவள் சிறிது நேரம் தயங்க, அவளுக்கு அருகில் நின்று கொண்டிருந்த மாசிலாமணிப்பிள்ளை அந்தக் குரல் யாருடையது என்பதை யூகித்து அறிந்துகொண்டு, "ஓகோ! சரிசரி; வந்திருப்பது போலீசாரல்ல; நமக்கு வேண்டிய மனிதர்தான். நீ இனி இங்கே இருக்க வேண்டாம். போய்ப் படுத்துக்கொள். நான் கதவைத் திறந்து வந்திருக்கும் மனிதரிடம் பேசி அவரை அனுப்பிவிட்டு வருகிறேன்" என்று கூறித் தமது மனைவியைப் படுக்கை அறைக்குள் அனுப்பிவிட்டு அந்த அறையின் கதவை மூடி வெளிப்புறத்தில் தாளிட்டுக் கொண்டு அப்பால் போய்விட்டார்.

படுக்கையறைக்குள் போன அவரது மனைவி தனது கணவன் சொற்படி உடனே படுத்துக் கொள்ளவில்லை. அந்த அகால வேளையில் வந்த மனிதர் யாராக இருக்கலாம் என்ற சந்தேகமும், ஒருவிதமான பயமும், கலக்கமும் உண்டாகி அவளை சஞ்சலப்படுத்த ஆரம்பித்தன. ஆகையால், அவள் கதவண்டை வந்து நின்று, அதன் இடுக்கால் வெளியில் பார்த்துக் கொண்டு நின்றாள். தனது புருஷன் முன் பக்கத்துக் கதவைத் திறந்தது தெரிந்தது. அவரும் வெளியிலிருந்த மனிதரும் தணிவான குரலில் ஏதோ ரகசியம் பேசிக் கொண்டதையும் அவள் உணர்ந்தாள். ஆனால், அவர்கள் பேசிய விஷயம் இன்னது என்பது அவளுக்கு விளங்கவில்லை. தனது புருஷன் வெளியில் இருந்த மனிதனை உள்ளே விடுத்துக் கதவை மறுபடியும் முன்போல மூடித் தாளிட்டுக்கொண்டு அவனை அழைத்துக் கொண்டு மேன்மாடத்துக்குப் போய்விட்டதும் அவளுக்கு நன்றாகத் தெரிந்தது. அதன்பிறகு அவர்கள் என்ன செய்தார்கள் என்பதை அவள் அறியக்கூடவில்லை.

வெளியிலிருந்து வந்த மனிதன் யாராக இருப்பான் என்றும், அந்த அகால வேளையில் அவன் வந்து அவ்வளவு அவசரமாகக் கதவை இடிக்கவேண்டிய காரணம் என்ன என்றும் அவள் பலவாறு எண்ணமிட்டவளாய், முன்னிலும் அதிகரித்த திகிலும் நடுக்கமும் அடைந்தவளாய்ச் சிறிது நேரம் திகைத்து சிந்தனையே வடிவமாக நின்று, பிறகு தனது சயனத்தை அடைந்து அதன்மேல் ஏறி உட்கார்ந்து கொண்டாள். அரை நாழிகை நேரம் சென்றது. அவளது புருஷர் படுக்கையறையின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்து சேர்ந்தார். அவரது முகம் விகாரமடைந்து மனதிலுள்ள சங்கடத்தை வெளிப்படுத்தியது.

அவரைக் கண்டவுடனே அந்தப் பெண், ''என்ன விசேஷம்? யாரது?'' என்று மிகுந்த ஆவலோடு வினவினாள்.

அதைக்கேட்ட அவளது புருஷர், ''விசேஷம் ஒன்றுமில்லை. வெண்ணாற்றங்கரையில் நாம் இருந்த வீட்டுக்கு அண்ணாசாமி நாயக்கன் என்று ஒருவன் அடிக்கடி வருவான் அல்லவா? இங்கே பக்கத்திலுள்ள பூண்டி என்ற ஊரில் இன்றையதினம் ஐந்தாம் திருவிழாவாம். ரிஷப வாகன வேடிக்கை பார்த்துவிட்டு ஊருக்குப் போவதற்காகத் திரும்பி வந்தானாம். இந்த ஊரில் நாம் இருப்பது இவனுக்குத் தெரியும். ஆகையால், நம்மைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்று அவன் இங்கே வந்தான். ராத்திரி இங்கேயே படுத்திருந்து நாளைக்குக் காலையில் போகும்படி நான் சொல்லிப் படுக்க வைத்து விட்டு வந்தேன். வேறே ஒன்றும் விசேஷமில்லை'' என்றான்.

அந்த வரலாறு அவளுக்கு உண்மையாகத் தோன்றவில்லை. புதிதாக வந்த மனிதன் கதவை இடித்த மாதிரியும் அவனது குரலின் மாதிரியும் தனது புருஷரது முகம் மாறுபட்டிருந்ததும், தான் கேட்ட உடனே தனது புருஷர் சிறிது யோசித்து மறுமொழி கூறியவிதமும் ஒன்றுகூடி அவளது மனதில்

பெருத்த சந்தேகத்தை உண்டாக்கிவிட்டன. அதுவுமன்றி அண்ணாசாமி நாயக்கன் என்ற பெயர் கொண்ட எந்த மனிதனும் அதற்குமுன் தங்களது வீட்டிற்கே வந்ததாகவும் தோன்ற வில்லை. ஆகையால், அவள் மறுபடியும் பேசத் தொடங்கி, "யாரது! அண்ணாசாமி நாயக்கனா! அண்ணாசாமி நாயக்கன் என்ற பெயருள்ள மனிதனே நம்முடைய வீட்டுக்கு வந்தது இல்லையே! அவனுடைய குரல் நமக்குத் தெரிந்த வேறே யாருடைய குரல் போல் அல்லவா இருக்கிறது? உண்மையை நீங்கள் என்னிடம் சொல்லக் கூடாது என்று மறைக்கிறீர்கள்" என்று நயமாக மறுமொழி கூறினாள்.

அதைக் கேட்ட அந்த மனிதர் சடக்கென்று முன்கோபமும் ஆத்திரமும் அடைந்து, "எப்போதும் உன்னுடைய மூடபுத்தி உன்னை விட்டுப் போகிறதில்லையே! அண்ணாசாமி நாயக்கன் இன்னான் என்பதை நீ இதற்குள் மறந்துவிட்டால், அதற்கு நான் என்ன செய்வேன்! தெரிந்த குரலாக இருக்கிறது என்று நீயே சொல்லுகிறாயே! அப்படியிருக்க, இந்த மனிதன் இன்னான் என்று நீ ஏன் யூகித்துக் கொள்ளக்கூடாது? நான் சொன்னால், அதை நம்ப வேண்டும். நம்பாவிட்டால், சும்மா விழுந்து கிடக்க வேண்டும். ஒரு சங்கதியை நான் உன்னிடம் மறைக்க எண்ணினால், நீ திரும்பத் திரும்பக் கேட்டால் மாத்திரம் நான் உடனே உண்மையைச் சொல்லி விடுவேனா? உனக்கு எவ்விதத்திலும் சம்பந்தமில்லாத விஷயத்தில் நீ ஏன் தலையிட்டு என்னை உபத்திரவிக்கிறாய். நான் சொல்வதை உண்மையென்று நம்பிப் பேசாமல் படுத்துக்கொள்" என்று கூறியவண்ணம் சயனத்தில் படுத்துக் கொண்டார்.

அதற்குமேல் ஒன்றும் சொல்லமாட்டாதவளாய், அந்தப் பெண்ணும் சயனித்துக் கொண்டாள். ஆனால், அவளது மனம் திருப்தியும் அமைதியும் அடையவில்லை. தனது புருஷர் சொன்ன வரலாறு பொய்யானது என்றும், ஏதோ ரகசியம்

இருக்கிறது என்றும் ஓர் எண்ணம் எழுந்து ஓயாமல் அவளது மனதை வதைத்து சஞ்சலப்படுத்திக் கொண்டிருந்தது. அன்றைய இரவு முழுவதும் தூக்கம் என்பதே பிடியாதவளாய், அவள் விசனித்து மனம் நொந்து, ''ஐயோ தெய்வமே! என் தலைவிதி இப்படியா இருக்க வேண்டும். நான் ஜென்மம் எடுத்த முதல் ஓயாத் துன்பமும் ஒழியா வேதனையுமாகவே இருக்கின்றனவே. எல்லாம் கெட்ட காரியம்! எல்லாம் ரகசியம். இப்படி அவஸ்தைப் பட்டுக்கொண்டு உயிர் வாழ்வதைவிட இறந்து போவது சுகமாக இருக்கும் என்பது நிச்சயம்! இன்னம் எவ்வளவு காலத்துக்கு நான் இப்படிக் கிடந்து உழல்கிறது! ஐயோ! என்னால் சகிக்க முடியவில்லையே! இதற்கு நான் ஏதாவது வழி தேடிக் கொண்டுதான் தீரவேண்டும்'' என்று தனக்குள் எண்ணமிட்டு வருந்தினவளாய்க் கிடந்து அந்த இரவைப் போக்கிக் கொண்டிருந்தாள். மகா பயங்கரமான சில சம்பவங்களின் நினைவு அடிக்கடி அவளது மனதில் உண்டாகி உண்டாகி அவளது உடம்பை அடிக்கடி தூக்கிப் போட்டது. மறுபடியும் அவள் தனது புருஷனது கொடுமையைப் பற்றி நினைத்தாள்; ''அடாடா! ஆரம்பத்தில் இந்தப் புருஷரிடத்தில் நான் எவ்வளவு பிரியம் வைத்து இவரால் எப்படிப்பட்ட கஷ்டநஷ்டங்களுக்கு எல்லாம் ஆளானேன். அதையெல்லாம் மறந்து, இவர் என்னை செக்கிழுக்கும் மாட்டை விடக் கேவலமாக அல்லவா நடத்தி வருகிறார். ஒரு நிமிஷம் கழிவது ஒரு யுகமாகவும் நரக வேதனையாகவும் அல்லவா இருக்கிறது. சேச்சே! இந்த மனிதரிடம் இருந்து வாழ்வதை விட எங்கேயாவது கிணற்றில் குளத்தில் விழுந்து செத்தாவது, இந்தக் கொடுமைகளை நிவர்த்தி செய்து கொள்வது உத்தமமானது. இவரிடம் இருப்பதைவிட, வேறே யாரிட மாவது போய் அடிமை வேலை செய்தோ, வைப்பாட்டியாக இருந்தோ காலம் தள்ளினால், அதுகூட இதைவிட அதிக சிலாக்கியமாக இருக்குமே'' என்று அவள் தனக்குள் பிரலாபித்து அழுதபடி இருக்க அந்த இரவும் கழிந்தது.

புருஷனும் பெண்ஜாதியும் எழுந்து வழக்கம்போலத் தங்களது காலைக்கடன்களை முடித்துக் கொண்டனர். மாசிலாமணிப்பிள்ளை மேன்மாடத்திற்குப் போய் அங்கே தங்கியிருந்த அண்ணாசாமி நாயக்கருக்கு வேண்டிய சௌகரியங்களை எல்லாம் செய்துகொடுத்துவிட்டு ஒரு நாழிகை நேரம் கழித்துக் கீழே இறங்கிவந்து தமது மனைவி இருந்த இடத்தை அடைந்தார்.

அவரைக் கண்ட மனைவி மிகவும் நயமாகவும் கொஞ்சலாகவும் பேசத் தொடங்கி, ''அண்ணாசாமி நாயக்கர் ஊருக்குப் போய்விட்டாரா?'' என்றாள்.

மாசிலாமணிப்பிள்ளை, ''போகவில்லை. தமாஷாக இங்கே இரண்டு நாளைக்கு இருந்துவிட்டுப் போகவேண்டும் என்று நான் கேட்டுக்கொண்டிருக்கிறேன். ஆகையால், அவர் இன்றைக்கும் நாளைக்கும் இங்கேதான் இருக்கப் போகிறார்'' என்றார்.

அதைக் கேட்ட மனைவியினது சந்தேகம் முன்னிலும் அதிக பலமடைந்தது. முன்பின் பழக்கமில்லாத யாரோ அன்னியருக்கு அவர் அவ்வளவு உபசாரம் செய்யமாட்டார். ஆதலால் அவர் அவருக்கு நிரம்பவும் அந்தரங்கமான சிநேகிதன் என்றும் அவர் வெளியில் வராமல் மறைந்திருப்பதிலிருந்து அவர் ஏதோ பெருத்த குற்றம் செய்துவிட்டு வந்திருக்க வேண்டுமென்றும் அவள் நிச்சயப்படுத்திக் கொண்டாள். தனது புருஷர் அந்த மனிதனைச் சேர்த்துக் கொண்டு தன் விஷயத்தில் ஏதாவது துன்பம் இழைக்கப் போகிறாரோ என்ற அச்சமே மும்முரமாக எழுந்து வதைத்தது. ஆகையால், அதன் உண்மையான விவரம் இன்னது என்பதைத் தெரிந்து கொள்ளாமல் இருக்க அவளால் இயலவில்லை. ஆகையால், அவள் மறுபடியும் தனது புருஷரைப் பாரத்து, ''நான் எவ்வளவு தூரம் கெஞ்சிக் கேட்டும், நீங்கள் என்னிடம் உண்மையைச் சொல்ல மாட்டேன் என்கிறீர்களே. அந்த மனிதர் உண்மையில் யார்? அவர்

எதற்காக இங்கே வந்து இப்படி ஒளிந்து கொண்டிருக்கிறார்? அந்த விவரங்களைக் கேட்டால் அன்றி என் மனம் சாந்தப்படாது?'' என்று இரக்கமாகக் கூறினாள்.

அவளது வார்த்தைகளைக் கேட்ட மாசிலாமணிப் பிள்ளை கோபம்கொண்ட நாகம்போலச் சீறி அவளைக் கடிந்து, ''மறுபடியும் துவக்கிவிட்டாயா உன்னுடைய பாட்டை? நான்தான் எல்லா விவரத்தையும் ராத்திரியே சொன்னேனே. அதை நம்பாமல் அடிக்கடி அறித்துக் கொண்டிருக்கிறாயே! இதற்கும் உனக்கும் என்ன சம்பந்தம்? நீ ஏன் இதைப்பற்றி இவ்வளவு கவலைப்படுகிறாய்? யாரோ வந்தால், இரண்டொரு நாள் இருந்துவிட்டுப் போகிறான். குற்றமுள்ள மனசு குறுகுறுக்கும் என்கிறபடி, எதைக் கண்டாலும் உனக்குப் பயமாக இருக்கிறதோ? உன்னுடைய ஆசைநாயகனை வென்னீர் அண்டாவுக்குள் நீ வைத்துக் கொன்றாயே; அதை யாராவது கண்டுகொண்டார்களோ என்று பயப்படுகிறாயோ? நீ ஏன் இப்படிக் குத்திக்குத்திக் கிளறுகிறாய்? இப்படி நீ ஓயாமல் தொணதொணவென்று அநாவசியமான கேள்விகளை எல்லாம் கேட்டுக்கொண்டிருப்பது எனக்கு நிரம்பவும் தொந்தரவாக இருக்கிறது. இனிமேல் இதை நான் கொஞ்சமும் சகித்திருக்க முடியாது. நான் எவ்வளவு சொல்லியும் கேளாமல் நீ மறுபடி மறுபடி என்னை வதைக்கிறாயே; என்னோடு ஏதாவது சண்டைபோட வேண்டுமென்கிற பிரியமா! அப்படியானால் அதையாகிலும் திறந்து சொல்லிவிடு. நானும் அதற்கு ஆயத்தமாகிறேன். யார் ஜெயிக்கிறார்கள் என்று ஒரு கை பார்த்து விடுவோம்'' என்று கூறி அவளை பயமுறுத்தினார். அவரது சொற்களிலிருந்து அவர் தன்னை நிரம்பவும் கொடுமையாக நடத்த எண்ணுகிறார் என்று கண்ட பெண் கலக்கமும் அச்சமும் அடைந்து, ''சரி; நான் எதையும் கேட்கவும் இல்லை. நமக்குள் கலகமும் வேண்டாம்'' என்று பணிவாக மறுமொழி கூறிவிட்டுத் தனது முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு

ஒரு பக்கமாகச் சாய்ந்து கொண்டாள்.

அதன் பிறகு சிறிது நேரம் வரையில் இருவரும் வாய் திறந்து பேசாமல் மௌனமாகவே இருந்தனர். மாசிலாமணிப் பிள்ளையின் கோபக் குறிகள் விலக, சந்தோஷக் குறிகள் தோன்றின. அவர் அடிக்கடி தனது மனைவியின் முகத்தை உருக்கமாகப் பார்த்துப் புன்னகை செய்து, ''ஏன் உன் முகம் வாட்டமாக இருக்கிறது? பலகாரம் ஏதாவது சாப்பிட்டாயா? அல்லது, இந்த அற்பசங்கதியை நினைத்து சாப்பாட்டைக் கூட விலக்கிவிட்டு சும்மா உட்கார்ந்து கொண்டிருக்கிறாயா?'' என்று வழக்கத்திற்கு மாறான வாஞ்சையோடு பேசினார்.

அவரது மாறுபட்ட நடத்தையைக் கண்ட அந்தப் பெண், அவர் ஏதோ சதியாலோசனை செய்து, அது சம்பந்தமாக தன்னிடம் ஏதோ பேசப்போகிறார் என்றும், அதன் பொருட்டே அவர் தன்னிடத்தில் அவ்வளவு பட்சமாகப் பேசுகிறார் என்றும் நிச்சயப்படுத்திக்கொண்டாள். அப்போது அவளுக்கு இன்னொரு விஷயம் நினைவுக்கு வந்தது. முதல் நாளிரவு இரண்டு மணி சமயத்தில் அண்ணாசாமி நாயக்கர் கதவைத் தட்டியபோது, தம்மைப் பிடித்துக் கொண்டு போகப் போலீசார் வந்திருக்கிறார்களோ என்று தனது புருஷன் பயந்து தாம் ஒரு முக்கியமான சங்கதியை வெளியிட நினைத்திருக்க, போலீசார் தம்மைக் கொண்டுபோக வந்திருக்கிறார்களே என்று அவர் சொன்னது அவளுக்கு நினைவு உண்டாயிற்று. ஆகவே, அவர் என்ன விஷயத்தைப் பற்றித் தன்னிடம் பிரஸ்தாபிக்கப் போகிறார் என்ற ஆவல் அவளது மனதை வதைத்தது. ஆனாலும், அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், பணிவாகப் பேசத் தொடங்கி, ''சாப்பிடாமல் என்ன! அதெல்லாம் வழக்கம்போல ஆகிவிட்டது'' என்றாள்.

மாசிலாமணிப்பிள்ளை:- அப்படியானால் சரிதான். வர வர எனக்கு இந்த ஊரில் பொழுதே போகமாட்டேன் என்கிறது. நாம் மைசூர் ராஜ்ஜியத்தில் இருந்தவரையில் நிரம்பவும்

குதூகலமாக இருந்து வந்தோம். அதைவிட்டு இங்கே வந்தபிறகு, பலவிதமான விசனங்களும் கவலைகளும் உண்டாகி நம்முடைய வாழ்க்கையைக் கசப்பாக்கிக் கொண்டே இருக்கின்றன. நேற்று முதல் எனக்கு ஒரு யோசனை தோன்றிக் கொண்டே இருக்கிறது. இந்த ஊரிலிருந்து நான் ஏன் இப்படி அவஸ்தைப்பட வேண்டும். மறுபடியும் மைசூர் ராஜ்ஜியத்துக்குப் போய்விடலாமா என்று எண்ணுகிறேன்.

*மனைவி:-* ஆம்; வாஸ்தவந்தான். முகம் அறியாத இந்த ஊரில் வந்திருந்துகொண்டு அல்லும் பகலும் போலீசாருக்குப் பயந்து இப்படி ஒளிந்து கொண்டிருப்பது சகிக்கமுடியாத வேதனையாகத்தான் இருக்கிறது.

*மாசிலாமணி:-* ஆம்; ஆம். அது எனக்கும் நன்றாகத்தான் தெரிகிறது. ஏதோ நான் செய்த குற்றத்துக்காக நான் துன்பம் அனுபவிக்க வேண்டியது நியாயந்தான். என்னால் நீயும் இப்படிப்பட்ட உபத்திரவங்களை அனுபவிப்பதைப் பார்க்க எனக்கே சகிக்கவில்லை. நீயோ மகா அற்புதமான அழகு வாய்ந்தவள்; நல்ல யௌவன பருவத்துப் பெண். நீ நிரம்பவும் சந்தோஷமாக இருக்க வேண்டிய காலத்தில் இப்படி ஆறாத் துயரத்துக்கு ஆளாகி வருந்துவது நிரம்பவும் பரிதாபகரமான விஷயமாகத்தான் இருக்கிறது. அப்படியானால், நாம் மறுபடியும் மைசூருக்குப் போய்விடுவோமா?

*மனைவி:-* அதுதான் உத்தமமாகத் தோன்றுகிறது.

*மாசிலாமணி:-* (சிறிது யோசனை செய்கிறவர் போல நடித்து) ஆனால் அதற்கு ஓர் இடைஞ்சல் இருக்கிறது. நம்மிடத்தில் இப்போது பணம் கொஞ்சங்கூடக் கிடையாது. நாம் மைசூருக்குப் போயிருப்பதென்றால், குறைந்தது இரண்டாயிரம் ரூபாயாவது கையில் இருக்க வேண்டும்.

*மனைவி:-* ஆம். பணமில்லாமல் என்ன செய்கிறது? பணம் கையில் இல்லாமலா நீங்கள் மைசூருக்குப் போகத்

தீர்மானித்தீர்கள்? நீங்கள் மனசு வைத்தால் ஒரு நிமிஷத்தில் எங்கிருந்தாவது பணம் சம்பாதித்துக் கொண்டு வந்துவிட மாட்டீர்களா?

மாசிலாமணி:- (நிரம்பவும் வாஞ்சையான குரலில் பேசத் தொடங்கி) நாம் மனசு வைப்பதில் என்ன உபயோகம்? நீ மாத்திரம் கொஞ்சம் மனசு வைத்து எனக்கு அந்த விஷயத்தில் உதவியாக இருப்பாயானால், அந்தத் தொகை ஒரு நிமிஷத்தில் கிடைக்கும். எங்கே? உதவி செய்வதாகச் சொல். நீ நிரம்பவும் நல்ல குணமுடையவள் என்பது எனக்குத் தெரியும். சமயத்தில் நீ ஒரு நாளும் விட்டுக் கொடுக்க மாட்டாய். இந்த விஷயத்தில் நீ ஒத்தாசை செய்தால், நான் உன்னை எந்த விஷயத்துக்கும் கோபித்துக் கொள்வதே இல்லையென்று பிரமாணம் செய்து கொடுக்கிறேன். நீயாக முதலில் ஆரம்பித்துச் சண்டைக்கு இழுத்தால் அன்றி மற்றபடி நான் உன் ஜோலிக்கே வர மாட்டேன் என்பதை நீ உறுதியாக நம்பலாம்.

மனைவி:- (விரக்தியாக நெடுமூச் செறிந்து) நீங்கள் இந்த மாதிரி இதற்குமுன் எத்தனையோ தடவை உறுதி சொல்லி யிருக்கிறீர்கள். இருந்தாலும் பரவாயில்லை. உங்கள் மனசிலுள்ள யோசனையைத் திறந்து சொல்லுங்களேன். நான் உடனே என் எண்ணத்தைச் சொல்லிவிடுகிறேன்.

மாசிலாமணி:- (ஆழ்ந்த கருத்தோடு அவளது முகத்தை உற்று நோக்கி) நான் சொல்வதற்கு அதிகமாக ஒன்றுமில்லை. நீ மனசு வைத்தால் வெகுசீக்கிரத்தில் அந்த இரண்டாயிரம் ரூபாயைச் சம்பாதித்து விடலாம்.

மனைவி:- (ஒருவித ஆவலும், ஆத்திரமும் அடைந்து) நான் மனசு வைத்தால் என்றால், அதன் அர்த்தம் நன்றாக விளங்கவில்லையே. நான் எங்கே போய் யாரிடத்தில் கேட்கிறது?

*மாசிலாமணி:-* நான் சொல்வதற்கு முன் உனக்கு மூக்கின் மேல் கோபம் வருகிறதே! ஏன் நீ இப்படிக் கோபித்துக் கொள்ள வேண்டும்? நீ செய்யத் தகாத விஷயம் எதையும் நான் பிரஸ்தாபிக்கவில்லையே. நீ ஏற்கெனவே செய்து தேறி யிருக்கும் ஒரு காரியத்தைத் தான் இன்னொரு தடவை செய்யும்படி நான் சொல்லப் போகிறேன். ஆகையால், நீ வீண் நடலம் செய்யக் காரணமில்லையே. முதல் தடவை உன் ஆசையைத் தீர்த்துக்கொள்ள நீ ஒரு மனிதனிடம் சிநேகம் செய்தாய். இரண்டாம் தடவை எனக்கு ஒரு முக்கியமான தஸ்தாவேஜை சம்பாதித்துக் கொடுப்பதற்காக இன்னொரு மனிதரிடம் சிநேகம் செய்தாய். இப்போது நமக்கு வேண்டிய பணத்துக்காக நீ இன்னொரு மூன்றாவது மனிதனிடம் சிநேகம் செய்தால், அதனால் குற்றம் என்ன?

*மனைவி:-* (மட்டுக்கடங்காக் கோபங்கொண்டு பதறி) இது தானா பணம் சம்பாதிக்கும் வழி? இப்படிச் சொல்ல, உங்களுக்குக் கொஞ்சமும் வெட்கமா இல்லையா? ஒரு புருஷர் தம்முடைய பெண்ஜாதியைப் பார்த்துச் சொல்லக் கூடிய வார்த்தையா இது?

*மாசிலாமணி:-* பெண்ஜாதி நிஷ்களங்கமான பதிவிரதையாக இருந்தால், இந்த வார்த்தை சொல்லத் தகாததுதான். நீ அப்படி இல்லையே. உன்னிடம் ஏன் அந்த வார்த்தையை உபயோகிக்கக் கூடாது.

*மனைவி:-* (சிறிது நேரம் விசனித்துக் கலங்கித் தத்தளித்து) அப்படியே இருக்கட்டும். இந்த இரண்டாயிரம் ரூபாய் எவ்வளவு காலத்துக்கு வரப்போகிறது? இது செலவாகிப் போன பிறகு மறுபடி உங்களுக்கு வேண்டிய பணத்துக்கு என்ன செய்யப் போகிறீர்கள்? பெண்ஜாதியின் கற்பை மறுபடியும் விற்றுச் சாப்பிட உத்தேசமா?

*மாசிலாமணி:-* (கடுகடுத்த முகத்தோடு நிரம்பவும்

ஆத்திரமாகப் பேசத் தொடங்கி) நீ இப்போது ஊரார் மெச்சும்படி பேசுவது இருக்கட்டும். முதலில் நீ கற்பை இழந்தாயே. அதை நீ உனக்காகச் செய்த காரியமா? எனக்காகச் செய்த காரியமா? அப்போது நீ உன்னுடைய ஆனந்தத்தைக் கருதி அந்தக் காரியம் செய்தாய். இப்போது நாம் இருவரும் அனுபவித்துவரும் கொடுமைகளை விலக்கிக்கொண்டு வேறோர் ஊருக்குப் போய் இருவரும் சந்தோஷமாக இருப்பதைக் கருதி நீ இப்போது அப்படிச் செய்ய ஏன் பின்வாங்குகிறாய்? நாம் பலபல பேசிக் காலதாமதம் செய்வதில் உபயோகம் என்ன? நான் ஒரு முடிவாகச் சொல்லி விடுகிறேன். இந்தத் தடவை மாத்திரம் நீ நம் இருவருடைய பொது நன்மையைக் கருதி இந்தப் பணத்தை வாங்கிக் கொண்டு வந்துவிடு. இதுதான் கடைசித் தடவை. இதன்பிறகு நீ இப்படிப்பட்ட துறையில் இறங்க, நான் இடங் கொடுக்கவே மாட்டேன். இனி நமக்குள் சண்டையாவது மனஸ்தாபமாவது உண்டாகவே உண்டாகாது. இந்த விஷயத்தில் நீ என்னுடைய சொல்படி நடக்க மறுத்தால், பிறகு உனக்கும் எனக்கும் மல் யுத்தந்தான். பூமிக்குள் புதைக்கப் பட்டிருக்கும் உன்னுடைய ஆசை நாயகரான ஜெமீந்தாரை வெளியில் கிளப்பி, உனக்கு நல்ல புத்தி கற்பிக்க நேரும். ஜாக்கிரதை - என்று நிரம்பவும் அழுத்தமாகவும் கொடுமையாகவும் பேசினார்.

அந்த வார்த்தையைக்கேட்ட அவரது மனைவி முற்றிலும் குழம்பிக் கலகலத்துப்போய் அந்த மகா சங்கடமான நிலைமையில் தான் என்ன செய்வது என்பதை உணராதவளாய்த் தத்தளித்துக் குழம்பித் தனது கைகளால் முகத்தைப் புதைத்துக் கொண்டு சோர்ந்து குனிந்து கொண்டாள். அவளது தோற்றம் மகா பரிதாபகரமாகவும் கல்லும் கரைந்து உருகத் தக்கதாகவும் இருந்தது. கண்களிலிருந்து கண்ணீர் வழிந்ததை அவள் அடிக்கடி துடைத்துக்கொண்டாள். அவள் மனம் நொந்து தவிக்கிறாள் என்பதைக் கண்டும் மாசிலா

மணிப்பிள்ளை அவளது விஷயத்தில் சிறிதும் இரக்கம் என்பதே கொள்ளாமலும், அவளைத் தேற்றும் பொருட்டு ஓர் உபசார வார்த்தைகூடச் சொல்லாமலும் குரூரமான முகத் தோற்றத்தோடு உட்கார்ந்து கொண்டிருந்தார்.

அவ்வாறு மௌனத்தில் ஐந்து நிமிஷ நேரம் கழித்து மாசிலா மணிப்பிள்ளை அவளைப் பார்த்து, ''அப்புறம் உன்னுடைய முடிவைச் சொல்லிவிடு; எனக்கு நேரமாகிறது. நான் ஒருவருக்குச் செய்தி சொல்லி அனுப்ப வேண்டும்'' என்று கண்டித்து அதட்டிப் பேசினார்.

அதைக்கேட்ட மனைவி நடுநடுங்கி, ''நீங்கள் கேட்பதற்கு நான் என்ன பதில் சொல்லப்போகிறேன்? எனக்குக் கொஞ்சமும் இஷ்டமில்லாத காரியத்தைச் செய்யும்படி நீங்கள் இப்படிக் கட்டாயப்படுத்தினால், நான் என்ன செய்யக்கூடும்? இந்த இரண்டாயிரம் ரூபாயை நான் போய் சம்பாதித்துக் கொண்டு வரவேண்டும் என்கிறீர்களே! அப்படிப்பட்ட ஏற்பாட்டை நீங்கள் யாரிடத்திலாவது செய்துகொண்டிருக்கிறீர்களா?'' என்றாள்.

அதைக்கேட்ட மாசிலாமணிப் பிள்ளை ஒருவாறு மகிழ்ச்சியும் அன்பும் கொண்டு, ''சரி; அப்படிக் கேள். அதுதான் புத்திசாலித்தனம். உன்னிடத்தில் உண்மையை மறைத்தால், காரியம் ஆகப் போகிறதில்லை. நேற்று சாயுங்காலம், என்னை யாரோ கூப்பிடுவதாகத் தோட்டக்காரன் வந்து சொன்னான் அல்லவா! நான் போய்விட்டு வந்து எனக்குத் தெரிந்த ஒரு மனிதர் சும்மா வந்து கொஞ்சநேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டுப் போனதாக நான் சொன்னேன் அல்லவா. அப்போதுதான் இந்த ஏற்பாடு முடிவடைந்தது. தஞ்சாவூர் ராணி வாய்க்கால் சந்தில் ஹேமாபாயி என்ற ஒரு பெரிய மனிஷி இருக்கிறாள். அவள்தான் நேற்று வந்து என்னோடு பேசிக்கொண்டிருந்துவிட்டு போனவள். யாரோ ஒரு பெரிய பிரபு இருக்கிறாராம். செல்வத்தில் அவர் குபேரனாம்;

யௌவனத்திலும் அழகிலும் மன்மதனாம்; கொடையில் கர்ண மகாராஜனாம். அவர் உன்னை எப்போதோ பார்த்திருக்கிறாராம். அதுமுதல் அவர் பைத்தியம் கொண்டவர் போல் இருக்கிறாராம்; அவர் உன்னோடு கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்து உன்னை அனுப்புவதற்கு இரண்டாயிரம் ரூபாய் கொடுப்பதாகச் சொன்னாராம், அதை அவள் என்னிடம் ஒருவிதமாக வெளியிட்டாள். நாளைக்கு ராத்திரி உன்னை அழைத்துக்கொண்டு போக அவள் பெட்டிவண்டி கொண்டு வருவதாகச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறாள். உன்னுடைய குணம் எனக்குத் தெரியும். ஆகையால், நீ அதை மறுக்க மாட்டாய் என்று நம்பி நான் அவளுக்கு வாக்குக் கொடுத்து விட்டேன். அவ்வளவுதான் சங்கதி'' என்றார்.

அந்த வரலாற்றைக்கேட்ட அவரது மனைவி கால் நாழிகை நேரம் வரையில் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். நிரம்பவும் துஷ்டமனிதரான இப்படிப்பட்ட புருஷரோடு தான் நீடித்து வாழ முடியாது என்ற எண்ணமும், அவன் தன்னை மேன்மேலும் விபசாரத்தில் விடுத்து, தன்னை அடியோடு கெடுத்துவிடுவான் என்ற நினைவும் கொண்ட அந்த மடந்தை ஒருவித முடிவு செய்து கொண்டாள். தன்னிடத்தில் அவ்வளவு அபாரமான மோகம் கொண்டிருக்கும் பிரபு சகலமான அம்சங்களிலும் மேன்மை வாய்ந்தவராக இருந்து, அவர் தன்னை நிரந்தரமாக வைத்துக்கொள்ள எண்ணினால், அவரிடமே தான் இருந்துவிட வேண்டும் என்று அவள் ஒருவாறு தீர்மானித்துக் கொண்டாள். தனது புருஷனுக்கு அவரைக்கொண்டு ஏதேனும் பெருத்த பணத்தொகை கொடுக்கச்செய்து தங்களைத் தொடராமல் ஒரு கடிதம் எழுதி வாங்கிக்கொள்ளலாம் என்றும் அவள் எண்ணிக் கொண்டவளாய் மேலும் சிறிது நேரம் சிந்தனை செய்கிறவள் போலப் பாசாங்கு செய்து அதன்பிறகு மெதுவாகத் தனது முகத்தை நிமிர்த்தி, ''சரி; உங்களுடைய பிரியம் எப்படியோ, அப்படியே நடத்துங்கள். நான் எந்த

விஷயத்திலும் உங்களுக்கு அடங்கி நடக்கக்கடமைப்பட்டவள். ஆகையால், நீங்கள் செய்துள்ள வாக்குறுதியை நிறைவேற்றி வைக்கிறேன்'' என்றாள்.

அவளது பணிவையும் சம்மதியையும் கண்டு அளவற்ற மகிழ்ச்சியும், குதூகலமும் அடைந்த மாசிலாமணிப் பிள்ளை அவளை வாய்கொண்டமட்டும் புகழ்ந்து ஸ்தோத்திரம் செய்து கரைகடந்த அன்பைக் காட்டிய உருக்கமான சொற்களை உபயோகித்து அவளை சந்தோஷப்படுத்திக்கொண்டிருந்தார். அதன்பிறகு அன்றைய தினம்வேறு எவ்விதமான விசேஷ சம்பவமும் நடக்கவில்லை. அன்றையதினம் கழிந்தது. மாசிலாமணிப்பிள்ளை அடிக்கடி மேன்மாடத்துக்குப் போய் அண்ணாசாமி நாயக்கனிடம் பேசிக்கொண்டிருந்து விட்டுக் கீழே வந்து தமது மனைவியினிடத்தில் அன்னியோன்னியமாகப் பேசி, அவள் மனது கோணும்படியான சொற்களையே உபயோகியாமல் ஒழுங்காக இருந்து வந்தார். அதுபோலவே திங்கட்கிழமை பகற்பொழுதும் கழிந்தது. மாலை நேரம் வந்தது.

மாசிலாமணிப்பிள்ளையின் மனையாட்டியான அந்த யௌவனப் பொற்கொடி எழுந்து வாசனை கலந்த தண்ணீரில் நீராடி, உடம்பைத் துடைத்துக்கொண்டு சமையலறைக்குப் போய் மிதமாகச் சிறிதளவு போஜனம் செய்தபிறகு, தனது சயனக்கிரகத்துக்கு வந்து தன்னை முதல்தரமாக அலங்கரித்துக் கொள்ளத் தொடங்கினாள். தான் அதுவரையில் தன்னை அலங்கரித்துக் கொண்டதை எல்லாம்விட அன்றைய தினம் மகா புதுமையாகவும் அற்புதமாகவும் அவள் தன்னை அலங்கரித்துக் கொள்ளத்தொடங்கினாள். அதற்குமுன் ஒருநாள் அவள் இளவரசரை மயக்கி, அவரிடம் ஒரு தஸ்தாவேஜியில் கையெழுத்துப் பெறுவதற்காகப் பார்சீஜாதி ஸ்திரீயாக அலங்கரித்துக் கொண்டதைவிட நூறு மடங்கு விசேஷமாக இப்போது சிங்காரித்துக்கொண்டு எல்லாவற்றிலும் சிறந்த ஆடை ஆபரணங்களைப் பொறுக்கி அணிந்து கொண்டு

அன்னப்பேடோ, தோகை மயிலோ, பஞ்சவர்ணக் கிள்ளையோ, கந்தர்வ மடமானோ, ரதிதேவியோ என்று நினைத்து எப்படிப்பட்டவரும் மயங்கிக் கலங்கி மோகங் கொள்ளுமாறு மனமோகன ரூபிணியாக மாறினாள். இயற்கையிலேயே தந்தத் தகடு போலப் பளபளவென மின்னிய மாசுமறுவற்ற அவளது சந்திர வதனம், நிரம்பவும் விஷமம் பொருந்திய மை தீட்டப்பட்ட கண்களின் அழகினாலும், ஜவ்வாதுத் திலகம் அணிந்த நெற்றியின் வசீகரத் தன்மையினாலும், கருத்து அடர்ந்த புருவ விற்களின் சொகுசினாலும், தாம்பூலம் அணிந்து சிவந்து கனிந்த அதரங்களின் ஜ்வலிப்பினாலும், முத்துக்களைப் போன்ற பல் வரிசைகளின் கவர்ச்சியினாலும் பதினாயிர மடங்கு சிறந்து, காண்போர் மனதைக் காந்தம் போலக் கவர்ந்து கொள்ளை கொண்டு அடிமையாக்கத் தக்கதாக இருந்தது. வெல்வெட்டும், பட்டும், ஜரிகையுமே மயமாக நிறைந்த ஆடைகளை அவள் வெகு சொகுசாக அணிந்து கொண்டதன்றி, தனது கணவனுக்குத் தெரியாமல் மறைத்து வைத்திருந்த தனது வைர ஆபரணங்களை எல்லாம் எடுத்து அணிந்துகொண்டு சர்வா பரண பூஷிதையாய் தேஜோ மயமாகவும், இன்ப வடிவாகவும், ஆனந்த நிறைவாகவும் காணப்பட்டு அப்போதே பிரமதேவனால் புதுமையாக சிருஷ்டிக்கப்பட்டு வானுலகத்திலிருந்து தெய்வ விமானத்தின் மூலமாக வந்து கீழே இறங்கிய அணங்குபோல அதி மநோக்கிய இன்பவல்லியாக விளங்கி நின்றாள்.

மணி ஏழரை ஆயிற்று. வாசலில் ஒரு குதிரைவண்டி வந்து நின்றது. மேன்மாடத்திலிருந்து பார்த்துக்கொண்டிருந்த மாசிலா மணிப்பிள்ளை உடனே கீழ் இறங்கி வந்து தமது மனைவியிருந்த இடத்தை அடைந்து, அவளைச் சந்தோஷப்படுத்தி அனுப்பி வைக்க வேண்டும் என்னும் கருத்தோடு, அவளது அதி அற்புதமான அழகையும் அலங்காரத்தையும் பற்றி பிரமாதமாகப் புகழ்ந்து பேசினார்; பக்கத்தில் இருந்த ஒரு துப்பட்டியை எடுத்து அவளது முகத்தைத் தவிர மற்ற

பாகங்களை எல்லாம் மகாராஷ்டிர ஸ்திரீயைப் போல மூடிவிட்டு அவளை அழைத்துக் கொண்டு வெளிப்பட்டார். வெளிப்பட்டவர் சந்தடி செய்யாமல் வாசலுக்கு வந்து குதிரை வண்டியில் ஏறி உட்கார்ந்துகொண்டு ஓட்டச் செய்ய, வண்டி அவ்விடத்தை விட்டு மேற்கு நோக்கி ஓட ஆரம்பித்தது. கால்நாழிகை நேரத்தில் அந்த வண்டி இடையில் இருந்த தெருக்களை எல்லாம் கடந்து ஊர்க்கோடியை அடைந்தது. அவ்விடத்தில் சமுத்திரம் என்ற பெயர் கொண்ட பெருத்த ஏரி ஆரம்பமாயிற்று. நான்கு மைல் நீளமுள்ள அந்த ஏரியின் கரையோரமாகச் சென்ற பாட்டையே தஞ்சைக்குப் போகும் வழி. ஆகையால், அவ்விடத்தில் ஒரு பெட்டிவண்டி வந்து ஆயத்தமாக நின்று கொண்டிருந்தது. அதற்குள் ஹேமாபாயி தன்னை துப்பட்டியால் போர்த்திக்கொண்டு மறைவாக உட்கார்ந்திருந்தாள். அவ்விடத்தில் குதிரைவண்டி வந்து நின்றவுடனே, அவள் கீழே இறங்கிக் குதிரை வண்டியின் பக்கமாக வந்து நின்று புன்னகை செய்த முகத்தோடு மாசிலாமணிப் பிள்ளையினது மனைவியைப் பார்த்து மரியாதையாக அவளை உபசரித்துக் கை கொடுத்துக் கீழே இறக்கிவிட்டாள்; அவள் அப்படிச் செய்தது, அந்தப் பெண்ணின் அழகு எப்படி இருக்கிறது என்பதை ஆராய்ச்சி செய்வதற்காகவே அன்றி வேறல்ல. அவளது உட்கருத்தை எளிதில் யூகித்துக் கொண்ட அந்த யௌவனப் வெண்பாவை கீழே இறங்குகையில் தற்செயலாகத் துப்பட்டி விலகியது போலப் பாசாங்கு செய்து, கண்கொள்ளா வனப்பு வழிந்த தனது அற்புத வடிவத்தை அவளுக்குத்திறந்து காட்டி மறுபடி துப்பட்டியைச் சரிப்படுத்திக் கொண்டாள்.

அவளது தெய்வீகமான அழகையும் நிகரற்ற சிங்காரத்தையும் கண்ட ஹேமாபாயி மட்டற்ற மகிழ்ச்சியும் பிரமிப்பும் அடைந்தவளாய் தனது முகத்தை முன்னிலும் அதிகமாக மலர்த்தி வாத்சல்யத்தையும் மரியாதையையும் முன்னிலும்

பன்மடங்கு அதிகமாக வெளிப்படுத்தினாள். தன்னைக் கண்டு அவள் திருப்தி அடைந்து விட்டாள் என்பதை உணர்ந்து கொண்ட அந்த வடிவழகி தான் அன்றையதினம் சந்திக்கப் போகும் பிரபுவினிடம் வெற்றி பெறுவது திண்ணமென எண்ணிக் கொண்டாள்.

உடனே ஹேமாபாயி அவளை அன்பாக நடத்தி அழைத்துக்கொண்டுபோய்ப் பெட்டிவண்டியில் ஏற்றி உட்கார வைத்தாள். வண்டிக்குள் வைத்திருந்ததும் ஆயிரம் ரூபாய் பெருமானமுள்ள பவுன்கள் அடங்கியதுமான பையை ஹேமாபாயி எடுத்துத் தனக்குப் பக்கத்தில் இருந்த மாசிலாமணிப் பிள்ளையினிடம் கொடுக்க அவர் அதை வாங்கிக் கொண்டு குதிரைவண்டிக்குப் போய் ஏறி உட்கார்ந்து கொண்டு ஊருக்குத் திரும்பிப் போய்விட்டார்.

உடனே பெட்டிவண்டியும் தஞ்சையை நோக்கி விரைவாக ஓட ஆரம்பித்தது. அந்த யௌவன மடந்தையின் மனதில், அந்தத் தூதுக் கிழவியின் விஷயத்தில் இயற்கையிலேயே ஒருவித அருவருப்புத் தோன்றியது. ஆனாலும், அதை எல்லாம் அடக்கி, சந்தோஷத்தை உண்டாக்கிக்கொண்டு, அவளிடம் சம்பாஷிக்கத் தொடங்குவதற்குக் கொஞ்சநேரம் பிடித்தது. அவர்கள் இருவரும் முதலில் ஏதோ லோகாபிராமமாகப் பொது விஷயங்களைப் பற்றிப் பேசினர். அதிலிருந்து ஹேமாபாயி அந்தப் பெண்ணை அடைய விரும்பும் மனிதரது அழகைப் பற்றியும் செல்வப் பெருக்கைப் பற்றியும் தயாள குணத்தைப் பற்றியும் ஆகாயமட்டும் புகழ்ந்து பேசத் தொடங்கினாள். ஆனால், அவள் அவரது வயது இவ்வளவு என்பதைப் பற்றிய பேச்சையே எடுக்கவில்லை. அவருடைய பெயர் என்ன என்பதை அந்த மடந்தை கேட்டதற்கு ஹேமாபாயி தான் அதை மாத்திரம் அப்போது வெளியிடத் தனக்கு உத்தரவில்லை என்று கூறியதன்றி அந்த மனிதர் கலியாணமாகாதவர் ஆதலால், அவளுக்கு விருப்பமானால்

அவரிடத்தில் எப்போதுமே சிநேகமாக இருக்கலாம் என்று தெரிவித்தாள். அந்தக் குறிப்பை அந்த வடிவழகி கவனமாகக் கேட்டு மனதில் பதியவைத்துக் கொண்டாள். அவளது மனதும் அவ்வித ஏற்பாட்டை ஒருவாறு நாடி இருந்தது. ஆகையால், அவள் அந்தச் செய்தியைக் கேட்டுத் தனக்குள் ஒருவித மகிழ்ச்சி அடைந்தாள்.

இரவு சரியாக ஒன்பது மணிக்குப் பெட்டிவண்டி தஞ்சையை அடைந்து ராணிவாய்க்கால் சந்தில் இருந்த ஹேமாபாயினது மாளிகையின் வாசலில் வந்து நின்றது. உடனே பெண்டீர் இருவரும் கீழே இறங்கி உள்ளே சென்றார்கள். ஹேமாபாயி அந்த அழகிய நங்கையை அழைத்துக்கொண்டு மூன்றாவது உப்பரிகைக்குப் போய்ச் சேர்ந்து, அவளது துப்பட்டியை எடுக்கச் செய்த தன்றி, சிறிதளவு சீர்குலைந்திருந்த அவளது ஆடைகளையும் ஆபரணங்களையும் ஒழுங்கு படுத்திவிட்ட பிறகு, மாதுரியமான போஜனம் சிற்றுண்டி முதலியவை ஆயத்தமாக இருந்த ஓர் அறைக்கு அவளை அழைத்துக் கொண்டுபோய், அவளுக்குத் தேவையானவற்றை உட் கொள்ளும்படி உபசரித்தாள். அந்த அணங்கு தனக்குத் தேவையான சிற்சில சிற்றுண்டிகளை சொற்பமாக உண்டபிறகு வாசனைத் தாம்பூலம் அணிந்துகொண்டு சயன மாளிகைக்குள் நுழைய ஆயத்தமானாள். அவளது அப்போதைய வனப்பும் தோற்றமும் தேவர்களும் பார்த்து ஆனந்தித்துப் பரவசம் அடையத் தக்கனவாக இருந்தமையால், அவளைக் கண்டு மருங்காபுரி ஜெமீந்தார் முற்றிலும் திருப்தியும் ஆனந்தமும் அடைவார் என்று உறுதியாக நினைத்துக்கொண்ட ஹேமாபாயி, பக்கத்திலிருந்த ஒரு சயனக் கிரகத்தை அவளுக்குச் சுட்டிக் காட்டி, ''அம்மா! அதோ தெரிகிறதே, அது மன்மதனுடைய ரதிகேளிவிலாசம் போல அற்புதமாக அலங்கரிக்கப் பட்டிருக்கிறது. அதற்குள் புஷ்ப சயனத்தின்மேல், அந்தப் பிரபு உட்கார்ந்து கொண்டு உன்னுடைய வருகையை

ஆவலோடு எதிர்பார்த்திருக்கிறார். நீ நேராக அதற்குள் போ. நான் இப்போது உள்ளே போய் விட்டு வந்தேன். நீ வந்துவிட்ட தாகவும், உன்னை உடனே அவரிடம் அனுப்புவதாகவும் சொல்லிவிட்டு வந்திருக்கிறேன். நீ எப்படி இருக்கிறாய் என்ற விவரத்தை நான் சொல்லக் கேட்டு, அவர் நிரம்பவும் சந்தோஷம் அடைந்ததன்றி, எப்போதும், உன்னைத் தனது அந்தரங்கக் காதலியாக வைத்துக் கொள்கிறேன் என்று சொல்லி விட்டார். உனக்கு ஜெய காலந்தான்; நீ சந்தோஷமாகப் போகலாம்; எதற்கும் யோசிக்காதே, அவருடைய மனசு சந்தோஷம் அடையும்படி நடந்துகொள்'' என்று புத்திமதி சொல்லி அனுப்பி வைத்தாள்.

அந்த யௌவனப் பெண்பாவை மகிழ்ச்சியினாலும் புன்னகையினாலும் மனோக்கியமாக மலர்ந்த வதனத்தினளாய், ஹேமாபாயி காண்பித்த சயன மாளிகையின் வெளித்திரையைக் கொஞ்சமாக நகர்த்திக்கொண்டு உள்ளே நுழைந்து எதிரிலிருந்த புஷ்பசயனத்தை நோக்கினாள். நோக்கவே, அவள் திடுக்கிட்டுப் பேய் கொண்டவள் போல் மாறி, ''ஆகா! என்ன இது! யார் அங்கே இருப்பது!'' என்று வாய்விட்டு ஆர்ப்பரித்தாள்.

புஷ்ப சயனத்தின் மேல் உட்கார்ந்திருந்தபடி அந்த வடிவழகி யின் வருகையைக் கட்டிலடங்கா ஆவலோடு எதிர்பார்த்திருந்த மருங்காபுரி ஜெமீந்தாரும் அவளைக் கண்டு திடுக்கிட்டுத் திகைப்பும் பிரமிப்பும் அடைந்து, ''என்ன ஆச்சரியம்! என் தம்பியின் மகள் லீலாவதி அல்லவா வந்திருக்கிறாள்! ஆ! லீலாவதி! என்ன உன்னுடைய தலைவிதி! நீ இப்படிப்பட்ட தொழிலிலா இறங்கிவிட்டாய்?'' என்று வியப்போடு வினவினார்.

## 23-வது அதிகாரம்

# எதிர்பாரா இடைஞ்சல்

ஷண்முகவடிவு கலியாண சுந்தரத்தைத் தஞ்சைக்கு அனுப்பிய பிறகு சில தினங்கள் கழிந்தன. தான்போய் நாலைந்து நாட்களுக்குள் திரும்பிவந்து விடுவதாக அவன் இந்த இளநங்கைக்கு வாக்குறுதி சொல்லிப் போனான். ஆகையால், அவள் நிரம்பவும் பாடுபட்டு ஐந்து நாட்கள் வரையில் பொறுத்திருந்தாள். அவள் நோயாளியான தனது அத்தையின் சுக சௌகரியங்களை வழக்கப்படி கவனிப்பதில் மனத்தைத் செலுத்தி இருந்தாள். ஆனாலும், அடிக்கடி கலியாணசுந்தரத்தின் நினைவும் மனோகர வடிவமும் அவளது மனத்தில் தோன்றித் தோன்றி மறைந்துகொண்டிருந்தன. ஆகையால் இன்னதென்று விவரிக்க முடியாத ஒருவிதப் பேரின்பம் ஊற்றெடுத்துப் பொங்கி எழுந்து உற்சாகமும் குதூகலமும் உண்டாகிக் கொண்டிருந்தன. சிறிதும் ஓயாத மனவெழுச்சியும் உற்சாகமும் கொண்ட அந்தப் பெண்மணி சரியானபடி உண்ணமாட்டாமலும் உறங்கமாட்டாமலும் சதா சர்வதா சஞ்சலத்திற்கு இரையாகித் தத்தளித்த வண்ணமிருந்து வந்தாள். ஐந்து நாட்கள் கழிய, ஆறாம் நாள், ஏழாம் நாளும் கழிந்தது. தனது ஆருயிர்க் காதலனான கலியாணசுந்தரம் வருவான் வருவான் என்று வழி பார்த்துப் பார்த்து அவளது அழகிய கண்களும் பூத்துப் போயின. பக்கத்திலுள்ள ராஜபாட்டையில் ஏதாவதொரு வண்டி வந்த ஓசையுண்டானால், அவளது உடம்பு திடுக்கிட்டு எழுந்திருக்கும். அவள் உடனே தாழ்வாரத்திற்குப் போய் அந்த வண்டி தங்களது பங்களாவிற்குள் நுழைகிறதாவென்று ஆவலோடு பார்த்திருந்து, அந்த வண்டி அப்பால் போவதைக் கண்டு ஏங்கிப் போய்த் திரும்பி உள்ளே வருவாள். ஒவ்வொரு நாளும் காலையில் தபாற்காரன் வரும்

வேளைக்கு ஒரு நாழிகை நேரத்துக்கு முன்னிருந்தே அவளது உடம்பு படபடத்துத் துடிக்க ஆரம்பிக்கும். அவள் வெளியில் வந்து ராஜபாட்டையைப் பார்ப்பதும், உள்ளே ஓடித் தனது அலுவல்களைக் கவனிப்பதுமாக நிரம்பவும் பாடுபட்டுப் பொழுதைப் போக்குவாள்.

அவ்வாறு அவள் தனது உயிருக்கு உயிரான காதலனது வருகையை எதிர்பார்த்துப் பார்த்து ஏங்கியிருந்தாள். அப்படி நாட்கள்கழியக் கழிய, அவளது மனம் எண்ணாததை எல்லாம் எண்ணிப் பலவிதமான சந்தேகங்களைக் கொண்டது. அவன் தனது அக்காளைக் கண்டானோ காணவில்லையோ, அல்லது, வழியில் அவனுக்கு ஏதேனும் அபாயம் நேர்ந்திருக்குமோ, அல்லது, அவன் தன்னை மறந்து வேறே யாரையாவது புதிய சிநேகம் பிடித்து அவ்விடத்தில் யாரையாவது கலியாணம் செய்துகொள்ள உத்தேசித்து அதனால் தன்னைப் புறக்கணித்து இருப்பானோ என்று அவள் பலவாறு ஐயமுற்றுத் தணலின் மீது வீழ்ந்த புழுவெனத் துடித்துக்கொண்டிருந்தாள். அந்த பங்களாவில் இருப்பதே அவளுக்கு நரகவேதனையாகத் தோன்றியது. தனது வாழ்க்கையே பாழடைந்து போனதாகத் தோன்றியது. தான் தனது அக்காளுக்கு ஒரு கடிதம் எழுதி, கலியாணசுந்தரம் அவ்விடம் க்ஷேமமாக வந்து சேர்ந்தானா என்பதைக் கேட்டறிந்து கொள்ளலாமா என்ற எண்ணம் உதித்தது. அவள் போய் விசிப்பலகையின் மேல் உட்கார்ந்து தனது அக்காளுக்குக் கடிதமெழுதத் துவக்கினாள். அது எட்டாவது தினம்; அப்போது காலை பத்துமணி சமயமிருக்கும். அவள் கடிதம் எழுதிக் கொண்டிருந்த சமயத்தில் வேலைக்காரி முத்தம்மாள் தடதடவென்று உள்ளே ஓடிவந்து, "அம்மா! தஞ்சாவூரிலிருந்து கடிதம் வந்திருக்கிறது. இப்போதுதான் தபால்காரன் கொடுத்து விட்டுப் போகிறான்" என்று கூறியவண்ணம் ஒரு கடிதத்தை நீட்ட, அவளது சொல்லைக் கேட்டுத் திடுக்கிட்ட ஷண்முகவடிவு அளவற்ற

ஆவலும் மகிழ்ச்சியும் கொண்டவளாய்த் தனது கையில் இருந்த காகிதத்தைக் கீழே போட்டுவிட்டு வேலைக்காரி கொடுத்ததை வாங்கி ஆவலோடு பிரித்துப் படிக்கலானாள். அது அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது-

அவசரமாக எழுதப்பட்டது

சௌபாக்கியவதி ஷண்முகவடிம்மாளுக்கு சர்வாபீஷ்டமும் சர்வ மங்களமும் உண்டாவதாக. இவ்விடத்தில் நானும் உன் அக்காளும் க்ஷேமம். அவ்விடத்தில் நீயும் உன் அத்தை முதலியோரும் க்ஷேமமாக இருப்பீர்கள் என்று நம்புகிறேன். நான் இவ்விடத்துக்கு வந்த மறுதினம் உன் அக்காளுடைய ஜாகைக்கு நான் போயிருந்தேன். அன்றையதினம் அவளை நான் பார்க்க முடியவில்லை. உங்களுக்குப் பணம் கொடுத்து உதவி வந்த சோமசுந்தரம் பிள்ளை நோயாகப் படுத்திருப்பதனாலும், உன் அக்காள் அவரோடு கூட இருந்து அவருக்குப் பணிவிடைகள் செய்து கொண்டிருப்பதனாலும், அவள் என்னை அன்றைய தினம் பார்க்க முடியவில்லை என்று செய்தி சொல்லி அனுப்பினாள். மறுநாள் வரும்படி அவள் சொல்லியிருந்த பிரகாரம் நான்போய் அவளைப் பார்த்தேன். அவளோடு பேசிய விஷயங்களை விரிவாக எழுத இப்போது நேரமில்லை. அவ்விடத்திலிருந்து நான் வந்த காலத்தில் தற்செயலாக நான் ஒரு யௌவனப் பெண்ணைக் கண்டேன். அவள் நிரம்பவும் பரிதாபகரமான நிலைமையிலிருந்தாள். ஆகையால், அவளை நான் உடனே அழைத்துக் கொண்டு போய் என்னுடைய ஜாகையில் வைத்து அவளை என்னுடைய சவரக்ஷணைக்குள் வைத்துக் கொள்ள நேர்ந்தது. அவளுடைய வரலாற்றைக் கேட்டு நான் நிரம்பவும் அபாயகரமான சில சங்கதிகளைத் தெரிந்து கொண்டேன். அந்தச் சம்பந்தமாக நான் அவசரமாய்ச் சில முயற்சிகள் செய்து சில இடங்களுக்குப் போக வேண்டியிருப்பதால், நான் சில மாதகாலம் வரையில் ஊருக்குத் திரும்பிவர முடியாத நிலைமையில் இருக்கிறேன்.

ஆகையால், நம்முடைய கலியாணத்தை நாம் ஏற்கனவே தீர்மானித்தபடி இப்போது நடத்த முடியாமலிருக்கிறது. நான் இப்போது நிரம்பவும் அவசரமாக ஓர் இடத்துக்குப் போகிறேன். ஆகையால், விவரமாக எல்லா விஷயங்களையும் எழுதக் கூடவில்லை. நான் கண்டுபிடித்த அநாதைப் பெண்ணைக் கைவிட எனக்கு மனமில்லை. ஆகையால், அவளையும் என்னுடைய வேலைக்காரியையும் சேர்த்து நாளையதினம் திருவாரூருக்கு அனுப்பப் போகிறேன். அந்த ஊரிலுள்ள என்னுடைய சொந்த வீட்டில் அவள் இருக்கப் போகிறாள். உனக்குக் கொடுக்கும்படி அவர்களிடம் ஒரு கடிதம் எழுதி அனுப்புவேன். அதைப் பார்த்தால் சகலமான விவரங்களும் உனக்கு நன்றாகத் தெரியவரும். அதன்படி நடந்து கொள்ளவும். அதிகம் எழுத நேரமில்லை.

இங்ஙனம்: அன்பன்,
கலியாணசுந்தரம்

-என்று எழுதப்பட்டிருந்த கடிதத்தை ஷண்முகவடிவு ஒருதரம் படித்தாள்; மறுபடியும் இன்னொரு தரம் படித்தாள். கலியாண சுந்தரம் தஞ்சைக்குப் போய்த் தனது அக்காளை எப்படியும் அழைத்துக்கொண்டு வந்துவிடுவான் என்றும், தனது கலியாணம் அதி சீக்கிரத்தில் முடிந்துவிடும் என்றும், அந்த அழகிய மடந்தை உறுதியாக நினைத்துக் கொண்டு அதையே எதிர்பார்த்திருந்தாள். ஆகையால், தனது கலியாணத்துக்கு எவ்வித இடையூறும் நேரக்கூடுமென்று அவள் எதிர்பார்க்கவில்லை. ஆகையால், அந்தக் கடிதத்தில் எழுதப்பட்டிருந்த சங்கதி அவளால் சிறிதும் எதிர்பார்க்கப் படாததாகவும், சகிக்க இயலாததாகவும் இருந்தது. தனது காதலன் தஞ்சைக்குப் போகுமுன் கடைசியாகத் தனக்கு உறுதிமொழி கூறி, எப்படியும் தன்னையே அதிசீக்கிரத்தில் மணந்துகொள்வதாக வாக்களித்துப் போயிருந்தும், அதைக்

கவனிக்காமல் அவனே இவ்வாறு கடிதம் எழுதி இருந்தது அவளைக் கரைகாணாத் துக்க சாகரத்தில் ஆழ்த்திவிட்டது. யாரோ ஓர் அநாதைப் பெண்ணைக் கண்டு, அவளைத் தனது வீட்டில் தனது சவரக்ஷணையில் வைத்துக் கொள்ளப் போவதாக அவன் எழுதியிருந்தது, அவளது மனதில் மிகுந்த ஆச்சரியத்தையும் பலவகையான சந்தேகங்களையும் உண்டாக்கியது. அவனது மனம் சபலித்து ஒரு வேளை அந்தப் பெண்ணின் மீது திரும்பி இருக்குமோ என்றும், அதனால் அவன் கலியாணத்தை நிறுத்திவிட எண்ணியிருப்பானோ என்றும் அந்த அணங்கு பலவாறு எண்ணமிட்டு உருகினாள். இருந்தாலும், அவள் கபடமற்ற நற்குணமுடையவள் ஆதலாலும், கலியாணசுந்தரம் மகா பரிசுத்தமான உத்தம புருஷன் என்ற நினைவை அவள் உறுதியாக வைத்திருந்தவள் ஆதலால், அவன் தனக்கு எவ்வித துரோகமும் நினைக்க மாட்டான் என்ற எண்ணமும் இடையிடையில் தோன்றியது. ஆகையால், அந்தப் பேடன்னம் ஒன்றுக்கொன்று மாறுபட்ட பலவகையான நினைவுகளினால் உலப்பப்பட்டவளாய் அதே கவலை கொண்டு தன்னையும் உலகையும் அடியோடு மறந்து பைத்தியம் பிடித்தவள்போல அன்றைய பொழுதைப் போக்கினாள். அதற்கு முந்திய தினங்களில், கடிதமாவது வேறு எவ்விதச் செய்தியாவது கிடைக்காமையால் வருந்தியதைவிட, அன்றைய தினம் கடிதத்தைப் பார்த்து அதிலிருந்த சங்கதிகளைத் தெரிந்து கொண்டதால் பதினாயிர மடங்கு அதிகரித்த வேதனை அடைந்து வருந்தினாள். அன்றைய பொழுது கழிவது நரகவேதனையாக இருந்தது. அந்தக் கடிதத்தினால் தனக்கு எவ்விதத் தீங்கும் உண்டாகாது என்ற துணிவு ஷண்முக வடிவினது மனதில் தானாகவே உண்டாகிக் கொண்டிருந்தது அன்றி, அவளது வேலைக்காரியும், கலியாணசுந்தரம் தனது வாக்குறுதியை மீறக்கூடியவன் அல்ல என்று தைரிய வார்த்தை கூறித் தேற்றிக் கொண்டிருந்தாள்.

அவ்வாறு அன்றையதினம் கழிய மறுநாள் வந்தது. ஷண்முக வடிவு அதிகாலையில் எழுந்து தனது காலைக் கடன்களை முடித்துக்கொண்டு தனது அத்தைக்கு ஆக வேண்டிய பணிவிடைகளைச் செய்து முடித்தாள்; வேலைக்காரியைத் திருவாரூருக்கு அனுப்பி, தான் கலியாண சுந்தரத்தின் வீட்டுக்குப் போய்த் திரும்பிவர ஒரு வண்டி அமர்த்திக் கொண்டுவரச் செய்தாள். அவ்வாறு வண்டி வந்தவுடன் வேலைக்காரியைத் தனது அத்தையைப் பார்த்துக் கொண்டிருக்கும்படி பங்களாவில் வைத்துவிட்டுத் தான் மாத்திரம் வண்டியில் ஏறிக்கொண்டு புறப்பட்டாள். வண்டி அரைநாழிகை நேரத்தில் திருவாரூரை அடைந்து கலியாண சுந்தரத்தின் வீட்டை அடைந்தது. ஷண்முகவடிவு வண்டியை விட்டுக் கீழே இறங்கி வீட்டிற்குள் நுழைந்தாள். இன்னது என்று விவரிக்க முடியாத பலவகையான சஞ்சலங்களினால் அலட்டப்பட்ட மனத்தினளாய் அவள் அந்த வீட்டிற்குள் நுழைய, அந்த ஒவ்வொரு நிமிஷமும் அவளுக்கு ஒவ்வொரு யுகம்போலத் தோன்றியது. நெஞ்சு திடுக்கு திடுக்கென்று அடித்துக்கொண்டது. அப்படிப்பட்ட மகா சங்கடமான நிலைமையில் அவள் அந்த வீட்டிற்குள் நுழைய, உட்புறத்திலிருந்த வேலைக்காரி அவளது திருஷ்டியில் பட்டாள். ஷண்முகவடிவை அந்த வேலைக்காரி அதற்கு முன் பார்த்திருந்தாள் ஆகையால், அவள் உடனே எதிர்கொண்டோடி வணக்கமாகவும் மரியாதையாகவும் வரவேற்று, ''வாருங்கள் வாருங்கள்'' என்று அன்பாக உபசரித்து ஊஞ்சற் பலகையில் உட்காரச் செய்தாள். அவளது இயற்கையான பணிவும் அன்பும் மாறாதிருந்ததைக் கண்ட ஷண்முகவடிவுக்கு முக்கால் பாகமும் உயிர் திரும்பியது. அவளது மனதில் ஒருவித தைரியமும் ஏற்பட்டது. அதற்குள் அந்த வேலைக்காரி ஓர் அறைக்குள்போய் அங்கே இருந்து திரும்பி வர, அவளுக்குப் பின்னால் ஒரு யௌவனப் பெண்ணும் வந்து சேர்ந்தாள். அந்தப் பெண்ணைப் பார்க்கவே

ஷண்முகவடிவு பிரமிப்படைந்தாள். அப்படி வந்தவள் சுமார் பதினாறு வயதடைந்தவளாகக் காணப்பட்டாள். அவளது வடிவம் சுவர்ண பிம்பம் போலக் காந்தியும் கட்டழகும் வாய்ந்ததாகக் காணப்பட்டது. அவளது முகம் நிரம்பவும் வசீகரமாகவும் எப்படிப்பட்டவரது மனதையும் எளிதில் கவரக் கூடியதாகவும் இருந்தது. அவளது உடம்பு சிவப்பாகவும் மிருதுத் தன்மை பொருந்தியதாகவும், மினுமினுப்பாகவும் இருந்தது. அவள் பிறந்தது முதல் நல்ல செல்வத்திலிருந்து செழுமையாகவும் செல்வமாகவும் வளர்க்கப்பட்டவள் போலவும் பெரிய மனிதர் வீட்டுப் பெண் போலவும் காணப்பட்டாள். அவள் விலை உயர்ந்த ஆடை ஆபரணங்களை அணிந்து ஜாஜ்வல்லியமான தோற்றத்தோடு இருந்தாள். அவ்வாறு பிரசன்னமான உன்னத மங்கையைக் கண்டவுடனேயே ஷண்முகவடிவின் முகம் வாட்டமடைந்து மாறியது. தனது காதலனான கலியாணசுந்தரம், யாரையோ அநாதைப் பெண்ணைக் கண்டு அழைத்து வந்ததாகத் தனது கடிதத்தில் எழுதி இருந்ததற்கும், அந்தப் பெண்ணின் கம்பீரத் தோற்றத்திற்கும் கொஞ்சமும் பொருத்தம் இருப்பதாகத் தோன்றவில்லை. அந்த ஒரு நிமிஷத்திற்குள் அவளது மனம் பலவகையான சந்தேகங்களைக் கொண்டுவிட்டது. தான் கலியாணசுந்தரத்தைக் கலியாணம் செய்துகொள்வதற்கு உண்மையில் அந்தப் பெண் பகையாளியாக வந்துவிட்டாள் என்கிற அச்சமே எழுந்து ஷண்முகவடிவின் மனதை உலப்பத் தொடங்கியது. இருந்தாலும், இடையிடையே அதற்கு ஒருவித ஆட்சேபனையும் தோன்றி சமாதானப்படுத்திக் கொண்டிருந்தது. அப்படிக் கலியாணசுந்தரம் தன்னைக் கைவிட்டு அந்தப் புதிய பெண்ணைக்கட்டிக் கொள்ளநினைத்திருந்தால், அவன் தனக்குக்கடிதமே எழுதி இருக்கமாட்டான்ஆகையால், அவளது மனதில் ஒருவித நம்பிக்கையும் இருந்து வந்தது. எல்லாவற்றிற்கும் தான் அவர்களோடு பேசி, கலியாணசுந்தரம் விவரமாக எழுதியனுப்பி இருப்பதாகச் சொல்லும் கடிதத்தை

வாங்கிப் படித்துப் பார்த்து அதன் பிறகு ஒருவித முடிவிற்கு வரவேண்டும் என்ற எண்ணம் கொண்டவளாய் ஷண்முக வடிவு தனது சஞ்சலங்களை எல்லாம் வெளியே காட்டாமல் அடக்கிக் கொண்டு, புதிதாக வந்த பெண்ணைப் பார்த்துப் புன்னகை செய்ய, அவளும் மகிழ்ச்சியாகவும் இனிமையாக வும் புன்னகை செய்தவளாய் ஊஞ்சற்பலகை யண்டை நெருங்கி வந்து, ''நீங்கள்தான் ஷண்முகவடிவென்ற பெயருடையவர்கள் போலிருக்கிறது?'' என்றாள்.

அதைக் கேட்ட ஷண்முகவடிவு, ''ஆம். என் பெயர்தான் ஷண்முகவடிவென்பது. இந்த வேலைக்காரியோடு தஞ்சாவூரிலிருந்து இன்னொரு மனிஷியாளை அனுப்பி இருப்பதாகவும், அவர்கள் வசம் ஒரு கடிதம் கொடுத்து அனுப்புவதாகவும் எனக்குத் தஞ்சாவூரிலிருந்து ஒரு கடிதம் எழுதியிருக்கிறார்கள். அந்த மனுஷியாள் நீங்கள் தானோ? உங்களிடம் ஏதாவது கடிதம் கொடுத்து அனுப்பி இருக்கிறார்களா?'' என்று நயமாக வினவினாள்.

அதைக் கேட்ட அந்த யௌவன வடிவழகி, ''ஆம். நானும் அந்த அம்மாளுமாகத்தான் தஞ்சாவூரிலிருந்து வந்தோம். இதோ இருக்கிறது கடிதம். நான் இதை இந்த அம்மாளிடம் கொடுத்துத் தங்களுடைய ஜாகைக்கே அனுப்பிவிடலாம் என்று இப்போதுதான் நினைத்தேன். அதற்குள் நீங்களும் வந்தீர்கள். உங்களைப் பார்த்தது நிரம்பவும் சந்தோஷமாயிற்று. இப்பேர்ப்பட்டவர்களுடைய சிநேகமும் தரிசனமும் கிடைப்பது எளிதல்ல. ஏதோ என்னுடைய நல்ல காலந்தான் இந்தப் பாக்கியமெல்லாம் எனக்குத் தானாகக் கிடைக்கிறது. இதோ கடிதம் இருக்கிறது. படித்துப் பாருங்கள். நான் யாரென்ற விருத்தாந்தங்கள் எல்லாம் இந்தக் கடிதத்திலேயே எழுதப் பட்டிருக்கின்றன. நான் எதையும் சொல்ல வேண்டும் என்ற அவசியமே இல்லை. எல்லாம் இதில் எழுதப்பட்டிருக்கிறது'' என்று கூறியவண்ணம் தனது மடியில் இருந்த கடிதம் ஒன்றை

எடுத்து ஷண்முகவடிவினிடம் பணிவாக நீட்ட, அவள் ஆவலோடு அதை வாங்கிப் பிரித்துப் பார்த்தாள். அந்தக் கடிதம் பெருத்த ராமாயணம் போல நீண்டதாக இருக்க, அவ்வளவு சங்கதி என்ன இருக்கப் போகிறது என்ற வியப்பும் திகைப்பும் கொண்டவளாய் ஷண்முகவடிவு அதைத் தனக்குள்ளாகவே படிக்கத் தொடங்கினாள். அது அடியில் வருமாறு எழுதப்பட்டிருந்தது-

என் ஆசையும் தவப்பயனும் உருவெடுத்து வந்த உயிருக்கு உயிரான கண்மணி ஷண்முகவடிவுக்கு உன்னையே சதாகாலமும் நினைத்து உருகும் உன் பிராணபதியான கலியாண சுந்தரம் எழுதிக் கொள்ளும் லிகிதம். உபயகுசலம். நேற்றைக்கு முந்திய நாள் நான் உனக்கு வெகு சுருக்கமாக ஒரு கடிதம் எழுதியனுப்பினேன். அப்போதிருந்த அவசரத்தில், நான் எதை எழுதினேன் என்பதையும், எதை எழுதத் தவறிவிட்டேன் என்பதும் தெரியவில்லை. இருந்தாலும், எல்லா விஷயங் களையும் விரிவாக எழுதாமல் சுருக்கமாகவும் பூடகமாகவும் எழுதியிருப்பதைக் கண்டு நீ பலவகையான சந்தேகங்கள் கொண்டு நேற்று முழுதும் வருந்தியிருப்பாயோ என்ற சந்தேகம் இப்போது தோன்றி என் மனதை வதைக்கிறது. அந்தக் கடிதம் எழுதியதைவிட எழுதாமலிருந்து இருக்கலாமென்ற எண்ணம் இப்போது தோன்றுகிறது. ஆனாலும், கைதவறிச் செய்யப்பட்டுப் போன ஒரு காரியத்தைப் பற்றி நாம் விசனப்படுவதில் பயனில்லை. அந்தக் கடிதத்தினால், உன் மனம் சங்கடப்பட்டிருந்தால் அதைப் பற்றி நீ என் மேல் ஆயாசப்படாமல் இருக்கும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்.

நான் நமது கலியாணத்தை நடத்திவைப்பதற்கு உன்னுடைய அக்காளையும் அழைத்துவர வேண்டுமென்ற ஆசையினால் தூண்டப்பட்டு அவ்விடத்தை விட்டு இந்த ஊருக்கு வந்து விட்டேன். ஆனாலும், உன்னை விட்டுப் பிரிந்து வந்த விசனமும் பிரிவாற்றாமையும் என் மனதைப் புண்படுத்திக்

கொண்டிருந்தன. இந்த உலகமே பாழ்த்துப் போனதாகக் காணப்பட்டது. இருந்தாலும், நான் என் மனவேதனையை வெளியில் காட்டிக்கொள்ளாமல் இந்த ஊரில் என்னுடைய சொந்த மனிதர் சிலரைப் பார்த்து அவரிடம் ஆகவேண்டிய வேலைகளை எல்லாம் முடித்துக்கொண்டேன். அதன்பிறகு நான் புறப்பட்டு உன்னுடைய அக்காள் நமக்கு எழுதித் தெரிவித்திருந்த புதிய விலாசத்துக்குப் போனேன். ஆனால், அப்போது சோமசந்தரம் பிள்ளை என்ற உங்களுடைய போஷகர் கடுமையான வியாதியாகப் படுத்திருப்பதாகவும், கமலம் அவருக்குரிய பணிவிடைகளைச் செய்து கொண்டிருப்ப தாகவும், அதனால் அப்போது அவள் வந்து சாவகாசமாகப் பேச நேரமில்லை என்றும், தயை செய்து மறுநாள் வரவேண்டும் என்றும், கமலம் செய்தி சொல்லி அனுப்பினாள். நான் உடனே அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு என்னுடைய ஜாகைக்கு வந்துவிட்டேன். மறுநாள் அவள் குறித்த நேரத்துக்கு மறுபடியும் நான் கமலத்தின் ஜாகைக்குப் போனேன். அவள் என்னுடைய வருகையை எதிர்பார்த்திருந்த தாகவும் தெரிந்தது. நான் அவளைக் காணவே, அவள் நிரம்பவும் அன்பாகவும் மரியாதையாகவும் என்னை வரவேற்று எனக்கு ஆசனம் கொடுத்து உபசரித்ததன்றி, உன் க்ஷேமத்தைப் பற்றியும், அத்தை வேலைக்காரி முதலியோருடைய க்ஷேமத்தைப் பற்றியும் என்னுடைய க்ஷேமத்தைப்பற்றியும் ஆயிரம் கேள்விகள் கேட்டு, நான் உன்னை அந்தப் போலிச் சாமியாரிடத்திலிருந்து விடுவித்த வரலாற்றை எல்லாம் மறுபடியும் ஒருதரம் நான் சொல்லக்கேட்டாள். அவள் ஒரு கோடீசுவரனுடைய வயிற்றில் பிறந்து, எப்போதும் பெருஞ்செல்வத்திலிருந்து வளர்ந்தவள் போல மகா உன்னதமாகவும் மிருதுவாகவும் இருந்ததன்றி, மிகுந்த நாணம், அடக்கம், பயபக்தி முதலிய நற்குணங்களுக்கே இருப்பிட மாகவும் இருந்ததைக் காண, என் மனம் கட்டுக்கடங்காமல் ஆனந்தபரவசம் அடைந்தது. உன்னை நேரில் பார்த்தால் என்

மனம் எவ்வளவு அதிகமாகக் குதூகலமடையுமோ அப்படியே உன் அக்காளைப் பார்த்த காலத்தில், நான் அளவற்ற மகிழ்ச்சியும் பூரிப்பும் அடைந்தேன். உன் அக்காள் உங்களுடைய அத்தையின் தேகஸ்திதியைப் பற்றித்தான் நிரம்பவும் கவலையாகவும் உருக்கமாகவும் விசாரித்தாள்; அப்போது அவள் கண்ணீர் கூட விட்டுவிட்டாள். அவள்கேட்ட கேள்விகளுக்கு எல்லாம் நான் தக்க மறுமொழி கொடுத்து, அவளைத் திருப்தி செய்தபிறகு நான் திருவாரூரிலிருந்து இங்கே வந்த காரணம் என்ன என்பதை உடனே நான் எடுத்துச் சொன்னேன்; அவள் இல்லாமல் இந்தக் கலியாணத்தை நடத்த உனக்கும் எனக்கும் இஷ்டமில்லை ஆகையால், நேரில் வந்து எப்படியாவது கையோடு அவளை அழைத்துக்கொண்டு போவதற்காகவே முக்கியமாக நான் வந்தேன் என்று அவளிடம் சொல்லி, எப்படியாவது வரத்தான் வேண்டும் என்று நயந்து கேட்டுக்கொண்டேன். அவள் என் வார்த்தை களைக் கேட்டு நிரம்பவும் சஞ்சலமடைந்து, ''ஆகா! நான் என்ன செய்வேன்! என்னுடைய நிலைமை மகா தர்ம சங்கடமான நிலைமையாக இருக்கிறது. என்னுடைய சொந்தத் தங்கையின் கலியாணத்துக்கு நான் வராமல் இருக்க வேண்டி யிருக்கிறதே என்ற நினைவும், ஏகாங்கியாக இருக்கும் அறியாத குழந்தையான என் தங்கை இப்படிப்பட்ட பெரிய காரியமான இந்தக் கலியாணத்தைத் தானாக எப்படி நடத்துவாள் என்ற கவலையும் ஒரு பக்கத்தில் வதைக்கின்றன. இங்கே இருக்கும் நிலைமையோ பரம சங்கடமானதாக இருக்கின்றது. பரோபகாரத்தைக் கருதி நெடுங்காலமாக எங்களுடைய குடும்பத்தை சவரட்சித்து வருகின்றவர்களான இந்த சோமசுந்தரம் பிள்ளையும் அவர்களுடைய சம்சாரமும் தங்கமான மனிதர்கள். இவர்கள் என்னைக்கண்ட முதல் என்னிடம் வைத்துள்ள வாத்சல்யம் அளவில் அடங்காததாக இருக்கிறது. இவர்கள் விருத்தாப்பியர்கள். இவர்களுக்குக் குழந்தைகளாவது வேறே நெருங்கிய பந்துக்களாவது இல்லை.

நான் வந்தது முதல் இவர்கள் என்னைத் தரையில் கூட நடக்கவிடாமல், கண்மணியை இமைகள் காப்பதுபோல, என்னை ஹிருதய கமலத்தில் காப்பாற்றி வருகிறார்கள். இவர்களுக்கு ஏராளமான சம்பத்திருக்கிறது. இவர்கள் என்னையே அபிமான புத்திரியாக ஏற்றுக்கொண்டு இவர்களுக்குப் பிறகு சகலமான சொத்துக்களையும் எனக்கே கொடுத்து விடுவதாகச் சொல்லுகிறார்கள். இவர்கள் தங்களுடைய சொத்துக்களைக் கொடுத்தாலும் கொடுக்கா விட்டாலும் அதைப் பற்றியே நான் இப்போது இங்கே இருக்கவில்லை. வயோதிகரான சோமசுந்தரம்பிள்ளை படுத்த படுக்கையாக இருக்கிறார். அவருக்குக் கஞ்சி இறங்குவது கூட மகா துர்லபமாக இருக்கிறது. அப்படிப்பட்ட ஆபத்து காலத்தில் நான் இவர்களைக் கைவிட்டு வருவது தருமமும் ஆகாது; அதைப் பார்த்த பிறர் பழிப்பதற்கும் இடம் ஏற்படும். ஆகையால், நான் இப்போது இவ்விடத்தை விட்டு வரமாட்டாதவளாக இருக்கிறேன். இன்னம் எவ்வளவு காலத்துக்கு நான் இப்படிப்பட்ட நிர்பந்தத்தில் இருக்க நேருமோ என்பதையும் நாம் இப்போது முன்னாக நிர்ணயிக்க முடியாது. ஆகையால், நான் வருவேன் வருவேன் என்று நீங்கள் அதற்காக வெகுகாலம் கலியாணத்தை நிறுத்தி வைப்பதும் சரியல்ல. என் தங்கையோ ஆண் பிள்ளையின்றி அநாதையாக இருந்து வருகிறாள். நீங்கள் அவளைக் கட்டிக்கொண்டால்தான், நீங்கள் அவளுக்கு ஆண் துணையாக இருப்பது கிரமமானதாக இருக்கும். இல்லாவிட்டால், பார்ப்பவர்கள் நகைக்க இடம் உண்டாகும். ஆகையால், இரண்டு இடங்களிலும் உள்ள அசந்தர்ப்பமான நிலைமையை உத்தேசித்து நீங்கள் நானில்லா விட்டாலும் எப்படியாவது இந்தக் கலியாணத்தை உடனே நடத்தி விடுவதே யுக்தமாகத் தோன்றுகிறது'' என்று நிரம்பவும் நயமாகவும் உருக்கமாகவும் சொன்னாள். அவள் சொன்னது நியாயமான வார்த்தையாக எனக்கும் தோன்றியது. ஆகையால், அதற்குமேல் நான்

மறுத்துப் பேசுவது சரியல்ல என்று நினைத்து, அவளுடைய பிரியப்படியே செய்வதாகச் சொன்னேன். அதற்குமேலும் நான் பேசத் தொடங்கினேன்.

உங்களிடத்தில் அவ்வளவு வாஞ்சை வைத்துள்ளவர்களான அந்த சோமசுந்தரம்பிள்ளை அசௌக்கியமாக இருந்தார். ஆகையால், அவரை நான் ஒரு தரம் பார்க்க வேண்டுமென்ற ஓர் ஆசை என் மனசில் உண்டாயிற்று. நான் அதை உன் அக்காளிடம் வெளியிட்டேன். அவள் உடனே, "வேறே யாரும் அவருக்குமுன் வரவாவது பேசவாவது கூடாது என்று வைத்தியருடைய உத்தரவும் ஆகியிருக்கிறது. முக்கியமாக அந்தக் காரணத்தினாலேதான் இவர்கள் என்னை விடாமல் பக்கத்திலேயே வைத்துக்கொண்டிருக்கிறார்கள்" என்று மிகுந்த கிலேசத்தோடு சொன்னாள். அதற்குமேல் அந்த விஷயத்தைப் பற்றிப் பேசாமல் நான் விட்டுவிட்டேன். அதன்பிறகு நாங்கள் அரைமணி நேரம்வரையில் பேசிக் கொண்டிருந்தோம். அவளோடு எவ்வளவு நேரம் பேசினாலும் அது தெவிட்டாத இன்பமாகத் தோன்றியது. பொழுது போவதே தெரியாமல் இருந்தது. உன்னைப் போலவே உன் அக்காளும் உத்தம குணங்களும் நன்னடத்தையும் வாய்ந்தவளென்ற அபிப்பிராயமே என் மனசில் கடைசிவரையில் மாறாமல் இருந்தது. அவள் நோயாளியிடம் போகவேண்டி இருக்கும் என்ற எண்ணத்தினால் தூண்டப்பட்டு நான் என்னுடைய சம்பாஷணையை அவ்வளவோடு முடித்துக்கொண்டு அவளிடம் செலவு பெற்றுக்கொண்டு புறப்பட்டேன். அவள் சில வைர ஆபரணங்களை என்னிடம் கொடுத்து அவைகளை உன்னிடம் சேர்த்துவிடும்படி சொல்லி என்னை அனுப்பி வைத்தாள். அவளால் கொடுக்கப்பட்ட ஆபரணங்களை வாங்கிப் பத்திரப்படுத்திக்கொண்டு அவ்விடத்தை விட்டு நான் இறங்கி இருந்த ஜாகைக்குப் போனேன். நான் போனவழியில் சில வித்வான்களால் மாதுரியமான ஒரு பாட்டுக் கச்சேரி

நடந்தது. அந்த சங்கீதத்தின் கவர்ச்சியை மீறிக்கொண்டு நான் அப்பால் போக முடியவில்லை. ஆகையால், நான் அவ்விடத்தில் நெடுநேரம் வரையில் இருந்து சங்கீதக் கச்சேரி முடிவடைந்தபிறகு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு என்னுடைய ஜாகையை நோக்கி நடக்கலானேன். என்னுடைய ஜாகை தஞ்சைக்கு வடக்கில் சுமார் அரைமைல் தூரத்திலுள்ள கருத்தட்டாங்குடி என்ற ஊரிலிருந்தது. நான் போனபோது இரவு ஒன்பதுமணி சமயம் இருக்கலாம். வழி முழுவதும் இருள் அடர்ந்து இருந்தது. வழியின் இருபக்கங்களிலும், வீடுகள் இல்லாமல், அடர்ந்த தோப்புகளே இருந்தன. ஆனால், ஒரு பர்லாங்கு தூரத்துக்கு ஓரிடத்தில் மங்கலான சர்க்கார் வெளிச்சம் இருந்தது. அப்படிப்பட்ட பாட்டையின் வழியாக நான் என் ஜாகையை நோக்கி வந்து கொண்டிருந்தேன். எனக்குக் கொஞ்ச தூரத்துக்கு முன்னாலிருந்த சர்க்கார் விளக்கினடியில் வந்த யாரோ ஒரு மனிதர் பொத்தென்று கீழே வீழ்ந்ததை நான் கண்டேன். காணவே, நான் திடுக்கிட்டு நிரம்பவும் ஆச்சரியமடைந்து, அது யாராக இருக்குமென்று யோசித்தேன். எவனாவது குடிகாரன் குடிவெறியினால் மயங்கி அப்படி விழுந்திருப்பானென்ற எண்ணமே என் மனசிலுண்டாயிற்று. அந்த இருளில், அப்படிப்பட்ட நிர்மாநுஷ்யமான அந்த இடத்தில் நான் மாத்திரம் தனியாகப் போய் அந்தக் குடிகாரனிடத்தில் நெருங்க, எனக்கு ஒருவித அருவருப்பும் அச்சமும் உண்டாயின. இருந்தாலும், நான் எப்படியும் ஜாகைக்குப் போக வேண்டியவன். ஆகையால் துணிந்து மேலே நடந்து அந்த விளக்கண்டை நெருங்கிப் பார்க்கிறேன். ஆகா! என்னுடைய ஆச்சரியமும் தவிப்பும் அளவிலடங்காமல் பெருகின. அங்கே வீழ்ந்து கிடந்தது சுமார் பதினாறு வயதுள்ள ஓர் அழகிய பெண்; தக்க பெரிய மனிதருடைய வீட்டுப் பெண்ணைப் போல மிருதுத் தன்மையும் செழிப்பும் நிறைந்து கட்டழகு வாய்ந்தவளாகவும், விலை உயர்ந்த ஆடையாபரணங்களை அணிந்தவ

ளாகவும் இருந்த அந்தப்பெண் அப்படிப்பட்ட அகால வேளையில் நிர்மானுஷ்யமான அந்தப் பாதையில் வீழ்ந்து கிடந்தது, என் மனசில் கட்டிலடங்கா ஆச்சரியத்தையும் கலக்கத்தையும் உண்டாக்கியது. யாராவது துன்மார்க்கர்கள் அவளை அவளுடைய வீட்டிலிருந்து பலாத்காரமாக எடுத்துவந்து அங்கே எவ்விடத்திலாயினும் விட்டிருப்பார் களோ என்றும் வேறு பலவாறாகவும் நான் எண்ணமிட்டு அவளண்டை நெருங்கி அவளை உற்றுப் பார்த்தேன். அவளது கால்களில் முழங்கால் வரையில் புழுதி படிந்திருந்த தாலும், அவளது முகம் முதலிய அங்கங்களெல்லாம் களைப்புற்று சோர்ந்து வாட்டமடைந்து இருந்ததாலும், அவள், வெகு தூரத்திலிருந்து பிரயாணம் செய்துவந்த வளாகத் தோன்றினாள். அவளது கண்கள் மூடப்பட்டிருந்தன. அவளது பரிதாபகரமான நிலைமையைக் காணவே என் மனம் பதறிக் கலங்கி அப்படியே உருகிப்போய்விட்டது. நான் உடனே அவளண்டை நெருங்கி நின்று, "யாரம்மா படுத்திருக்கிறது? ஏனம்மா இப்படி நடுப்பாதையில் படுத்திருக்கிறாய்? உடம்பு என்ன செய்கிறது? கண்ணைத் திறந்து கொள்" என்று அன்பாகக் கேட்க, அந்தப் பெண் மெதுவாகக் கண்களைத் திறந்து என்னைப் பார்த்தாள். பார்த்த உடனே அவள் நிரம்பவும் நாணமடைந்து சடக்கென்று எழுந்திருக்க முயன்றாள். ஆனால், அவளது உடம்பு கட்டிலடங்காமல் பூமியில் சாய்ந்தது. மயக்கமும் கிறுகிறுப்பும் கொண்டவளது தலைபோல, அவளது தலை கீழே சாய்ந்து சாய்ந்து நிமிர்ந்தது. அந்த நிலைமையில் அவள் மிருதுவான குரலில் பேசத்தொடங்கி, "ஐயா! பசியினாலும் தாகத்தினாலும் களைப்பாக இருக்கிறது. மயக்கத்தினால் கண் இருளுகிறது. நான் சாப்பிட்டு இரண்டு நாளாகிறது. எனக்கு முதலில் கொஞ்சம் ஜலம் வேண்டும்" என்றாள். அவள் முற்றிலும் பலஹீனமான குரலில் பேசினாள். ஆகையால், அவளது குரல் கிணற்றிற்குள்ளிருந்து பேசுகிறவளது குரல்போல உள்ளடங்கிப்

போயிருந்தது. நெடுங்காலமாக அன்னம் தண்ணீர் இல்லாமையாலும், நடந்த அலுப்பினாலும் அவளது பிராணன் அநேகமாக ஒடுங்கிப் போய்விட்டதாக நான் உடனே உணர்ந்து கொண்டேன். அரை பர்லாங்கு தூரத்திற்கு அப்பால் வடவாறு என்ற ஓர் ஆறிருக்கிறது. அவளை அந்த இருளில் தனியாக அந்த இடத்தில் இருக்கவிட்டு நான் வடவாற்றுக்குப் போவது உசிதமாகத் தோன்றவில்லை. அப்படியே போனாலும், தண்ணீர் எடுத்துவர பாத்திரம் ஒன்றுமில்லை என்ன செய்கிறது! நான் கொஞ்சநேரம் யோசனை செய்து அவளைப் பார்த்து, ''அம்மா! இதோ வடவாற்றங்கரை ஒரு பர்லாங்கு தூரத்தில் இருக்கிறது. அதற்கப்புறம் என்னுடைய ஜாகைக்கு இன்னொரு பர்லாங்கு தூரம் போகவேண்டும். நான் கால் மைல் தூரம் போய்ப் பாத்திரம் சம்பாதித்து ஜலம்கொண்டு வருகிற வரையில், நீ இங்கே தனியாக இருப்பது பிசகு. நீ யௌவனப் பெண்ணாகவும் இருக்கிறாய். உன் உடம்பில் விலை உயர்ந்த ஆடை ஆபரணங்களும் இருக்கின்றன. ஆகையால், நீ மெதுவாக எழுந்து என் கையைப் பிடித்துக்கொண்டு நடந்து வந்தால், நான் உன்னை அழைத்துக் கொண்டு ஜலம்கொடுத்து என்னுடைய ஜாகையில் சேர்க்கிறேன். அவ்விடத்தில் நீ உடனே சாப்பிட்டு சௌகரியமாகப் படுத்துக்கொண்டால், உன்னுடைய களை தீர்ந்து போகும்; என்ன சொல்லுகிறாய்?'' என்றேன். அந்தப் பெண் எவ்வித மறுமொழியும் சொல்லமுடியாவிட்டாலும், என்னோடு வருவதற்காக எழுந்திருக்க முயன்று என்னைப் பிடித்துக்கொள்ள வேண்டுகிறவள் போலக் கைகளை நீட்டினாள். நான் கிட்ட நெருங்கி அவளுடைய கைகளைப் பிடித்து மெதுவாகத் தூக்கி நிறுத்தினேன். அவளுடைய கண்கள் மூடியபடியே இருந்தன. அவள் உயிரற்றவள்போலத் துவண்டு துவண்டு அங்கும் இங்கும் சாய்கிறாள். அந்த நிலைமையில் நான் அவளைப் பிடித்து இரண்டோரடி நடத்த அவள் முற்றிலும் மயங்கிப் போய் பொத்தென்று கீழே விழுந்துவிட்டாள்.

அப்படிப்பட்ட துர்பலமான நிலைமையில் அவளை நான் நடத்தி அழைத்துக்கொண்டு போவது முற்றிலும் அசாத்தியமான காரியமாகத் தோன்றியது. அந்த ஆபத்துச் சமயத்தில் லஜ்ஜைப்பட்டு விலகி நிற்பது சரியல்ல என்று நினைத்து, நான் உடனே முனைந்து அந்தப் பெண்ணைத் தூக்கி என் மார்பின்மேல் வைத்துத் தோளில் சாத்திக்கொண்டு விசையாக நடக்கலானேன். அந்தப்பெண், காம்பு ஒடிபட்டு வளைந்து தொங்கும் தாமரைப் புஷ்பம்போல, என் உடம்பில் கைகால்கள் தலை முதலியவைகளைத் தொங்கவிட்டு மூர்ச்சித்துக் கிடக்க, நான் ஓட்டமாக ஓடி வடவாற்றை அடைந்தேன். அவ்விடத்தில், அவளை வைத்து அவளுக்குத் தண்ணீர் கொடுத்துப் பருகச் செய்தால், அவளுக்குப் பிரக்ஞை சொற்பமாகத் திரும்பிவிடும் ஆகையால், அதற்குமேல் அவள், நான் அவளைத் தூக்கிக் கொண்டு போவதற்கு இணங்கவும் மாட்டாள்; தானும் நடந்து வருவதும் கடினமாக இருக்கும் ஆகையால், அவளை ஆற்றங்கரையில் வைக்காமல் ஒரே அடியாக மேலும் நடந்து இன்னொரு ஐந்து நிமிஷ நேரத்தில் என்னுடைய ஜாகைக்கே போய்விட்டால், அவ்விடத்தில் அவளுக்கு வேண்டிய உபசரணைகளைச் செய்து, அவளுடைய பசிதாகங்களையும் களைப்பையும் விலக்கி, சௌக்கியமாகப் படுக்க வைக்கலாம் என்று நினைத்து அவளைத் தூக்கியபடி விசையாக நடந்து அதிசீக்கிரத்தில் என்னுடைய ஜாகைக்குப்போய்ச் சேர்ந்தேன்.

அவ்விடத்தில் என்னுடைய வேலைக்காரி எனக்காக நல்ல ஆகாரம் தயாரித்து சித்தமாக வைத்துக் கொண்டிருந்தாள். அந்தப் பெண்ணை நான் வீட்டுக்குள் கொண்டுபோய் ஒரு படுக்கையில் சுகமாகப் படுக்க வைத்ததன்றி, என்னுடைய வேலைக்காரியை அழைத்து விஷயத்தை இரண்டொரு வார்த்தையில் அவளிடம் சொல்ல, அவள் உடனே பதறிப்போய் குளிர்ந்த ஜலம் கொணர்ந்து அந்தப்பெண்ணின் முகத்தில் தடவி வாயிலும்

வார்த்து, விசிறியால் வீசி, அவளது மூர்ச்சையைத் தெளிவித்து, சுடச்சுட நல்ல மாதுரியமான ஆகாரம் கொணர்ந்து பரிமாறி சாப்பிடச்செய்து சுகமான படுக்கையில் அவளைப் படுக்க வைத்தாள். அந்த இரவு முழுதும் அந்தப் பெண் கடுமையான துயிலில் ஆழ்ந்து நன்றாகத் தூங்கி மறுநாள் காலையில் களை தெளிந்து சந்தோஷமாக எழுந்தாள். அந்த இரவு முழுதும் நானும் என் வேலைக்காரியும் தூங்காமல் அவளையே கவனித்த வண்ணம் இருந்தோம். அந்தப்பெண் ஏழ்மை நிலைமையில் இருந்ததாகத் தோன்றவில்லை. அப்படிப்பட்ட பணக்கார வீட்டுப் பெண், எந்த ஊரிலிருந்து ஏன் அப்படித் தனிமையில் வந்திருப்பாள் என்று யூகித்து யூகித்துப் பலவாறு எண்ணமிட்டு, எதையும் நிச்சயிக்கமாட்டாமல் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தேன். மறுநாள் பொழுது விடிந்தவுடனே, அந்தப் பெண்ணுக்குச் சிற்றுண்டி முதலியவைகள் கொடுத்து உபசரிக்கச் செய்தேன். என்னுடைய வேலைக்காரி அவளை நிரம்பவும் பட்சமாகவும் அன்பாகவும் நடத்தி, அவளுக்கு வேண்டிய சௌகரியமெல்லாம் செய்து கொடுத்தாள். அந்தப்பெண்ணின் தேகபாதைகளெல்லாம் சுத்தமாகத் தீர்ந்து போயிற்று. அதனாலும், நாங்கள் அவளிடத்தில் காட்டிய அன்பையும் பிரியத்தையும் கண்டும், அவள் நிரம்பவும் மகிழ்ச்சி அடைந்து, நன்றியறிதல் காட்டினதன்றி, என்னுடைய வேலைக்காரியின் இடத்தில் கேட்டு என்னுடைய வரலாற்றை உணர்ந்து கொண்டாள். அவள் யார் என்பதையும், அவள் தன்னுடைய வீட்டை விட்டுத் தனியாக ஏன் வந்தாள் என்பதையும் அறிந்து கொள்ள நான் நிரம்பவும் ஆவல் கொண்டு அவளுடைய வரலாற்றைச் சொல்லும்படி நான் அவளிடம் நயமாகக் கேட்க, அவள் உடனே ஒருவித லஜ்ஜை அடைந்தவளாய்க் கொஞ்சம் தயங்கியபிறகு என்னைப் பார்த்து, ''ஐயா! தாங்கள் இன்னார் என்பதையும், தங்களுடைய குணவிசேஷங்களையும் நான் தங்களுடைய வேலைக்கார

அம்மாளிடம் கேட்டுத் தெரிந்து கொண்டேன். அதுவுமன்றி, நேற்று ராத்திரி என்னைத் தூக்கிக் கொண்டு வந்து உயிர் கொடுத்துக் காப்பாற்றி இவ்வளவு தூரம் எனக்கு உபசரணை செய்ததிலிருந்தே தங்களுடைய குணம் எவ்வளவு மேன்மையானது என்பதை நான் நிதரிசனமாகக் கண்டு கொண்டேன். ஆகையால், நான் என்னுடைய வரலாற்றைத் தங்களிடம் தெரிவிப்பதோடு, வேறு சில பயங்கரமான ரகசியங்களையும் தங்களிடம் தனியாக வெளியிட எண்ணுகிறேன். என்னுடைய சங்கதிகளையெல்லாம் தாங்கள் கேட்டால், என்மேல் தாங்கள் இதுவரையில் வைத்த அன்புக்கு நான் நிரம்பவும் பாத்திரமானவள் என்று தாங்கள் நினைப்பதோடு, என்னைக் கடைசிவரையில் காப்பாற்றி எனக்கு நல்ல வழி காட்டுவீர்கள் என்று நினைக்கிறேன். ஆனால் ஒரு விஷயம் இருக்கிறது. தாங்கள் மேலான ஜாதியில் பிறந்தவர்கள்; நானோ இழிவான தொழில் செய்யும் ஜாதியைச் சேர்ந்தவள். என்னுடைய வரலாற்றைக் கேட்டவுடன், என்னை உங்களுடைய வீட்டில் சேர்த்து எனக்கு இவ்வளவு தூரம் உபசரணை செய்ததைப் பற்றித் தாங்கள் ஒருவேளை சங்கடப்பட நேரும்'' என்று சொன்னாள்.

அதைக் கேட்ட நான், ''பெண்ணே நீ யாராக இருந்தாலும், அதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. ஒரு மனிதர் அபாயத்தில் இருந்தால், அவர்களுடைய ஜாதி என்ன மதமென்ன என்றுகேட்டு, அதற்குத் தகுந்தபடிதான் உதவி செய்ய வேண்டும் என்பது பொது தர்மமாகுமா? அது ஜீவகாருண்ய மாகுமா? ஒருநாளும் ஆகாது. ஆபத்து காலத்தில் எல்லோரும் ஒன்றுதான். கேவலம் ஒரு புழுவாக இருந்தாலும், அதற்கு ஓர் அபாயம் வருமானால், அதை நாம் காப்பாற்ற வேண்டுமேயன்றி, அது புழுவாயிற்றே என்று நாம் அலட்சியம் செய்வது கொஞ்சமும் தகாது. ஆகையால், நீ யாராக இருந்தாலும் பரவாயில்லை. வெளியிடலாம். நான் உனக்கு

உதவி செய்வதைப் பற்றியாவது, உன்னை என் வீட்டில் சேர்த்துக் கொண்டதைப் பற்றியாவது, நான் கொஞ்சமும் விசனப்பட மாட்டேன் என்பதை நீ உறுதியாக நம்பலாம். உன்னுடைய வரலாற்றினால், நீ அன்னிய மனிதரால் துன்பத்துக்கு ஆளாகி இருக்கிறாய் என்பது தெரியவருமானால், இப்போது நாங்கள் உன் விஷயத்தில் காட்டும் அன்பையும் பட்சத்தையும் விட இன்னம் பத்து பங்கு அதிகமாக நாங்கள் உன் விஷயத்தில் காட்டி உன்னைக் கடைசிவரையில் காப்பாற்றுவோம் என்பதையும் நீ நிச்சயமாக எண்ணிக் கொள்ளலாம்'' என்றேன். உடனே அந்தப் பெண் சிறிது நேரம் தயங்கியபின் தனது வரலாற்றை எடுத்துக் கூறத் தொடங்கி, ''ஐயா! என்னுடைய சொந்த ஊர் அம்மன்பேட்டை. அந்த ஊரில் கூத்தாடிச்சிகள் என்று ஒரு ஜாதியார் ஏராளமாக இருப்பது தங்களுக்குத் தெரிந்திருக்கலாம். நானும் அந்த ஜாதியைச் சேர்ந்தவள்தான். என் தாயாருடைய பெயர் அன்னத்தம்மாள் என்பது. அந்த ஊரில் உள்ள கூத்தாடிச்சிகள் எல்லோரிலும், நாங்களே அதிக பணக்காரர்கள். அந்த ஊரிலுள்ள கூத்தாடிச்சிகள் எல்லோருக்குள்ளும் என் தாயார் ஒரு மகாராணி போன்ற அதிகாரமும், செல்வாக்கும் உடையவள். இந்த ஊர் மகாராஜாவினுடைய புத்திரரும் வேறு சில பெரிய ஜெமீந்தார்களுமே எங்களுக்குச் சிநேகிதமான மனிதர்கள். என்னோடு கூடப்பிறந்தவர்கள் எல்லோரும் பெண்களே. என்னைத் தவிர இன்னம் நாலுபெண்கள் இருந்தார்கள். எல்லோரிலும் கடைசிப் பெண்ணான செல்லம் என்பவள் சில தினங்களுக்கு முன்பு விஷஜுரம் கண்டு திடீரென்று இறந்து போய் விட்டாள். இப்போது நாங்கள் நாலுபேர்தான் உயிரோடு இருக்கிறவர்கள். நான் மூன்றாவது பெண், என்னை சிவபாக்கியமென்று கூப்பிடுவார்கள். எங்களுடைய தாய் எங்களையெல்லாம் பொதுவான கல்வியில் கொஞ்சம் பயிற்றியிருப்பதோடு சங்கீத வித்தையிலும் நன்றாகத்

தேற்றியிருக்கிறாள். ஆனால், நான் மற்றவர்களை எல்லாம் விட நம்முடைய நீதி நூல்களையும் புண்ணிய சரித்திரங்களையும் அதிகமாகப் படித்துக்கொண்டேன். ஆகையால், எந்த விஷயத்திலும், அக்கிரமமாகவும் அநீதியாகவும் நடந்து கொள்வதென்றால் அது எனக்கு எப்போதும் பிடிக்கிறதில்லை. மற்ற மூவர்களும் அப்படியல்ல. எங்கள் தாயார் எதைச் செய்யச் சொல்லுகிறார்களோ, அதை மற்றவர்கள் உடனே செய்து விடுவார்கள். நான் மாத்திரம் அப்படிச் செய்கிறதே இல்லை. அம்மாள் செய்யச் சொல்லும் விஷயம் பிறருக்குக் கெடுதல் உண்டாக்கக் கூடியதாக இருந்தால், அப்படிச் செய்யக் கூடாது என்று நான் நியாயம் எடுத்துச் சொல்வது வழக்கம். அதனால், என் தாய்க்கும் என்னோடு கூடப் பிறந்தவர்களுக்கும் என்னிடத்தில் ஒருவித அதிருப்தி இருந்து வந்தது. எப்போதும் அவர்கள் ஐவரும் ஒரு கட்சி; நான் மாத்திரம் தனியான கட்சி. இந்த நிலைமையில் அவர்கள் சென்ற ஒரு மாச காலமாக எனக்குத் தெரியாதபடி தங்களுக்குள்ளாகவே கூடிக்கூடிப் பேசி ஏதோ ஒரு பெருத்த சதியாலோசனை செய்து வந்தார்கள் போலிருக்கிறது. அந்தச் சதியோலோசனை இன்னது என்பது எனக்குச் சில தினங்களுக்கு முன்னேதான் தெரியவந்தது; ஆகா! அதை நான் என்னவென்று வெளியிடுவேன்! எங்களுக்காவது வேறே எவருக்காவது ஒரு தீங்கையும் செய்தறியாத ஓர் உத்தம ஸ்திரீயை இவர்கள் அநியாயமாகக் கெடுத்து அந்த அம்மாள் தன் புருஷனோடு வாழமுடியாமல் செய்துவிட ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறார்கள். அந்த உத்தம ஸ்திரீ சாதாரணமான ஏழை மனிஷியல்ல; நம்முடைய தேசத்துப் பட்ட மகிஷி ஆகக்கூடிய மகோன்னதமான நிலைமையிலுள்ள ஒரு ராஜஸ்திரீ. அந்த வரலாற்றை நான் இன்னும் விரிவாகச் சொல்லுகிறேன். நம்முடைய ராஜ்யத்தின் இளவரசர் ஏராளமான ஆசை நாயகிகளை வைத்துக்கொண்டிருந்தாலும், அவர் சாஸ்திரப்படி கலியாணம் செய்துகொண்ட பட்டமகிஷி பூனாதேசத்து

மகாராஜனுடைய மகள் என்பது தங்களுக்கு ஒருவேளை தெரிந்திருக்கலாம். அந்தப் பூனாதேசத்து மகாராஜன் இப்போது தேக அசௌக்கியம் அடைந்து நிரம்பவும் அபாய நிலைமையில் இருக்கிறாராம். அவரைப் பார்ப்பதற்காக, அவருடைய புத்திரியும் நம் இளவரசருடைய பட்டமகிஷியான **லலித குமாரிதேவி** என்னும் பதிவிரதா சிரோன்மணி பூனாவுக்குப் போய் மூன்று மாசகாலமாகிறது. நம் இளவரசருக்கு **லலித** குமாரிதேவி யிடத்தில் கொஞ்சமும் பிரியம் என்பதே இல்லை. அவர் அவளுடைய அந்தப் புரத்திற்குப் போகிற வழக்கத்தையே நிறுத்திவிட்டார். அப்படி இருந்தாலும், இளவரசருடைய தாயாரான பெரிய ராணிக்குத் தமது மருமகளிடத்தில் அத்தியந்தப் பிரியம் உண்டு. பூனாவுக்குப் போயிருக்கும் லலிதகுமாரி தேவி தன்னுடைய பணிவிடைகளைச் செய்யத் தனக்கு நான்கு பணிப்பெண்களை அனுப்பி வைக்கும்படி இந்த ஊர்ப் பெரிய ராணிக்குக் கடிதம் எழுதியிருக்கிறாளாம். அதைப் பார்த்த பெரிய ராணி இந்த ஊரிலுள்ள தமக்குப் பழக்கமான அம்மணிபாயி என்ற ஒருத்தியை அழைத்துப் பூனாவுக்கு அனுப்ப நான்கு தாதிப் பெண்கள் தேவையென்றும், நல்லவர்களாகப் பார்த்து அழைத்து வரும்படியும் சொன்னார்களாம். அந்த அம்மணிபாயி சாதாரணமான மனிஷியல்ல. அவள் தன்னுடைய பாலிய காலத்தில் இந்த ஊர் இளவரசருக்கு உயிருக்கு உயிராக இருந்து அவரிடத்தில் கொள்ளையடித்து லக்ஷம் லக்ஷமாக சொத்தைச் சேர்த்தவள். ஆனால், அவளுக்கு இப்போது அதிக வயசாகிவிட்டதென்று, இளவரசர் அவளை அலட்சியம் செய்துவிட்டார். அவள் இளவரசரைக் கடைசிவரையில் தன்னுடைய வலையில் போட்டுக்கொள்ள வேண்டும் என்று நினைத்து ஏதேதோ சதியாலோசனை செய்துவருகிறாள். இந்த உலகத்தில் இதுவரையில் யாரும் பார்த்தறியாத அவ்வளவு அபரிமிதமான அழகும் புத்திசாலித்தனமும் ஸரஸ குணமும் நிறைந்த ஒரு பெண்ணை அவள் எங்கிருந்தோ சம்பாதித்து

வைத்திருக்கிறாளாம். அவளை நம் இளவரசருக்குக் கலியாணமே செய்துவைத்துவிட்டு அவள் மூலமாக ஒரு பெரிய ஜெமீன் சமஸ்தானத்தையும் கோடிக்கணக்கான பொருளையும் சம்பாதித்துவிடவேண்டுமென்ற உறுதி செய்து கொண்டிருக்கிறாளாம். அவளுக்கும் எங்கள் அம்மாளுக்கும் நிரம்பவும் சிநேகமுண்டு. அவள் எங்கள் அம்மாளிடம் வந்து தனது ரகசியங்களை எல்லாம் சொல்ல, இருவரும் கலந்து ஒரு பெரிய சதியாலோசனை செய்தார்கள். நான் அவர்களுடைய இஷ்டப்படி செய்ய சுலபத்தில் இணங்கமாட்டேன் என்பது தெரியும். ஆகையால், என்னிடம் எந்தச் சங்கதியையும் தெரிவிக்காமல், என் சகோதரிகள் நால்வரையும் பூனா தேசத்துக்கு அனுப்புவது என்றும் அவர்கள் அங்கே போய் மகாயோக்கியர்கள் போல நடித்து, லலிதகுமாரி தேவிக்கு விபாசாரதோஷம் கற்பித்து அதை இளவரசர் நம்பும்படி மெய்ப்பிக்கத்தக்க சில சாட்சியங்களைத் தயாரிக்க வேண்டும் என்றும் அவர்கள் இருவரும் தீர்மானம் செய்து கொண்டார்கள். அந்த மகா பயங்கரமான சதியாலோசனையில் எங்கள் தாயாரும் கலந்துகொண்டதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. போன வருஷத்தில் தீபாவளிப் பண்டிகை யன்று, மற்ற எல்லோரையும் போல, எங்கள் தாயாரும் லலிதாகுமாரி தேவியைப் பார்த்து சன்மானம் வாங்கப் போன காலத்தில், இளவரசி எங்கள் தாயாருக்குப் பேட்டி கொடுக்க மறுத்து விட்டாளாம். அந்த ஆத்திரம் மனசிலிருந்து வந்ததால், அவளுக்கு ஏதேனும் தீங்கு செய்ய வேண்டும் என்பது எங்கள் அம்மாளுடைய எண்ணம். அதுவும் அன்றி, இளவரசர் லலிதாகுமாரி தேவியை விலக்கிவிட்டு, அம்மணி பாயியினால் சேகரித்து வைக்கப்பட்டுள்ள பெண்ணைப் பட்டமகிஷியாக்கிக் கொண்டவுடனே, அவளுடைய சிபார்சைக் கொண்டு, தாங்கள் இருவரும் அம்மன்பேட்டை என்ற கிராமத்தை எங்கள் அம்மாள்பேரில் சர்வமானியமாக எழுதி வைத்துவிடச் செய்வதாக அந்த

அம்மணிபாயி வாக்குறுதி செய்து கொடுத்திருக்கிறாள். இந்த இரண்டு காரணங்களைக் கொண்டு எங்கள் தாயாரும் அந்தச் சதியாலோசனையை எப்படியாவது நிறைவேற்றி விடுவது என்று முனைந்து நிற்கிறாள். நிலைமை இப்படி இருக்க சில தினங்களுக்கு முன் என்னுடைய கடைசித் தங்கை விஷ ஜுரம் கண்டு இறந்து போய்விட்டாள். அதன் பிறகு என் தாயார் வேறே வகையில்லாமையால் இறந்து போனவளுக்குப் பதிலாக என்னை அனுப்ப நினைத்து இந்த ரகசியத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக என்னிடம் வெளியிடத் தொடங்கியதன்றி என்னிடம் வழக்கத்துக்கு மாறான அபாரமான வாஞ்சையும் அருமையும் பாராட்டி என்னை ஸ்தோத்திரம் செய்து தங்களுடைய சதியாலோசனைக்கு இணங்கி வரும்படி என்னை நயந்து கேட்டுக் கொண்டாள். அப்போதுதான் நான் இந்த அக்கிரமச் சதியாலோசனையின் விவரங்களை அறிந்தேன். அதை உணர, என் மனம் பட்ட பாட்டை நான் என்னவென்று வெளியிடுவேன்! அப்படிப்பட்ட படுமோசத்தில் இறங்கத் துணியும் கொடும்பாவியான மனிஷியின் வயிற்றில் வந்து நான் பெண்ணாகப் பிறக்க நேர்ந்ததே என்ற பெருத்த துயரம் என் மனசில் எழுந்து குடிகொண்டது. அந்த வீட்டில் இருக்கவும், அவர்களை என் தாயார், சகோதரிகள் என்று சொல்லி முறைமை பாராட்டவும் என் மனம் கூசியது. நானோ உலக அனுபோகம் இல்லாத இளம்பெண். நான் அவர்களைவிட்டு விலகி வேறாக இருக்க முயன்றாலும், அவர்கள் என்னைச் சும்மா விட மாட்டார்கள். இந்த ரகசியம் எனக்குத் தெரிந்துபோனது ஆகையால், நான் அதை வெளியிட்டு விட்டால், அவர்களுக்குத் தீங்கு சம்பவிக்கும் என்ற எண்ணத்தினால் தூண்டப்பட்டு யாரையாவது ஆளை அமர்த்தி என்னைக் கொல்லச் செய்தாலும் செய்து விடுவார்கள் என்ற பயம் என் மனசில் தோன்றியது. இந்தச் சதியாலோசனையின் விவரங்களை எப்படியாவது இளவரசருக்கும், அவருடைய தாயாருக்கும் தெரிவித்து எச்சரித்துவிடலாமா என்ற யோசனை என் மனதில்

தோன்றியது. அப்படிச்செய்தால், அதனால் என் தாயாருக்கும் சகோதரிகளுக்கும் பெருத்த ராஜதண்டனை ஏதாவது ஏற்பட்டு விடும் என்ற பயமும் இரக்கமும் உண்டாகி, அப்படிச் செய்வது சரியல்ல என்று தடுத்துவிட்டன. ஆகையால், நான் எப்படி நடந்துகொள்வது என்ற யோசனையிலேயே நான் என் முழு மனதையும் செலுத்தி யிருந்ததன்றி, என் தாயார் சந்தேகப்படாமல் இருக்கும்படி, அவளுடைய பிரியப்படி நடந்து கொள்வதாக நான் ஒப்புக் கொண்டேன். என்னுடைய சம்மதியைக் கேட்ட என் தாயார் நிரம்பவும் சந்தோஷம் அடைந்தது அன்றி, எங்கள் நால்வரையும் பூனாவுக்கு அனுப்பி வைப்பதற்காக சகலமான முஸ்தீபுகளையும் தயாரித்தாள். பெரிய ராணியிடத்தில் கடிதம், பணம், ஆடை ஆபரணங்கள் முதலியவைகளையும் என் தாயார் வாங்கிக் கொண்டு நேற்றைக்கு முந்திய நாளைக்கு முந்திய நாள் விடிய ஜாமத்துக்கு எங்களை அவசியம் அனுப்பி விடுவதாகச் சொல்லிவிட்டு அதை எங்களிடம் தெரிவித்தாள். எங்களுக்காக அரண்மனையிலிருந்து இரட்டைக் குதிரைகள் பூட்டிய பெட்டி வண்டி ஒன்றும், எங்களுக்கு வேண்டிய சாப்பாட்டு சாமான்கள் பாத்திரங்கள் முதலியவற்றை எடுத்துவர இரண்டு மாட்டு வண்டிகளும் எங்களுக்குக் கொடுக்கப்பட்டன. அந்த வண்டிகளோடு நாங்கள் பிரயாணம் செய்து செஞ்சிக்கோட்டை வரையில் போகிறது என்றும், அவ்விடத்து மகாராஜன் இந்த ஊர்ப் பெரிய ராணிக்கு நெருங்கிய பந்துவாகையால் அவரிடம் ஒரு கடிதம் கொடுத்து, அங்கிருந்து வேறு வண்டிகள் பெற்றுக் கொண்டு வடக்கே போகிறதென்றும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. சகலமான ஏற்பாடுகளும் முடிந்து போனதைக் காண, என் மனம் பதறியது. ஹிருதயம் திடுக்கு திடுக்கென்று அடித்துக்கொண்டது. நான் நெருப்புத் தணலின் மேல் இருப்பவள் போலத் தவித்துக் கொண்டிருந்தேன். ஆனால், என்னுடைய சகோதரிகள் பிரயாணம் போவதைப் பற்றிக் கட்டிலடங்காக் குதூகலமும் மன வெழுச்சியும்

அடைந்து வெகுநேரம் வரையில் எங்கள் தாயாரோடு சந்தோஷமாகப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்து கடைசியில் அலுத்துப் போய்த் தூங்க ஆரம்பித்தார்கள். நான் மாத்திரம் விழித்துக் கொண்டே இருந்து ராத்திரி இரண்டு மணி சமயத்தில் படுக்கையை விட்டு மெதுவாக எழுந்து கொல்லைப் பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு ஓசை செய்யாமல் வெளியில் போய் ஓட்டமாக ஓடினேன். அன்றையதினம் பகலில் நான் என் தாயாருக்கு ஒரு கடிதம் எழுதினேன். அவர்கள் செய்ய நினைத்திருக்கும் படுமோசத்தில் சம்பந்தப்பட எனக்கு இஷ்டமில்லை யாகையால், நான் பூனாவுக்குப் போக மாட்டே னென்றும், அவர்களுடைய வீட்டைவிட்டுப் போகிற தாகவும், அவர்களுடைய துர் எண்ணத்தை மாற்றி லலிதகுமாரி தேவியிடத்தில் இரக்கத்தையும் ஜீவகாருண்யத்தையும் உண்டாக்க வேண்டும் என்று நான் ஈசுவரனை வேண்டிக் கொள்வதாகவும், நான் அந்தக் கடிதத்தில் எழுதினேன். அதுவுமன்றி, நான் அவர்களுடைய வஞ்சகத்தை இளவரசரிடம் வெளியிட்டு ஒரு வேளை அவர்களைக் காட்டிகொடுத்துவிடப் போகிறேன் என்ற கவலை அவர்களுக்கு வேண்டாம் என்றும் நான் அந்தக் கடிதத்தில் எழுதி அதை என் படுக்கையின் மேல் வைத்துவிட்டு முன் சொன்னபடி ஓசை செய்யாமல் வெளிப்பட்டு ஓட்டமாக ஓடினேன். அந்த அம்மன்பேட்டையி லிருந்து போகும் ராஜபாட்டையின் வழியாகப் போனால், என் தாயார் ஆள்களை அனுப்பித் தேடச் செய்வது நிச்சயம். ஆகையால், அவர்கள் என்னை எப்படியும் பிடித்துக் கொள்வார்கள் என்று நினைத்து நான் காடுகளிலும் மேடு களிலும் வயல்களிலும் விழுந்து தாறுமாறாக ஓடினேன். நான் எங்கே போகிறது என்பதையும், என்ன செய்கிறது என்பதையும் அறியாமல், திக்குத் திசை உணராமல் பைத்தியம் பிடித்தவள் போல, அந்த இருளில் ஓடிக்கொண்டே இருந்தேன். அந்த ராத்திரி முழுதும் நான் அலைந்தது சுமார் பத்துமைல் தூரம் இருக்கும். பொழுது விடிந்தபொழுது, விஸ்தாரமாக

இருந்த பயங்கரமான ஒரு பொட்டல் வெளியில் நான் இருக்கக் கண்டேன். அவ்விடத்தில் கண்கண்ட தூரம் வரையில் வீடாவது தண்ணீராவது காணப்படவில்லை. மரங்கள் மாத்திரம் இருந்தன. நான் நிரம்பவும் களைத்துப் போயிருந்தேன் ஆகையால், ஒரு மரத்தின் அடியில் படுத்துக் கொண்டிருந்தேன்'' என்றாள். அந்த மகா பரிதாபகரமான வரலாற்றைக் கேட்கவே என் மனம் பதறிப் போய்விட்டது. நான் உடனே அந்தப் பெண்ணைப் பார்த்து, ''ஆகா! என்ன ஆச்சரியம்! உலகத்தில் இப்படிப்பட்ட அட்டூழியமும் நடக்குமா! இப்படிப்பட்ட கொடும் பாவிகளான மனிதர்களும் இந்த உலகில் இருக்கிறார்களா! நீ சொன்ன வரலாறு உண்மையான தென்றே, என் மனம் நம்பமாட்டேன் என்கிறதே! அது போகட்டும். நீ அந்தப் பொட்டல் வெளியில் நேற்றைக்கு முந்தியநாள் காலையில் அல்லவா மரத்தடியில் படுத்தது. அதுமுதல், நேற்று ராத்திரி ஒன்பது மணிக்கு நான் உன்னைக் கண்டுபிடித்தவரையில் நீ எங்கே இருந்தாய்? அதை முன்னால் தெரிவி'' என்றேன். உடனே அந்தப்பெண், ''நேற்றைக்கு முந்தியநாட் காலையில் நான் அந்தப் பயங்கரமான பொட்டல் வெளியில் மரத்தடியில் குளிர்ந்த மணலின்மேல் படுத்தேன் அல்லவா. முதல் நாள் இரவெல்லாம் முள்ளிலும் கல்லிலும் விழுந்து அலைந்து திரிந்ததனால், என்னுடைய கால்கள் முற்றிலும் தளர்ந்து தள்ளாடின; உடம்பு முழுவதும் கடுமையான வலியும் அயர்வும் உண்டாயின. தாகத்தினால் நாவறண்டு போயிற்று. அந்த நிழலிலிருந்த மணலின் மேல் நான் உட்கார்ந்தது எனக்குப் பிரம்மானந்த சுகமாக இருந்தது. கொஞ்ச நேரத்தில் நான் அப்படியே தூங்கிப் போய்விட்டேன். வெகுநேரம் வரையில் நான் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தேன். சூரியன் கிழக்கிலிருந்து உச்சிக்குப்போய் மேற்குப் பக்கமாகச் சாயத் தொடங்கியது. அப்போது நான் இருந்த இடத்தில் வெயில் அடிக்க ஆரம்பிக்கவே, கொஞ்ச நேரத்தில் அந்த வெயில் என் உடம்பில் கடுமையாகத்

தாக்கியது. நான் உடனே எழுந்து உட்கார்ந்து கொண்டேன். உடம்பு முழுதும் வியர்வை வெள்ளமாக வழிந்து ஓடுகிறது. பசியினாலும் தாகத்தினாலும் கண்கள் இருளுகின்றன. உடம்பு தவிக்கிறது. எங்கு பார்த்தாலும் கடுமையான வெயில் வீசி நெருப்புக் குழம்பைக் கக்குகிறது. அந்த நிலைமையில் எழுந்து எந்தத் திக்கிலாவது நடக்கலாம் என்றால், நிரம்பவும் பயமாக இருந்தது. ஆகையால், நான் மெதுவாக எழுந்து, மரத்தின் அப்புறத்தில் நிழலிருந்த இடத்தில் போய் உட்கார்ந்துகொண்டு பொழுதைப் போக்கினேன். அதன்பிறகு பகல் நான்கு மணி நேரம் இருக்கலாம். வெயில் பொறுக்கும் படியான நிலைமையில் இருந்தது. பசி தாகத்தினால் அவஸ்தைப் பட்டுக் கொண்டே அவ்விடத்தில் சும்மா உட்கார்ந்திருப்பதை விட எழுந்து ஏதாவது ஒரு திக்கில் நடந்து போனால், நான் ஏதாவது ஓர் ஊரை அடைந்து ஒரு வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து ஆகாரம் தண்ணீர் முதலியவைகளுக்கு ஏற்பாடு செய்துகொள்ளலாம் என்று நினைத்து எழுந்து ஏதோ ஒரு திக்கை நோக்கி நடக்கலானேன். அப்படி நான் சுமார் இரண்டு மைல் தூரம் நடந்திருப்பேன். அவ்விடத்தில் புஞ்சைப் பயிர்கள் நிறைந்த வயல்களும் பனந்தோப்புகளும் ஆரம்பமாயின. அவ்விடத்துக்குப் பக்கத்தில் ஏதாவது ஊர் இருக்க வேண்டும் என்ற ஒரு தைரியம் உடனே உண்டாயிற்று. ஆகையால், நான் வயல்களின் வழியாக நடந்து கொண்டே போனேன். ஒரு மனிதர்கூட என் கண்ணில் படவில்லை. தண்ணீர் இருக்கக்கூடிய இடமே காணப்பட வில்லை. கால்கள் பின்னுகின்றன. தாகத்தின் வெப்பத்தைப் பொறுக்கமாட்டாமல் என்னுடைய மார்பு இரண்டாக விரிந்து போகும் போலாய்விட்டது. அந்த மகா கஷ்டமான நிலைமையில் நான் நடந்துகொண்டே போக சூரியன் அஸ்தமித்து விட்டான். கொஞ்ச நேரத்தில் இருளும் வந்து சூழ்ந்துகொண்டது. அதற்கு மேல் என்னால் நடக்க முடியவில்லை. அவ்விடத்தில் ஒரு வயலின் பக்கத்தில் காய்ந்து

மணலாக இருந்த ஒரு வாரியில் உட்கார்ந்து கொண்டேன். பசி, தாகம், களைப்பு, மயக்கம் முதலியவை மிதமிஞ்சி என்னைக் கப்பிக்கொண்டன. ஆகையால், கொஞ்ச நேரத்தில் என் உணர்வே தவறிப்போய்விட்டது. அதன்பிறகு என்ன நடந்தது என்பதே எனக்குத் தெரியாது. நான் உட்கார்ந்திருந்தேனோ படுத்திருந்தேனோ என்பதுகூட எனக்குத் தெரியாது. மறுநாட்காலையில் சூரியன் வெகுதூரம் உயர்ந்து என் உடம்பில் கடுமையாக உறைத்த பிறகே நான் எழுந்தேன். என் கண்களெல்லாம் குழிந்துபோக உயிரில் முக்கால் பாகமும் போய்விட்டதாகத் தோன்றியது. எழுந்து நடக்கலாம் என்றால், உடம்பு கட்டுக்கடங்காமல் அப்படியே பச்சைப் புண்ணாகக் கிடந்தது. அன்றோடு நான் இறந்து போவது நிச்சயமென்ற எண்ணம் என் மனசில் உண்டாகத் தொடங்கியது. நான் தனியாக எங்கேயாவது போய் இனி கஷ்ட ஜீவனம் செய்வதை விட அப்படியே இறந்துபோவதும் நல்லதாகத் தோன்றியது. நான் அவ்வளவு பரிதாபகரமான நிலைமையில் இருந்த போதிலும், என் தாயாரைவிட்டு நான் ஓடி வந்ததைப் பற்றி என் மனசில் கொஞ்சமாவது விசனமே உண்டாகவில்லை. ஆனாலும், என் மனசில் ஒரே ஒரு குறை மாத்திரம் இருந்து வந்தது. நான் மாத்திரம் தஞ்சாவூருக்குப் போய்ச் சேர்ந்தால், யாரிடத்திலாவது இந்த ரகசியத்தை வெளியிட்டு, அவர்களுடைய உதவியைக் கொண்டு பூனாவிலுள்ள லலிதாகுமாரி தேவியை ஒருவாறு எச்சரிக்கும்படி செய்யலாம் என்ற ஒரு யோசனை தோன்றிக் கொண்டிருந்தது. இந்த ரகசியத்தை அறிந்தவர் என்னைத் தவிர வேறே அயலார் யாருமில்லை. ஆகையால், என் சகோதரிகள் தங்களுடைய கருத்தை எவ்வித இடையூறும் இல்லாமல் நிறைவேற்றி விடப் போகிறார்களே என்ற வேதனையும் ஒரு பக்கத்தில் என்னை வதைத்தது. ஆகையால், நான் கடைசி முயற்சியாக முயன்று மெதுவாக எழுந்து இன்னம் கொஞ்ச தூரம் போய்ப் பார்க்க வேண்டும் என்ற நினைவினால் தூண்டப்பட்டு

தட்டித்தடுமாறி எழுந்தேன். எழுந்து இருபது கஜ தூரம் நடப்பதற்குள் நான் பல இடங்களில் மயங்கி விழுந்து விட்டேன். ஆனால், கொஞ்ச தூரத்தில் ஒரு நாவல் மரம் தென்பட்டது. அந்த மரம் முழுதும் பழங்கள் மயமாக நிறைந்து காணப்பட்டது, தரை முழுதும் ஒரு சாண் உயரம் பழங்கள் விழுந்து அடர்ந்து கிடந்தன. அதைக் காணவே எனக்கு உயிர் திரும்பியது. நடப்பதற்கு ஒருவித திடமும் உண்டாயிற்று. காற்றில் அந்த மரத்தின் கிளைகள் அசைந்தசைந்து ஆடியது, "இங்கே வா; கவலைப்படாதே; இனி நீ பிழைத்துப் போவாய்" என்று சொல்லி எனக்கு அபயஸ்தம் கொடுத்து என்னைக் கூப்பிடுவதுபோல இருந்தது. நான் மெதுவாக எழுந்து பல்லைக் கடித்துக் கொண்டு நடந்து அந்த நாவல்மரத்தண்டை போய்க் கீழே கிடந்த பழங்களில் சிலவற்றை எடுத்து வாயில் போட்டுக் கொண்டேன். ஆகா! அவைகள் தேவாமிருதம்போல இருந்தன. காய்ந்து கட்டை போல மாறிப்போயிருந்த என்னுடைய வாயிலும் தொண்டையிலும் அந்தப் பழங்களின் சாறு படவே, என்னுடைய தாகமும் ஒருவாறு தணிந்தது. நான் மேன்மேலும் அந்தப் பழங்களை எடுத்து எடுத்து மிகுந்த ஆவலோடு தின்றேன், அது ஆகாரமாகவும் தண்ணீராகவும் உபயோகப்பட்டது. ஆகையால், என் வயிறும் ஒருவாறு நிறைந்தது; தாகமும் கொஞ்சம் அடங்கியது. அதற்குமேலும் பழங்களைத் தின்ன என்னால் முடியவில்லை ஆகையால், அவ்வளவோடு நிறுத்தி, அவ்விடத்தில் நிழலில் கொஞ்சநேரம் இருந்தபின் புறப்பட்டு மேலும் நடக்கத் தொடங்கி வெகுதூரம் வந்தேன். மறுபடியும் பொழுது போய் விட்டது. சாயுங்காலவேளை வந்துவிட்டது. அந்தச் சமயத்தில் நான் இந்தத் தஞ்சாவூரின் மேலக்கோடிக்கு வந்து சேர்ந்தேன். இந்த ஊரில் யோக்கியமான மனிதரால் வைக்கப்பட்டுள்ள சோற்றுக்கடை எங்கேயாவது இருக்கிறதா என்று விசாரித்து, அந்த இடத்துக்குப் போய், போஜனம் செய்து அவ்விடத்திலே ராத்திரிப் பொழுதைக் கழித்து மறுநாள் எழுந்து, மேலே

நடக்கவேண்டியதைப் பற்றி யோசனை செய்து கொள்ளலாம் என்பது என்னுடைய எண்ணம். நான் வந்தவழி சிறிய சந்தாகவும், இருள் அடர்ந்ததாகவும் இருந்தது. அந்த வழியில் நான் சந்தித்த மனிதர்கள் தக்க கௌரவம் வாய்ந்த மனிதர் களாகக் காணப்படாமல், அழுக்கடைந்த அசங்கியமான தோற்றத்தோடு இருந்த கீழ்ச்சாதி மனிதர்களாகக் காணப்பட்டார்கள். அவர்களோடு பேசுவதற்கே எனக்குப் பிடிக்கவில்லை. இருந்தாலும், என்னுடைய சங்கடமான நிலைமையை உத்தேசித்து நான்அவர்களோடு பேசியே தீரவேண்டியிருந்தது. நான் கேட்ட கேள்விக்குச் சிலர் துடுக்கான மறுமொழி சொன்னார்கள்; சிலர் என்னைப் பார்த்துப் புரளி செய்தார்கள். அதற்குமேல் நான் யாரோடும் பேசப் பிரியப்படாமல் மேலும் கொஞ்சதூரம் நடந்து வந்தேன். அப்போது எனக்குக் கிறுகிறுப்பும் மயக்கமும் உண்டாகவே, நான் அதற்குமேல் நடக்க முடியவில்லை. பக்கத்திலிருந்த ஒரு வீட்டு வாசல் திண்ணையில் உட்கார்ந்தேன். அப்போது அந்த வழியாக வந்த ஒரு மனிதன் நான் இருந்த சங்கடமான நிலைமையைக் கண்டு என்னிடம் வந்து நிரம்பவும் அன்பாகப் பேசத் தொடங்கி நான் யார் என்பதையும் நான் அப்படிச் சோர்ந்திருக்க வேண்டிய காரணமென்ன என்பதையும் கேட்க, அவனது உருக்கமான சொல்லைக்கேட்ட நான் நிரம்பவும் சந்தோஷம் அடைந்து சோற்றுக் கடை எங்கே இருக்கிறது என்று நான் அவனிடம் விசாரிக்க, அவன் என்னை யோக்கியமான ஓரிடத்துக்கு அழைத்துக்கொண்டு போவதாகச் சொல்லி, என்னை அழைத்துக் கொண்டு சில சந்துகளையும் தெருக்களையும் கடந்து முன்னிலும் அதிக இருள் நிறைந்த ஒரு சந்திற்குள்ளிருந்த ஒரு வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனான். நான் அந்த வீட்டுக்குள் போய், கூடத்தில் இருந்த ஒரு விசிப்பலகையின் மேல் அப்பாடா என்று உட்கார்ந்து படுத்துக்கொண்டேன். அப்படி அந்தப் பலகையின் மேல் நான் படுத்ததே எனக்குச் சொர்க்க லோகமாகத் தோன்றியது. என்னை

அழைத்துவந்த மனிதன், தான் உள்ளே போய், முதலில் தண்ணீர் அனுப்புவதாகவும் கொஞ்ச நேரத்தில் சாப்பாடு தயாரிக்கச் செய்து உண்பிப்பதாகவும், சொல்லிவிட்டு இரண்டாங் கட்டுக்குப் போனான். நான் படுத்து அரைத் தூக்கத்தில் ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்த சமயத்தில் ஒரு பெண்பிள்ளை சந்தடி செய்யாமல் மெதுவாக நடந்து வந்து என்னைத் தட்டி எழுப்ப, நான் உடனே திடுக்கிட்டு எழுந்தேன். அந்தப் பெண் பிள்ளை மிகவும் தணிவான குரலில் பேசத்தொடங்கி, அந்த இடம் திருடர்களும் கொலைகாரர்களும் இருக்குமிடம்; ஆகையால் உடனே புறப்பட்டு சந்தடி செய்யாமல் வெளியில் போய் எங்கேயாவது ஓடிப்போகும்படி எச்சரித்துவிட்டு விசையாக நடந்து வெளியில் போய்விட்டாள். அந்தச் சங்கதியைக் கேட்டவுடனே என் அங்கம் பதறிப் பறந்தது. மனம் பரமவேதனை அடைந்தது. நான் உடனே சடேரென்று எழுந்து ஓசை செய்யாமல் நடந்து வெளியில் போய் ஓட்டமாக ஓடினேன். என்னுடைய உடம்பில் கொஞ்சமும் சீவனில்லாது இருந்தாலும், அந்த வீட்டிலுள்ள திருடர்கள் எனக்கு எவ்விதமான துன்பம் செய்வார்களோ என்ற திகிலே அந்தச் சமயத்தில் எனக்கு அபாரமான வலுவைக் கொடுத்து என்னைத் தள்ளிக்கொண்டு போனது; நான் தலைகால் தெரியாமல் அங்கும் இங்கும் ஓடி அலைந்து கடைசியாக ஒரு பெரிய ரஸ்தாவுக்கு வந்து சேர்ந்தேன். அவ்விடத்தில் மனிதர்களுடைய நடப்பே காணப்படவில்லை. மணியும் ஒன்பது ஆகியிருக்கலாம். வழியில் கொஞ்ச தூரத்துக்கு ஓரிடத்தில் லாந்தர்க் கம்பங்கள் இருந்தன. அந்த வழியாக நான் வரும்போது ஒரு லாந்தர் கம்பத்தடியில் ஒரு கல்லில் கால் தடுக்க நான் கீழே விழுந்து மயங்கிப் போய்விட்டேன். அப்போது தான் தாங்கள் வந்து என்னைக்கண்டு தூக்கி எடுத்துத் தங்களுடைய ஜாகைக்குக் கொண்டு வந்து எனக்கு உயிர் கொடுத்து என்னைக் காப்பாற்றியது. இவ்வளவுதான் என்னுடைய வரலாறு. தாங்கள் என்னைக் காப்பாற்றிச் சம்பாதித்துக் கொண்ட புண்ணியத்தை

விட, நூறுமடங்கு அதிகமான புண்ணியம் தங்களுக்கு லயிக்கும்படி தாங்கள் ஏதாவது உபாயம் செய்து, அந்த மகா உத்தமியான லலித குமாரி தேவிக்கு என் சகோதரிகளால் ஏற்படப்போகும் இடரை விலக்க வழி தேட வேண்டும். ஆனால், அதனால் என் தாயாருக்கும், என் சகோதரிமார் களுக்கும், எவ்விதமான பொல்லாங்கும் நேராதபடி பார்த்துக் கொள்ள வேண்டும். இதுதான் நான் தங்களைக் கேட்டுக் கொள்வது'' என்று நிரம்பவும் உருக்கமாகவும் பரிதாபகரமான குரலோடும் சொன்னாள். அவளது மகா துக்ககரமான வரலாற்றைக் கேட்க, என் மனம் கரைந்து உருகிப்போய் விட்டது. அவள் விஷயத்தில் அளவற்ற இரக்கமும் பிரியமும் உண்டாயின. நான் உடனே அவளைப் பார்த்து, ''சிவபாக்கியம்; நீ இனி எதைப் பற்றியும் கவலைப்படத் தேவையில்லை. நான் உடனே புறப்பட்டு அம்மன்பேட்டைக்குப்போய், உன்னுடைய சகோதரிகள் புறப்பட்டுப் போய்விட்டார்களா என்பதைத் தந்திரமாக அறிந்து கொள்ளுகிறேன். அவர்கள் இன்னமும் புறப்பட்டுப் போகாமல் இருந்தால், அவர்களை அனுப்பாமல் பெரிய ராணி தடுத்துவிடும்படி நான் சில பெரிய மனிதர்களைக் கொண்டு ஏற்பாடு செய்கிறேன். அவர்கள் புறப்பட்டுப் போயிருந்தால், நானும் இன்றையதினமே புறப்பட்டுப் பூனாவுக்கு நேரில்போய், இதற்குத் தகுந்த மனிதர்களைப் பிடித்து பட்டமகிஷியை எச்சரித்துவிட்டு வரத் தீர்மானித்து விட்டேன். இந்த விஷயத்தில் வேறே யாரையாவது நம்பி அனுப்பி வைத்தால், காரியம் ஒழுங்காக நிறைவேறாது. அவர்கள் உன் சகோதரிகளுக்குக் கெடுதல் உண்டாகும்படி தாறுமாறாக நடந்து கொள்வார்கள். நீ அக்கிரமத்தில் இறங்கக் கூடாது என்ற மேன்மையான குணத்தினால், உன்னுடைய மனிதர்களையும், வீட்டையும், செல்வத்தையும் துறந்து அநாதையாகவும் பரதேசியாகவும் வெளியில் கிளம்பி விட்டாய். உன் விஷயத்தில் என் மனசில் ஏற்பட்டிருக்கும் மதிப்புக்கும் இரக்கத்துக்கும் அளவு சொல்லமுடியாது. எவ்வித

சுயநலத்தையும் எதிர்பாராமல் அபாரமான துன்பங்களுக்கு ஆளாகி, நீ பரோபகாரம் செய்ய முயற்சித்தவள். ஆகையால், அப்படிப்பட்ட உத்தமகுணம் உள்ளவளான உன்னை நான் காப்பாற்றாமல் அநாதையாக விட்டுவிட்டால், என்னைவிடக் கேவலம் சண்டாள மனிதன் இந்த உலகில் வேறே எவனும் இருக்க மாட்டான். எனக்குத் திருவாரூரில் சொந்த வீடு ஒன்று இருக்கிறது. நீயும் என்னுடைய வேலைக்காரியுமாக நாளைய தினம் புறப்பட்டுத் திருவாரூருக்குப்போய் என்னுடைய வீட்டில் பத்திரமாகவும் சுகமாகவும் இரு. நான் பூனாவிலிருந்து திரும்பி வருகிறவரையில், என் வேலைக்காரி உன்னை நிரம்பவும் பட்சமாகக் காப்பாற்றுவாள். திருவாரூருக்குப் பக்கத்திலுள்ள ஒரு பங்களாவில் ஷண்முகவடிவு என்று ஒரு பெண் இருக்கிறாள். அந்தப் பெண்ணை நான் கட்டிக் கொள்வது என்று தீர்மானம் ஆகியிருக்கிறது. நான் பூனாவுக்குப் போக நேர்ந்தால் சில மாசகாலம் வரையில் எங்களுடைய கலியாணம் தடைப்படும்போல இருக்கிறது. நீயும் என் வேலைக்காரியும் அடிக்கடி அந்தப் பங்களாவுக்குப் போய், ஆண் துணை யில்லாமல் தனியாக இருக்கும் அந்தப்பெண்ணுக்குத் துணை இருந்து, என்னைப்பற்றி அவள் விசனப்படாமல் பார்த்துக் கொண்டிருங்கள். எல்லாவற்றிற்கும், நான் இப்போது சுருக்கமாக ஒரு கடிதம் எழுதி தபால் மூலமாக ஷண்முக வடிவுக்கு அனுப்பி வைக்கிறேன். நான் அம்மன்பேட்டைக்குப் போய்த் திரும்பி வந்து விவரமான ஒரு கடிதம் எழுதி உங்களிடம் கொடுக்கிறேன். அதைத் தபால் மூலமாக அனுப்புவது சரியல்ல. அது வேறே யாரிடமாகிலும் போய்ச் சேர்ந்தால், காரியம் கெட்டுப் போகும். நான் பூனாவிலிருந்து திரும்பி வந்தவுடன் என்னுடைய கலியாணத்தை நிறைவேற்றிக் கொள்ள நினைக்கிறேன். அதன்பிறகு உனக்கும் உங்கள் ஜாதியைச் சேர்ந்த ஒரு தக்க இடம் பார்த்து, உன்னையும் கட்டிக்கொடுக்க ஏற்பாடு செய்கிறேன். நீ உன் பழைய தொழிலை விட்டு குடும்ப ஸ்திரீயாக இருந்து கண்ணிய

ஜீவனம் பண்ணலாம். நான் முதலில் அவசரமாக அம்மன் பேட்டைக்குப் போய்விட்டு வருகிறேன்'' என்று சொல்ல, அதைக்கேட்ட அந்தப் பெண் அளவற்ற சந்தோஷமும் பூரிப்பும் அடைந்து, தனது நன்றியறிதலின் பெருக்கை வெளியிட்டு, நான் சொன்னபடியே நடந்து கொள்வதாக ஒப்புக் கொண்டாள். நான் உடனே சுருக்கமாக ஒரு கடிதம் எழுதித் தபாலில் அனுப்பினேன். அப்படி நேற்றையதினம் கடிதம் அனுப்பிய பிறகு நான் உடனே புறப்பட்டு ஒரு வண்டி அமர்த்திக்கொண்டு அம்மன்பேட்டைக்குப் போய்த் தந்திரமாக விசாரித்தேன். அன்னத்தம்மாளுடைய மற்றப் பெண்கள் மூவரும் அவர்கள் குறித்திருந்த காலத்திலேயே புறப்பட்டுப் பூனாவை நோக்கிப் பிரயாணம் போய்விட்டதாக நான் உணர்ந்துகொண்டேன் ஆகையால், நானும் பூனாவுக்கு நேரில் போகவேண்டியது அத்தியாவசியமான காரியம் ஆகிவிட்டது. எனக்கு வேண்டிய வண்டியையும் வழிப் பிரயாண சாமான்களையும் சேகரம் செய்து கொள்ள நேற்று முழுவதும் பிடித்தது. இன்றைய தினம் அதிகாலையில் உனக்கு இந்தக்கடிதத்தை எழுதி இவர்களிடம் கொடுத்தனுப்பி விட்டு, நானும் வண்டி ஏறிக்கொண்டு செஞ்சிக்கோட்டையை நோக்கிப் பிரயாணம் புறப்பட்டுப் போகிறேன். அன்றையதினம் நான் பொன்னிறைக்குப் போன காலத்தில் உன்னைக் காப்பாற்றும் படி ஈசுவரன் என்னைக் கொண்டுவந்து நல்ல சமயத்தில் உன்னிடம் சேர்த்தார். நேற்றைய தினம் இந்தப் பெண்ணை நான் காப்பாற்றும் பொருட்டு ஈசன் இவளை என்னுடைய வழியில் கொண்டுவந்து விட்டார். இப்போது பூனாவிலுள்ள இளவரசியான லலித குமாரிதேவியைக் காப்பாற்றுவதற்காக ஈசன் என்னைத் தூண்டி அனுப்புகிறார். இப்படிப்பட்ட பெருத்த அபாய சமயங்களில் இருப்பவரை நாம் உயிரைக் கொடுத்தாகிலும் காப்பாற்றியே தீர வேண்டும் என்பதை நீயே ஒப்புக் கொள்வாய் என்று நம்புகிறேன். நீயும் பெண்ணாகையால், லலிதகுமாரி தேவியின் விஷயத்தில் உனக்கும் அபாரமான இரக்கமும்

தையும் ஏற்படும் என்பது நிச்சயம். அப்படிப்பட்ட பரோபகாரத்தைக் கருதி நான் நம்முடைய கலியாணத்தைக் கொஞ்சகாலத்துக்கு நிறுத்தி வைத்துவிட்டுப் போவதைப் பற்றி நீ என்மேல் கொஞ்சமும் ஆயாசப்பட மாட்டாய் என்று நான் உறுதியாக நம்புகிறேன். நான் வந்தவுடனே நம்முடைய கலியாணத்தை நிறைவேற்றிவிடலாம். அதுவரையில் உனக்கு ஆண் துணை வேண்டுமானால், என் வேலைக்காரி சில ஆள்களை அமர்த்தி, இரவு பகல் பங்களாவுக்குப் பக்கத்தில் இருந்து அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கச் செய்வாள். உன்னுடைய செலவுக்குப் பணம் தேவையானால் என்னுடைய வேலைக்காரி உடனுக்குடன் கொடுப்பாள். நீ கொஞ்சமும் யோசனை செய்யாமல் உனக்குத் தேவையான உதவிகளை எல்லாம் என்னுடைய வேலைக்காரியைக் கொண்டு செய்து கொள்ளலாம். நான் உயிருக்குயிராக மதித்திருக்கும் பிராண சுந்தரியான உன்னை விட்டு ஒரு க்ஷணம் பிரிவது என்னுடைய உயிரைப் பிரித்தெடுத்துக்கொண்டு போவதுபோல இருக்கிறது. ஆனாலும் விலக்க முடியாத ஒரு பெருத்த அசந்தர்ப்பத்தைக் கருதி நான் உன்னை விட்டுப் பிரிந்து போகிறேன். நான் திரும்பி வருகிறவரையில் நீ என்னை நினைத்து துயரப்படாமல் உன் உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண்டு இருந்து வர வேண்டும். மேலே நடக்கும் விஷயங்களைப் பற்றி நான் உனக்கு அடிக்கடி எழுதுகிறேன்.

இங்ஙனம் உன்னை ஒரு நொடியும் மறவாத,
கலியாணசுந்தரம்.

- என்று எழுதப்பட்டிருந்த விரிவான கடிதத்தை ஷண்முக வடிவு படித்து முடிக்கவே, அவளது மனதில் சகிக்க முடியாத இன்பமும் துன்பமும் ஒரேகாலத்தில் எழுந்து அவளை வருத்தின. தனக்குப் புருஷன் ஆகப்போகும் யௌவனப் புருஷருடைய மேன்மைக் குணத்தையும் பரோபகாரச் சிந்தையையும் கண்டும், அவர் தூரதேசமான பூனாவிற்குப்

போய் லலிதகுமாரி தேவியைக் காப்பாற்றப் போவதைப் பற்றியும் அவள் அளவற்ற சந்தோஷம் அடைந்தாள் ஆனாலும், அவர் திரும்பி வருகிற வரையில் தான் அவரைவிட்டுப் பிரிந்திருக்க வேண்டுமே என்ற விசனம் இடையிடையே தோன்றி அந்த சந்தோஷத்தைக் குறைத்தது. அப்படிப்பட்ட மகா பரிசுத்தமான மனமுடைய அந்தப் புண்ணிய புருஷரைப் பற்றி தான் முதல் கடிதம் வந்தவுடன் தவறாக நினைத்ததைப் பற்றி ஷண்முகவடிவு நிரம்பவும் இரங்கித் தன்னைத்தானே கண்டித்துக் கொண்டவளாய்த் தனக்கு எதிரில் அழகே வடிவாக நின்று கொண்டிருந்த சிவபாக்கியத்தை அன்பாகப் பார்த்து, அவளைத் தனக்குப் பக்கத்தில் ஊஞ்சற் பலகையின்மேல் உட்கார்ந்து கொள்ளச் செய்து, அவளுக்கு நேர்ந்த துன்பங்களைப் பற்றி அநுதாப மொழிகள் கூறி, அவளது மேன்மைக் குணத்தைப் பற்றிப் பலவாறு புகழ்ந்தாள். அதன் பிறகு ஷண்முக வடிவு இரண்டொரு நாழிகை நேரம் வரையில் அவ்விடத்திலிருந்து அவளோடும் வேலைக்காரியோடும் பேசிக்கொண்டிருந்து, அடிக்கடி தனது பங்களாவிற்கு அவர்கள் வரும்படி அவர்களிடம் சொல்லி விட்டு, அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுத் தனது ஜாகையை நோக்கிச் சென்றாள்.

★

இங்ஙனம் நிலைமை இப்படி இருக்க, அம்மன்பேட்டையை விட்டுப் பிரயாணம் புறப்பட்டு செஞ்சிக்கோட்டையை நோக்கிச் சென்ற அன்னத்தம்மாளினது பெண்களை நாம் கவனிப்போம். சிவபாக்கியம் என்னும் யௌவனப் பெண் தனது வீட்டைவிட்டு ரகசியமாக ஓடிப்போன பிறகு இரண்டு நாழிகை சாவகாசம் கழிந்தது. உடனே அன்னத்தம்மாளும், அவளது பெண்களான அம்மாளு, தனம், அபிராமி ஆகிய மூவரும் எழுந்து பிரயாணத்துக்குத் தயாரர்யினர். சிவபாக்கியம் அப்போதும் தூங்கிக்கொண்டிருக்கிறாள் என்று நினைத்த அன்னத்தம்மாள் அவளது படுக்கையண்டை போய்ப் பார்க்க,

அவ்விடத்தில் ஒரு கடிதம் இருக்கக் கண்டு வியப்படைந்து விரைவாக அதை எடுத்துப் படித்தாள். உண்மை இன்னது என்பது விளங்கிவிட்டது. அவள் உடனே அந்தக் கடிதத்தைத் தனது பெண்களிடம் காட்ட நால்வரும் திடுக்கிட்டு, தாங்கள் பிரயாணம் புறப்பட வேண்டிய நெருக்கடியான அந்தச் சந்தர்ப்பத்தில் தாங்கள் எதையும் செய்ய முடியாதிருப்பதைக் கண்டு, தாங்கள் பிரயாணம் புறப்படுவதா அல்லது நிறுத்தி விடுவதா என்பதைப்பற்றி அரைநாழிகை சாவகாசம் சிந்தனை செய்தனர். தாங்கள் பிரயாணத்தை நிறுத்தினால், அதைத் தாங்கள் பெரிய ராணியிடத்தில் வெளியிட நேரும்; அதை வெளியிட்டால், சிவபாக்கியம் ஓடிப்போன விஷயத்தையும் அதன் காரணத்தையும் சொல்ல வேண்டியிருக்கும். அப்படிச் சொன்னால், தங்களுடைய சதியாலோசனையையே வெளியிட நேரும். ஆகையால், அந்தப் பிரயாணத்தை நிறுத்தாமல் தங்கள் ஏற்பாட்டின்படி மிகுதியுள்ள மூவரும் புறப்பட்டுப் போவதே உத்தமம் என்று அவர்கள் தீர்மானித்தனர். இன்னொருத்தி எங்கே என்று லலிதகுமாரிதேவி கேட்டால், அவள் புறப்படும் சமயத்தில் தேக அசௌக்கியமாகப் படுத்து விட்டாளாகையால், அவளை நிறுத்திவிட்டு வந்திருப்பதாகவும், அவளும் சொற்ப காலத்தில் வந்து சேருவாள் என்றும், மூன்று பெண்களும் ஒருவிதச் சமாதானம் சொல்வது என்று முடிவு செய்து கொண்டனர். அவர்கள் மூவருக்கும் தேவையான சாப்பாட்டு சாமான்கள் பாத்திரங்கள் முதலிய பொருட்களை ஏற்றிக் கொண்டு இரண்டு வண்டிகள் தொடர்ந்துவர ஏற்பாடாகி இருந்தது என்பது முன்னரே சொல்லப்பட்ட விஷயமல்லவா. அந்த வண்டிகளல் வண்டிக்காரர்களைத் தவிர இன்னம் இரண்டு வேலைக்காரிகளும் உதவிக்கு வந்தனர். அதுவுமன்றி, அந்த மூன்று பெண்களும் நல்ல அழகான யௌவன ஸ்திரீகள் ஆதலால், அவர்களைப் பெண் துணையின்றித் தனியாக அனுப்புவது உசிதமல்ல என்று நினைத்த அன்னத்தம்மாள், அந்த ஊரிலிருந்த தனது தங்கையான முத்துலக்ஷ்மி அம்மாள்

என்பவளையும் அவர்களுடன் கூட அனுப்ப ஏற்பாடு செய்திருந்தாள். ஆகவே, அன்னத்தம்மாளின் மூன்று பெண்களும் முத்துலக்ஷ்மி அம்மாளும் பெட்டிவண்டியில் உட்கார்ந்து கொண்டனர். பெட்டி வண்டியும் சாமான் வண்டிகளும் சரியான காலத்தில் பிரயாணம் புறப்பட்டு செஞ்சிக்கோட்டைக்குப்போகும் ராஜபாட்டையின் வழியாகச் செல்லத் தொடங்கின. அன்னத்தம்மாளினது தங்கையான முத்துலக்ஷ்மியம்மாளுக்கு வயது சுமார் நாற்பது இருக்கலாம். அவளும் பாலியத்தில் நல்ல அழகும் வசீகரமும் நிரம்பப் பெற்றவளாக இருந்தவள் ஆதலால், அப்போதும் அவள் கட்டுத்தளராத மினுமினுப்பான உடம்பை உடையவளாகவே இருந்தாள். ஆனாலும், அவளது ஒவ்வோர் அங்கமும் செழித்துக் கொழுத்து அவள் யௌவனப் பருவத்தைக் கடந்து நடுத்தரப் பிராயமடைந்த முதிர்ந்த ஸ்திரீயென்பதைக் காட்டியது; தொந்தி தொப்பை முதலிய பெரிய மனிதச் சின்னமும் அவளிடம் காணப்பட்டது. கிராமங்களில் நடைபெறும் வள்ளியம்மை நாடகத்தில் வள்ளிவேஷம் போட்டு நடிப்பதில் அவள் மகா அரிய திறமை வாய்ந்தவள். தம்புராவை வைத்துக்கொண்டு வாய்ப்பாட்டுப் பாடுவதில் அவள் நிரம்பவும் சாமர்த்தியசாலி. யௌவனப் பருவத்தினரான பெரிய மனிதர்களை மயக்கிப் பணம் பறிப்பதில் குள்ளநரியைக் காட்டிலும் அதிக தந்திரம் வாய்ந்தவள். பக்கத்தில் இருக்கும் ஆண் பிள்ளைகள் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அவர்களுக்குத் தெரியாமல் மூக்குப்பொடி போடுவதில் வில்லாதி வில்லி. தம்மிடம் உள்ள சொத்துக்களை எல்லாம் இழந்துவிட்ட தனது காதலர்களை ஐவ்வாதில் மயிர் கொடுத்து வாங்குவதுபோல விலக்கிக் கழுவி விடுவதில் எமகாதகி. அவள் அப்படிப்பட்ட நிகரற்ற சிறப்புகள் வாய்ந்த வளாக இருந்தும், அவளால் தேடப்படும் பொருட்கள் நிலைத்து நிற்காமல் ஏதோ ஒரு வழியாகப் போய்க் கொண்டிருந்தமையால், அவள் எப்போதும் தரித்திர

நிலைமையிலேயே இருந்து வந்தாள். அவளுக்கும் அன்னத்தம் மாளுக்கும் பாகம் பிரித்து பல வருஷ காலம் கழியுமுன் அக்காள் லக்ஷாதிபதியாகி விட்டாள். தங்கையோ பிக்ஷாதிபதியாகவே இருந்து வந்தாள். அக்காளைவிடத் தங்கை பொருள் தேடுவதில் அதிக தந்திரமும் ஊக்கமும் முயற்சியும் உடையவளாக இருந்து வந்தாலும், மூத்தவளுக்கு அதிகப் பிரயாசையின்றி செல்வம் அபிவிருத்தி ஆகிக்கொண்டே போனது; இளையவள் நாயாகக் குலைத்து நரியாக ஊளை யிட்டு இராப் பகல் உடம்பை வதைத்துப் பொருள் தேடினாலும் ஏழ்மைத்தனமே பெருகிக் கொண்டிருந்தது. ஆனால், அக்காளும் தங்கையும் பிரிந்து வெவ்வேறாக இருந்து வந்தாலும், தங்கையினது கஷ்ட ஜீவனத்தைக் கண்டு அக்காள் அடிக்கடி அனுதாபமொழி கூறிப் பிழைப்புக்கு வழிகாட்டி வந்தாள். அக்காள் செய்யும் எப்படிப்பட்ட சதி ஆலோசனையிலும், தங்கை துணைக்கருவியாக இருந்து உதவி செய்து வந்தாள். எவ்வளவு அக்கிரமமான மோசடியாக இருந்தாலும், அக்காள் சொல்லிவிட்டால் தங்கை அதை நிறைவேற்றி வைப்பாள். அன்னத்தம்மாள் தனது தங்கையைத் தனது பெண்களுக்குத் துணையாகப் பூனா தேசத்துக்கு அனுப்பி வைத்தாள். ஆனாலும், லலிதகுமாரி தேவியின் விஷயத்தில் தங்களது பெண்கள் செய்ய உத்தேசித்திருக்கும் சதி ஆலோசனையை மாத்திரம் அவர்கள் முத்துலக்ஷ்மியம் மாளிடம் வெளியிடவில்லை. இளவரசர் அடிக்கடி தனது அக்காளினது வீட்டுக்கு வருவதும், தனது அக்காள் பெரிய ராணியினிடத்தில் போக்குவரத்தாக இருப்பதும் தங்கைக்குத் தெரியும். ஆதலால், அந்தப் பரிச்சயத்தின் மூலமாக இளவரசர் அவர்களின்மீது அபிமானம் வைத்து அவர்களைத் தாசி உத்தியோகங்களில் அமர்த்திப் பூனாவுக்கு அனுப்பி இருக்கிறார் என்று தங்கை எண்ணி இருந்தாளேயன்றி, ரகசியத்தில் ஒரு பெருத்த சதியாலோசனை நடந்துவருகிறது என்பதைப்பற்றி அவள் கொஞ்சமும் சந்தேகிக்கவில்லை.

முத்துலக்ஷ்மி வெளிப்பார்வைக்குக் குள்ளம், கபடம், துர்க்குணம் முதலியவைகள் சிறிதும் இல்லாத பரம ஸாதுவாகவும் மகலலிதமான இனிய மனிஷியாகவும் காணப்பட்டாலும், அவளுக்குள் ஒரு பெரிய பெண் பேய் மறைந்து கொண்டிருந்தது என்றே சொல்ல வேண்டும். எவ்வித மோசத்துக்கும் எவ்வித இழி செயலுக்கும் அவள் சிறிதும் பின்வாங்கக் கூடியவளே அல்ல. சமயம் வந்தால் அவள் தனது அக்காளான அன்னத்தம்மாளினது விஷயத்தில் கூடப் பெருத்த மோசம் செய்யக்கூடியவளாக இருந்தாள். அன்னத்தம்மாளினது புத்திரிகளான மூவரையும் கொலை செய்துவிட்டால் ஆயிரம் ரூபாய் தருவதாக யாராகிலும் பிரரேபித்தால், முத்து லக்ஷ்மியம்மாள் அப்படிப்பட்ட கொடிய செய்கைக்கும் இணங்கக் கூடியவளாக இருந்தாள். ஆனால், அன்னத்தம்மாள், தனது தங்கை தன் விஷயத்தில் எப்போதும் உண்மையாக நடந்து கொள்வாள் என்றும், எப்படிப்பட்ட வஞ்சகமும் புரியமாட்டாள் என்றும் நம்பியிருந்தாள். ஆகையால், தனது புத்திரிகளுக்குத் துணையாக அவளை அனுப்பி வைத்தாள். அவ்வாறு புறப்பட்ட பெண் பிரயாணிகள் இடையிடையே குறுக்கிட்ட ஊர்களுக்கு அருகில் ராஜபாட்டையின் மேலிருந்த சத்திரங்களில் தங்கி, வேலைக்காரர்களைக் கொண்டு சமையல் செய்வித்துத் தங்களது போஜனத்தை முடித்துக் கொண்டும் இராக் காலங்களில் அவ்விடங்களில் தங்கியும், அதிகாலையிலும் சாயுங்கால வேளையிலும் பிரயாணம் செய்தும் அதிகப் பிரயாசையின்றி மெலுக்காக வழியைக் கடந்து, சில தினங்களில் செஞ்சிக் கோட்டையை அடைந்து, அந்த ஊரிலிருந்த ராஜாவின் சத்திரத்தில் நிரம்பவும் வசதியான ஓரிடத்தில் இறங்கினர். அந்த ராஜ்யத்தின் மகாராஜனுக்குத் தஞ்சையின் பெரிய ராணியால் கொடுக்கப்பட்டிருந்த கடிதத்தை ஒரு வேலைக்காரன் எடுத்துக் கொண்டுபோய்,அந்த ஊர் மகாராஜனது மெய்க் காவலனிடம் கொடுத்து ராஜனிடம் சேர்ப்பிக்க, அந்த ராஜன், அன்னத்தம்மாளினது பெண்களுக்கு

வேண்டிய சாப்பாட்டு சௌகரியங்களை எல்லாம் செய்துகொடுத்து அவர்களுக்கு வேண்டிய வண்டிகளையும் அனுப்பும்படி சத்திரத்து மணியக்காரருக்குக் கட்டளை பிறப்பிக்க, அவர் உடனே சத்திரத்திற்கு வந்து, இவர்களுக்கு உபசரணை புரிந்து சகலமான வசதிகளையும் செய்து கொடுத்தார். அம்மாளு முதலியோர் அந்த ஊருக்குப் போனது செவ்வாய்கிழமை சாயுங்காலம். அந்த ராஜா சத்திரத்தில் இருந்தது அவர்களுக்குச் சொர்க்க போகம் போல இருந்ததாகையால், அவ்விடத்தை விட்டு உடனே போய்விட அவர்கள் விரும்பவில்லை. ஆகையால், அந்த ஊரில் புதன், வியாழன், வெள்ளி, சனி வரையில் இருந்து ஞாயிற்றுக் கிழமை காலையில் பிரயாணம் புறப்பட்டு மேலே போக வேண்டும் என்று அவர்கள் தீர்மானித்துக்கொண்டு அவ்விடத்தில் தினந்தினம் விருந்துண்டு களிப்படைந்து குதூகலமாகப் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தனர்.

நிலைமை அவ்வாறு இருக்க, அவர்கள் தஞ்சையிலிருந்து புறப்பட்டதற்குச் சில தினங்களுக்குப் பிறகு நமது கலியாண சுந்தரம் தஞ்சையிலிருந்து புறப்பட்டு செஞ்சிக்கோட்டை மார்க்கமாக வந்தார் அல்லவா. அவனும் வழியிலுள்ள சத்திரங்களில் தங்கி அதற்கு முன்போன பிரயாணிகளைப் பற்றி விசாரணை செய்துகொண்டு, அவர்களைப் பிடிக்க வேண்டும் என்ற கருத்தோடு தனது வண்டியை விரைவாக ஓட்டிக்கொண்டு வந்து சனிக்கிழமை சாயுங்காலம் செஞ்சிக் கோட்டையை அடைந்து, அம்மாளு முதலிய தாதிப் பெண்கள் தங்கியிருந்த ராஜா சத்திரத்திலேயே வந்து இறங்கி, அவ்விடத்தில் பிரயாணிக்களுக்காக விடப்பட்டிருந்த விடுதியொன்றில் தங்கினான். அவன் தஞ்சையில் சிவ பாக்கியத்தினிடம் சம்பாஷித்த காலத்தில், அவளது தாய்க்கும் சகோதரிகளுக்கும் எவ்வித துன்பமாவது அவமானமாவது நேராமல், தான் அவர்களது சதி ஆலோசனையைத் தடுப்பதாக

அவளுக்கு வாக்குறுதி செய்து கொடுத்தது தெரிந்த விஷயம். ஆகையால், அவன் தஞ்சையிலிருந்து செஞ்சிக் கோட்டைக்குப் பிரயாணம் செய்த காலத்தில் இரவு பகல் அதே நினைவாகவும் கவலையாகவும் இருந்து அந்த விஷயத்தில் தான் எப்படி வேலை செய்வது என்பதைப் பற்றியும் பலவாறு யோசனை செய்து கொண்டே வந்தான். அந்தப் பெண்களைத் தான் கண்டு, அவர்களிடம் நயமாகவே பேசி, புத்திமதிகள் கூறி, அவர்களது மனதை மாற்றி, அவர்கள் தாமாகவே அந்தச் சதியாலோசனையை நிறைவேற்றாமல் திரும்பிப் போய்விடும் படி செய்வதே எல்லாவற்றிலும் சர்வ சிலாக்கியமான காரியமாக அவனுக்குத் தோன்றியது. ஆகையால், அவன் வெகு சீக்கிரமாகப் பிரயாணம் செய்து, அவர்கள் இருந்த இடத்தை அடைந்து தந்திரமாக அவர்களது பழக்கத்தைச் சம்பாதித்துக் கொண்டு அவர்களோடு தானும் சகப் பிரயாணியாகப் போவதென்றும் அதற்குமேல் சந்தர்ப்பத்திற்குத் தக்கபடி தான் நடந்து அவர்களது மனதை மாற்ற மெதுவாக முயலுவது என்றும் அவன் தீர்மானித்துக்கொண்டு வந்து அவர்கள் இருந்த சத்திரத்திலேயே இறங்கி யிருந்தான். அந்தப் பெண்கள் பூனா தேசம் போகிற வரையில் தானும் அவர்களுடன் கூடவே போய், தன்னால் இயன்ற தந்திரங்களையெல்லாம் செய்து சாம தான பேத தண்டமான சதுர்வித உபாயங்களையும் உபயோகித்து அந்தப் பெண்களினது மனதை மாற்ற முயல வேண்டும் என்றும், அத்தனைக்கும் அவர்கள் வழிக்கு வராவிட்டால், இளவரசியான லலிதகுமாரிதேவியை எச்சரித்து, அவள் எப்போதும் விழிப்பாக இருக்கும்படி செய்ய வேண்டும் என்றும், நமது யௌவன வீரன் உறுதியாக எண்ணிக் கொண்டிருந்தான்.

அந்தக் காலத்தில் பூனாவுக்குப் போகும் பிரயாணிகள் செஞ்சிக் கோட்டையிலிருந்து புறப்பட்டு, முறையே சந்தூர்க் கோட்டை, கோலாப்பூர் கோட்டை, சத்தாரா கோட்டை முதலிய

சிற்றரசர்களது வாசஸ்தலங்களைக் கடந்தே பூனாவுக்கு போய்ச் சேர வேண்டும். மனிதர் அவ்வளவு நீண்ட பிரயாணங்களுக்குப் பிரத்தியேகமாக வண்டிகள் அமர்த்திக்கொண்டு போக வேண்டுமே அன்றி கூலி வண்டிகள் சதாகாலமும் அகப்படுவது அரிதாக இருக்கும்.

சனிக்கிழமையன்று ராஜா சத்திரத்தில் வந்து தங்கிய கலியாண சுந்தரம் சத்திரத்தின் மணியக்காரரைக் கண்டு பேசி அவருக்குப் பெரிய பணத்தொகை இனாம் கொடுத்துப் பழக்கம்செய்து கொண்டதன்றி அம்மாளு முதலிய தாதிப்பெண்கள் வந்து இறங்கிய முதல் அவ்விடத்தில் நடந்த வரலாறுகளை எல்லாம் அவரிடம் கேட்டறிந்து கொண்டான். அந்தத் தாதிப் பெண்கள் மறுநாள் காலையில் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுப் பிரயாணம் போகத் தீர்மானித்து இருப்பதாகவும், அதற்காக அந்த ஊர் அரண்மனையிலிருந்து பெரிய பெட்டி வண்டி யொன்றும் மாட்டுவண்டிகள் இரண்டும் கொடுக்கப்பட்டு இருக்கின்றன என்றும் அந்த மணியக்காரர் சொல்ல, நமது கலியாண சுந்தரம் தெரிந்து கொண்டான். அன்றைய இரவில் தனக்கு வேண்டிய ஆகாரம் படுக்கை முதலிய சௌகரியங்களை எல்லாம் அதே மணியக்காரரைக் கொண்டு சேகரித்துக்கொண்ட நமது யௌவனப் புருஷன் கடைசியாக புறப்பட்டு அந்தத் தாதிப்பெண்களைத் தொடர்ந்து பிரயாணம் போக வேண்டும் ஆதலால், அவர்கள் புறப்படும் நேரத்தில் வரும்படி தனக்கும் ஒருவண்டி சேகரித்துக் கொடுக்க முடியுமா என்று கேட்க, அந்த மணியக்காரர், ''அவ்வளவு தூரம் பிரயாணம் போகக் கூடிய வண்டிகளே இந்த ஊரில் இல்லை. அப்படிப்பட்ட வண்டி இந்த ஊர் அரண்மனையிலேதான் அகப்படும். அதற்கு ராஜாவின் உத்தரவு ஆகவேண்டும். நீங்கள் திங்கள்கிழமை வரையில் பொறுத்திருந்தால், சவாரிக் குதிரையொன்று சேகரித்துக்கொடுக்கிறேன்'' என்றார்.

அதைக்கேட்க, அந்தச் சங்கடத்தில் தான் என்ன செய்கிறது என்ற கவலை கலியாணசுந்தரத்துக்கு உண்டாகிவிட்டது. தான் அந்தப் பெண்களுடன் கூடவே போகவேண்டும் ஆதலால், எப்படியாவது முயற்சி செய்து மறுநாள் காலையில் தனக்கு ஒரு வண்டி சேகரம் செய்து கொடுத்தால், இன்னமும் ஏதாவது வெகுமதி கொடுப்பதாக அவன் அவரிடம் வற்புறுத்திக் கூற, அந்த மணியக்காரர் நல்ல கூர்மையான புத்தியுள்ள மனிதராகையால் அவனது உட்கருத்து இன்னது என்பதை ஒருவாறு யூகித்துக் கொண்டு, "சரி; இந்தப் பெண்களோடு சிநேகம் செய்துகொள்ள வேண்டுமென்ற எண்ணம் போலிருக்கிறது?" என்று புன்னகை செய்த முகத்தோடு கூறினார். அதைக் கேட்ட கலியாண சுந்தரமும் மகிழ்ச்சியாகப் புன்னகை செய்து, "ஆம்; அதுதான் என்னுடைய எண்ணம்; எனக்காக வேறே தனி வண்டி ஒன்று கிடைக்காவிட்டாலும் அவர்கள் போகும் பெட்டி வண்டியி லேயே எனக்கும் உட்காரக் கொஞ்சம் இடம் கிடைக்குமானால் அது அதிக உசிதமாய்ப் போகும்; உம்மை நான் மறக்கிறதே இல்லை" என்றான்.

அதற்குமேல் அந்த மணியக்காரர் அவனிடம் ஒரு வார்த்தையும் பேசவில்லை; தாம் போய் முயற்சித்துப் பார்ப்பதாக வாக்குறுதி சொல்வதுபோல அவரது கண்களின் ஜ்வலிப்பினால் தெரிய வந்தது. அவர் உடனே அவனை விட்டு அந்தத் தாதிப் பெண்கள் இறங்கி இருந்த இடத்துக்குப் போய்விட்டார்.

அந்தத் தாதிப்பெண்கள் வந்து இறங்கிய முதல், ராஜாவினது உத்தரவுப்படி அவர்களுக்கு வேண்டிய சகலமான வசதிகளையும் செய்துகொடுத்தவரும், மறுநாளைய பிரயாணத்துக்குத் தேவையான வண்டிகளை அனுப்புவதாக ஒப்புக் கொண்டிருந்த வரும் அதே மணியக்காரர் ஆதலால், அவரிடத்தில் அந்தத் தாதிப் பெண்கள் மூவருக்கும் முத்துலக்ஷ்மிக்கும் நிரம்பவும்

பிரியமும் மதிப்பும் ஏற்பட்டுப் போயிருந்தன. எந்த விஷயத்தையும் அவர்கள் அவரது யோசனைப் படியே செய்து வந்தனர். அவர் கலியாணசுந்தரத்தினிடம் பேசிக்கொண்டிருந்து விட்டு, அந்தப் பெண்களிடம் போன சமயம் அவர்கள் இராப் போஜனத்துக்கு உட்கார வேண்டிய சமயமாதலால், மணியக்காரர் போனவுடனே சமையற்காரர்கள் அந்த ஸ்திரீகள் நால்வருக்கும் இலைகள் போட்டுப் பரிமாறத் தொடங்கினர். ஒவ்வொரு சாப்பாட்டு வேளையிலும், மணியக்காரர் கூட இருந்து, அவர்களுக்கு சரியானபடி சாப்பாடு போடப்படுகிறதா என்று மேற்பார்வை பார்ப்பது வழக்கம். ஆதலால், அதுபோல, அவர் அவர்களுக்கு எதிரில் நின்று பேச்சுக் கொடுத்தார். மறுநாள் காலையில் அவர்கள் பிரயாணம் போகவேண்டியதன் சம்பந்தமான வார்த்தைகளை அவர்கள் அப்போது பேசிக் கொண்டிருந்தனர். மறுநாள் காலையில் சரியாக ஒன்பது மணிக்குத் தாங்கள் புறப்படவேண்டுமென்றும், அதற்குத் தகுந்தபடி வண்டிகள் ஆயத்தமாகி இருக்க வேண்டும் என்றும் முத்துலக்ஷ்மி மணியக்காரரிடம் தெரிவித்தாள். அப்படியே செய்வதாக மணியக்காரர் ஒப்புக்கொண்டார். பிறகு, தாங்கள் போகும் ரஸ்தா மேடு பள்ளம் உடைப்பு முதலியவை இல்லாமல் இருக்குமோ என்றும், மழை பெய்யுமோ என்றும், வழியில் தங்குவதற்கு எந்த இடத்தில் சத்திரங்கள் இருக்கும் என்றும், போகும் மார்க்கத்தில் திருடர்களின் பயமிருக்குமோ என்றும் அவள் மணியக்காரரிடம் கேள்விகள் கேட்க, அவர் அவளது கடைசிக்கேள்வியைத் தவிர, மற்றவைகளுக்கு எல்லாம், திருப்திகரமான மறுமொழி கூறினார். திருடரது பயம் உண்டோ வென்று அவள் கேட்ட கேள்விக்கு அவர் மறுமொழி சொல்லும்போது சிறிது தயங்கிக் களைத்துத் தலையைச் சொறிந்துகொண்டு மெதுவாகப் பேசத் தொடங்கி, ''திருடர் விஷயத்தில்தான் எனக்கு நிரம்பவும் கவலையாக இருக்கிறது. இந்த ரஸ்தாவில் சில பயங்கரமான இடங்கள் இருக்கின்றன. அவ்விடத்தில் பகலில் கூட திருடர்கள்

வழிமறித்துப் பிரயாணிகளை உபத்திரவித்ததாக இப்போது சமீபகாலத்தில்கூட நான் கேள்வியுற்றேன். நீங்களோ பெட்டி வண்டியில் போகப்போகிறீர்கள். அதற்குப் பூட்ட உத்தரவாகி இருக்கிற குதிரைகள் நல்ல உயர்ந்த ஜாதிக் குதிரைகள்; வண்டிக்காரன் எவ்வளவுதான் அவைகளை அடக்கி மெதுவாக ஓட்டினாலும், அவைகள் விசையாகவே ஓடும். உங்களுடைய சாமான் வண்டிகளுக்குப் பூட்டப்படும் மாடுகளும் உயர்ந்த ஜாதி மாடுகள்தான். இருந்தாலும் உங்களுடைய பெட்டி வண்டி வெகுதூரம் முன்னாலேதான் போய்க் கொண்டிருக்கும். மூன்று வண்டிகளையும் கூடவே ஓட்டிக்கொண்டுபோக வண்டிக் காரர்கள் எவ்வளவு தூரம் பிரயாசைப்பட்டாலும், அது பலிக்காது. உங்களுடைய பெட்டிவண்டி அரைமயில் தூர மாவது முன்னாலேதான் இருக்கும். நீங்கள் நாலுபேரும் பெண் பிள்ளைகள். உங்களைத் தவிர வண்டிக்காரன் ஒருத்தனே உங்களோடுகூட இருக்கப் போகிறான். அவனோடு பலசாலியும், திடசாலியுமான இன்னம் ஒரு மனிதர் ஆயுத பாணியாக உங்களோடுகூட இருந்தாலும், அது போதுமான பக்கபலமாக இருக்கும். திருடர்கள் வந்தாலும் கவலை யில்லை'' என்றார்.

அவ்வாறு அவர் சொன்ன எச்சரிப்பு மொழியைக் கேட்க, அந்த நான்கு பெண்பாலாரும் பெருத்த திகிலும் கவலையும் அப்போதே கொண்டனர். உடனே அவர்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான அபிப்பிராயங்களைச் சொல்லலாயினர். முத்துலக்ஷ்மியம்மாள், தாங்கள் பெட்டிவண்டியில் போவதை விட இன்னொரு மாட்டுவண்டியில் போவது நல்லது என்றாள். அம்மாளு, தாங்கள் அவ்வளவு தூரம் மாட்டு வண்டியில் போனால் உடம்பு அதிர்ந்து போகுமாதலால், பெட்டி வண்டியில் போவதே தகுதியானது என்றாள். தனம், முத்துலக்ஷ்மியம்மாள் சொன்னதே சரியான யோசனை என்று அதை ஆமோதித்தாள். மூன்றாவது சகோதரியான

அபிராமி என்பவள், யாராவது தக்க ஆண்பிள்ளை ஒருவர் கத்தி துப்பாக்கி முதலிய ஆயுதங்களோடு தங்களுடன் பிரயாணம் செய்தால், தாங்கள் பெட்டிவண்டியிலேயே போகலாம் என்றாள்.

அவர்களது அபிப்பிராயங்களை எல்லாம் கேட்டுக்கொண்டு ஏதோ சிந்தனை செய்பவர் போலச் சிறிது நேரம் மௌனம் சாதித்த மணியக்காரர், ''எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. இதே சத்திரத்தில் இன்று சாயுங்காலம் வந்து இறங்கிய ஒரு பிரயாணி இருக்கிறார். அவரிடத்தில் நான் கொஞ்ச நேரத்துக்கு முன் பேசிக்கொண்டிருந்த காலத்தில், அவரும் இதே வழியாகப் பிரயாணம் செய்ய வேண்டுமாதலால், தமக்குப் பிரத்தியேகமான ஒரு வண்டி வேண்டும் என்று சொன்னதன்றி, ஏதோ அவசர காரியமாகப் போகவேண்டுமாகையால், நாளைய தினம் காலையிலேயே போக வேண்டும் என்றும் சொன்னார். நான் அப்படியே அவருக்குப் பிரத்தியேகமான ஒரு வண்டி அமர்த்திக் கொடுப்பதாக வாக்குக் கொடுத்துவிட்டு வந்தேன். அந்த மனிதர் தனியாகவே வந்திருக்கிறார். அவர் தக்க பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளைபோல இருக்கிறார். பார்ப்பதற்கு அழகாகவும் யௌவனப் பருவத்தினராகவும் இருக்கிறார். அவரும் தஞ்சாவூரிலிருந்து தான் வருகிறாராம். அவர் நம்முடைய பெட்டிவண்டியில் உட்கார்ந்து வர ஒப்புக் கொள்வாரானால், எல்லாம் சௌகரியமாகிக் போகும்'' என்றார்.

கலியாணசுந்தரத்தைப் பற்றி அவ்வளவு தூரம் புகழ்ச்சியாக மணியக்காரர் பேசியதைக் கேட்ட உடனே, அந்த யௌவனச் சிறுமியர் மூவரும் அளவற்ற மகிழ்ச்சி அடைந்ததன்றி, அந்த யௌவனப் புருஷரை எப்படியாவது தங்களுக்குத் துணையாக அழைத்துக்கொண்டு போகவேண்டும் என்று விரும்பினர். அபிராமி என்பவள் தங்களுடைய சொந்த ஊர் மனிதரைத் தாங்கள் பெட்டி வண்டியில் வைத்துக் கொண்டு போவதில்

எவ்வித இழுக்கும் இல்லை என்றாள். தனம் என்பவள் அந்த மனிதரைத் தான் உடனே பார்க்க வேண்டும் என்று ஆசைப்படுவதாகக் கூறினாள். அம்மாளு என்பவளும் மற்ற சகோதரிகள் சொன்னதை உடனே ஆமோதித்தாள். அவர்களது அபிப்பிராயத்தை உணர்ந்துகொண்ட முத்துலக்ஷ்மி அம்மாள் மணியக்காரரைப் பார்த்து, ''சரி; நீங்கள் சொல்வதைப் பார்த்தால், அவர் நல்ல யோக்கியமான மனிதராக இருப்பார் என்றே நினைக்க வேண்டியிருக்கிறது. அவர் எங்களிடம் மரியாதையாகவே நடந்து கொள்வார் என்றும் நினைக்கிறேன். நமக்கும் ஆண் துணை அவசியமாக வேண்டியிருக்கிறது. தயை செய்து நீங்கள்போய், அவரிடம் மெதுவாகக் கேட்டுப் பாருங்களேன்? அவருக்கும் வண்டி வாடகை இல்லாமல் போகும். புதிதாக வண்டி தேடிப் பிடிப்பதும் இந்த ஊரில் அதிகப் பிரயாசையானது என்று நீங்கள் முன்னமேயே எங்களிடம் சொல்லி இருக்கிறீர்களே'' என்று நயமாகக் கூறினாள்.

அதைக்கேட்ட மணியக்காரர், ஏதோ தன்னால் செய்ய மிகவும் பிரயாசையான ஒரு காரியத்தைச் செய்யப் போகிறவர்போல, நிரம்பவும் கவலை கொண்ட முகத்தினராய், ''சரி; நான் போய் என்னாலான வரையில் முயற்சி செய்து பார்க்கிறேன்'' என்று கூறியவண்ணம், அவ்விடத்தை விட்டு கலியாணசுந்தரம் இறங்கியிருந்த விடுதிக்கு வந்து சேர்ந்தார். மணியக்காரரது முகத்தின் மலர்ச்சியைக் கண்ட கலியாணசுந்தரம் தனது எண்ணம் பலித்துவிட்டது என்றே உடனே நிச்சயித்துக் கொண்டு அவரைப்பார்த்து, ''என்ன சங்கதி?'' என்ற கேட்க, மணியகாரர் நடந்த வரலாற்றை விவரமாக எடுத்துக்கூற, அதைக் கேட்ட நமது யௌவனப் புருஷன் நிரம்பவும் மகிழ்ச்சி அடைந்தவனாய், உடனே அந்த மணியக்காரருக்கு நல்ல வெகுமதி செய்து அனுப்பி வைத்தான். அளவற்ற சந்தோஷத்தோடு அந்த லஞ்சத்தைப் பெற்றுக்

கொண்ட மணியக்காரர், மறுநாள் காலையில் தான் மறுபடியும் வந்து பார்ப்பதாகச் சொல்லிவிட்டு அவ்விடத்தை விட்டுப்போய் அந்தச் சங்கதியைப் பெண்டீர் நால்வரிடத்திலும் தெரிவித்துவிட்டுப் போய்விட்டார். தான் மறுநாட் காலை அந்தத் தாதிப் பெண்களோடு கூடத் தனிமையில் பிரயாணம் செய்யப் போவதைப் பற்றி ஒருவகையான மன எழுச்சியும், அவர்களோடு தான் எப்படிப் பேசி அவர்களது மனதை மாற்றுவது என்பதைப் பற்றிய கவலையும் கொண்டவனாய், கலியாணசுந்தரம் நெடுநேரம் வரையில் தூங்காமலேயே விழித்துப் புரண்டு கொண்டிருந்தான். தனது ஆருயிர்க் காதலியான ஷண்முகவடிவினது இனிய சுந்தர வடிவமும், அவளைப்பற்றிய நினைவும் அடிக்கடி அவனது மனதில் தோன்றி அவனை இன்பசாகரத்தில் ஆழ்த்திக் கொண்டிருந்தன. அவ்வாறு அவன் நெடுநேரம் வரையில் தூங்காமலிருந்து கடைசியில் துயிலில் ஆழ்ந்தான். முத்துலக்ஷ்மி அம்மாளும், இளம் பெண்கள் மூவரும் தங்களது மனதிற்கு உகந்த ஒரு சகாப் பிரயாணி தெய்வச் செயலாக வந்து வாய்த்ததைக் குறித்து மிகுந்த களிகொண்டவர்களாய் நெடுநேரம் வரையில் சந்தோஷமாக சம்பாஷித்திருந்து அதன் பிறகு சயனங்களை அடைந்து துயின்று அந்த இரவைக் கழித்தனர்.

மறுநாள் காலையில் எல்லோரும் எழுந்து தத்தமது காலைக் கடன்களை முடித்துக்கொண்டு போஜனத்துக்கு ஆயத்தமாயினர். அந்தச் சமயத்தில் மணியக்காரர் கலியாண சுந்தரம் இருந்த விடுதிக்கு வந்து, "ஐயா! இந்தச் சத்திரத்தில் சாதாரணமாக வரும் எல்லாப் பிரயாணிகளுக்கும் வேறாகச் சமையல் செய்யப்படுகிறது. அவ்விடத்திலிருந்துதான் நீங்கள் சாப்பிட வேண்டும். அதற்கு அதிக நேரம் பிடிக்கும். இந்தத் தாதிப் பெண்கள் ஒன்பது மணிக்குப் பிரயாணம் புறப்பட வேண்டும் என்பதைக் கருதி அவர்களுக்குப் பிரத்தியேகமான சாப்பாடு தயாராகிவிட்டது. அவ்விடத்திலேயே நீங்களும்

சாப்பிடும்படி நான் ஏற்பாடு செய்திருக்கிறேன். அந்தப் பெண்களும் அதற்கு இணங்கிவிட்டபடியால், நீங்கள் அங்கேயே சாப்பிடலாம்; வாருங்கள்'' என்றார்.

அதைக் கேட்ட கலியாணசுந்தரம் ஒருவிதக் கிலேசம் அடைந்தாலும், தான்அந்தப் பெண்களிடத்தில் எப்படியாவது பழகி நட்புச் செய்துகொண்டுதான் தீரவேண்டும் என்ற எண்ணத்தினால் தூண்டப்பட்டவனாய், அதற்கு இணங்கி, உடனே புறப்பட்டு மணியக்காரரோடு போனான். அவன் அந்தப் பெண்கள் இறங்கி இருந்த இடத்திற்குப் போய் அப்போதே அவர்களைக் கண்டான். அது போலவே அந்தப் பெண்களும் கலியாணசுந்தரத்தை உற்றுப் பார்த்தனர். கந்தருவ ஸ்திரீகள் போலவும், சித்திரப்பதுமைகள் போலவும் அற்புதமான கட்டழகோடு விளங்கிய அந்தப் பெண்கள் மூவரையும் பார்த்தவுடனே நமது யௌவனச்சிறுவனது மனதில் அளவற்ற இரக்கமும் ஆத்திரமும் உண்டாயின. அவ்வளவு வசீகரமான அழகும் யௌவனப் பருவமும் வாய்ந்த அந்தப் பெண்கள் அப்படிப்பட்ட படுமோசமான சதியாலோசனை களில் சம்பந்தப்பட்டிருப்பதைக் காண அவனது மனம் தவித்தது. அவர்கள் தாங்களாகவே அப்படிப்பட்ட மோசடியில் இறங்கக் கூடியவர்களல்ல என்றும், அவர்களது தாயான அன்னத்தம் மாளினது கொடுங்கோன்மையினாலும், வற்புறுத்தலினாலுமே அவர்கள் அப்படிப்பட்ட துன் மார்க்கத்தில் இறங்கியிருக்கி றார்கள் என்றும் அவன் உறுதியாக நம்பினான். ஆகையால், தான் தக்கபடி அவர்களுக்கு நற்புத்தி புகட்டி அவர்களது மனதை மாற்றினால், அவர்கள் அந்தச் சதியாலோசனையிலிருந்து விலகிக் கொள்வதோடு அதன் பிறகு எப்போதும் நல்ல வழியிலேயே நடப்பார்கள் என்ற நம்பிக்கை அவனது மனத்தில் உண்டாயிற்று. அவன் அவ்விடத்திற்கு வந்தவுடனே அந்தப் பெண்டீர் நால்வரும் நாணிக்கோணி அவனிடம் மரியாதை பாராட்டி ஒரு பக்கமாக விலகி நின்றனர். இளநங்கையர்

மூவரும் அவனது வசீகரமான தோற்றத்தினால் கவரப்பட்டு இமைகொட்டாமல் அவனை உற்று நோக்குவதிலேயே தங்களது கவனத்தைச் செலுத்தி மௌனமாக இருக்க, முத்துலக்ஷ்மியம்மாள் மாத்திரம் அவனிடத்தில் பேசத் தொடங்கி ஏதோ சில கேள்விகளைக் கேட்டாள். அவன் அவர்களைப் பார்த்தவுடனே, அந்த மூன்று பெண்களும் அவர்களது சகோதரியான சிவ பாக்கியத்தைப் போலவே நற்குணமுடையவர்கள் என்றும், தங்களது தாயிடம், அதிக பயமுள்ளவர்கள் ஆகையால், அவர்கள் தாயின் சொல்லை மீறமாட்டாமல் தங்களது மனதிற்கு மாறாக அந்தக் காரியத்தில் இறங்கியிருக்க வேண்டும் என்றும் கலியாணசுந்தரம் அபிப்பிராயப்பட்டான்; ஆனால், அவர்களிடம் மூன்று நிமிஷ நேரம் பழகுவதற்குள், அவனது மனதில் முத்துலக்ஷ்மியம்மாள் விஷயத்தில் நிரம்பவும் கேவலமான அபிப்பிராயமும் அருவருப்பும் உண்டாகி விட்டன. ஏனென்றால், அவள் சாதாரணமான அற்ப விஷயத்தைப் பற்றிப் பேசும்போது கூட மிதமிஞ்சிய நாணமும், நடலமும் காட்டி நாடகத்தில் வேஷம் போட்டு ஆடுபவள் போல அபிநயங் காட்டி ஸாகஸஞ் செய்தாள். ஆகையால், அவளைப் பார்க்கும்போதே அவள் கபடமும் வஞ்சகமும் நிறைந்த மனிஷி என்பதும் வெளிக்கு வேஷம் போட்டுத் தேன் போலப் பேசுகிறாள் என்பதும் எளிதில் தெரிந்து போயின. ஆனால், அவளது குணம் முழுதையும் உள்ளபடி அவன் தெரிந்து கொண்டு விட்டதாக நாம் சொல்ல முடியாது. அப்படி இருந்தாலும், அவன் அவளது விஷயத்தில் கொண்ட அதிருப்தியை வெளியில் காட்டாமல் எச்சரிப்பாக நடந்து கொண்டான். ஏனென்றால், ஆரம்பத்திலேயே தான் தனது அருவருப்பை வெளிப்படுத்தி விட்டால் தனது காரியம் கெட்டுப்போகும் என்று நினைத்து அதை மறைத்துக் கொண்டான். ஆனால், அவனைப் பார்த்தவுடனே அந்தப் பெண்டீர் நால்வரும் மிகுந்த மகிழ்ச்சியும் நல்ல அபிப்பிராயமும் கொண்டனர். அவனது உடம்பின் கட்டழகும்,

முகத்தின் வசீகரமும் நடத்தையின் மேன்மையும் சொற்களின் மாதுரியமும் அறிவின் கூர்மையும் ஒன்றுகூடி எப்போதும் குதூகலமாக இருக்கும் தன்மையுடைய அந்த மூன்று பெண்களினது மனதையும், எப்படிப்பட்டவர்களையும் ஏமாற்றிக் கைகண்டவளான முத்துலக்ஷ்மியினது மனதையும் வெகுசீக்கிரத்தில் கவர்ந்தது அபூர்வமான விஷயமல்ல. ஆகையால், அவனது துணையை அவர்கள் நிரம்பவும் அன்பாகவும் அந்தரங்கமான பிரியத்தோடும் ஏற்றுக் கொண்டனர்.

அவன் போனவுடனே மணியக்காரர் அவனுக்குச் சம்பிரமமான போஜனம் செய்வித்தார். அதன்பிறகு அந்தப் பெண்டீர் நால்வரும் தங்களது போஜனத்தை முடித்துக் கொண்டனர். சரியாக ஒன்பது மணிக்குப் பிரயாணம் புறப்பட வேண்டியதைக் கருதி அவர்கள் எல்லோரும் விரைவாகவே சாப்பாட்டை முடித்துக் கொண்டனர். ஆனாலும், அந்த போஜனம் நிறைவேறுவதற்குள் அந்த நான்கு பெண்டீரும் கலியாண சுந்தரத்தோடு வருஷக்கணக்கில் பழகி சிநேகமாக இருந்தவர்கள் போல நிரம்பவும் தாராளமாகவும் அன்னியோன்னியமாகவும் பேசத் தொடங்கிவிட்டனர். கேவலம் தாசி வகுப்பைச் சேர்ந்த ஸ்திரீகளோடு தான் அப்படி நெருங்கிப் பழகுவது கலியாண சுந்தரத்துக்கு முற்றிலும் லஜ்ஜையாகவும் அருவருப்பாகவும் இருந்தது. ஆனாலும், தான் எண்ணி வந்த கருத்தை நிறைவேற்றிக் கொள்ள அது அனுகூலமானதென்று நினைத்து, அவனும் அவர்களிடத்தில் தாராளமாகவும் நெடுங்காலம் பழகினவன் போலவும் நடந்து வந்தான். சிறிது நேரம் கழிய, அவர்கள் புறப்பட வேண்டிய காலம் நெருங்கியது. அவர்களது பாத்திரங்கள் சாமான்கள் முதலியவைகளெல்லாம் மாட்டு வண்டிகளில் ஏற்றப்பட்டன. அந்த விஷயத்தில் கலியாண சுந்தரம் அதிக சிரத்தை பாராட்டி எல்லா ஏற்பாடுகளையும் நேரிலிருந்து மேற்பார்வை

பார்த்துவந்தான். ஆகையால், அந்தப் பெண்களுடைய பொறுப்பும் பிரயாசையும் கொஞ்சம் குறைந்தன. அதனாலும், அவர்கள் அவனிடம் வைத்த மதிப்பும் பிரியமும் அதிகரித்தன.

மாட்டுவண்டிகளில் சாமான்களெல்லாம் ஏற்றப்பட்ட பிறகு, பெட்டிவண்டி ஆயத்தமாக வந்து நின்றது. பழைய காலத்துப் பெட்டிவண்டி இந்த காலத்துப் பெட்டிவண்டியை விட அதிக இடமும் வசதியும் உடையதாக இருந்தது. ஆகையால், அவர்களுக்காக அனுப்பப்பட்ட வண்டியின் உட்புறத்தில் ஒருவரையொருவர் அதிகமாக நெருக்காமல் ஆறு பேர் உட்கார இடம் இருந்தது. ஆகையால், அவர்கள் ஐவருக்கும் அது போதுமானதாக இருந்தது. அந்த வண்டிக்குள் மும்மூன்று பேர் வரிசையாக உட்காரத்தக்க மெத்தைகள் தைக்கப்பட்ட இரண்டு பலகைகள் முன்னும் பின்னுமாக இருந்தன. பின்பலகையின் மீது முத்துலக்ஷ்மியம்மாளும், அபிராமி என்ற கடைசி சகோதரியும் உட்கார்ந்துகொண்டனர். முன் ஆசனத்தில் கலியாணசுந்தரம் உட்கார்ந்து கொண்டான். அம்மாளு, தனம் என்ற இரண்டு மூத்த சகோதரிகளும் ஓரத்தில் உட்கார்ந்து கொண்டு வெளியில் வேடிக்கை பார்த்துக்கொண்டு வரவேண்டும் என்று சொல்லி, இரண்டு பக்கத்துக் கதவுகளினண்டையிலும் உட்கார்ந்துகொண்டனர். ஆகையால், கலியாணசுந்தரம் அவர்கள் இருவருக்கும் நடுவில் உட்கார்ந்து கொள்ள நேர்ந்தது. அவனுக்கு வலது பக்கத்தில் மூத்த பெண்ணான அம்மாளுவும் இடது பக்கத்தில் இரண்டாவது பெண்ணான தனமும் உட்கார்ந்து கொண்டனர். மகா அற்புதமான அழகும் வசீகரத் தன்மையும் நிறைந்த அந்த யௌவன மடந்தையருக்கு இடையிலிருந்து அவன் பிரயாணம் செய்ய எத்தனித்தான். ஆனாலும், அவனது மனம் கொஞ்சமாகிலும் சபலிக்காமலே இருந்தது அன்றி, நெடுந்தூரத்துக்கு அப்பால் இருந்த ஷண்முகவடிவின் நினைவும் வடிவமும் நிறைந்ததாகவே இருந்து வந்தது.

ஷண்முகவடிவினது விஷயத்தில் தான் இரண்டகம்செய்து, அபரிசுத்தனாக நடக்கும்படி தன் மனம் ஒருநாளும் தன்னைத் தூண்டாது என்ற நிச்சயமும் அவனது மனதில் இருந்து வந்தது. லலிதகுமாரி தேவிக்கு நேர இருந்த பெருத்த அபாயத்தை விலக்க வேண்டும் என்ற பரோபகார எண்ணத்தோடு தான் வந்திருப்பதால், அதைக் கருதித் தான் அவர்களோடு அப்படி அன்னியோன்னியமாகப் பழகியே தீரவேண்டும் என்ற ஒரு கட்டாயத்தினால் அவன் அப்படிப்பட்ட இழிவிற்கு உடன்பட்டானே அன்றி, அவன் இயற்கையில் அன்னிய மாதரை முற்றிலும் விஷமென வெறுக்கும் ஏக பத்தினி விரதத்தை உறுதியாகக் கடைப்பிடித்தவனே. மகா உன்னதமாக இருந்த இரட்டைக் குதிரைகள் பூட்டப்பெற்ற அந்தப் பெட்டிவண்டி சத்திரத்தை விட்டுப் புறப்பட்டது. அதற்குப் பிறகு சாமான் வண்டிகளும் புறப்பட்டன. ஆனாலும், முதல்நாள் இரவு மணியக்காரர் கூறியபடி, அரைநாழிகை சாவகாசத்திற்குள் பெட்டிவண்டி விரைவாக முன்னால் போய், மாட்டுவண்டிகள் பார்க்கமுடியாதபடி அதிக தூரம் போய்விட்டது. பெட்டிவண்டிக்குள் இருந்தவர்கள் சிறிது நேரம் வரையில் மௌனமாக இருந்தனர். தாங்கள் அன்றைய பகல் முழுவதும் பிரயாணம் செய்யவேண்டி இருந்தது. ஆகையால், ஏதாவது விஷயத்தைப்பற்றி தமாஷாகப் பேசிக் கொண்டு போனால் அன்றி அந்தப் பிரயாணம் நிரம்பவும் கடினமாக இருக்கும் என்று நினைத்த முத்துலக்ஷ்மியம்மாள் கலியாண சுந்தரத்தோடு மெதுவாகப் பேச்சுக்கொடுக்கத் தொடங்கியதன்றி, தாங்கள் எவ்விடத்துக்கு என்ன கருத்தோடு போகிறார்கள் என்பதை அப்போதாவது தாங்கள் அவனிடம் வெளியிடுவதுதான் உசிதம் என்று நினைத்து, தனது அக்காளினது புத்திகரிகளான அந்தப்பெண்கள் மூவரும், பூனா தேசத்திலுள்ள தஞ்சை இளவரசியான லலிதகுமாரி தேவியினிடம் வேலைக்கு அமரப்போகிறார்கள் என்றும், தான் அவர்களுக்குத் துணையாகப் போவதாகவும் கூறினாள்.

அதைக் கேட்ட கலியாணசுந்தரம் தானும் பூனா தேசத்துக்கே போவதாகவும் அவ்விடத்தில் அவசரமான ஒரு வியாபார நிமித்தம் தான் அங்கே போவதாகவும், ஆனால் இடைவழியிலுள்ள கோலாப்பூரில் முக்கியமான சில காரியங்களை முடித்துக்கொண்டு போகவேண்டும் என்றும் மறுமொழி கூறினான். அந்த வரலாற்றைக் கேட்கவே தங்களது சகாப் பிரயாணியான அந்த மன்மத புருஷனும் தங்களோடுகூட பூனா தேசம் வரையில் வரப்போகிறான் என்பதைக் கேட்ட, அந்த யெளவன மங்கையரினது கண்கள் சந்தோஷத்தில் மலர்ந்து ஜ்வலித்தன. உடனே முத்துலக்ஷ்மியம்மாள் மறுபடியும் பேசத் தொடங்கி அவன் கோலாப்பூரில் எத்தனை நாளைக்கு இருக்க வேண்டி வருமென்று வினவினாள். அவன் கோலாப்பூரில் தனது அலுவல் இரண்டு நாட்களில் முடிந்துபோய் விடுமென்று மறுமொழி கூறினான். அதைக்கேட்ட அம்மாளு நிரம்பவும் சந்தோஷம் அடைந்தவளாய், "என்ன ஆச்சரியம்! நாங்களும் கோலாப்பூரில் இரண்டே நாள்தான் இருந்துபோக வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டிருக்கிறோம். அதற்கு ஒத்தாற்போல நீங்களும் இரண்டே நாள் இருக்கப் போவதாகச் சொல்லுகிறீர்களே! உங்களுக்கு ஜோசியம் தெரியும் போலிருக்கிறதே!" என்று குதூகலமாகப் பேசினாள். அவள் சொன்ன சங்கதி தனது கருத்துக்கு நிரம்பவும் அனுகூலமாக இருந்ததைக் கண்டு அந்தச் சமயத்தைப் பயன்படுத்திக் கொள்ள நினைத்த கலியாண சுந்தரம், "அப்படியானால் கோலாப்பூருக்கு அப்பாலும் நான் உங்களோடு கூடவே வரும்படியான சந்தர்ப்பமும் இன்பமும் சந்தோஷமும் கிடைக்கும் போலிருக்கிறது" என்ற நயமாகக் கூறினான்.

அதைக் கேட்ட பெண்கள் மூவரும் அளவற்ற மகிழ்ச்சியும் குதூகலமும் அடைந்து தங்களது நன்றியறிதலையும் ஆழ்ந்த விசுவாசத்தையும் தங்களது முகத்தோற்றத்திலேயே

வெளிப்படுத்தினர். ஆனால், அந்தச் சமயத்தில் அம்மாளு என்ற பெண் அவனைப் பார்த்த பார்வை நிரம்பவும் கனிந்து நைந்ததாகவும் மோகக் குறிப்பை நன்றாக உணர்த்துவதாகவும் இருந்தது. அதை உணர்ந்த கலியாணசுந்தரம் நிரம்பவும் வியப்பும், சங்கடமும், அருவருப்பும் அடைந்தவனாய், அவள் என்ன கருத்தோடு தன்னை அவ்வாறு பார்த்தாள் என்பதை நிச்சயித்துக் கொள்ளும் பொருட்டு, சிறிதுநேரம் அவளது முகத்தைக் கூர்ந்து நோக்க வேண்டியிருந்தது. ஆனால், அவன் அவ்வாறு உற்று நோக்கிய காலத்தில் அந்தப்பெண் நிரம்பவும் கிலேசமடைந்து தனது முகத்தைக் கீழே கவிழ்த்துக் கொண்டாள். அவளது முகம் வெட்கத்தினால் மாறுபட்டதன்றி சிறிதும் கபட மற்றதாகவும் காணப்பட்டது. அவளைப் பற்றித் தான் கொண்ட எண்ணம் தவறானது என்று உடனே எண்ணிக் கொண்ட நமது யௌவனப் புருஷன் அவளை அவ்வாறு உற்று நோக்கியதைப் பற்றி நிரம்பவும் விசனமும் கிலேசமும் அடைந்தான். ஆனால், அவள் அதன் பிறகு பற்பல விஷயங்களைப் பற்றி நிரம்பவும் சந்தோஷமாகவே பேசிக்கொண்டு போனதன்றி அவனிடத்தில் எப்போதும் போன்ற பட்சமும் மரியாதையும் காட்டிப் பேசிக் கொண்டே இருந்தாள். ஆகையால், தான் கூர்ந்து நோக்கியதைப் பற்றி அவள் தன்மீது ஆயாசம் அடையவில்லை என்று அவன் யூகித்துக் கொண்டான். அதுவுமன்றி, தான் அப்படிப்பட்ட அற்ப விஷயங்கள் எல்லாம் அவர்களின்மேல் அருவருப்பும் அதிருப்தியும் கொள்ளத் தொடங்கினால், தான் கோரி வந்த காரியம் நிறைவேறாது என்ற எண்ணமும் தோன்றியது. ஆகையால், தான் அப்படிப்பட்ட அற்ப விஷயங்களை யெல்லாம் கவனியாமல் பெரும் போக்காக நடந்து, அவர்களது பிரியத்தையும் சிநேகத்தையும் முதிரச் செய்ய வேண்டும் என்று உறுதி செய்து கொண்டான். ஆகையால் அவன் அவர்களது மன்போக்குக்கு ஒத்தபடி அன்னியோன்னிய மாகவும் சந்தோஷமாகவும் சம்பாஷித்து வந்தான்.

ஆகவே, அவர்கள் நெடுந்தூரம் பிரயாணம் செய்து அன்றைய தினம் பகல் இரண்டு மணிக்கு ஒரு சத்திரத்தில் தங்களது பகற் போஜனத்தை முடித்துக்கொள்ள இறங்கிய காலத்திற்குள் அவர்கள் ஸரஸமாகவும் சந்தோஷமாகவும் பேசத் தலைப்பட்டு விட்டனர். அன்று சாயுங்காலம் வேறொரு தாமரைக் குளத்தண்டை தங்களது இராப் போஜனத்தை முடித்துக்கொள்ள இறங்கிய காலத்துக்குள், அவர்கள் அவனோடு குழந்தைப் பருவத்திலிருந்து அன்னியோன்னியமாகப் பழகிய தோழர்கள் போல நடந்து கொண்டனர். ஆனால், அம்மாளு என்ற மூத்த பெண் பல தடவைகளில் அவனைப் பார்த்த நைவான கபடப் பார்வையைக் கண்டு, நமது கலியாணசுந்தரம் ஆயாசம் அடைந்தான். ஆனால், அவள் கபடமாக அவனைப் பார்க்கும் காலத்தில், அவனும் அவளைப் பார்த்தால், அவள் உடனே சடக்கென்று வேறு திக்கில் தனது பார்வையைத் திருப்பிக் கொண்டு ஒன்றையும் அறியாதவள் போல இருந்து விடுவாள். அதைக் கண்ட கலியாணசுந்தரம் தனக்குள் ஒருவித உறுதி செய்து கொண்டான். உண்மையிலேயே அவள் தனது விஷயத்தில் அவ்வளவு சொற்ப காலத்திற்குள் ஏதாவது தவறான எண்ணம் கொண்டிருந்தாலும், மற்றவர்கள் இருக்கையில் அவள் இதை இன்னம் அதிகமாக வெளியில் காட்டிக்கொள்ள மாட்டாளென்று உறுதி செய்து கொண்டான்.

தாமரைக் குளத்தடியில் அவர்கள் தங்களது இராப்போஜனத்தை முடித்துக்கொண்டு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டனர். அதற்கு அப்பால் அவர்கள் சில காத தூரம் பிரயாணம் செய்து வழியிலிருந்த உதயகிரி என்ற ஊரை அடைந்து அவ்விடத்திலுள்ள சத்திரத்திலே அன்றிரவு முழுதும் படுத்து இராப்பொழுதைக் கழிக்க வேண்டியிருந்தது. ஆகையால், பெட்டிவண்டி விசையாக ஓடத் தொடங்கியது. சூரியன் மேற்குக் கடலில் மறைந்து போய்விட்டான். அவர்கள் போய்க்கொண்டிருந்த பாதையின் இரண்டு பக்கங்களிலும்

பெருத்த பெருத்த ஆலமரங்கள் பத்திபத்தியாக வளர்ந்து ஆகாயத்தை அளாவிப் பந்தல்போல் இருந்தன. ஆகையால் அந்தப்பாதை இருள் அடர்ந்ததாகக் காணப்பட்டது. அப்போது முத்துலக்ஷ்மியம்மாளினது மனசில் ஒருவிதமான அச்சம் உண்டாகத் தொடங்கியது. அப்படிப்பட்ட இருள் அடர்ந்த நிருமாநுஷ்யமான பாதையில் தாங்கள் அந்த இரவில் போகும்போது திருடர்கள் ஒருவேளை தோன்றித் தங்களை அடிப்பார்களோ என்ற திகில் உண்டாகிப் பெருகிக் கொண்டே இருந்தது. ஆனாலும், அதை வெளியில் காட்டாமல் மறைத்துக் கொள்ளும் பொருட்டு அவள் எப்போதும் போலக் கலியாணசுந்தரத்தினிடம் பேச்சுக் கொடுத்துக்கொண்டே இருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த அபிராமி என்ற கடைசித் தங்கை அன்று பகல் முழுதும் பிரயாணம் செய்ததனால் அலுத்துப்போய் அயர்ந்து உறங்கி ஒரு பக்கமாகச் சாய்ந்து விட்டாள். கலியாணசுந்தரம் முத்துலக்ஷ்மி யோடும், தனது இடது பக்கத்தில் இருந்த தனம் என்பவளோடும் சம்பாஷணை செய்து கொண்டே இருக்க நேர்ந்தது. ஆனால், மூத்தவளான அம்மாளு என்பவள் தானும் பேசுவதைப் படிப்படியாக நிறுத்திக்கொண்டே வந்து கடைசியாக ஓய்ந்து முற்றிலும் மௌனம் சாதிக்கத் தொடங்கினாள்.

பெட்டிவண்டிக்குள் அவர்கள் உட்கார்ந்திருந்த இடம் முழுதும் ஒரேகருப்பாக இருண்டுபோய்விட்டது. முத்துலக்ஷ்மி யம்மாள் திருடர்கள் வந்து வழிமறித்து அடிப்பார்கள் என்ற பயத்தை அடிக்கடி வெளியிட்டு வந்தாள் ஆகையால், கலியாணசுந்தரம் தைரியமான வார்த்தைகளைச் சொல்லி அடிக்கடி அவளை ஊக்கிக்கொண்டே வரவேண்டியிருந்தது. அதோடு, அந்தத் துன்பம் ஒருபுறமிருக்க அவன் ஆயாசம் அடைய இன்னொரு புதிய காரணமும் ஏற்பட்டது. என்னவென்றால், அவனுக்கு வலது பக்கத்தில் உட்கார்ந்திருந்த

மூத்த பெண்ணான அம்மாளுவினது தலை சோர்ந்து ஆடி ஆடி அவனது தோளில் வந்து பட ஆரம்பித்தது. அன்னிய மாதரிடத்தில் அவன் நிரம்பவும் மரியாதையும் பயிர்ப்பும் பாராட்டும் குணமுடைய மகா உத்தம புருஷன். ஆகையால், அந்தப் பெண்ணின் உடம்பு தன் மீது பட்டது அவனால் சகிக்க இயலாத துன்பமாக இருந்தது. அப்படி இருந்தாலும், அவள் காலையிலிருந்து பிரயாணம் செய்வதனால் அலுத்து அயர்ந்து தூங்குகிறாள் என்று நினைத்து, அவன் அவளிடத்தில் இரக்கங்கொண்டு அவளை எழுப்பக் கூடாது என்று நினைத்துப் பொறுமையை வகித்திருந்தான்; இன்னம் கொஞ்ச நேரம் கழிய, அவளது தலை மெதுவாய் நகருவதாகத் தோன்றியது; பிறகு சிறிதுநேரம் அசைவற்று நின்றது. பிறகு கொஞ்சநேரம் அவள் தனது முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக்கொண்டு முன்போலத் தூங்கி ஆடிவிழுந்தாள். அப்போது அவளது கன்னம் அவனது கன்னத்தில் போய் உராயத் தொடங்கியது. அதைக் கண்ட அந்த யௌவனப் புருஷன் திடுக்கிட்டான். ஆனால், அவளது தூக்கத்தை யாவது அவளது முகம் இருந்த நிலைமையையாவது கெடுக்கும்படியாக அவ்வளவு அதிகமாக அவன் நகரவில்லை. இருந்தாலும், அவன் தனது உடம்பை மாத்திரம் சொற்பமாக இடது பக்கத்தில் நகர்த்திக்கொண்டான். அப்போது, அவளது தலை அவனது தோளின்மீது வீழ்ந்துவிட்டது. அந்தச்சமயத்தில் முத்துலக்ஷ்மி பேசாமல் மௌனம் சாதித்துக் கொண்டிருந்தாள் ஆகையால், அம்மாளு என்பவள் உண்மையிலேயே' தூங்குகிறாளா என்பதை அறிய வேண்டும் என்ற எண்ணத்தோடு அந்தச் சிறுவன் அவளது மூச்சின் ஓசையைக் கவனித்துக் கேட்கத் தொடங்கினான். தூங்கிக் கொண்டிருப்பவளுடைய வாயிலிருந்து உண்டாகும் ஓசை அவளது வாயிலிருந்து உண்டாகவில்லை. அதைக்கொண்டு, கலியாணசுந்தரம் அவள் தூங்கவில்லை என்றும் வேண்டுமென்றே மனதார அவள் அப்படிப்பட்ட மதியீனமான காரியத்தைச் செய்கிறாள்

என்றும் நிச்சயித்துக் கொண்டவனாய், அவளது துணிகரமான செய்கையைப் பற்றி பிரமிப்படைந்தவனாய், கொஞ்சம் இடது பக்கமாக நகர்ந்து கொண்டான். அப்போது அம்மாளுவினது தலை அவனது தோளைவிட்டு விலகவேண்டி இருந்தது. ஆகையால், அந்த மடந்தை அப்போதே கடுந் துயிலிலிருந்து விழித்துக்கொள்கிறவள்போலப் பாசாங்கு செய்து, "உஸ், அப்பாடா!" என்று நிமிர்ந்து உட்கார்ந்து தனது கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

அதைக் கண்ட கலியாணசுந்தரம் மறுபடியும் திகைப்படைந்து அவள் உண்மையிலேயே தூங்கி விழித்தாளா, அல்லது, பொய்யாக அப்படி நடக்கிறாளா என்பதை நிச்சயிக்க மாட்டாமல் தவிக்கலானான். அவனது சுபாவம் பிறர் விஷயத்தில் எளிதில் தப்பான அபிப்பிராயம் கொள்ளாத சுபாவம். ஆதலால், அந்தப்பெண் உண்மையிலேயே தூங்கி விழித்திருக்க வேண்டும் என்றே அவன் கடைசியில் தன் மனதில் நிச்சயப்படுத்திக்கொண்டான். ஆனால், அவர்களது தங்கையான சிவபாக்கியம், அவர்களது குணத்தைப் பற்றிச் சொல்லியிருந்த வரலாறுகள் அப்போது நினைவுக்கு வந்தன. ஆகையால், அவள் தன் விஷயத்தில் தவறான எண்ணம் கொண்டு வேண்டுமென்றே அப்படி நடக்கிறாளா என்ற சந்தேகமும் இடையிடையில் தோன்றிக் கொண்டிருந்தது. அதை இன்னது என்று நிச்சயிக்க மாட்டாமல் அவன் சிறிது நேரம் தத்தளித்தபின், தான் அப்பேர்ப்பட்ட சம்சயமான நடத்தையுடைய மனிதர்களோடு பழகிப் பிரயாணம் செய்ய நேர்ந்ததே என்று நினைத்து ஒருவாறு வருந்தியவனாய் இருந்த காலத்தில் மறுபடியும் அவனுக்கு இன்னொரு விதமான துன்பம் நேர்ந்தது. அவன் அம்மாளு தனம் என்ற இரண்டு மங்கையருக்கும் நடுவில் உட்கார்ந்திருந்தான் என்பது முன்னரே சொல்லப்பட்ட விஷயம். அம்மாளு என்பவள் தூங்கித் தூங்கி ஆடி ஆடி விழுந்து தோளின் மீது தலையை வைத்தும்,

கன்னத்தின் மீது கன்னத்தை வைத்தும் அவனை வருத்திய காலத்தில், அவன் அதைச் சகிக்க மாட்டாமல் தனது இடது பக்கத்தில் சிறிது சிறிதாக நகரவேண்டியது அவசியமாக இருந்தது. அப்படி அவன் அருவருப்போடு விலகி விலகி நகர்ந்த காலத்தில் அவனது ஆடைகள் அவனுக்குத் தெரியாமல் இளையவளான தனம் என்னும் பெண்ணின் மீது உராயத் தொடங்கியது. கடைசியில் அவன் தனத்திற்கு அருகில் நெருங்கி உட்கார்ந்து கொள்ள நேர்ந்தது. மூத்த பெண் அப்படி இழிவாக நடந்து கொள்ளுகிறாளே என்ற நினைவினால், அவனது மனம் குழம்பித் தத்தளித்துப் போனது. ஆகையால், தனது வஸ்திரம் இடது பக்கத்தில் இருந்த இளைய பெண்ணின் மீது படுகிறது என்பதை அவன் உணரவில்லை. ஆனால், அதிலிருந்து இன்னொரு சம்பவம் நிகழ்ந்தது. அவனது இடது பக்கத்தில் இருந்த தனம் என்பவள், அந்த யௌவனப் புருஷன் தன் மீது மோகங்கொண்டு தன்னிடம் நெருங்கி வந்து அவ்வாறு சைகை செய்கிறான் என்று நினைத்துக் கொண்டாள். சிறிது நேரம் வரையில் அவனது வஸ்திரம் அவளது உடம்பில் பட்டதன்றி இரண்டொரு தரம், அவனது உடம்பும் அவளது உடம்பில் பட்டது. படவே அவளது உச்சி முதல் உள்ளங்கால் வரையில் உரோமம் சிலிர்க்க, சகிக்க இயலாத பேரின்ப சுகம் பரவியது. அந்த யௌவனப் புருஷன் வேண்டும் என்றே அப்படிச் செய்கிறானா, அல்லது அது தற்செயலாக நேர்ந்த சம்பவமோ என்பதை நிச்சயிக்க மாட்டாமல், அந்தப் பெண் சந்தேகமும் சஞ்சலமும் அடைந்து தான் என்ன செய்வது என்பதை அறியமாட்டாமல் அப்படியே ஸ்தம்பித்து அசைவற்று மௌனமாக இருந்து அவனது உடம்பின் அசைவை உற்றுக் கவனித்துக்கொண்ட வண்ணம் உட்கார்ந்திருந்தாள்.

கடைசியாக அம்மாளுவின் கன்னம், அவனது கன்னத்தில் பட்ட காலத்தில், அவன் நன்றாக நகர்ந்தபோது, அவனது தேகம்

தனத்தின்மீது நன்றாகப் படவே, அவன் வேண்டுமென்றே தன்னிடம் நகர்ந்து வருகிறான் என்ற எண்ணம் தனத்தின் மனதில் உண்டாயிற்று. உடனே அவளது உடம்பிலுள்ள இரத்தம் முழுதும் கொந்தளித்துப் பொங்கி எழுந்து தாண்டவம் ஆடியது. ஆகையால், அவளால் சிறிதும் தாங்க முடியாத மோகலாகிரியும், ஆவேசமும் உண்டாகிவிட்டன. அவனைப் பிடித்து ஆவலோடு அணைத்துக் கொள்ள வேண்டுமென்ற ஒருவித எண்ணம் மூர்க்கமாக கிளம்பி அவளை வதைத்தது. இருந்தாலும், தான் அவனது மனப்போக்கை உள்ளபடி உணர்ந்து கொள்ளாமல் அவ்வளவு துணிகரமான காரியத்தில் உடனே இறங்கக் கூடாது என்ற நினைவினால் தன்னை ஒருவாறு அடக்கிக்கொண்ட தனம், மெதுவாகத் தனது மார்பை அவனது பக்கத்தில் திருப்பிக்கொண்டு அவனுக்கு அருகில் நெருங்கி அவனது தாக்கலை எதிர்பார்த்து ஆயத்தமாக இருந்தாள். அவ்வாறு அவள் நெருங்கி இருந்த இடம் நமது யௌவனப் புருஷனது இடம் கை அங்கும் இங்கும் நகரக்கூடிய இடமாகையால், அந்தக் கையை அவன் தற்செயலாகத் தூக்கியபோது, அதுபோய் அவளது மார்பில் தாக்கியது. அவ்வாறு தாக்கவே, தனத்தின் நிலைமை சகிக்க முடியாத பரம இன்பநிலைமை ஆகிவிட்டது. அவள் கட்டுக்கடங்கா ஆவலோடும் இளக்கத்தோடும் அவன் மீது சாய்ந்து கொள்ள, அந்தச் சமயத்தில் மூத்தவள் முன்னே சொன்னபடி தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டவள் போல நடித்தாள். ஆகையால், அதைக் கண்டு திடுக்கிட்ட தனம் அப்பால் விலகிக்கொண்டாள். உடனே கலியாணசுந்தரத்தின் இடது பக்கத்து உபத்திரவமும் ஓய்ந்தது.

ஆனால், இடது பக்கத்திலிருந்த வடிவழகியான தனத்தின் மனதில், சற்றுமுன் நடந்த சைகை, கலியாணசுந்தரத்தினால் வேண்டுமென்று மனதாரச் செய்யப்பட்டது என்ற எண்ணமே வேரூன்றி நின்றது. ஆகையால், தனது அக்காளான அம்மாளு

மறுபடியும் துயிலில் ஆழ்ந்தபிறகு, அவன் திரும்பவும் தன்னிடத்தில் ஸரஸ லீலைகள் செய்யத் தொடங்குவான் என்று எதிர்பார்த்தவளாய்ச் சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். ஆனால், மூத்தவள் முன்போல நமது யௌவனப் புருஷன் மீது தூங்கிவிழாமல், கதவின் மூலையில் சாய்ந்த வண்ணமே உறங்கத் தொடங்கினாள். ஆகையால், அவனுக்கு அப்புறம் இப்புறம் நகருவதற்குப் போதுமான இடம் தாராளமாக இருந்தது. மிகுந்த ஆவலோடு சிறிதுநேரம் பொறுத்துப் பார்த்து தனம் அம்மாள் அதற்குமேல் சும்மாயிருக்க மாட்டாதவளாய், மெதுவாக அவனை நோக்கி நகரத் தொடங்கினாள். ஆனால், அவள் ஒரே முட்டாக நகராமல் ஓர் அங்குலம் நகருவாள்! அவன் முன் போலத் தன்னை நோக்கி வருவானோ என்று எதிர்பார்த்துச் சிறிது ஓய்ந்திருப்பாள்; தனது அக்காள் விழித்துக் கொண்டிருக்கிறாள் என்ற எண்ணத்தினால், அவன் அச்சம் கொண்டு தன்னிடம் நெருங்காமலிருக்கிறான் என்று நினைத்துத் தானே மேலும் ஓர் அங்குலம் நகருவாள். அவ்வாறு கால்நாழிகை நேரம் கழிய, அவள் அவனிடம் நெருங்கி வந்து விட்டாள். அந்தச் சமயத்தில் பாதையிலிருந்த ஒரு பள்ளத்தில் வண்டி இறங்கி ஏறியதனால் உண்டான அசைவினால், அவள் அவனது பக்கம் திரும்பியபடி அவன் மீது தாக்கவே, அவளது மார்பின் பக்கம் அவனது புஜத்தில் போய் வேகமாக மோதியது. மோகாவேசத்தினால் வீங்கி வீங்கித் தணிந்து கொண்டிருந்த அவளது மார்பகம் அவனது புஜத்தில் போய் மோதி இன்பகரமான செய்தி சொல்லி வாதுக்கு இழுக்கவே, அப்போதே கலியாணசுந்தரத்துக்கு உண்மை இன்னது என விளங்கியது. தனக்கு இடது பக்கத்திலிருந்த பெண்ணும் தன்னிடம் ஏதோ துர் எண்ணங்கொண்டு அவ்வாறு சைகைகள் செய்கிறாள் என்பது அவனுக்குச் சந்தேகமற விளங்கியது. ஆகவே, அவன் முன்னிலும் அதிகமாகத் திடுக்கிட்டுத் தனது உடம்பைச் சடக்கென்று அப்பால் இழுத்துக்

கொள்ள அதை உணர்ந்து தனம் அம்மாள், "அடாடா! என்ன பாதை இது! மேடும் பள்ளமும் மனிதருடைய எலும்பு களையெல்லாம் தவிடுபொடியாக்கி விடும்போல இருக்கிறதே!" என்று ரஸ்தாவின் மேலும், வண்டியின் மேலும், குறை கூறிக்கொண்டு தனது மூலைக்குப் போய்ச் சேர்ந்தாள்.

அதன்பிறகு சிறிது நேரத்திற்கு எல்லாம் வண்டி அவர்கள் தங்க வேண்டிய ஊருக்குப் போய்ச் சேர்ந்தது. வழியில் இருந்த சுங்கன் சாவடியில் பணங்கொடுத்து சீட்டு வாங்கும் தடபுடலிலும், அதன் பிறகு அவர்கள் தங்கவேண்டிய சத்திரத்தில் இறங்கி சாமான்களை இறக்கிய தடபுடலிலும், சத்திரத்தின் வேலைக்காரனை அழைத்துத் தங்களெல்லோ ருக்கும் சௌகரியமான இடம் பார்த்துப் படுக்கைகள் விரிப்பதிலும் அவர்கள் எல்லோரும் தத்தம் கவனத்தைச் செலுத்தி இருந்தனர். ஆதலால், கலியாணசுந்தரம் வண்டியில் நடந்த விஷயங்களைப் பற்றிய நினைவை மறந்திருந்தான்.

பெண்டீர் நால்வரும் பிரத்தியேகமான ஓர் அறையில் சயனித்துக் கொண்டனர். கலியாணசுந்தரம் அவர்களுக்குக் காவலாக அந்த அறைக்கு வெளியில் இருந்த ஒரு திண்ணையில் படுத்துக் கொண்டான். ஆனால், அவன் துயிலில் ஆழ்வதற்குள், அவனது மனதில் பலவகையான நினைவுகள் தோன்றி நாடகம் நடித்தன. அன்னத்தம்மாளினது மூத்த பெண்கள் இருவரது நடத்தையைப் பற்றிய நினைவே அவனது மனதில் மும்முரமாக எழுந்து வதைத்துக் கொண்டிருந்தது. அவர்கள் இருவரும் தாங்களாகவே வேண்டுமென்று அப்படி நடந்து கொண்டார்களா அல்லவா என்பதை நிச்சயிப்பதற்குள்ள ஆதாரங்களை நினைத்து நினைத்து எவ்வித முடிவிற்கும் வரமாட்டாமல் அவன் குழம்பி இருந்த சமயத்தில், கடுந்துயில் உண்டாகி அவனைத் தூக்கி இருளில் ஆழ்த்திவிட்டது. மறுநாள் காலையில் அவர்கள் எல்லாரும் எழுந்து காலைக் கடன்களையும் காலை போஜனத்தையும் முடித்துக்கொண்டு

ஒன்றாகக்கூடி மறுபடியும் பிரயாணத்துக்கு ஆயத்தமான காலத்தில், அந்தப் பெண்கள் இருவரும் கலியாணசுந்தரத்தைப் பார்த்தபோது, சிறிதும் கிலேசமாவது நாணமாவது கொள்ள வில்லை. அவர்களது தோற்றமும் நடத்தையும் எப்போதும் போலவே இருந்தன. ஆனால், அதற்குமுன் அவனிடம் காட்டியதைவிட நூறுமடங்கு அதிகரித்த வாஞ்சையும் நேசமும் பாராட்டத் தொடங்கினரே அன்றி, முதல் நாளிரவில் தாங்கள் வெளிப்படுத்திய தங்களது கருத்துக்கு அவன் இணங்கி வராமல் தங்களை விலக்கி விட்டானே என்றதனால் அவமான மாவது இழிவாவது அடைந்தவராகத் தோன்றவில்லை.

சிறிது நேரத்திற்குப் பிறகு அவர்கள் மறுபடியும் பெட்டிவண்டியில் உட்கார்ந்து பிரயாணம் செய்யத் தொடங்கினர். முதல் நாளில் உட்கார்ந்திருந்ததைப் போலவே முத்துலக்ஷ்மியும் மூன்றாவது பெண்ணான அபிராமியும் பின்பக்கத்து ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டனர். முன்பக்கத்து ஆசனத்தில் கலியாணசுந்தரம் நடுவிலும், தனம் அம்மாளும், அம்மாளு அம்மாளும் அவனுக்கு இருபுறங்களிலுமாக உட்கார்ந்து கொண்டனர். வண்டி சிறிது தூரம் போகுமுன் கலியாணசுந்தரம் பேச ஆரம்பித்து, பூனாவில் இருக்கும் லலிதகுமாரி தேவியின் இல்லற வாழ்க்கையைப் பற்றிய சங்கதிகளைப் பற்றி சம்பாஷிக்கத் தொடங்கினான். அந்த இளவரசியின் உத்தம குணங்களைப் பற்றியும், இளவரசர் எவ்வித முகாந்திரமும் இன்றி அந்தப்பெண்ணரசியினிடம் வர்மம் பாராட்டி அவளை விஷமென வெறுத்து வருவதைப் பற்றியும் நிரம்பவும் அனுதாபமாகவும் இரக்கமாகவும் மொழிந்ததன்றி, அவர்கள் இருவரும் மறுபடியும் ஒன்றாகக் கூடி அன்னியோன்னிய மாக வாழுங்காலம் எப்போது வருமோ என்று நிரம்பவும் உருக்கமாகக் கூறினான். ஆனால், அன்னத்தம்மாளினது பெண்கள் மூவரும் அந்த விஷயத்தில் நிரம்பவும் ஜாக்கிரதையாகவும் சுருக்கமாகவும் மறுமொழி கூறி

மௌனம் சாதித்தனர். முதல்நாள் இரவில் கொசுக்கடி உபத்திரவத்தினால் கொஞ்சமும் தூங்காமலிருந்த முத்து லக்ஷ்மியம்மாள் தனது ஆசனத்தில் உட்கார்ந்தபடி மூலையில் சாய்ந்து உறங்கிக் கொண்டே வந்தாள். கலியாணசுந்தரம் அதே விஷயமாக மேன்மேலும் பேசிக்கொண்டே போனதைக் கண்ட மூத்த பெண்ணான அம்மாள் என்பவள் வேடிக்கையாகவும் புன்னகையோடும் பேசத் தொடங்கி, ''லலிதகுமாரி தேவியினுடைய விஷயந்தான் நாம் எப்போதும் பேசிப் பேசி அலுத்துப்போன விஷய மாயிற்றே; அதை வைத்துக் கொண்டு நாம் இப்போது பேசி ஏன் விசனப்பட வேண்டும்? வேறே ஏதாவது விஷயத்தைப் பற்றிப் பேசுவோம்'' என்றாள். அந்த மூன்று பெண்களும் நல்ல கல்வி முதிர்ச்சியும், கூர்மையான அறிவும், வியவகார ஞானமும்,வாக்கு சாதுர்யமும் உடையவர்கள் என்பதை நமது கலியாணசுந்தரம் சந்தேகமறத் தெரிந்து கொண்டான். அவர்கள் பிறரது மனம் கோணாமல் எப்போதும் ஹாசியமாகப் பேசி, சந்தோஷமும் நகைப்பும் உண்டாக்குவதில் மகா நிபுணிகளாக இருந்தன ரென்பதும் பிரத்தியேகமாகத் தெரிந்தது. மதியீனம் நிறைந்த சில பெண் பிள்ளைகளைப் போல அவர்கள் பிறரைப் பற்றிப் பேசி வீண் பொழுது போக்குவதிலும் அவர்களது மனம் செல்லவில்லை. இளவரசரிடத்தில் தங்களுக்குள்ள அந்தரங்க நட்பை அதிகமாகப் பாராட்டிப் பேசிப் பெருமையடித்துக் கொள்ள வேண்டுமென்ற நினைவும் அவர்களுக்கு இல்லை. அவ்வாறு அவர்களிடத்தில் அநேக நற்குணங்கள் இருந்தது என்பது அவனுக்குப் பரிஷ்கார மாகத் தெரிந்தது. ஆனால், அவர்களது தேக பரிசுத்தமும், மனதின் தூய்மையும் எவ்வளவு தூரம் கெட்டிருந்தது என்பது மாத்திரம் அவனுக்கு நிச்சயமாகத் தெரியாதிருந்தது. ஆகையால், அவனது மனம் அதைப்பற்றி நிரம்பவும் தடுமாற்றம் அடைந்தது. இளம்பிராயத்திலிருந்து

அவர்களுக்கு நற்புத்தி புகட்டி அவர்களை நல்ல வழியில் திருப்பிவிட்டிருந்தால், அவர்கள் உலகத்துக்கு எவ்வளவு உபகாரமான நல்ல மனிதராக இருப்பார்கள் என்பதை நினைக்கவும் அப்போதும் அவர்கள் தங்களது தாயின் வற்புறுத்தலைத் தடுக்கமாட்டாமல் வேடன் கை அம்புபோலத் தீங்கு இழைக்கும் உபகருவியாக இருந்ததை எண்ணவும், அவனது மனம் அவர்களது விஷயத்தில் மட்டற்ற அநுதாபமும் இரக்கமும் கொண்டு இளகி உருகியது. அவர்களை அந்தக்கொடிய துன்மார்க்கத்திலிருந்து தான் மீட்டு நல்வழிப் படுத்தினால், அதைவிடப் பெருத்த புண்ணியமும் புகழும் தனக்கு வேறு எதிலும் கிடைக்க மாட்டாது என உறுதியாக நினைத்து நிரம்பவும் சஞ்சலம் அடைந்தான்.

அன்றையதினம் பகலிலும், சாயங்காலத்திலும் அவர்கள் இடைவழியில் காணப்பட்ட வசதியான இடங்களில் முதல்நாள் செய்தது போலத் தங்களது போஜனத்தை முடித்துக்கொண்டு மேலும் பிரயாணம் செய்யத் தொடங்கினர். சிறிது நேரத்தில் முன்னிருள் தோன்றி அடர்ந்து வளைத்துக் கொள்ளத் தொடங்கியது. சாலையில் இருந்த ஆலமரங்களின் இருளினால், அந்த இரவின் இருள் நூறு மடங்கு கருத்துக் கரிக்குழம்பு போலக் காணப்பட்டது. அப்படி இருக்க, பெட்டி வண்டியின் உட்புறத்து நிலைமை எப்படி இருந்தது என்பதை வெளியிடுவதே அநாவசியமாகும். பக்கத்திலிருந்த மனிதர் எவ்வளவு தூரத்தில் இருக்கிறார்கள் என்பது சிறிதும் தெரியாமல் இருந்தது அன்றி, எங்கு பார்த்தாலும் ஒரே கருப்பாக இருந்தது. ஆகையால், மரம், மனிதர், வண்டி, குதிரை முதலிய வேறுபாடே தெரிந்து கொள்ள இயலாததாக இருந்தது. கலியாணசுந்தரமோ தனக்கு இரு பக்கங்களிலும் இருந்த வடிவழகியர்களுக்குச் சௌகரியக் குறைவு ஏற்படப் போகிறது என்று அஞ்சி அப்புறம் இப்புறம் ஓர் இம்மியளவு கூட நகராமல் தனது தேகத்தையும் கை கால்களையும் ஒடுக்கிக்

கொண்டு நடுமத்தியில் உட்கார்ந்திருந்தான். ஆனாலும், கொஞ்ச நேரத்தில் அவனுக்கு இருபுறங்களிலிருந்தும் அவனது உடம்பில் தந்திச் செய்திகள் வந்து மோத ஆரம்பித்தன. முழங்காலோடு முழங்கால் வந்து முட்டுவதும், மார்புகள் வந்து புஜங்களின் மேல் உராய்வதும், தலைகள் சோர்ந்து தோள்களின் மேல் உட்காருவதுமான ஊமை ஜாடைகள் தொடக்கமாயின. காமாதுரனாக இருப்பவனுக்கு அந்த நிலைமை சாயுஜ்ய பதவிபோலப் பரம இன்பகரமான நிலைமையாகத் தோன்றும். ஆனாலும், ஏகபத்தினி விரதனான நமது யௌவன வீரனுக்கு அந்த நிலைமை பரம சங்கடமானதாகவும், கேவலம் அசங்கியமானதாகவும் இருந்தது. தான் என்ன செய்வது என்பதே அவனுக்குப் புலப்படாமையால், அவனது மனம் அப்படியே வீழ்ந்துபோய் விட்டது. உடம்பும் தளர்ந்து உட்கார்ந்து போய்விட்டது. கரைகடந்த துக்கம் எழுந்து அவனைக் கப்பிக் கொண்டது. எவராலும் தடுக்கமுடியாத மகா உரமான மோகனாஸ்திரங்கள் அவனைச் சுற்றிலும் வந்து தாக்கின. ஆனாலும், அவன் தனது உறுதியான கொள்கைகளினாலும், வலுவான மனதினாலும் அவற்றை எதிர்த்து நின்று மௌனமாகவே போராடிக் கொண்டிருந்தான். ஏனென்றால் தான் கோரிவந்த காரியம் மகா முக்கியமானது. ஆகையால், அதைக் கருதி தான் அவர்களது மனம் கோணாமல் நடந்து அந்தச் சங்கடங்களை எல்லாம் பொறுத்துக் கொள்வது அத்தியாவசியம் என்று அவன் நினைத்தான். இரண்டு வடிவழகிகளும் இரண்டு பக்கங்களில் இருந்தபடி தந்திரமாகவும், கபடமாகவும் தங்களது கருத்து நன்றாகத் தெரியும்படியாகவும் மோகனாஸ்திரங்கள் தொடுத்து வந்தது எல்லாம், அவர்கள் வேண்டும் என்றே துர் எண்ணத்தோடு செய்யப்படும் காரியம் என்பது அவனுக்கு சந்தேகமற விளங்கிவிட்டது. அதைப்பற்றி அவன் அதற்குமேல் சந்தேகப்பட வேண்டிய அவசியமே இல்லாமலிருந்தது. ஆனால், தான் அத்தகைய கெட்ட நடத்தையுள்ள பெண்களுக்கு

இடையில் இருந்து, அப்படிப்பட்ட சைகைகளுக்கு இடம் கொடுத்து மௌனமாகவே இருந்து வந்தால், அவர்கள் மேன்மேலும் துணிவடைந்து அதற்குமேலும் என்னென்ன காரியங்களில் இறங்கி விடுவார்களோ என்றும், தான் அவர்களோடு இருந்து அப்படிப்பட்ட ஆட்சேபகரமான காரியங்களுக்கு இணங்கி இருப்பதைத் தனது காதலியான ஷண்முகவடிவு அறிந்து கொள்வாளானால், அவள் தன்னைப் பற்றி எப்படிப்பட்ட கெட்ட அபிப்பிராயம் கொள்ளமாட்டாள் என்றும் அவன் எண்ணி எண்ணி அளவற்ற சஞ்சலமும் கலக்கமும் கொண்டு நெருப்புத் தணலின் மேல் இருப்பவன்போல வேதனைப்பட்டு உட்கார்ந்திருந்தான்.

வெகுநேரம் வரையில் அந்தப் பெண்கள் இருவரும் ஊமைச் சாடைகள் காட்டி முயன்று பார்த்ததற்கெல்லாம் எவ்வித உத்தரமும் கிடைக்காமல் போகவே, அவர்கள் இருவரும் ஏக்கமும் ஏமாற்றமும் அடைந்து சோர்வுற்றுப் படிப்படியாகத் தளர்ந்து, தங்களது விஷமங்களை எல்லாம் அடக்கிக்கொண்டு ஓய்ந்து போயினர். நாழிகை ஏற ஏற அவர்களது சம்பாஷணையும் சோர்ந்து தளர்வடைந்து நின்றுபோய்விட்டது. கலியாண சுந்தரத்தைத் தவிர மற்ற எல்லாரும் அலுத்துத் துயிலில் ஆழ்ந்து அப்படி அப்படியே மூலைகளில் சாய்ந்து விட்டனர். அவன் மாத்திரம் தூங்காமல் உட்கார்ந்திருந்தபடி மகா தரும சங்கடமான தனது நிலைமையைப் பற்றி எண்ணமிடுவதிலேயே தனது முழுமனதையும் கவனத்தையும் செலுத்தினவனாய் உட்கார்ந்திருந்தான். அவன் செய்யக் கூடிய காரியங்கள் இரண்டே இரண்டுதான் இருந்தன. அந்த இரண்டில், ஏதாவது ஒன்றை அவன் அவசியம் செய்தே தீர வேண்டியிருந்தது. வசீகரமும் சாகசக்கியமும் நிறைந்த அந்த இனிய மங்கையரை விட்டுப் பிரிந்து தான் விலகிக் கொள்வது ஒரு வழி. அந்த வழியைத் தான் கடைப்பிடித்தால், தான் சிவபாக்கியத்துக்கு வாக்குக்

காதலியான ஷண்முகவடிவைப்பற்றிய நினைவில் ஆழ்ந்திருந்து, காகிதத்தையும் பென்சிலையும் எடுத்து வைத்துக் கொண்டு அவளுக்குக் கடிதம் எழுதத் தொடங்கித் தான் வந்தது முதல் நடந்த வரலாறுகளை எல்லாம் ஒன்றுவிடாமல் விரிவாக எழுதித் தனது மனதையும், மட்டற்ற காதலையும், அளவிட இயலாத வாத்சல்யத்தையும் அந்தக் கடிதத்தில் அப்படியே பெயர்த்துத் தத்ரூபமாக வைத்து அனுப்புகிறவன் போல, அவ்வளவு அபாரமான உருக்கத்தோடும் வாஞ்சை யோடும் விஷயங்களை அவளுக்கு எடுத்துக்காட்டி எழுதி கடிதத்தை முடித்து வைத்துவிட்டு அதற்குமேல் தனது சயனத்தை நாடினான்.

அவர்கள் தங்கிய சத்திரம் பிரயாணிகளின் சௌகரியத்தைக் கருதி சிறிய சிறிய விடுதிகளாகத் தடுக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு விடுதியிலும் இரண்டு பேர் வசதியாகப் படுக்க இடம் இருந்தது. ஆகவே, நமது பிரயாணிகள் சத்திரத்தின் மணியக்காரரிடம் கேட்டுத் தங்களுக்கு மூன்று விடுதிகள் எடுத்துக் கொண்டிருந்தனர். ஒரு விடுதியில் முத்துலக்ஷ்மியும் அபிராமியும் சயனித்துக் கொண்டனர். அதற்குப் பக்கத்தில் இருந்த இரண்டாவது விடுதியில் அம்மாளுவும் தனமும் சயனித்துக் கொண்டனர். மூன்றாவது விடுதியில் கலியாண சுந்தரம் சயனித்துக் கொண்டான். இரண்டு தினங்கள் தொடர்ச்சியாக அவர்கள் வண்டியில் பிரயாணம் செய்து வந்தவர்கள் ஆதலால், அவர்களது உடம்புகள் புண்பட்டு அலுத்துப்போயிருந்தன. ஆகவே, அவர்கள் அன்றைய தினம் இரவில் மெய்மறந்த நித்திரையில் ஆழ்ந்துவிட்டார்கள். அந்த இரவு கழிந்தது. மறுநாட்காலை ஏழு மணி சமயம் இருக்கலாம். அம்மாளு தனம் ஆகிய இருவரும் மற்றவர்களுக்கு முன்னால் அதிகாலையிலேயே எழுந்து, தங்களது காலைக் கடன்களை முடித்துக் கொண்டு மற்றவர்களது வருகையை எதிர்பார்த்த வர்களாய்த் தங்களது விடுதியில் இருந்தபடி ஒருவர்க்கொருவர்

தலை பின்னிக்கொண்டும் மையிட்டுப் பொட்டிட்டுத் தங்களை அலங்கரித்துக்கொண்டும் இருந்தனர். அப்போது மூத்தவளான அம்மாளு என்பவள் தனது தங்கையை நோக்கி, ''தனம்! நமக்குத் துணையாக வந்த மனிதர் இருக்கிறாரே, அவரைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?'' என்ற தணிவான குரலில் வினவினாள்.

அதைக்கேட்ட தனத்தின் முகம் ஆனந்தத்தினால் மலர, அவளது அழகிய கண்கள் ஜ்வலித்தன. அவள் கொஞ்சலாகப் புன்னகை செய்தவண்ணம் தனது அக்காளை நிரம்பவும் செல்வமாகப் பார்த்து, ''நானும் எத்தனையோ பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளைகளைப் பார்த்திருக்கிறேன்; நம்முடைய அரண்மனையிலுள்ள ராஜவம்சத்து யௌவனப் புருஷர்கள் எத்தனையோ மனிதர்களைப் பார்த்திருக்கிறேன். என்ன இருந்தாலும், இவ்வளவு வசீகரமான முகமும் அற்புதமான அழகுடைய புருஷனை நான் இதுவரையில் பார்த்ததே இல்லை. இவரையும் பார்த்து, நம்முடைய இளவரசரையும் பார்த்தால், இவரை மன்மதன் என்று சொல்ல வேண்டும். இளவரசரை ஒரு பெரிய பூதமென்றே சொல்ல வேண்டும்'' என்று நிரம்பவும் கனிவாகவும் சந்தோஷமாகவும் மொழிந்தாள்.

அம்மாளு:- (சிரித்துக்கொண்டு வேடிக்கையாகப் பேசத் தொடங்கி) ஓகோ! அப்படியா சங்கதி! இவ்வளவு சீக்கிரத்தில் அவர் சொக்குப்பொடி போட்டு உன்னை மயக்கிவிட்டாரே! நீ சொல்வதைப் பார்த்தால், அவர் சம்மதித்தால், நீ அவரைக் கட்டிக் கொள்வாய் போலிருக்கிறதே!

தனம்:- (சந்தோஷமாக நகைத்து) ஓ! ஆட்சேபனை என்ன! கரும்பு தின்ன யாராவது கூலி கேட்பார்களா? ஒருநாளுமில்லை. அவர் என்னைச் சும்மா கட்டிக்கொள்வதானால், நான் இரட்டை சந்தோஷத்தோடு அதை ஏற்றுக்கொள்வேன். ஆனால், அவர் எனக்குத் தாலிகட்ட மாத்திரம் நான் இணங்க மாட்டேன்.

*அம்மாளு:-* (ஆச்சரியத்தோடு) ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? இப்படிப்பட்ட மன்மத புருஷன் தாலிகட்டி ஆயிசுகால பரிபந்தம் புருஷனாக இருப்பது எல்லோருக்கும் எளிதில் கிடைக்கக்கூடிய காரியமல்லவே!

*தனம்:-* (முன்னிலும் அதிகமாக நகைத்து) இவர் நிரம்பவும் கண்டிப்பும், அழுத்தமான மனமும் உடையவராகத் தோன்றுகிறார். ஆகையால், நம்முடைய ஜெபமெல்லாம் இவரிடத்தில் நீடித்துப் பலிக்காது. நாம் அடங்கி ஒடுங்கி அடிமைபோலக் கிடக்க நேரும். பெண்ஜாதியைவிட ஆசைநாயகிக்கு அதிகாரமும், செல்வாக்கும், சுயேச்சையும் அதிகமல்லவா?

*அம்மாளு:-* (செல்லமாகவும் அன்பாகவும் கண்டித்து) ஓகோ! நீ பார்வைக்குப் பூனைபோலவும் ஒன்றையும் கவனியாதவள் போலவும் இருந்தாய்; ரகசியத்தில் என்னென்னவோ சங்கதிகளையெல்லாம் தெரிந்து கொண்டிருக் கிறாயே! நீ எப்போதும் திருட்டு ஆசாமி! அவரிடம் நீ ஏதோ விஷமம் பண்ணிப் பார்த்திருக்கிறாய் போலிருக்கிறது.

*தனம்:-* (கபட நகை நகைத்து) நீ மாத்திரம் நிரம்பவும் ஸாதுவோ! உனக்கு ஒன்றும் தெரியாதோ! இந்த விஷயத்தில் உன் மனம் அதிகமாகச் சென்று லயித்திருப்பதனாலேதான் நீ இந்த விஷயத்தில் என்னை ஆழம் பார்க்கிறாய்? நீ என்ன செய்தாய்? அதை முதலில் சொல்; நமக்குள் வெளியிடாத ரகசியம் கூட உண்டா? நடந்ததை நீயும் சொல். நானும் சொல்லுகிறேன்.

*அம்மாளு:-* (வேடிக்கையாக நகைத்து) நீதான் ஒரே வார்த்தையில் சொல்லிவிட்டாயே! இப்படிப்பட்ட அற்புதமான அழகு வாய்ந்த யௌவன தீரரை நீ இதுவரையில் பார்த்ததே இல்லை என்று நீ சொல்லிவிட்டாயே! நான் எப்போதும் உன்னோடு கூடவே இருப்பவள்தானே! நானும் அதே அபிப்பிராயத்தைத்தான் கொடுக்க வேண்டும். உனக்குத்

தெரியாமல் நான் வேறே எங்கேயாவது போய் இவரைவிட அதிக அழகுள்ள மனிதரைப் பார்த்திருக்கிறேன் என்று நான் எப்படிச் சொல்லுகிறது? நீ சொன்னபடி இப்படிப்பட்ட சுந்தர ரூபனைப் போல வேறே மனிதரை நாம் பார்த்ததும் இல்லை; இனி எப்போதும் எவ்விடத்திலும் பார்க்கப் போவதும் இல்லை. அப்படி இருக்க இவரிடத்தில் யாருக்குத்தான் ஆசை உண்டாகாது? நேற்றைக்கு முந்திய தினம் காலையில் இவரைப் பார்த்த முதலே, என் மனம் சித்தப்பிரமை கொண்டதுபோல ஆகி அடியோடு பிரமித்துக் கலங்கிப் போய்விட்டது. என்னுடைய உடம்பு கட்டுக் கடங்காமல் தவித்துப் பறந்து கொண்டே இருந்தது. நேற்றைக்கு முந்திய நாள் பகல் பொழுது எப்போது தொலையும் தொலையும் என்று நான் ஜெபம் செய்து கொண்டே வந்தேன். இவரைப் பார்க்கப் பார்க்க, என் நெஞ்சம் அனலில் வெண்ணெய்போல அப்படியே உருகிக் கொண்டிருந்தது. உடம்பின் வேதனை சகிக்க அசாத்திய மானதாகிவிட்டது. அன்றையதினம் ராத்திரி வந்த பிறகு இருளில் வண்டிக்குள் உட்கார்ந்து நாம் பிரயாணம் செய்த காலத்தில், என் உடம்பு என் வசப்படாமல் மீறிப்போய்விட்டது. நீங்களெல்லோரும் இருக்கிறீர்களே என்று நினைத்து பகீரதப் பிரயத்தனம் செய்து என் ஆசையை அடக்கிக் கொண்டேன். ஆனாலும், ஒருவிதமாகப் பாசாங்கு செய்தேன்; வழிப் பிரயாணத்தினால் அலுத்துத் தளர்வடைந்து தூங்கி விழுகிறவள் போல நான் ஆடி ஆடி இவருடைய தோளின்மேல் என்னுடைய தலையைக் கொண்டுபோய் பல தடவைகளில் வைத்தேன்; கன்னத்தைத் திருப்பி அவருடைய கன்னத்தில் வைத்தேன்.

தனம்:- (அளவற்ற ஆச்சரியமும் திகைப்பும் அடைந்து) ஓகோ! காரியம் அவ்வளவு தூரம் நடந்ததா! உங்களுக்குப் பக்கத்திலேயே உட்கார்ந்திருந்த எனக்கு ஒன்றும் தெரியாமலே நீ இவ்வளவு காரியம் பண்ணியிருக்கிறாயே! அவர் உன்னுடைய

*பிரயாசைக்குச் சன்மானமாக இருட்டில் ரகசியமாக உனக்கு ஏதாவது இரண்டொரு முத்தம் கொடுத்தாரா?*

*அம்மாளு:- சேச்சே! அதெல்லாம் ஒன்றும் நடக்கவில்லை. நான் காட்டிய சைகைகளின் கருத்தைத்தான் அவர் சரியாக உணரவில்லையோ, அல்லது என்னிடத்தில் அவருக்கு விருப்பம்தான் இல்லையோ உண்மை இன்னது என்பது தெரியவில்லை. அவர் எவ்விதமான பதில் சைகையும் செய்ய வில்லை. ஆனால், ஒரு விஷயம்; அவர் என்னை முரட்டுத் தனமாக தள்ளவாவது, தாம் என்னை அருவருக்கிறதாகக் காட்டிச் சடேரென்று அப்பால் நகரவாவது இல்லை. நான் உண்மையிலேயே தூங்கி ஆடி விழுகிறேன் என்று நினைத்து அவர் மெதுவாக உன்பக்கம் கொஞ்சம் கொஞ்சமாக நகர்ந்து கொண்டே போனார்.*

*தனம்:- (அப்போதே உண்மையை உள்ளபடி அறிந்து கொண்டவள் போல வியப்படைந்து) ஓகோ! காரியம் அப்படியா நடந்தது! நீ செய்த சேஷ்டைக்கு பயந்துகொண்டா அவர் என் பக்கத்தில் நகர்ந்து வந்தார்? நான் வேறுவிதமாக அல்லவா நினைத்து ஒரு பெரிய தவறு செய்துவிட்டேன்! அடாடா! எப்படிப்பட்ட முட்டாள் தனமான வேலை செய்துவிட்டேன்! அவர் என் பக்கமாக நகர்ந்து நகர்ந்து வந்தபோது, அடிக்கடி அவருடைய வஸ்திரமும், உடம்பும் என் மேல் பட்டதைக் கண்டு அவர் என்னிடத்தில் ஏதோ எண்ணங் கொண்டு வேண்டுமென்றே அப்படிச் சைகை காட்டுகிறார் என்றல்லவா நினைத்துவிட்டேன்! உனக்காக பயந்து கொண்டு அவர் என் பக்கம் நகருகிறார் என்று தெரியாமல் போய்விட்டதே!*

*அம்மாளு:- (தனது தங்கையும் தன்னைப்போலவே ஏதோ விஷமம் செய்திருக்கிறாள் என்பதைக் கேட்க, நிரம்பவும் மோகலாகிரி கொண்டவளாய்) ஓகோ! அப்படியானால்,*

நீயும் ஏதோ சேஷ்டை பண்ணியிருக்கிறாய் போலிருக்கிறது. அவர் உன்மேல் இடித்ததற்கு பதில் நீயும் ஏதாவது சைகை செய்தாயோ?

*தனம்:-* ஆம்; அவருக்கு என் மேல் ஆசையிருந்தால், அதை நிறைவேற்றி வைக்க எனக்கும் இஷ்டந்தான் என்பதைச் சில குறிப்புகளால் நானும் வெளிப்படுத்தினேன்.

*அம்மாளு:-* காரியம் எப்படித்தான் முடிந்தது?

*தனம்:-* உன் விஷயத்தில் அவர் எப்படி நடந்து கொண்டாரோ அப்படியேதான் என் விஷயத்திலும் நடந்து கொண்டார்.

*அம்மாளு:-* நான் மறுபடியும் நேற்று ராத்திரிகூட, என்னாலான வரையில் பிரயாசைப்பட்டுப் பார்த்தேன். முந்திய நாள் ராத்திரி நான் ஒருவேளை தூக்கத்தினால் அப்படி ஆடி விழுகிறேனோ என்று அவர் நினைத்துக் கொண்டிருந் தாலும் இருக்கலாம் என்ற எண்ணம் உண்டாயிற்று. ஆகையால், நான் நேற்று ராத்திரி என்னுடைய கருத்து இன்னது என்பது அவருக்குச் சந்தேகமற விளங்கும்படியும், நான் தூக்கத்தினால் மெய் மறந்து அப்படிச் செய்யவில்லை என்பதை அவர் உணரும்படியும் நான் மறுபடியும் சைகை செய்தேன். ஆனால், காரியம் பலிக்காமலே போய்விட்டது. நேற்று ராத்திரி இந்தச் சத்திரத்தின் வாசலில் வந்து இறங்கியபோது எதிரில் வெளிச்சம் இருந்ததல்லவா? அப்போது அவருடைய முகத்தில் விழிக்க மனம் நிரம்பவும் கூசியது; இருந்தாலும், அவருக்கு முன்னால் நான் என் அவமானத்தைக் காட்டிக் கொள்ளாமல் சமாளித்துக் கொண்டேன்.

*தனம்:-* நேற்று ராத்திரி என்னிடத்தில் கூட இவர் அப்படியே தான் நடந்து கொண்டார். உண்மையிலேயே இவர் உலகைத் துறந்த சந்நியாசியாகவாவது அல்லது பேடியாகவாவது இருப்பாரோ? இல்லாவிட்டால் இவர்

ஒருவேளை நம்முடைய அபிராமியினிடத்தில் மோகம் கொண்டிருப்பாரோ? இவருடைய மர்மம் ஒன்றுமே விளங்கவில்லையே!

*அம்மாளு:-* எனக்கும் இது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. ஆனால், இவர் நம்முடைய அபிராமியை ஏறிட்டுப் பார்த்து அவளோடு ஒரு வார்த்தை கூடச் சொன்னதை நான் பார்க்கவில்லை. ஆகையால், இவருடைய மனம் அவளிடம் நாட்டம் கொண்டிருக்கிறது என்று நினைக்க முடியாது. இவருக்குச் சுமார் இருபத்திரண்டு அல்லது இருபத்துமூன்று வயசு இருக்கலாம். இதற்குள் இவர் உலகைத் துறந்து சந்நியாசியாகி இருப்பாரா? அப்படி இருந்தால் காஷாய வஸ்திரமும் திருவோடும் இருக்குமே. அதெல்லாம் ஒன்றுமில்லை. விஷயம் வேறாக இருக்கும். நல்ல தக்க பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளைகளில் சிலர் இப்படித்தான் நற்குண நன்னடத்தை உடையவர்களாக இருப்பார்கள். ஸ்திரீகளின் பதிவிரதா சிரோன்மணிகளாக இருப்பவர்களுக்கு உள்ள நாணம், மடம், பயிர்ப்பு முதலிய குணங்களெல்லாம் இவர்களிடத்திலும் இருக்கும். எளிதில் விலக்க முடியாத வெட்கத்தினாலும், புதிதாக இந்தக் காரியத்தில் இறங்குவதனால் உண்டாகும் ஒருவித பயத்தினாலும், இவர்கள் இப்படித்தான் நடப்பார்கள். ஆனால், இது காலக்கிரமத்தில் விலகிப்போகும். நாம் இதோடு விட்டு விடாமல் மேன்மேலும் முயற்சி செய்து கொண்டே போனால், இவருடைய கூச்சமும் பயமும் விலகிக் போகும் அதற்கப்பால் இவர் இந்த விஷயத்தில் பெருத்த நிபுணர் ஆகிவிடுவார். கொஞ்சம் ருசி கண்டு கொள்ளும் வரையில்தான் இந்தத் தொந்தரவெல்லாம். அதற்குமேல் இரத்தம் குடித்து ருசிகண்ட புலிபோல மாறிவிடுவார். அதன்பிறகு இவர் தலைகால் தெரியாமல் இந்தத் துறையில் இறங்கி விடுவார் என்பது நிச்சயம்.

*தனம்:-* காரணம் அதுவாகத்தான் இருக்க வேண்டும். இருந்தாலும் நாம் இவரை எளிதில் விட்டுவிடக் கூடாது. இப்படிப்பட்ட மன்மத புருஷன் தெய்வச் செயலாக நம்மிடம் வந்து சேர்ந்திருக்கிறார். இவரை நாம் சும்மா விட்டு விட்டால், நம்மைவிட துர்ப்பாக்கியவாதிகள் வேறே இருக்க மாட்டார்கள். ஆனால், இதில் ஒரு விஷயம் இருக்கிறது. நாம் இருவரும் ஒரே காலத்தில் இவரிடம் முயற்சி செய்தால், நம்மைப் பற்றி இவருடைய மனசில் கேவலமான அபிப்பிராயம் உண்டாகி விடும். நாம் சுத்தமாகக் கெட்டுப்போனதாசிகள் என்று நினைத்துவிடுவார். இதற்கு முன் தான் ஒருவருக்கொருவர் தெரியாத நிலைமையில் நாமிருவரும் முயற்சி செய்து ஏமாற்றம் அடைந்தோம். இனிமேல் நாம் அப்படிச் செய்யக்கூடாது. நம்முள் யாராவது ஒருவர் முதலில் முயற்சி செய்வோம். அது பலியாவிட்டால் இன்னொருவர் அதற்குப் பிறகு பிரயத்தனம் செய்து பார்க்கலாம்.

*அம்மாளு:-* நீ சொல்வது சிறந்த யோசனை. நானும் அப்படியே தான் நினைத்தேன். நான் மூத்தவள் ஆகையால், முதல் மரியாதை எனக்குத்தான் கிடைக்க வேண்டும். ஆகையால், நான் முதலில் முயற்சித்துப் பார்ப்பதைப் பற்றி நீ எவ்வித ஆட்சேபணையும் சொல்ல மாட்டாய் என்று நினைக்கிறேன்.

*தனம்:-* அப்படியே ஆகட்டும். உன்னுடைய ஆசைக்குக் குறுக்காக நான் என்றைக்காவது நின்றது உண்டா? நீயே முதலில் முயற்சி செய்து அவருடைய பிரியத்தைச் சம்பாதித்துக் கொள். உனக்க அவர் வழிக்கு வராவிட்டால், அதன்பிறகு நான் பார்த்துக் கொள்ளுகிறேன்.

*அம்மாளு:-* சந்தோஷம். ஆனால் நீ எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும். இன்று மத்தியானம் சாப்பிட்ட பிறகு நீ அபிராமியையும் நம்முடைய சின்னம்மாளையும் அழைத்துக்கொண்டு இந்த ஊரில் உள்ள வேடிக்கைகளை எல்லாம் பார்த்து

விட்டு வருவதாகச் சொல்லிவிட்டுப் போய், அவர்களோடு சாயுங்காலம் வந்து சேர். இவர் வெளியில் போகாமல் இங்கேயே இருக்கலாம் என்று நினைக்கிறேன். அப்போது நான் மெதுவாக அவருடைய விடுதிக்குப் போய், என்னால் ஆன தந்திரங்களை எல்லாம் செய்து அவருடைய மனசை மாற்றி ஒரு நிமிஷத்தில் அவர் என்னுடைய வலையில் சிக்கிக் கொள்ளும்படி செய்கிறேன்.

*தனம்:-* ஓ! அப்படியே செய்கிறேன். அதைப்பற்றி நீ கொஞ்சமும் யோசனை செய்ய வேண்டாம். நம்மால் எல்லாம் இவருடைய மனசை மாற்ற முடியாவிட்டால் கடைசியில் நம்முடைய சின்னம்மாளிடம் சொல்லுவோம்; எப்பேர்ப்பட்டவரையும் மயக்கும்படியான வசிய மருந்துகள் செய்ய நம்முடைய சின்னம்மாளுக்குத் தெரியும். ஏதாவது மருந்து தயாரிக்கச் செய்து இவருக்குக் கொடுத்துவிடுவோம்- என்றாள்.

அப்போது, அவர்களது தங்கையான அபிராமி அங்கே வந்தாள். ஆகையால், அந்த இனிய சம்பாஷணை அவ்வளவோடு முடிவுற்றது.

இதன் தொடர்ச்சி 3ம் பாகத்தில் தொடரும்....



ஆங்கிலத்தில் ஷெர்லாக்ஹோம்ஸ்
நவீன காலத்தில் 007 ஜேம்ஸ்பாண்டு
அன்றும் இன்றும் என்றும் தமிழகத்தில்
திகம்பர சாமியார்
1. பூர்ண சந்திரோதயம் பாகம் - 1
2. பூர்ண சந்திரோதயம் பாகம் - 2
3. பூர்ண சந்திரோதயம் பாகம் - 3
4. பூர்ண சந்திரோதயம் பாகம் - 4
5. பூர்ண சந்திரோதயம் பாகம் - 5
6. கும்பகோணம் வக்கீல - 1
7. கும்பகோணம் வ - 2
8. மாயா வினோத பரதே பாகம் - 1
9. மாயா வினோ ப பரதேசி பாகம் - 2
10. மாயா வினோதப் பரதே பாகம் - 3
11. மேனகா பாகம் - 1
12. மேனகா பாகம் - 2
13. சௌந்திர கோகிலம் பாகம் - 1
14. சௌந்திர கோகிலம் பாகம் - 2
15. சௌந்திர கோகில பாகம் 3
16. சௌந்திர கோகிலம் பாகம் - 4
17. மதன கல்யாணி பாகம் - 1
18. மதன கல்யாணி பாகம் - 1
19. மதன கல்யாணி பாகம் - 2
20. விக்யாசாகரம்
21. வசந்த மல்லிகா
இதற்கு மேலும் வருவார் !